

# நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள்



சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி

# நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள்

**சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி**

# சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி



## பயிற்சி, தந்திரம், துணிவு, வெற்றி

# தமிழீழத் தேசியத் தலைவரின் ஆசிச்செய்தி





**தலைமைச் செயலகம்,**
**தமிழீழ விடுதலைப்புலிகள்,**
**தமிழீழம்,**
**10.07.2001.**

வரலாறு என்பது மனிதனுக்கு அப்பாற்பட்ட ஒரு தெய்வீகச் சக்தியன்று. அது மனிதனின் தலைவிதியை நிர்ணயித்துவிடும் சூத்திரப்பொருளுமன்று. வரலாறு என்பது மனித செயற்பாட்டுச் சக்தியின் ஒரு வெளிப்பாடு. மனிதனே வரலாற்றைப் படைக்கிறான். மனிதனே தனது தலைவிதியையும் நிர்ணயிக்கிறான்.

எமது விடுதலை இயக்கத்திற்கும் எமது இயக்கத்தால் முன்னெடுக்கப்படும் எமது தேச விடுதலைப் போராட்டத்திற்கும் ஒரு மகத்துவமான வீர வரலாறு உண்டு. அந்த வீர வரலாற்றை நாமே படைக்கிறோம். நாமே எமது வீர வரலாற்றின் கதாநாயகர்கள்.

எமது போராட்ட வரலாறு பல முக்கிய திருப்புமுனைகள் அடங்கிய படிநிலை வளர்ச்சியைக் கொண்டது. இப்படிநிலை வளர்ச்சிக்கு எமது திட்டங்களும் செயற்பாடுகளுமே காரணமாக அமைகின்றன. போராட்டப் புறநிலை யதார்த்தத்தின் தேவைகளையும் எதிர்கால வளர்ச்சியின் அவசியத்தையும் கருத்திற் கொண்டே நாம் எமது திட்டங்களை வகுத்து அவற்றைச் செயற்படுத்தி வருகிறோம்.

இன்றிலிருந்து பத்து ஆண்டுகளுக்கு முன்னர் (1991, ஏப்ரல் 10) எமது போரியல் வரலாற்றின் ஒரு படிநிலை வளர்ச்சியைக் குறித்து நிற்கும் ஒரு முக்கிய நிகழ்வாக சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உருவாக்கம் பெற்றது.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை நான் உருவாக்கியதற்குக் காரணம் உண்டு. இரண்டாம் கட்ட ஈழப்போர் தொடங்கித் தீவிரமடைந்துவந்த காலகட்டம் அது. எமது தாயகத்தின் இதயபூமியான வன்னிப் பெருநிலத்தைக் கைப்பற்றும் நோக்குடன் எதிரியானவன் பெரும் படையெடுப்புகளுக்கு ஆயத்தங்கள் செய்துவந்த காலம். பிரதேசப் படையணிகளால், கெரில்லாப் போரியல் உத்திகளுடன் எதிரியின் பாரிய படையெடுப்புகளை முறியடிப்பது, காலப்போக்கிற் சாத்தியமாகாது என்பதை நான் உணர்ந்தேன். எதிரியின் போரியல் வளர்ச்சிக்கேற்ப எமது விடுதலைப் படையும் வளரவேண்டும். இராணுவச் சமநிலையைப் படிப்படியாக எமக்குச் சார்பாகத் திருப்பவேண்டுமாயின் நாம் அடுத்த கட்ட வளர்ச்சிக்கு ஆயத்தங்கள் செய்யவேண்டும். எனவே, மரபுவழிப் போரியல் வளர்ச்சிக்கு முன்னோடியாக ஒரு தாக்குதற் படை அணியை உருவாக்க முடிவெடுத்தேன். அந்தப் படையணிதான் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி.

லெப். சாள்ஸ் அன்ரனி மாபெரும் வீரன். எமது இயக்கத்தின் ஆரம்பகால தாக்குதல் தளபதி. எனது இலட்சியத் தோழன். வீரத்திற்கும் துணிவிற்கும் உறுதிக்கும் இலக்கணமாக வாழ்ந்து, களமாடி வீழ்ந்தவன். இந்த இலட்சிய வீரனின் நினைவாகவே இப்புதிய படையணிக்கு நான் அவனது பெயரைச் சூட்டினேன். இப்படியாகத் தோற்றங்கொண்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி கடந்த பத்து ஆண்டுகளாக எமது போரியல் வரலாற்றிற் படைத்த வீர சாதனைகள் மகத்தானவை. ‘பயிற்சி, தந்திரம், துணிவு’ என்ற எமது போரியற் கோட்பாடுகளைத் தாரகமந்திரமாக ஒழுகி, இப்படையணியின் தளபதிகளும் போராளிகளும் நிகழ்த்திய தாக்குதற் சமர்களும் முறியடிப்புச் சண்டைகளும் எமது போராட்ட வரலாற்றிற்குப் பெருமை சேர்ப்பவை.

சிறுவிதையாக இடப்பட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பத்தாண்டுகளுக்குட் பெருவிருட்சமாக எழுந்து நிற்கிறது. இந்த வளர்ச்சிக்கு இப்படையணியிலிருந்து விடுதலைக்கு வித்தான வீரத்தளபதிகளதும் போராளிகளதும் அர்ப்பணிப்புக்கள்தான் ஆதாரமானவை. இந்த விடுதலை வீரர்களது கனவுகளோடு வெற்றிகளைக் குவித்துச் செல்லும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது விடுதலைப் பாதையில் தொடர்ந்தும் முன்னேறிச்செல்ல எனது வாழ்த்துக்கள். அத்தோடு இப்படை யணியின் பத்தாவது ஆண்டு மலர் சிறப்பாக வெளிவரவும் எனது ஆசிகள்.

**“புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்”**

**வே.பிரபாகரன்**<br>**தலைவர்,**<br>**தமிழீழ விடுதலைப் புலிகள்,**<br>**தமிழீழம்.**

# வாழ்த்துச் செய்தி



தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றிற் புதிய பரிணாமத்தை எட்டவைத்த வரலாற்று நிகழ்வென்றே அதனைக் கூறவேண்டும்.

"கெரில்லா" போராட்ட அமைப்பாகத் தோற்றங் கொண்டு வளர்ந்த தமிழீழ விடுதலைப் புலிகள் என்ற பெயரிலான தமிழீழத் தேசிய இராணுவமானது, மரபியல் ரீதியிலான போர்களுக்கு முகங்கொடுத்து, எதிரிப்படைக்குப் புதிய போரியல் நுணுக்கங்கள்மூலம் பதிலடி கொடுக்கும் மரபியற் போரணியாக விரிவாக்கம்கொள்ளும் புதிய பரிணாம வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வைப்பதற்கான திருப்பு முனையை ஏற்படுத்திய நிகழ்வு அதுவேதான்.

இந்த நாள் தமிழீழ விடுதலைப் புலிகளின் வரலாற்றிலும் தமிழீழ விடுதலைக் கான போராட்ட வரலாற்றிலும் மெய்சிலிர்க்கவைத்த நாளாகவே அமைந்திருந்தது என்றால் அது மிகையாகாது. சரியாக ஒரு தசாப்தத்தின் முன்னர் 10.04.1991ஆம் ஆண்டு அந்த நிகழ்வு நமது தேசியத் தலைவர் மேதகு வே. பிரபாகரன் அவர்களால் ஆரம்பித்துவைக்கப்பட்டது. அன்றைய தினத்தில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உருவாக்கம் பெற்றது. தாக்குதற் பிரிவு, கனரக ஆயுதப்பிரிவு என இரு அணிகளைக்கொண்ட படையணியாக உருவாக்கம் செய்யப்பட்டு ஒழுங்கமைக்கப்பட்ட சிறப்புப் படையணிக்கு, தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பின் மூத்த உறுப்பினரான மாவீரன் லெப். சாள்ஸ் அன்ரனியின் பெயரை நமது தேசியத்தலைவர் சூட்டி அந்த முதலாவது தாக்குதற் பிரிவுத் தளபதிக்கு உயர்ந்த கௌரவத்தை வழங்கினார்.

வீரமும் தியாகமும் கொண்ட எமது விடுதலைப் போராட்ட வரலாற்றில் இன்று உலகம் வியக்கும் போரியற் சாதனைகளை நிகழ்த்திவரும் தமிழீழ விடுதலைப் புலி களின் இன்றைய வெற்றிகளுக்கான மூலாதாரத் தளமாகச் சாள்ஸ் அன்ரனி படைப் பிரிவின் உருவாக்கம் அமைந்தது என்பதையும் குறிப்பிட்டேயாக வேண்டும்.

எமது தேசியத் தலைவரின் தொலைநோக்குடன்கூடிய போரியற் சிந்தனையும் தீர்க்கதரிசனத்துடன்கூடிய திட்டமிடற்றிறனுமே கடந்த ஒரு தசாப்தகாலப் பகுதிக்குள், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியானது எத்தனையோ சாதனைகளைப் போர்க் களத்தில் நிகழ்த்தக் காரணமாயிற்று.

எதிரியின் எத்தனையோ போரியல் தந்திரோபாயங்களையும் முறியடித்து, சாதனை படைத்துவரும் எமது விடுதலைப்புலிப் போராளிகளின் மன உறுதிக்கும் போர்த்திறனுக்கும் "சாள்ஸ் அன்ரனி" படையணி அன்றுமுதல் இன்றுவரை ஒரு சிறந்த முன்னுதாரணமாகத் திகழ்ந்துவருவதுபோல் எதிர்காலத்திலும் விளங்கவேண்டும் என வாழ்த்துகின்றேன்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**ப. நடேசன்**
**காவற்றுறைப் பொறுப்பாளர்.**

# வாழ்த்துச் செய்தி



தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் போரியல் வரலாற்றில் முதலாவது மரபுவழிப் படையணியாகத் தோற்றங்கொண்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது பத்தாவது அகவையை நிறைவுசெய்துள்ளது.

வரலாற்றுப் போக்கிற் கரந்தடிப் போர்முறையிலிருந்து மரபுவழிப் போர்முறைக்கு நாம் மாறவேண்டிய தேவை எழுந்தபோது, நீண்டதும் கடுமையானதுமான மரபு வழிச் சண்டையை எதிர்கொள்வதற்கு ஏற்ற வகையில் பயிற்சி, தந்திரம், நவீன ஆயுதங்களைக் கையாளும் திறமை, படை நகர்த்தலுக்குத் தேவையான புலமை என்பவற்றைக்கொண்ட சிறப்புப் படையணிகளை உருவாக்கவேண்டிய அவசியம் எழுந்தது. அத்தகையதொரு சூழலில் எமது தலைவர் அவர்களின் தொலைநோக்குப்பார்வையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தோற்றங்கொண்டது. அன்றிலிருந்து இன்றுவரை தொடர்ந்துவரும் சண்டைக் களங்களிற் தன்பெரும் பங்கை இப்படையணி ஆற்றிவருகின்றது.

எமது இயக்கத்தின் முதலாவது மரபுவழிச் சமரான ஆனையிறவு மீதான ஆகாயக் கடல் வெளிச் சமரில் இப்படையணி ஆற்றிய முக்கிய பங்கு வரலாற்றில் நிலைத்து நிற்பதோடு உலகுக்கு இப்படையணியின் தோற்றத்தையும் அறிமுகப்படுத்தியது.

இன்று பல்வேறு நோக்கங்களுக்காக வெவ்வேறு படையணிகள் எமது தலைவர் அவர்களினால் உருவாக்கம் பெற்று, களங்களில் தம் இடையறாத பணிகளைச் செய்து வருகின்றன. எனினும் எமது இயக்கத்தின் முதற்படையணி என்ற பெருமை சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்குரியதே. நீண்டகாலப் போர் வரலாற்றைக் கொண்ட படையணி என்ற பெருமையும் அதற்குரியதே.

தன் உயிரைவிட ஆயுதத்தை மேலாக நேசித்துத் தன் உயிரை ஈகம் செய்த லெப். சீலன் (லூக்காஸ் சாள்ஸ் அன்ரனி) அவர்களும் அவரின் வழிவந்த மாவீரர்களும் என்றும் எங்கள் நினைவில் நிறைந்தவர்கள்.

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கமானது இலங்கை அரசால் வெல்லப்பட முடியாத இயக்கம் என்ற கருத்து உலக அரங்கில் எழுந்துள்ள இன்றைய சூழலில், எமது தலைவர் அவர்களின் எண்ணங்களுக்குச் செயல்வடிவம் கொடுத்து, மேலும் சிறப்பாகச் செயலாற்ற அவர்களை மனப்பூர்வமாக வாழ்த்துகின்றேன்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

கேணல் விதுஷா / யாழினி

# வாழ்த்துச் செய்தி



விடுதலைப் போரின் பரிணாம வளர்ச்சியில் ஒரு பாய்ச்சலாகத் தலைவர் அவர்கள் 1991 இற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி என்ற பெயரில் ஒரு மரபுவழிப் படையைத் தொடக்கினார். இயக்கத்தினுடைய முதலாவது தாக்குதல் அணிக்குத் தலைமை தாங்கிய லெப். சீலனுடைய பெயரில் இப்படையணி தொடக்கப்பட்டபோது, கொள்கைப் பற்றும் ஒழுக்கக் கட்டுப்பாடும் அபாரத் துணிச்சலும் நேர்மையுங்கொண்ட லெப். சீலனை முன்னோடியாகக் கொண்டு இப்படையணிப் போராளிகள் உருவாகவேண்டுமெனத் தலைவர் விரும்பினார். அதன்மூலம் எதிரியின் மரபுசார் போர்முறைக்கு முகங்கொடுக்கக்கூடிய ஒரு படையைக் கட்டியமைத்து, எதிரியால் எழுகின்ற தடைகளைத் தகர்த்து, விடுதலைப் போரில் வேகமாக முன்னேறமுடியுமெனத் தலைவர் நம்பிக்கை கொண்டிருந்தார்.

அதேபோலச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தொடக்கப்பட்ட அன்றைய காலத்திலிருந்து இன்றைய நாள் வரை, பல நெருக்கடி மிகுந்த களங்களைக் கண்டிருக்கிறது. தனது படைச்சக்திக்கு அப்பாற்பட்ட பல களங்களில் வென்றிருக்கிறது. இதுநாள்வரை தலைவருடைய நம்பிக்கையையும் பாராட்டினையும் பெற்றுவந்திருக்கிறது. நெருக்கடி மிகுந்த காலங்களிலும் கடுமைமிகுந்த களங்களிலும் வெற்றியை எமதாக்கிய வல்லமையை இது நிலைநாட்டியிருக்கிறது. போர்க்களத்தில் இதன் சாதனை கண்டு எமது அமைப்பின் ஏனைய படையணிகளாலும் மூத்த தளபதிகளாலும் புகழ்ந்துரைக்கப்பட்டதும் பாராட்டிப் பேசப்பட்டதுமான வீரமிகு வரலாறு இப்படையணிக்கு உண்டு. இப்படையணியின் சிதைக்கமுடியாத சொத்தாகப் பெருமைமிகு வரலாற்றை உருவாக்கியமை, வெற்றிக்காக வீழ்ந்த இதன் மாவீரரையும் படையணிப் போராளிகளையும் தளபதிகளையுமே சாரும்.

முதன்முதல் இப்படையணிப் போராளிகள் மத்தியில் தலைவர் அவர்கள் உரையாற்றியபோது கூறிய 'பயிற்சி, தந்திரம், துணிவு இவையே வெற்றியை நிர்ணயிக்கும் வழிகள்' என்ற வாக்கியத்தைத் தாரகமந்திரமாகக்கொண்டு தன்னை வளர்த்தெடுத்த இப்படையணி, பத்தாண்டு நிறைவையொட்டித் தனது போர்ப்பயணத்தின் ஒரு பதிவாக இந்நூலை வெளியிடுவதையிட்டு நான் பெருமையடைகின்றேன். இந்த முயற்சியை வரவேற்றுப் பாராட்டி மகிழ்வதில் நிறைவடைகின்றேன். விடுதலைப் போரிலே தனது ஒரு தசாப்தப் பயணத்தை நிறைவுசெய்து முன்னேறும் படையணிப் போராளிகளுக்கு வாழ்த்துக்கள் கூறும் இந்நாளில், இப்படையணியிலிருந்து வித்தாகிய வீரமறவர்களுக்கு வீரவணக்கஞ் செலுத்தி அவர்களை நெஞ்சார நினைவுகூருகின்றேன்.

இனிவரும் காலங்களிலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி புகழ் மங்காத தனது வீரத்தை நிலைநாட்டி, வெற்றியை எமதாக்கி, தலைவன் காட்டும் திசையெங்கும் வீச்சுக்குன்றாத தனது போர்க்குணத்தை நிலைநாட்டி புலிக்கொடியேற்ற வாழ்த்துகின்றேன். வாழியவே!

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**கேணல் பால்ராஜ்**
**படையணியின் முதற் சிறப்புத் தளபதி**

# வாழ்த்து செய்தி



மரபுச் சமரிற் சிங்களப் படையினர் விடுக்கும் இராணுவச் சவால்களை எதிர்கொண்டு முறியடிக்கும் ஒரு போராயுதமாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி செயற்பட வேண்டும் என்பதே தலைவரின் எதிர்பார்ப்பாக இருந்தது.

சமர்களுக்கெல்லாம் தாய்ச்சமர் என்று அழைக்கப் பட்ட "ஜயசிக்குறு" விற்கு எதிரான சமரின் ஆரம்பத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக நான் நியமிக்கப்பட்டிருந்தேன். அப்போது புளியங்குளச் சந்தியை மையப்படுத்தி அங்கே நிலைகொண்டபடி சிங்களப் படையுடன் ஒரு தீவிரச் சண்டையை மேற்கொள்ளச் சாள்ஸ் அன்ரனி படையணிக்குத் தலைவர் பணிப்புரை வழங்கினார்.

"ஜயசிக்குறு" படையினருக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுத்த பிரதான சமரரங்காகப் புளியங்குளம் அமைந்திருந்தது. இந்தச் சண்டையின்போது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகளின் சண்டைத் திறனை, எந்தச் சூழலுக்கும் ஈடுகொடுத்து உள உணர்வுடன் போராடும் போர்க்குணத்தை நான் நேரடியாகக் கண்டேன். "வெற்றி நிச்சயம்" என்ற உறுதியுடன் நகர்ந்த "ஜயசிக்குறு" படையினருக்குத் தோல்வி நிச்சயம் என்ற நிலையை உருவாக்கிய சண்டைகளிற் சாள்ஸ் அன்ரனிப் போராளிகள் ஆற்றிய சமர்ப்பணியை நான் மனதாரப் பாராட்டுகிறேன்.

எமது விடுதலை வரலாற்றில், 1991இன் பின்னான மாபெரும் சமரரங்குகளிலிருந்து இறுதியாகப் பளைப்பகுதியை இலக்குவைத்து எதிரிப்படைகள் நடத்திய "அக்கினிச் சுவாலை" நடவடிக்கையை முறியடித்த மூன்று நாள் எதிர்ச்சமர்வரை சாள்ஸ் அன்ரனி படையணியின் பங்கு அளப்பரியது.

எனது வழிநடத்தலின் கீழ்ச் செயற்பட்ட களங்களிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகள் செய்த சிறப்பான தீரமிக்க போர்க்கள நினைவுகள் என் நெஞ்சில் நிறைந்துள்ளன.

சிங்களப் படைகளின் மரபுவழிச் சமர்களுக்குச் சிறந்த வகையிற் பதிலடி கொடுக்கத்தக்க உயர்ந்த போராயுதமாகச் சாள்ஸ் அன்ரனி படையணி திகழவேண்டும் என்ற தலைவர் அவர்களின் எதிர்பார்ப்பை இப்படையணியின் தளபதிகளும் போராளிகளும் சிறப்பாகவே நிறைவேற்றி வருகின்றனர்.

இத்தகைய அளப்பரிய போராட்டப் பணிகளைச் செய்துவரும் சாள்ஸ் அன்ரனி படையணிப் போராளிகளுக்கும் தளபதிகளுக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதேவேளை, பல களங்களிற் சாதனைகளைப் படைத்து மண்மீட்புப் போரிற் பல வெற்றிகளைப் பெறுவதற்காகப் பத்தாண்டு காலப்பகுதியில், சாள்ஸ் அன்ரனிப் படையணியின்

பல தளபதிகளுட்பட, 1001 போராளிகள் தமது உயிரை அர்ப்பணம் செய்துள்ளனர். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது பத்தாவது ஆண்டைப் பூர்த்திசெய்யும் இத்தருணத்தில், இந்த மாவீரர்களுக்குச் சிரந்தாழ்த்தி எனது வீர வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஒரு முக்கியமான கட்டத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக நான் நியமனம் பெற்றதையும் அக்காலகட்டத்திற் படையணி உறுதியாக நின்று தலைவர் அவர்களின் திட்டத்திற்குச் செயல்வடிவம் கொடுத்து வெற்றிகொண்டதையும் சிறப்பான முறையிற் படையணி பத்தாவது அகவையைத் தாண்டி, தலைவரின் எதிர்பார்ப்புக்களை நிறைவுசெய்து வளர்ச்சிப் பாதையிற் சென்று கொண்டிருப்பதையும் கண்டு பூரிப்படைகின்றேன். எனது தம்பி லெப். கேணல் கில்மன் இப்படையணியின் சிறப்புத் தளபதியாகச் செயலாற்றி வீரச்சாவடைந்ததை எண்ணிப் பெருமையடைகிறேன்.

மரபுவழிக் களங்களில், தடைநீக்கியாகச் செயற்பட்டுவரும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி மேலும் பல இராணுவச் சாதனைகளைப் புரிந்து, தலைவரின் எண்ணங்களுக்குச் செயல்வடிவம் கொடுத்து எமது மண்மீட்புப் போருக்கு உரம் சேர்க்க வாழ்த்துகின்றேன்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**கேணல் தீபன்**
**படையணியின் முன்னாட் சிறப்புத் தளபதி**

# வாழ்த்துச் செய்தி



வீரத்தினதும் உறுதியினதும் மறு வடிவமான லெப். சீலன் (சாள்ஸ் அன்ரனி) அவர்களின் தடங்களைப் பின்பற்றி, வேகமும் செயற்றிறனும் நிரம்பப்பெற்ற சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது பத்தாவது ஆண்டைப் பூர்த்தி செய்கின்றது.

ஒரு மூத்த உறுப்பினராகத் தலைவரது பேரபிமானத்தையும் நம்பிக்கையையும் பெற்று விடுதலைப் புலிகளின் முதலாவது தாக்குதல் தளபதியாகவிருந்த சாள்ஸ் அன்ரனி அவர்களுடைய பெயரில் இப்படையணி ஆரம்பிக்கப்பட்டமை பெருமைக்குரியதே.

காலத்திற்குக் காலம் போரின் வடிவங்களை உணர்ந்து, அதன் தார்ப்பரியங்களை அறிந்து, தலைவருடைய எதிர்பார்ப்புகள், திட்டங்களைப் போரரங்குகளிற் சாதித்துக் காட்டிய புலிகளின் படையணிகளில், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி முன்னோடியானது என்பது மறுக்க முடியாததாகும்.

இதன் பத்தாண்டுகாலப் போர்த்தடங்கள் எமது விடுதலைப் பயணத்தில் ஆழப் பதிந்த சுவடுகளாக முக்கியத்துவம் பெறுபவை. என்றும் பெருமையுடன் பேசிக்கொள்ளும் புகழ்மிகு வீரம் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கு வரலாற்றில் உண்டு.

1992 இன் “வன்னி விக்கிரம” களம் முதல் 2001 இன் “தீச்சுவாலை” களம் வரையான எதிரியின் பெரும்பாலான ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளை முறியடித்து, விடு தலைப் புலிகளின் ஆ.க.வெ. முதல் - ஓயாத அலைகள்-04 வரையான வலிந்த தாக்குதல் நடவடிக்கைகள் அனைத்திலும் வெற்றிகரமாகச் செயற்பட்ட படையணி, இன்று தனது பத்தாவது ஆண்டு நிறைவில், தன் பத்தாண்டுகால பெருமைமிகு போர் வரலாற்றை ஆவணமாக்குவதையிட்டு நான் பெருமையடைகின்றேன்.

எத்தனையோ மாவீரர்களின் தியாகத்தாலும் அர்ப்பணிப்பாலும் தீரமுடன் களமாடும் போராளிகளின் உறுதியாலும் தமிழீழப் போரரங்குகளில் முன்னணியான மரபுப் படையாக உயர்ந்து நிற்கும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி எம் இலட்சியப் பயணத்தில் எமது குறிக்கோளை இலகுவில் அடைவதற்கான தடை நீக்கியாக, வெற்றிப் பாதையில் வீறுநடை போடவும் சகல துறைகளிலும் சிறப்புற்று உயரவும் சோதியா படையணியின் சார்பில் வாழ்த்துக்கள் கூறுவதிற் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

**“புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்”**

**கேணல் துர்க்கா**

# வாழ்த்துச் செய்தி



வீரம் செறிந்த எமது விடுதலைப் போராட்டத்தில், நாம் இராணுவரீதியில் படைத்துள்ள வரலாற்றுச் சாதனைகள் ஏராளம். அத்தகைய வரலாற்றுச் சாதனைகளுக்குக் காரணமாக விளங்குகின்ற எமது படையணிகளுட் களங்கள் அதிர, மயிர்க்கூச்செறியும் சாதனைகள் பல புரிந்து, யுத்தமுனையில் வெற்றிவாகை சூடிநிற்கும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியானது, தனது பத்தாவது ஆண்டை நிறைவு செய்வதையிட்டு அப்படையணிக்கு எனது வாழ்த்துக்களைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சிடைகிறேன்.

இன்று நாம் எமது தேசியத் தலைவர் அவர்களின் மதிநுட்பம் நிறைந்த திட்டமிடலிலும் சிறந்த வழிகாட்டுதலிலும் உலகில் தலைசிறந்த விடுதலைப் போராட்ட அமைப்பாகக் கணிக்கப்படுகின்றோம். அந்த ஒப்பற்ற தலைவரின் வழிகாட்டலை ஏற்று நின்று களமாடும் ஒவ்வொரு போராளியினதும் தற்றுணிவும் அர்ப்பண உணர்வும் விடுதலைப் பற்றுமே இங்கு வெற்றியின் இரகசியமாகின்றன. கூட்டுணர்வு பெற்று படையணியாகி நாளும் நெருப்பு நதியில் நீந்துகின்ற மனிதர்களாக எமது போராளிகள் நின்ற, நின்று கொண்டிருக்கின்ற களங்கள் மிகப் புனிதமானவை.

இத்தகைய போர்க்களங்களில் நின்று சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியானது அதன் ஆரம்ப காலம் தொட்டு இன்றுவரை பல புகழ்மிக்க தளபதிகளையும் தனிப்பெரும் ஆற்றல்களால் வியத்தகு வெற்றிக்கு வித்திட்ட பலநூறு போராளிகளையும் உருவாக்கியமை படையணியின் சிறப்பியல்புகளில் ஒன்றாகும்.

தமது போர்த்திறன்மிக்க தன்மையால், எமக்குப் பாதகமான, ஆபத்தான எத்தனையோ களச் சூழ்நிலைகளிலும் எதிரியின் அதிநவீன போராயுதங்கள் மத்தியிலும் துணிவுடன் நின்று தமது அசாத்தியமான செயற்றிறனூடாகப் பல களங்களில் வெற்றியை எமதாக்கித் தந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் மாவீரர்களது விலைமதிக்க முடியாத ஈகத்துக்குத் தலைவணங்குகிறேன். இந்த அணியின் களமாடும் வீரர்களின் செயல்வேகத்தை மனதாரப் பாராட்டுகிறேன். சிறப்புத் தளபதி, களமுனைத் தளபதிகளின் பற்றுறுதியையும் களமுனைப் புரிந்துணர்வினையும் நான் பெரிதும் மதிக்கிறேன்.

தனது பத்தாவது ஆண்டு நிறைவில் நிற்கும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியானது புதியபலம் பெற்று, களங்கள் அதிரச் சாதனைகள் புரிந்து எமது தாயக விடுதலையின் வெற்றிக்குப் பக்கபலமாக நிற்கவேண்டுமெனக் கேணல் கிட்டுப் பீரங்கிப் படையணியின் சார்பில் வாழ்த்தி நிற்கிறேன்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**கேணல் பானு**

# வாழ்த்துச் செய்தி



## புது மரபுடன் புதுக்கவிதை பாடுகிறது

அலைமோதும் மலைமீது கோணமலை
மலைசூழக் குடைபிடித்த துறைமுகம்
கரி மண் தோன்றும் கடற்கரை
கண் களைத்த இடம் கந்தளாய்
துதிபாடும் சுடு கிணறு
ஊரினிலே பிறந்தாய்.

மாதா கோவிலில் ஆரம்பக் கல்வி
இந்துக் கல்லூரியிற் பெரியவனாய்
சிங்கக் கொடி எரித்தாய்
புலிக்கொடி ஏற்ற.

விடுதலைப் பயிருக்கு வித்திட்ட நம் தலைவன்
தனக்கென்று தனி வழி செல்கையில்
அவன் வழியில் நீ நடந்தாய்.
காவல் நிலையத்திற் களமாடினாய்.
கந்தர்மடத்தில் தானியங்கித் துப்பாக்கியை
நமதாக்கினாய்.

காட்டிக்கொடுப்பிற் களமாடிக்
களைத்த வேளையில் விழுப்புண்ணோடு
உயிரிலும் மேலாக உயிர்காக்கும் ஆயுதத்தைச்
சிங்களத்தின் கையிற் சிக்கவிடாது
புலியெனப் புது மரபு காத்தவனே!

தானைத் தலைவனின் சேனைத் தளபதியே!
தொடர்கிறது உன் பணி.
உன் பெயரில் ஒரு படையணி
நம் தலைவன் தொடக்கிவைத்தான்
சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி
ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றி
ஒன்றில் தொடங்கி
புது மரபுடன் புதுக்கவிதை பாடுகிறது.

முதற்சமர் வன்னியிற் கோழியாக்குளம்
முன்னேறி வந்தவர் அடி விழ
தம் வழி பின் சென்றனர்.
களத்திற் படையணியை நெறிப்படுத்தியவன்
- பால்ராஜ்
முதற்கனி பறித்து பத்து ஆண்டுகளாகத்
தமிழ்த் தேசமெங்கும்
புது வீரம் புகுந்தது.
சமர்களிற் புலி எனப்பாய்ந்து
தொடர்கின்ற சமர்களுக்குத் தொடக்கம்
மட்டுமன்றி இறுக்கத்தையும் கொடுத்து
புறநானூற்று வீரத்தைப் புதிதாக்கிய
போர் மறவர்களின் வீராவேசம்
சிங்களத்தின் படைகளுக்குச் சிதை அடுக்கி
சிம்ம சொப்பனமாக உலாவருகின்ற காலம்
சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியில்
தொடர்கின்றது.

கட்டையிற் குண்டு வைத்து வேட்டைத்
துப்பாக்கியாற் சுட்ட காலம்போய்
ஆட்டிலறி எடுத்து அடிக்கின்ற காலம்வரை
சமருக்குப் பெயர் சூட்டி - ஓயாமல்
நம் இனத்தின் விடுதலைக்குத்
தலைவன் தொட்டுத் திசை விளக்கும்
களங்கள் ஆடி வெற்றிகொள்ள
வாழ்த்துகிறேன் வாழியவே!

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

கேணல் சொர்ணம்

# வாழ்த்துச் செய்தி



எமது தலைவருடைய உள்ளத்தில் நிறைந்திருக்கின்ற வீரத்திற்கும் பற்றுறுதிக்கும் இலக்கணமான ஆரம்ப கால வீரத்தளபதிதான் லூக்காஸ் சாள்ஸ் அன்ரனி. தாய் மண்ணிற்காகவும் தமிழ் மக்களுக்காகவுமே பிறந்து, போராட்டத்தின் இடர்சூழ்ந்த ஆரம்பகாலத்தில் எமது தலைவரை ஆபத்துக்கள் நெருக்கடிகள் நெருங்கிய போதெல்லாம், அவரோடு உற்ற துணையாகவும் பக்கபலமாகவும் உறுதியாக நின்று போராடிய தன்னலமோ தற்பெருமையோ அற்ற பண்பான போராளி அவர்.

அவரது வீரத்தையும் செயல்வேகத்தையும் பற்றுறுதியையும் கண்டறிந்த எமது தலைவர் சாவகச்சேரிப் பொலிஸ் நிலையம் மீதான தாக்குதலிலிருந்து பெரும்பாலான ஆரம்பகாலத் தாக்குதல்களுக்குச் சாள்ஸ் அன்ரனியையே பொறுப்பாக நியமித்திருந்தார். விழுப்புண்ணுற்று எதிரியிடம் அகப்படப்போகின்ற சூழலிலே தன்னைச் சுட்டு விட்டுத் தன் ஆயுதத்தை எடுத்துக்கொண்டு செல்லுமாறு தன் சக போராளிகளுக்குக் கட்டளையிட்டு, எமது தேச விடுதலைப் போராட்டத்தில் ஒரு வீரமான புதிய அத்தியாயத்தைத் தொடக்கிவைத்த வீரத்தளபதியும் அவர்தான். அவர் வீழ்ந்த செய்தி அறிந்தபோது எமது தலைவரது நெஞ்சம் தன்னையறியாமலே ஒருகணம் விம்மியது. கண்களும் கசிந்தன.

அந்த வீரத்தளபதி எமது மக்களதும் போராளிகளதும் நெஞ்சங்களிலே நீங்காது நிறைந்திருக்கவேண்டும் என்ற கனவோடு எமது தேசியத் தலைவர், சீரிய போர்ப்பண்புகளையும் சிறந்த இராணுவத் தந்திரோபாயங்களையும் ஒப்பற்ற விடுதலை உணர்வுகளையும் ஊட்டி, ஒரு சிறப்புப் படையணியை உருவாக்கி அதற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி எனப் பெயர் சூட்டினார். தலைவர் எதிர்பார்த்தது போலவே, அந்த வீரத்தளபதி போல் ஒரு வீரப்படையணியாகவும் எதிரி முதற்கொண்டு எல்லோராலும் பேசப்படுகின்ற ஒரு படையணியாகவும் கடந்த பத்தாண்டுகளில் எழுந்து நிற்கின்றது.

பிறப்பெடுத்த காலத்திலிருந்து இப்படையணி எத்தனையோ நெருக்கடிகளையும் ஆபத்துக்களையும் சோதனைகளையும் சந்தித்திருக்கின்றது. இருந்தபோதிலும் இப் படையணி என்றுமே தளர்ந்துபோனதும் இல்லை தடுமாறியதும் இல்லை. மாறாக, அணையாத நெருப்பாகச் சுவாலை விட்டெரியும் எமது வீர விடுதலைப் போரில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி புரிந்துவரும் தியாகங்களும் அற்புதமான அர்ப்பணிப்புக்களும் மற்றும் சமராடும் ஆற்றல்களும் எமது எதிரிக்கு மாத்திரமல்லாமல் எமது எதிரிக்கு ஆயுத உதவிகள் புரிந்து, உலகிலுள்ள உயர்ந்த இராணுவ நுட்பங்களையெல்லாம் வழங்கிப் பரீட்சித்துப் பார்த்து வரும் உலக நாடுகளுக்கும் அச்சத்தையும் திகைப்பையும் ஏற்படுத்தியுள்ளன.

உலகம் பூராகச்சென்று கொண்டுவந்து குவித்த ஆயுதங்களோடு, உலக இராணுவ விற்பன்னர்களது ஆலோசனைகளோடு, வருடக்கணக்காகப் பயிற்சியெடுத்துத் தனது பலமெல்லாவற்றையும் ஒன்றுகுவித்து, பெரும் ஆரவாரத்தோடு எதிரி மேற்கொண்ட இராணுவ நடவடிக்கைகளை மிக நுட்பமாக நாம் வெற்றிகொண்டதிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியினுடைய பங்கு மகத்தானது.

சமராடும் வேகமும் ஒழுங்கு குழம்பாத கூட்டுச் செயற்பாடும் ஆயுதங்களை இலாவகமாகக் கையாள்கின்ற தன்மையும் எதிரியைத் திகைப்பூட்டி எதிர்கொள்கின்ற நுட்பமும் படையணிப் போராளிகளதும் தளபதிகளதும் நெஞ்சம் நிறைந்த வீரமும் தாங்கமுடியாத துன்பங்களையே தாங்குகின்ற படையணிப் போராளிகளதும் தளபதிகளதும் மனநிலையும் தலைவர்மீதும் தாய்மண்மீதும் தமிழ்மக்கள்மீதும் படையணிப் போராளிகளும் தளபதிகளும் கொண்டுள்ள பாசமுந்தான் எமது விடுதலைப் போரை விரைவுபடுத்தியுள்ளதுடன் படையணியின் பெயரையும் உயர்த்தியுள்ளன.

ஆயிரமாயிரம் மாவீரர்கள் ஏற்றிவைத்த சுதந்திரச் சுடரில் அகலத்தெரியும் அந்த விடுதலைப் பாதைவழியாக எமது தேசியத் தலைவருக்கு உறுதுணையாக நின்று, களங்கள் பல கண்டு, சாதனைகள் பல புரிந்து, படையணிக்கும் பெருமை சேர்த்து விடுதலைக்கு வித்தான தளபதிகளுக்கும் போராளிகளுக்கும் இச்சந்தர்ப்பத்தில் எனது வீரவணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அடக்குமுறைகளுக்கு அடிபணிந்து அடிமைகளாக வாழ்வதைவிட விடுதலைக்காக எந்த விலையையும் கொடுக்கத்தயாராக எம்தேசம் இருக்கின்ற இவ்வேளையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி விடுதலைப் பாதையில் விரைந்து வெற்றி நடைபோட எனது வாழ்த்துக்கள்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**சு.ப. தமிழ்ச்செல்வன்**
**தமிழீழ அரசியற்றுறைப் பொறுப்பாளர்**

# வாழ்த்துச் செய்தி





1983ஆம் ஆண்டின் யூலைத் திங்கள் 15ஆம் நாள் "என்னைச் சுட்டுக் கொன்றுவிட்டு ஆயுதத்தையும் எடுத்துக் கொண்டு நீங்கள் பின்வாங்குங்கள்" என்ற அன்றைய விடுதலைப் புலிகளின் தாக்குதற் படைப்பிரிவின் தளபதியின் உறுதியான கட்டளை கச்சாயை அண்டிய கிளாலியின் நீரேரியிலும் அதன் சுற்றாடலிலும் எதிரொலிக்கின்றது. கட்டளையும் நிறைவேற்றப்படுகின்றது.

"அவனது மரணச்செய்தி பொய்யாகிப் போய் விடாதா என்று என்மனம் நடுங்கியதே" என்று அத்தளபதியின் பிரிவைத் தன் மனக்கண்முன் கொணர்ந்து கண்ணீர் சொரிந்து நினைவு கூருகின்றார் எம் தேசியத் தலைவர்.

விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாற்றுப் பாதையைப் பின்னோக்கிப் பார்க்கும்போது இப்படியான மறக்கமுடியாத நினைவுகளும் சம்பவங்களும் அங்கு நிறைந்து கிடப்பதை நாம் அவதானிக்க முடிகிறது.

1979ஆம் ஆண்டில் விடுதலைப் புலிகளின் அணியிலே தன்னை இணைத்த சாள்ஸ் அன்ரனி, சீலன், ஆசிர் என்ற பெயர்களைத் தனதாக்கிக் கொள்கின்றான்.

இவன் திருமலை மண் பெற்றெடுத்த இலட்சிய வீரன். துணிவோடும் திறனோடும் களம்பலகண்ட விடுதலை வேங்கை. ஒழுங்கிற்கும் கட்டுப்பாட்டிற்கும் உதாரணமாகத் திகழ்ந்த உத்தமன். அன்பினதும் பண்பினதும் உறைவிடம். தன் அண்ணன் தேசியத் தலைவரின் காலத்தில் தமிழீழம் வென்றெடுக்கப்பட வேண்டுமென்ற தணியாத தாகங்கொண்ட கொள்கை வீரன்.

எமது வரலாற்றுப் பாதையிற்கூடக் கசப்பான நிகழ்வுகள் இடம்பெற்ற காலகட்டங்கள் இருக்கத்தான் செய்தன. 1980ஆம் ஆண்டுக் காலப்பகுதியில் விடுதலைப் புலி உறுப்பினர்களின் எண்ணிக்கை ஐம்பதைக்கூடத் தொட்டுநிற்கவில்லை. நெருக்கடியான சூழலிலும் உறுப்பினரிடையே எழுந்த ஒழுங்கின்மையும் பதவிமோகமும் மனக் கசப்பையும் போராட்டத்தில் தளர்வையும் ஏற்படுத்திய வேளையிலும் தன் தலைவனுக்கு விசுவாசமாகவும் நம்பிக்கைக்குரியவனாகவும் பக்கத்துணையாகவும் செயற்பட்டு நின்றவன் சீலன். உறுப்பினர் எவராயினும் விடப்படும் தவறுகளைத் தவறென்று சுட்டிக்காட்ட அவன் எள்ளளவும் தயங்கியதில்லை.

இப்படியான பண்புகளைத் தனதாக்கி நின்ற சீலனை "இதயச்சந்திரன்" என்று எம் தேசியத் தலைவர் செல்லமாக அழைத்ததில் வியப்பொன்றுமிருக்க முடியாது.

சீலன் 1981ஆம் ஆண்டு சிறீலங்கா இராணுவத்துக்கெதிரான தாக்குதல் ஒன்றை முதன்முதலாக முன்னின்று நடத்தியவன். அதில் வெற்றியும் கண்டவன்.

துணிவும் திறனும் வேகமும் விவேகமும் ஒருங்கமைந்த சீலன், 1982இல் முதன்முதலாக உருவாக்கப்பட்ட தாக்குதற் படையணியின் தளபதியாக நியமிக்கப்படுகின்றான். அதன்பின் அவ்வணி அரசிற்கும் அதன் கூலிப் படைகளுக்கும் எதிரான தன் நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்தி நின்றது. தாக்குதல் ஒன்றின்போது அவனது கால் பாதிப்படைந்திருந்தவேளையிலும் அது அவனின் அரசியல், இராணுவச் செயற்பாடுகளுக்கு எந்தப் பங்கமும் விளைவிக்கவில்லை.

மார்பிலும் காலிலும் குண்டடிபட்டு உடல் பலவீனப்பட்டபோதும் குடாநாட்டின் மூலைமுடுக்கெல்லாம் இயக்கத்தின் வளர்ச்சிக்காகத் துவிச்சக்கர வண்டியில் ஓடியோடி உழைத்த விடுதலைப் புலிகளின் வழிகாட்டி.

1979இல் இருந்து 1983 வரையிலான அவனது குறுகிய போராட்டக் காலப் பகுதியில், அவனால் மேற்கொள்ளப்பட்ட தாக்குதல்கள் சிறீலங்காவின் அரசகருமபீடங்களையும் படையணிகளின் தலைமைகளையும் கிலிகொள்ளச்செய்தன. இதனால் அவர்களால் மிகவும் தேடப்படும் ஒருவனாகப் பிரகடனப்படுத்தப்பட்ட மாவேங்கை இவன்.

துரோகி ஒருவனாற் காட்டிக் கொடுக்கப்பட்டு, கச்சாய் மண்ணை முத்தமிட்டு, தன் மரணத்தை அரவணைத்த வேளையிலும் வேங்கைக்குரிய இலட்சியத்தோடு இறுதிவரை சொல்லாலும் செயலாலும் வாழ்ந்துகாட்டிய வீரமறவன்.

இவ்வீரமறவனின் பெயரிற் "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" என்ற மரபு வழித் தாக்குதற் படையணி 1991ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 10ஆம் நாள் தொடங்கப்பட்டது.

தமிழீழத்தின் அனைத்துப் பிரதேசங்ளையும் உள்ளடக்கிய ஆயிரத்து ஐந்நூறு போராளிகள் இப்படையணியில் அங்கம் வகித்தனர். பயிற்சி, தந்திரம், துணிவு ஆகியவற்றைத் தன் தாரகமந்திரமாய்க்கொண்ட இவ்வணியின் சிறப்புத் தளபதியாகக் கேணல் பால்ராச்சும் தளபதியாக மறைந்த லெப். கேணல் ராஜனும் துணைத் தளபதியாக மறைந்த லெப் கேணல் ஜஸ்ரினும் நியமிக்கப்பட்டனர்.

ஓமந்தைப் பகுதியில், தமது நடவடிக்கைகளை ஆரம்பித்த இவ்வணி தொடர்ச்சியான பல வெற்றிகளைத் தனதாக்கித் தமிழீழ விடுதலைப் புலிகளின் தரைத்தாக்குதல் அணிகள் எல்லாவற்றிற்கும் ஓர் எடுத்துக்காட்டாகவும் உலக இராணுவ அரங்கில் தலைசிறந்த ஒரு தாக்குதல் அணியாகவும் இன்று திகழ்கிறது.

உலக வல்லரசாகிய அமெரிக்காவின் சிறப்புப் படையணியாற் பயிற்றுவிக்கப் பட்ட சிறீலங்கா இராணுவச் சிறப்புப் படையணிகளையே ஓடோட விரட்டிய சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியானது தளபதிகள், போராளிகள் எனப் பலரைக் களத்தில் இழந்த நிலையிலும் என்ன கோட்பாட்டை உள்ளடக்கி இவ்வணி உருவாக்கப்பட்டதோ அதே பாதையில் இன்றும் தேசியத் தலைவரின் வழிகாட்டலில் வீறுநடை போடுவது போற்றுதற்குரியதொன்றாகும்.

சாள்ஸ் அன்ரனி என்ற பெயரைத் தனதாக்கி இன்று விடுதலைப் புலிகளின் களமுனைச் சாதனைகள் பலவற்றிற்குப் பக்கவேராகி வெற்றிநடை போட்டு நிற்கும் இப்படைப்பிரிவின் 10ஆம் ஆண்டு நிறைவின் சிறப்பு மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் நான் பெருமைப்படுகின்றேன்.

இந்த வேளையில் எமது மதிப்பிற்குரிய மூத்த உறுப்பினர் லெப். சீலனுக்கு எமது வீரவணக்கத்தையும் அவன் பெயர்கொண்ட படையணிக்குக் கடற்புலிகள் சார்பில் எனது பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**கேணல் சூசை**

போர்முனைகளில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி போராளிகள்





# பொருளடக்கம்

# முன்னுரை

விடுதலைக்காகப் போராடும் தேசத்திற் போர்க்களத்தின் ஒவ்வொரு சம்பவிப்புக்களின் வெளிக்கொணர்வும் அதன் வீச்சுக்கும் எழுச்சிக்கும் அடிப்படையானது. அது நிகழ்காலத்தின் எழுச்சிக்கு மட்டுமல்ல. கடந்த காலத்தின் மீட்சிக்கும் எதிர்காலத்தின் வளர்ச்சிக்கும் ஆதார விசையாக அமைவது. இன்றையவற்றின் அனுபவத் தொடர்ச்சியாகவே நாளை உருவாகிறது. மட்டுமல்ல, இன்றைய பதிவே நாளையின் வரலாறாகவும் எழுகிறது. ஆயின், நாளையின் தொடர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் வரலாற்றைக் கையளிக்கவேண்டியது இன்றுள்ளவர்களினது வாழ்தலின் பொறுப்பாகும். இத்தகைய உணர்வே இந்நூலுருவாக்கத்திற்கான அடிப்படையைத் தந்தது.

இந்நூல் பல படைப்புக்களின் தொகுப்பாகியதன் மூலம் தனக்குள் தன்னை முழுமைப்படுத்தியிருக்கிறது. ஆயினும், ஒரு படையணியின் பத்தாண்டுகால வரலாற்றுப் பதிவு என்ற நோக்கத்திற்கு இது முழுமையானதல்ல.

தமிழீழப் போரரங்கிற் புகழ்பூத்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தொடங்கப்பட்டுத் தொடரப்பட்ட பத்தாண்டுகளில் முக்கியத்துவம் மிக்க பல சமர்களைக் கண்டிருக்கிறது. பல சாதனைகளை நிகழ்த்தியிருக்கிறது; விடுதலைப் போரிற் பல சமர்களின் திருப்புமுனைகளுக்குக் காரணியாகியிருக்கிறது. ஆயினும், இந்தப் பத்தாண்டுகால பெருமைமிக்க போர் வரலாற்றை உரியமுறையில் ஆவணரீதியாகப் பேணமுடியாமற்போனமையை இந்நூலுருவாக்கத்தின்போது வருத்தத்திற்கும் துயரத்திற்குமுரியதாக நாம் உணரவேண்டியிருந்தது.

பெருமைக்குரிய பல போராளிகள் நிகழ்த்திய அபூர்வமான சாதனைகளையும் வெற்றிகளின் பின்னாற் படையணி போர்க்களத்தில் வெளிப்படுத்திய அசாதாரணமான போராற்றலையும் அதன் போக்கையும் வீச்சையும் குறிப்பிட அல்லது விபரிக்க படையணி ஆவணம் இடந்தராமற் போனமை வேதனைக்குரியதே.

கிடைக்கப்பெற்ற தகவல்களின் வறுமை ஒரு தடையாக இருந்தபோதும் கிடைத்தவற்றைக் கோர்வைப்படுத்தி, படைப்பாக்கி உருவாக்கப்பட்ட இந்நூல் தன்னாற் சொல்லப்படவேண்டி இருந்தும் சொல்லமுடியாமற்போன பல விடயங்களை விளங்குவதற்கான ஓர் உடைப்பாகவும் பாதையாகவும் அமைந்திருக்கிறது.

இந்நூலில் இடம்பெற்றுள்ள நான்கு பகுதிகளிலும் பேசப்படாத பக்கங்களின் நீட்சி மிகப் பெரியதே. அவையொரு பரந்தவட்டமாக இருக்கிறதெனின், அவற்றின் மையத்தை இப்படைப்புக்கள் இனங்காட்டியிருப்பதுடன் அதன் ஆரையையும் தரமுயன்றிருக்கிறது. இவற்றின் துணை கொண்டு படையணியின் பத்தாண்டுகால வரலாற்றிற் பேசப்படாத பக்கங்களைப் புரிந்துகொள்ளவும் அதன் விசாலத்தை விளங்கிக்கொள்ளவும் வேண்டுமென விரும்புகின்றோம்.

இந்நூல் தனது வெளிவருகையின்மூலம் வரலாற்றைப் பதிவுசெய்வதில் நாம் எடுக்க வேண்டிய அக்கறையையும் படையணிகள் தமது வரலாற்றை எழுத்துருவாக்கி நூலுருவில் வெளியிடவேண்டும் என்ற முறைமையையும் மரபையும் தோற்றுவிப்பதற்கான தொடக்கப் புள்ளியாக அமைந்திருக்கிறதென நம்புகின்றோம்.

இவற்றிற்கான ஓர் எத்தனத்தை "நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள்" நிகழ்த்தியிருந்தால் இந்நூல் உருவாக்கத்தையிட்டு நாம் நிறைவடைவோம்.

நன்றி

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

*கு.கவியழகன்*
*பொறுப்பாளர்*
*கல்விப்பிரிவு.*

# பாராட்டுரை

விடுதலைப் புலிகளின் சிறப்புப் படையணியின் வரலாற்றினைக் கூறும் இந்நூலில் நானும் சில வரிகள் எழுத இடம் கிடைத்தமைக்காகப் பெரிதும் மகிழ்வடைகின்றேன். இம்மகிழ்ச்சிக்குப் பல காரணங்கள் உள்ளன. பல முதன்மைச் சிறப்புக்களைத் தன்னகத்தே கொண்டிருக்கும் இச்சிறப்புப் படையணியின் வரலாற்றினைத் தரும் இந்நூலும் பல சிறப்புக்களைக் கொண்டுள்ளது. இச்சிறப்புப் படையணியின் வரலாற்றின் வழி விடுதலைப் போராட்டத்தின் தீர்க்கமான காலகட்டங்களின் முக்கிய பதிவுகளைக் கொண்டதாகவும் இந்நூல் அமைகின்றது. அத்தகையதொரு காலகட்டத்தில் வெளிவருவதால் முன்னைய வரலாற்றினைத் திரும்பிப் பார்த்திடவும் உதவுகின்றது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஆரம்பிக்கப்பட்டுப் பத்தாண்டுகள் நிறைவினைக் குறிக்கும் முகமாக வெளியிடப்படும் இந்நூல் மாவீரன் லெப். சீலன் வீரச்சாவடைந்த நாளில் வெளிவருவதும் குறிப்பிடத்தக்கது. அத்தோடு தமிழீழப் படைத்துறை வரலாற்றின் ஒரு முக்கிய கட்டத்தினைக் குறிக்கும் முதல் நூலாகவும் இந்நூல் வெளிவருகின்றது.

புலிகளின் தாக்குதலணியின் முதற் பொறுப்பாளனாகிய மாவீரன் லெப். சீலன் பற்றிய விவரணத்தோடு இந்நூல் ஆரம்பமாகின்றது. அவன் வீரச்சாவடைந்த நாளான 15.07.83ஆம் ஆண்டினை எவரால் மறக்கவியலும்? அடுத்ததும் பிரதானமானதுமான நூலின் பகுதி முக்கிய சமர்களிலும் தாக்குதல்களிலும் சிறப்புப் படையணி வகித்த சீரிய பங்கினைப் பதிவுசெய்கின்றது. எழுபத்தைந்து எண்ணிக்கையைத் தொடும் இத்தகைய தாக்குதல்கள் பற்றிய முடியுமானளவு விபரங்களோடு இந்நூல் எழுதப்பட்டிருப்பதால் இது பலவகைப் பயன்பாட்டிற்குரியதாகின்றது. ஓர் ஆவண ஆதாரமாகப் பலருக்கும் பயன்படத்தக்கது. அடுத்ததாகப் படையணியின் தொடக்கத்திலிருந்து இன்றுவரை சிறப்புத்தளபதிகள், தளபதிகளாக இருந்து வீரச்சாவடைந்த அரிய ஆற்றல் நிரம்பிய படைத்துறை வல்லமை கைவரப்பெற்ற வீரத்தின் விளைநிலங்களானவர்கள் பற்றியது. உணர்வோட்டமான உயிர்ச்சான்றுகள் உள்ளடங்கிய பகுதி இது. அடுத்து சிறப்புச் சாதனைகள் படைத்திட்ட, உயிர்விலை கொடுத்த உன்னத ஈகத்திற்கு உரிமைக்காரர்களான போராளிகள் பற்றிய வரலாறு இடம்பெறுகின்றது. இச்சாதனைகள் முதன்முதலாக வெளியுலகப் பார்வைக்கு முன்வைக்கப்படுகின்றன. தகவல்களைத் திரட்டி, பல ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவங்களை உறுதிப்படுத்தி இப்பகுதி எழுதப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது. இந்நூலின் இவ்விரு பகுதிகளும் தமிழீழ மக்களின் நெஞ்சுக் குழிக்குள் என்றும் நிலைத்துநிற்க வேண்டியவை. எமது தேசியவீரர்கள் பற்றிய கற்கை நெறியை எம்மக்களும் போராளிகளும் கற்க உதவுபவை. நாளைய பொழுது விடியும்போது நன்றியோடு உச்சரிக்கப்படவேண்டியவை. இத்தனை அதியற் புதமான மானிடர் எம்மோடு வாழ்ந்தனர் என எம்மைப் பெருமைப்படவைப்பவை. இவ்வாறாகக் குருதிச்சுவடுகளும் வீரச்சாதனைகளும் சமர், தாக்குதல் பற்றிய விளக்கமுமாக இணைந்து ஒரு புதிய வகைப் போரியல்சார் வரவாக இந்நூல் அமைகின்றது. இங்கே விசேசித்துச் சொல்ல வேண்டிய தகவல் ஒன்றுண்டு. தமிழ் மக்களது விடுதலைப் படையணி கரந்துறை நிலையிலிருந்து மரபுவழிச் சேனையாக மாறத்தொடங்கிய 1991ஆம் ஆண்டு தொட்டே சிறப்புப் படையணியின் வரலாறும் தொடங்குகின்றது. இதனை இன்னொரு வகையிற் சொன்னால், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தோற்றமே 1991ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் நாள் தலைவரால் உருவாக்கப்பட்டமையின் நோக்கமே பொருத்தமான சூழலிற் பலம்வாய்ந்துள்ள நிலையில் மரபுவழிச் சேனையாகப் புலிகள் பரிணமிக்கவேண்டும் என்பதே. எனவே, புலிகள் எவ்விதம்

இன்றைய பெருநிலையை அடைந்தனர் என்பதை அறிய இச்சிறப்புப் படையணியின் வரலாறே பிரதான சான்று. அச்சான்றிற்கு இந்நூலே பிரதான ஆவணம்.

நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள் என்பது மிகப் பொருத்தமான தலைப்பு. இதுவரை தாண்டப்பட்ட நெருப்பாறுகளை அறிந்தாற்றான் இனிமேல், தாண்டவேண்டிய நெருப்பாற்றினை எம்மாற்றாண்டமுடியும். அதிலும் குறிப்பாக, சர்வதேசமும் எமது விடுதலைப் போரின் இறுதி வெற்றியைத் தள்ளிப்போட முனையும் இவ்வேளையில் விடுதலை வீரியம் குன்றாது இந்தக் கட்டத்தினையும் நாம் தாண்டி இலக்கினை அடைய ஓர் உந்துசக்தியாக இந்நூல் அமைகின்றது. அத்தோடு சமகால வரலாற்றினைப் பதிவதிற்கூட அதிக அக்கறை காட்டாதவர் நாம் என எழும் குற்றச்சாட்டினை நீக்கிடவும் உதவுகின்றது. இவ்வகையில் இந்நூல் ஒரு முன்னோடி. இந்நூலை அடியொற்றி ஏனைய படையணிகள், பல்வேறு துறையினரும் தமது வரலாற்றினைத் தொகுத்திடவேண்டும் என நாம் விரும்புகின்றோம். இவையெல்லாம் இன்றைய சம்பவங்கள், நிகழ்வுகள் நாளைய வரலாறாக மலர்ந்திட வழிவகுக்கும் என்பதை நாம் மறந்துவிடலாகாது.

இந்நூலைத் தொகுத்தும் எழுதியும் வடிவமைத்தும் வெளியிட்டும் எமது வரலாற்றினைச் செழுமைப்படுத்திய அனைவருக்கும் நாம் பாராட்டுகளையும் நன்றிகளையும் தெரிவித்துக் கொள்கின்றோம். இத்தகையதொரு அரிய முயற்சியை ஊக்குவித்து உத்தரவிட்ட தலைவருக்கும் எமது நன்றிகள் உரித்தாகட்டும்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

*அன்புடன்*

*க.வே. பாலகுமாரன்*

# வெளியீட்டுரை

நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள் என்ற இந்த நூல் எமது பத்தாண்டுகாலப் போர் வரலாற்றின் சிறு பதிவாக வெளிவந்துள்ளது.

எமது போர்ப்பயணத்தின் பத்தாண்டை நிறைவுசெய்யும் அதேவேளை லெப்.சீலன் (சாள்ஸ் அன்ரனி) அவர்களின் பதினெட்டாம் ஆண்டு நினைவுத் தடத்தில் நின்று இந்த நூலை வெளியிடுவதிற் பெருமையும் மகிழ்ச்சியும் கொள்கின்றோம்.

எமது படையணியின் பத்தாண்டுகால நீண்ட வரலாற்றைச் சிறுபதிவாகவேனும் ஆக்கி நூலாக வெளியிடவேண்டுமென்ற விருப்பு நீண்ட காலமாகவே படையணியில் நிலவிவந்தது.

1998 இல் சிறப்புத் தளபதியாக லெப்.கேணல் சேகர் இருந்தபோது மூத்த தளபதி கேணல் தீபன் அவர்களின் ஆலோசனையுடன் இந்த நூலை எழுதுவதற்கான முன்முயற்சி எடுக்கப்பட்டது. ஆனால், எதிர்பாராதவிதமாகச் சிலவாரங்களில் அவர் பணிமாற்றம் பெற்று எமது படையணியில் இருந்து செல்லவேண்டி நேர்ந்தது.

லெப்.கேணல் ராகவன் படையணியின் சிறப்புத் தளபதியாகப் பொறுப்பேற்றபோது தளபதி சேகர் தொடங்கிய முயற்சியைத் தொடர்ந்து மேற்கொண்டு மிகச்சிறிய அளவிலான ஒரு பதிவாக இந்நூலை உருவாக்கியிருந்தார்.

ஆயினும், துரதிஷ்டவசமாக இந்நூலை வெளியீடு செய்வதற்கான வாய்ப்போ வசதியோ அன்று எமக்கு கிடைக்காமற்போனது.

எமது படையணி தனது பத்தாண்டை நிறைவுசெய்யும் இந்நாளில் இந்நூலை மேலும் விரிவாக்கிக் காத்திரமானதொரு பதிவாக வெளியிடுவதற்கு எமது படையணித் தளபதி திரு.நகுலன் அவர்களும் எமது படையணியின் அரசியற் பிரிவும் எடுத்த முயற்சியின் பயனாக இந்நூல் வெளிவருகின்றது.

நாங்கள் எடுத்த இம்முயற்சியை வரவேற்று எமக்கு ஊக்கமளிப்பீர்கள் என்ற நம்பிக்கையுடன் இந்நூலை உங்கள் முன் வைக்கின்றோம்.

**“புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்”**

நன்றி

*திரு . வீரமணி*
*சிறப்புத் தளபதி*
*சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி*

# நன்றியுரை

நெருப்பாற்று நீச்சலிற் பத்தாண்டுகள் என்ற பெயரைத் தாங்கி எமது படையணியின் பத்தாண்டுப் பதிவாக இந்நூல் வெளிவருவதையிட்டு நாம் மட்டில்லா மகிழ்ச்சியடைகிறோம்.

இந்த நூல் வெளிவருவதற்கு நாம் செலுத்திய உழைப்பைவிட எமக்கு உதவியவர்களின் உழைப்பே இந்நூலின் வெளிவருகையைச் சாத்தியமாகிற்று என்பதை நன்றியுடன் நினைவிற்கொள்கிறோம்.

இந்நூல் உருவாக்கப்படவேண்டுமென்று எமது படையணிக்கு ஊக்கமளித்து, வாய்ப்பளித்து, நூலுக்கு ஆசிச்செய்தியும் வழங்கி எம்மைக் கௌரவித்த எமது அன்புக்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழத் தேசியத் தலைவர் அவர்களுக்கும்

பத்தாண்டு நிறைவையொட்டிப் படையணியை வாழ்த்தும் முகமாக இந்நூலுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பிய தளபதிகள், பொறுப்பாளர்களுக்கும்

இந்த நூலை உருவாக்கித் தந்த கல்விக்குழுப் பொறுப்பாளர் திரு. கவியழகன் அவர்களுக்கும்

தமது கடும் உழைப்பால் இந்த நூல் எழுத்துருவாக்கம் செய்யப்படுவதற்கான அரும்பணியை ஆற்றிய கல்விப்பிரிவு ஆசிரியர்களான திரு. பார்த்தீபன், திரு. அன்பு ஆகியோருக்கும்

குறுகியகால அவகாசத்துள் தமது சிரமம் பாராது இந்த நூலைப் பதிப்பித்துத் தந்த கணனிப் பிரிவுப் போராளிகளுக்கும் பொறியியற்றுறைப் பொறுப்பாளர் கேணல் ராஜு அவர்களுக்கும்

நூலுக்கான புகைப்படங்களைத் தந்து எமக்குதவிய புகைப்படப் பிரிவினருக்கும்

இந்நூலின் வெளிவருகைக்கு ஒத்துழைப்புத் தந்து, உதவிகள் புரிந்த அரசியற்றுறைப் பொறுப்பாளர் திரு. சு.ப.தமிழ்ச்செல்வன் அவர்களுக்கும்

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியினராகிய நாம் எமது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

நன்றி

*திரு.நகுலன்*
*தளபதி*
*சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி*




**இந்நூல் எங்கள் முன்னோடி சீலனுக்கும்**
**அவன் வழிநடந்தோர்க்கும்.**



# உனது வரலாறு படிப்பதற்கன்று.
# உன் தடம் பதிப்பதற்கு.



**பகுதி - 01**



# இவன் சிந்திய குருதியின் பெயர் சொல்லி...

சாள்ஸ் அன்ரனி தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மூத்த உறுப்பினர்களில் ஒருவர். தலைசிறந்த கெரில்லா வீரன். திருமலையிற் பிறந்த இந்தத் தியாகச்செம்மல் சிங்கள இனவெறி ஆட்சியாளர்களின் கொடுமைகளையும் ஒடுக்குமுறைகளையும் தன் சிறுவயதிலிருந்தே கண்டுகொண்டவன். அதற்கெதிராய்க் கிளர்ந்தான்.

சிங்களத்தின் திட்டமிட்ட குடியேற்றங்களாலும் கடற்படை, விமானப்படை, இராணுவம், பொலிஸ், காடையர் குழு எனப் பல்வேறு பெயர்களிற் சிங்களப் பேரினவாதிகளால் திருமலை மண் சூறையாடப்பட்டுக் கபளீகரம் செய்யப்பட்டதும் அல்லாமல் அங்கு வாழ்ந்த மக்கள் தமது பூர்வீக நிலங்களிலேயே அகதிகளாக்கப்பட்டதும் கொல்லப்பட்டதும் வணக்க ஸ்தலங்கள் தாக்கப்பட்டதும் சாள்ஸ் அன்ரனியின் மனத்தில் ஆறாத வடுவை ஏற்படுத்தின. இந்த வடு அவனுக்குச் சிங்கள இனவெறிக்கு எதிராகப் போராடும் உந்துசத்தியைக் கொடுத்தது.

தனது பள்ளி நாட்களிலேயே சிங்கள இனவெறிக்கு எதிரான போராட்டத்தினை ஆரம்பித் தான். எவருடைய உதவியுமின்றித் தனித்தே செயற்பட்டு வந்தான்.

1979ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் கொண்டுவரப்பட்ட சிறீலங்கா ஜனநாயக சோசலிசக் குடியரசின் அரசியல் யாப்பின் அடிப்படையில் ஜே.ஆர்.ஜெயவர்த்தனா பதவி ஏற்கும் விழாவினைச் சிங்களம், தமிழீழம் எங்கும் அமர்க்களமாகக் கொண்டாட முடிவுசெய்தது. அந்த வைபவத்தினையொட்டித் திருமலை இந்துக் கல்லூரியிற் சிறீலங்காவின் தேசியக்கொடியேற்றல் நிகழ்வும் வேறுசில நிகழ்வுகளும் ஒழுங்குசெய்யப்பட்டிருந்தவேளையில், தனக்கே உரிய திறமையைப் பயன்படுத்தி 'பொஸ்பரஸ்' என்னும் இரசாயனப் பொருளை அத்தேசியக் கொடியினுள் மறைத்து வைத்தான். தேசியக்கொடி ஏற்றப்படும்போது 'பொஸ்பரசின்' செயற்பாட்டால் கொடி எரிந்து சாம்பலாகியது.

சாள்ஸ் அன்ரனி சந்தேகத்தின் பேரிற் சிங்களப் படையினராற் கைதுசெய்யப்பட்டுச் சித் திரவதைக்குள்ளாக்கப்பட்டான். விடுதலையை உயிராக நேசிக்கும் எந்த வீரனுக்கும் சித்திரவதைகளும் சிறைக்கூடங்களும் என்னதான் செய்துவிடமுடியும். தனது கொள்கையிலேயே உறுதியாக இருந்தவன் சாள்ஸ் அன்ரனி. தனக்கு உதவிய எவரையும் அவன் காட்டிக்கொடுக்க வில்லை.

தனது தனிமனித செயற்பாடானது சிங்கள அரச அடக்குமுறை இயந்திரத்தை எதிர்ப்ப தற்குப் போதுமானதாக இல்லையென்பதை உணர்ந்த அவன் புரட்சிகர இயக்கத்தில் இணைந்து கொண்டான்.

அவன் விடுதலைப்புலிகள் இயக்கத்தில் இணையும்போது, வளமான வாழ்க்கையோ வருமானமோ எதுவுமற்ற அவனின் குடும்பத்தின் எதிர்பார்ப்புக்களைத் தூக்கிப்போட்டுவிட்டே இணைந்தான். தலைவர்மீது அசையாத நம்பிக்கையும் பற்றும் கொண்டிருந்தவன். தலைவரின் வழிநடத்தலில் தமிழீழ விடுதலை வெற்றிகொள்ளப்படும் என்பதை உணர்ந்து அன்றைய நாட்களில் தலைவருடன் சேர்ந்து நடைபோட்டான்.

சாள்ஸ் அன்ரனி தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தில் இணையும்போது சில உறுப் பினர்களையே இயக்கம் கொண்டிருந்தது. தலைவர் அவர்களிடம் நேரடியாக ஆயுதப் பயிற்சியைப் பெற்ற சாள்ஸ் அன்ரனி, அன்றிலிருந்து தலைவர் பிரபாகரன் அவர்களுக்கு மிகவும் நம்பிக்கையாகவும் விசுவாசமாகவும் திகழ்ந்தான். ஒரு கெரில்லா வீரனுக்குரிய ஒழுக்கம், கட்டுப்பாடு, சுயநம்பிக்கை, இலட்சியப்பற்று என்பவற்றைப் பேணுவதில் அவன் காட்டிய ஆர்வம் அசாத்தியமானது. அந்த வகையில், தலைவர் அவர்களுக்கும் பெரும் நம்பிக்கைக்குரியவனாக விளங்கினான்.

சாள்ஸ் அன்ரனியின் போர் நுணுக்கம், ஆற்றல் என்பன ஒரு சிறந்த கெரில்லாத் தலைவனாக அவனை மாற்றியது. குறுகியகாலப் போர்வாழ்வில் அவன் சாதித்தவை ஏராளம்.

1981ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் விடுதலைப் புலிகளின் செயற்பாடுகளைக் கட்டுப்படுத் தவும் புலிகளை இல்லாமற் செய்வதற்குமாகச் சிறீலங்கா அரசு பிரிகேடியர் வீரதுங்காவை நியமித்து, பதவியுயர்வு வழங்கி யாழ்நகர் அனுப்பிவைத்தது. பிரிகேடியர் வீரதுங்கா யாழ்ப்பாணம் வந்து தனது செயற்பாடுகளை ஆரம்பிக்கும் முன்பே தளபதி சாள்ஸ் அன்ரனி தலைமையிற் புலிகள் களத்திற் குதித்தனர். அக்டோபர் 15ஆம் நாள் யாழ். கஸ்தூரியார் வீதியில் வைத்து இரண்டு சிறீலங்கா இராணுவத்தினரைப் புலிகள் சுட்டுக்கொன்றதுடன், அவர்களின் போர்க்கருவி களையும் கைப்பற்றினர். சிறீலங்கா இராணுவத்திற்கு எதிரான புலிகளின் முதலாவது தாக்குதல் என்று வரலாறு அதைக் குறிப்பெடுத்துக்கொண்டது. அதைத் தலைமையேற்று நடாத்தியவன் என்ற வரலாற்றுப் புகழை எங்கள் முன்னோடி சாள்ஸ் அன்ரனி பெற்றுக்கொண்டான்.

தமிழீழ விடுதலைப் புலிகளின் தாக்குதற் பிரிவு 1982ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டபோது அதன் தளபதியாக சாள்ஸ் அன்ரனி தலைவர் அவர்களால் நியமிக்கப்பட்டான்.

1982இல் ஜே.ஆர்.ஜெயவர்த்தனா இரண்டாவது தடவையாக ஜனாதிபதித் தேர்தலிற் போட்டியிடுவதற்குத் தேர்தற் பிரச்சாரத்திற்காக யாழ் வந்திருந்தவேளை, புலிகள் ஓர் எதிர்ப்பைக் கொடுக்க எண்ணினர். காரைநகர்க் கடற்படைத் தளத்திலிருந்து ரோந்து சென்ற கடற்படை வாகனத் தொடர்மீது பொன்னாலைப் பாலத்தில் வைத்துப் புலிகள் தாக்குதல் நடத்தினர். துரதிஷ்டவசமாக அந்தத் தாக்குதலிலிருந்து கடற்படையினர் உயிர்தப்பிக்கொண்டபோதும், அன்றைய அரசியல் இராணுவச் சூழ்நிலையில் இத்தாக்குதலானது பாரிய தாக்கத்தை உண்டுபண்ணியமை குறிப்பிடத்தக்கது.

அதன் பின்னர் அக்டோபர் 27ஆம் திகதி, தளபதி சாள்ஸ் அன்ரனி தலைமையிற் சாவகச்சேரிப் பொலிஸ் நிலையத்தினுள் உட்புகுந்த அணியினர் நடத்திய அதிரடித் தாக்குதலிற் பொலிஸார் பலர் கொல்லப்பட்டதுடன் பலர் காயமுமடைந்தனர். 33இற்கு மேற்பட்ட போர்க்கரு விகளுடன், வெடிப்பொருட்களும் கைப்பற்றப்பட்டன. அன்றைய காலகட்டத்தில் அந்த ஆயுதங்கள் தமிழரின் விடுதலைப் போரை அடுத்த கட்டத்திற்கு இட்டுச்செல்வதைத் தீர்மானிக்கும் பெறுமானம் உள்ளவையாக இருந்தன. இத்தாக்குதலின்போது தளபதி சாள்ஸ் அன்ரனி காலிற் காயமடைய நேர்ந்தது. சாவகச்சேரிப் பொலிஸ் நிலையம் மீதான தாக்குதலானது அதுவரை காலமும் உளவுத்துறை (CID) அழிப்பு, ரோந்துப்படை அழிப்பு என இருந்த கரந்தடி இயக்கத்தினது இராணுவ வளர்ச்சிப் போக்கின் அடுத்த கட்டத்தைப் பறைசாற்றுவதாக அமைந்தது.

இத்தாக்குதல்களாற் போராட்டத்தின் ஆரம்ப நாட்களிற் பெறப்பட்ட இவ்வாயுதபலமானது, அன்றைய நாட்களில் விலைமதிப்பற்றதாகவும் போராட்ட வளர்ச்சிக்கு உயிரூட்டுவதாகவும் இருந்தது.

பின்னர், கந்தர்மடத்தில் இராணுவத்தினர்மீதான தாக்குதல், தேசத்துரோகிகள் அழிப்பு, காங்கேசன்துறைச் சீமெந்துத் தொழிற்சாலையில் வெடிபொருட்கள் மீட்புத் தாக்குதல் என்று அவனது நடவடிக்கைகள் தொடர்ந்தன.

தளபதி சாள்ஸ் அன்ரனி தனது போராட்ட வாழ்வில் மூன்று தடவைகள் விழுப்புண் அடைந்து உயிராபத்தினை எதிர்நோக்கினான். 1982ஆம் ஆண்டு மறைவிடம் ஒன்றில் பயிற்சியின் போது தவறுதலாகத் துப்பாக்கி வெடித்ததில் நெஞ்சில் ஏற்பட்ட காயம் அவனுக்குப் பெரும் பாதிப்பையேற்படுத்தியது. பேசமுடியாமல் அவனது மூச்சுத்திணறியது. பேசுவதற்கு அவனது உடல்நிலை இடங்கொடுத்த போதெல்லாம் விக்கித்து விக்கித்து அவன் உச்சரித்த வார்த்தைகள் “ஆயுதத்தை இடம் மாற்றுங்கோ” “இயக்கத்தைக் காட்டிக்கொடுத்திடாதையுங்கோ” மரண அவஸ்த்தை நேரத்திலும் இயக்கம் குறித்து மட்டுமே உதிர்ந்த வார்த்தைகள் எமது இனத்தின் விடுதலையில் அவன் கொண்டிருந்த பற்றுறுதியை வெளிப்படுத்தின. அது எமது இனத்தின் வீரமரபிற்குத் தலைவர் இட்ட அத்திவாரத்தை வலுப்படுத்தி மக்களுக்கும் போராளிகளுக்கும் முன்மாதிரிகளாயின.



சாவகச்சேரிப் பொலிஸ் நிலையத் தாக்குதலுக்குப் பொறுப்பேற்றுச் சென்றபோது காலில் ஏற்பட்ட காயத்தையும் பொருட்படுத்தாமல், எதிரியிடமிருந்து கைப்பற்றிய ஆயுதத்தை வாகனத்தில் ஏற்றிவிட்டு அவ்விடத்திலேயே மயங்கிவிட்டார். சற்றுநேரம் கழித்து அரைமயக்க நிலையிலும் “ஆயுதம் எதையும் விடாமல் ஏற்றுங்கள்” இதனையே அவர் வாய் உச்சரித்த தைக் கூடச்சென்ற தோழர்கள் நினைவு கூருகிறார்கள்.

மூன்றாவதாக அவர் சந்தித்த உயிராபத்து, அவரின் போராட்ட வாழ்வின் இறுதி அத்தியாயம் ஆகியது. 15.07.1983 அன்று அவர்கள் இருந்த மறைவிடம் துரோகி ஒருவனாற் காட்டிக்கொடுக்கப்பட்டது. அவ்விடம் நோக்கி முன்னேறிய சிங்களப்படைகளுக்கும் முகாமிலி ருந்து வெளியேறிய போராளிகளுக்குமிடையே ஏற்பட்ட நேரடிச் சண்டையின்போது தளபதி சாள்ஸ் அன்ரனி காலிற் காயமடைய நேரிடுகிறது. கூடநின்ற தோழர்கள் அவரைக் காப்பாற்ற முயற்சி எடுத்தபோதும் அங்கிருந்த சூழ்நிலை சாத்தியப்படாததால் எதிரிப்படைகள் மிகவும் நெருங்கிக் கொண்டிருந்தன. ஆபத்தான சூழ்நிலையை உணர்ந்துகொண்ட சாள்ஸ் அன்ரனி விரைந்து முடிவெடுக்கிறான். தன்னைச் சுட்டுவிட்டுத் தனது ஆயுதத்தை எடுத்துக்கொண்டு தப்பிச்செல்லுமாறு கட்டளை இடுகிறான். தோழர்கள் தடுமாறுகின்றனர் தயங்குகின்றனர். மீண்டும் கண்டிப்பான குரலிற் கட்டளை பிறந்தது. தோழனின் கையில் இருந்த துப்பாக்கி எங்கள் உயரிய தளபதியின் நெற்றியில் ஒரு ரவையை உமிழ்ந்து ஓய்கின்றது. தமிழீழ மண்ணின் விடுதலைக்கு வித்தாகிய பெருமையுடன் வீரத்தளபதியின் உடல் மண்ணை முத்தமிடுகின்றது. அன்று எங்கள் முதல் தளபதியின் நெற்றியிலிருந்து வடிந்த குருதி பெரும் வீரப்பிரவாகத்தின் ஊற்றாய் மீசாலை மண்ணை நனைக்கிறது.

தோழர்கள் விரைவாகப் பின்வாங்குகின்றனர். சற்றுநேரத்தில் ஆனந்தனும் சூடுபட தன் தளபதியின் முடிவினையே தானும் வரித்துக்கொண்டான். எஞ்சிய மற்றத் தோழர்கள் துப்பாக்கிகளுடனும் காயங்களுடனும் தளம் திரும்பினர்.

தளபதி சாள்ஸ் அன்ரனியின் உடலைக் கைப்பற்றிய சிங்களப் படைக்கு அவரது உயிரற்ற உடல்கூட அச்சுறுத்தலாக அமைந்தது. அவரது தாயார் பல தடவை கேட்டும் உடல் ஒப்படைக்கப்படவில்லை. உடல் வைக்கப்பட்டிருந்த யாழ் மருத்துவமனை பெருந்தொகை இராணுவத்தினரால் காவலிடப்பட்டிருந்தது. இறுதியில் ஊர்காவற்றுறைக்குச் செல்லும் பிரதான வீதியில் அல்லைப்பிட்டியை அண்டிய கடற்கரை ஓரத்திற் சிங்களப் 'பேய்கள்' சுற்றி நிற்க, எங்கள் தளபதியின் உடல் தீயிற் சங்கமமாகித் தமிழீழ மண்ணுடன் கலந்தது. ''விடுதலைப் புலிகளின் தாக்குதல் தளபதியை அழித்துவிட்டோம்'' எனத் திமிருடன் நிமிர்ந்த சிங்களப் படைக்கு, தளபதியை தன் தோழனை இழந்த எங்கள் தலைவர் சாள்ஸ் அன்ரனியின் உடையணிந்தே பதிலடி கொடுக்கப் புறப்பட்டார். ஒருவார இடைவெளியில் திருநெல்வேலியிற் புயல் வீசியது. போராட்ட வரலாற்றில் அது ஒரு பெரும் புயல்தான். தன் தளபதியைப் பறித்த எதிரிக்குத் தலைவர் கொடுத்த பதில் அது. அதுவே வரலாற்றுத் திருப்புமுனையாக அமைந்த 23.07.1983ஆம் நாள் நடந்த திருநெல்வேலித் தாக்குதல்.

* * *

தளபதி சாள்ஸ் அன்ரனி உன்னதமான போராளியாவார். எமது இனத்தின் விடுதலைக் காக, இயக்கத்தையும் ஆயுதத்தையும் உயிரிலும் மேலாக நேசித்தான். இரகசியத்தைக் காக்கவும் போராட்டத்தின் ஆயுதத்தைக் காக்கவும் தமிழனின் கௌரவத்தைக் காக்கவும் உயிரைவிட்டான். இந்த உன்னத வீரனின் தியாகமும் அர்ப்பணிப்பும் விடுதலைப் போராட்டத்திற் புலிவீரர் ஒவ்வொருவர்க்கும் வழிகாட்டி நிற்கின்றன.

அவன் கொண்ட இலட்சிய உறுதியின் சாட்சியாய், அவனது தோழனின் துப்பாக்கி ரவை யிலிருந்து சாவை அணைத்துக்கொண்ட அந்த நொடிப்பொழுதில் அவனின் நெற்றியிலிருந்து பெருகிய குருதியின் வீரப்பிரவாகமாய் அவன் பெயர் சொல்லித் தமிழனின் விடுதலையை வென்றெடுக்க, வீரத் தலைவன் வழியில் எம்படையணி நகர்கிறது.

-அருணா-

# "அதோ அந்தப் பறவைபோல வாழவேண்டும்"

1983ஆம் ஆண்டு ஜுலை மாதம் 15ஆம் தேதி.

மாலை 3 மணி.

கச்சாய்க் கடலிலிருந்து வீசும் இதமான காற்று.

அந்த மீசாலைக் கிராமம் அமைதியில் தோய்ந்துபோயிருக்கிறது.

அந்த அமைதியைக் குலைத்துக்கொண்டு, சிறீலங்காவின் இராணுவக் கூலிப்படைகள், அந்தச் சிறிய கிராமத்தைச் சுற்றிவளைக்கின்றன. கச்சாய் வீதியுடன் இணையும் அல்லாரை மீசாலை வீதியை, அரசபடைகளின் வாகனங்கள் ஆக்கிரமிக்கின்றன.

ஒரு மினிபஸ், இரண்டு ஜீப், ஒரு இராணுவ ட்ரக் வண்டி.

நூறு பேருக்கு மேல் சிவிலுடையணிந்த சிங்கள இராணுவ அதிரடிப் படையினர்; அந்தக் கிராமம் சிலிர்த்துக்கொள்கிறது.

கல்லும் மணலும் கலந்த குச்சு ஒழுங்கைகளுக்கூடாக, நான்கு இளைஞர்கள் இயந்திரத் துப்பாக்கிகளுடன் சைக்கிளில் விரைந்து கொண்டிருக்கிறார்கள்.

ஒரு துரோகி காட்டிக்கொடுத்ததால் சிங்கள இராணுவம் தங்களது மறைவிடத்தைச் சுற்றிவளைப்பதை உணர்ந்து, அந்தக் கிராமத்தைவிட்டு வெளியேற விரையும் அந்த நான்கு இளைஞர்களும் அதோ அந்த அல்லாரை மீசாலைத் தார் வீதியைக் கடந்துகொண்டிருக்கிறார்கள். வீதியின் ஒருபுறம் சுடலையருகேயும் மறுபுறம் நெசவு நிலையத்திற்கருகேயும் நின்றுகொண்டிருந்த இராணுவ வண்டிகள், இளைஞர்கள் கடந்த ஸ்தலத்தை நோக்கிச் சடுதியாக விரைகின்றன. அந்த ஸ்தலத்தில் இராணுவ வண்டிகள் குலுங்கிக்கொண்டு நிற்கின்றன.

இராணுவத்தின் குண்டு துளைக்கும் எல்லைக்குள் அந்த இளைஞர்கள் விரைந்துகொண் டிருக்கிறார்கள். மினிபஸ்ஸில் இருந்த இராணுவத்தினர் இறங்கியோடிப் பனங்கூடலினுள்ளே பாதுகாப்பான

இடங்களில், தங்களை நிலைப்படுத்திக்கொள்கின்றனர். மொத்த இராணுவத்தினரில் முப்பதுக்கு மேற்பட்டோர் பனை வடலிக்குள் குழுமுகின்றனர்.

தார் வீதியைக் கடந்த இளைஞர்கள் துரதிஷ்டவசமாக இப்போது நின்றுகொண்டிருப்பது வெறும் பொட்டல் வெளியில். சுற்றிலும் சூழ்ந்துகொண்டுவிட்ட அரச படைகளை உறுத்துப் பார்க்கிறான் அந்த இளைஞர்களின் தலைவன்.

அவன்தான் -

சீலன்!

அரச படைகளின் கண்ணுக்குள் விரலைவிட்டு ஆட்டிய வீரமறவன்.

ஆசீர் -

சீலன் -

இதயச்சந்திரன் -

ஆகிய பெயர்களில், அரச படைகள் வெறிகொண்டு தேடும், லூக்காஸ் சாள்ஸ் அன்ரனி தமிழீழ விடுதலைப் புலிகளின் இராணுவப் பிரிவுத் தலைவன்.

FIRE!

“சுடுங்கள்.”

கட்டளை பிறப்பித்த சீலனின் இயந்திரத் துப்பாக்கி சடசடக்கிறது. மற்ற இளைஞர்களும் விரைந்து துப்பாக்கிகளை இயக்குகின்றனர்.

வெட்டவெளியில் அந்த வீரமகன் சீலன் அவனுக்கருகில் ஆனந்த் என்னும் அருள்நாதன்.

உடலும் உள்ளமும் வைரம் பாய்ந்தவன். அவனோடு இன்னுமொரு வீரன்.

ஆபத்தின் எல்லைக்கப்பால் அடுத்த வீரன். உறுதி, நிதானம், வேகம், லாவகம்.
களத்திலே புலிகள்.

இளைஞர்களின் எதிர்த்தாக்குதல் சிங்களக் கூலிப்படைகளைத் திணறச்செய்கிறது. ஆனாலும் பாதுகாப்பான பனை வடலிக்குள் பதுங்கிக்கொண்டு அந்தக் கூலிகளும் தொடர்ச்சியாகத் தாக்குகின்றனர்.

வெட்டவெளியில் தொடர்ந்து முன்னேறவோ, பின்வாங்கவோ முடியாத இக்கட்டான நிலையில் அவர்கள் சிக்கிக்கொண்டுவிட்டனர்.

ஆனாலும், ஆயுதங்களோடு அரசபடைகளின் கையிற் சரணடையும் கோழைகளல்ல இவர்கள்! பிரபாகரனின் கைகளிலே வளர்ந்தவர்கள்; எதிரிகளின் கைகளிற் பிடிபடுவதைவிட மானத்தோடு சாவது மேல் என்ற வீரமரபிற் பயிற்றப்பட்டவர்கள்.

இறுதி மூச்சுவரை அந்தப் புலிகள் போராடத் திடங்கொண்டனர்.

சுற்றிலும் குவிந்துநிற்கும் கூலிப்பட்டாளம்!

வெளியைத் துளைக்கும் சன்னங்கள்.

மண்தரையில் புழுதி கிளப்பும் குண்டுகள்,

சீலனின் இயந்திரத் துப்பாக்கி தொடர்ந்து சடசடக்கிறது.!



ஆனாற் கூலிப் படையின் துப்பாக்கிச் சன்னம், ஏற்கனவே சீலன் பெற்றிருந்த சீலனின் வீரத் தழும்புகளைக் கிழித்துக கொண்டு மார்பில் பாய்கிறது. இரத்தம் பீறிடச் சீலன் தள்ளாடுகிறான்.

இரண்டு முறை முன்னரே களத்தில் குருதி சிந்திய அந்த வீரன், தன்னுயிர் போகவில்லை என் பதை உணர்கிறான்.

உயிரோடு அகப்பட்டாற் கடித்துக் குதறக் காத்திருக்கும் வேட்டை நாய்கள் சுற்றிலும்! "என்னைச் சுட்டுக் கொன்றுவிட்டு நீங்கள் பின்வாங்குங்கள்" என்று, சீலன் கட்டளையிடுகிறான்.

படைத்தலைவனின் கட்டளை.

பணிக்கப்பட்ட இளம் வீரனோ திகைத்துப்போய் நிற்கிறான்.

பனை வடலிக்குள் வசதியாகப் பதுங்கிநிற்கும் இராணுவ வேட்டை நாய்களின் தொடர்ந்த வேட்டுமழை.

சீலனின் கட்டளையை நிறைவேற்றுவதா?

பாசம்மிக்க தோழனின், வீரம்மிக்க போராளியின் மரணம் தன்னால் நிகழ்வதா? அல்லது அவனை உயிருடன் எதிரியின் கையிற் பிடிபட விட்டுவிட்டுத் தான் பின்வாங்குவதா?

வினாடி நேரத்தில் விடை காணவேண்டிய நிர்ப்பந்தம் அந்த வீரனுக்கு.

"என்னைச் சுடடா சுடு" - சீலனின் கண்டிப்புடன்கூடிய கட்டளை மீண்டும் பிறக்கிறது.

நெஞ்சில் வழியும் இரத்தம், முகத்தில் துளிர்க்கும் வியர்வை.

சீலன் தள்ளாடியவாறு கண்டிப்புடன் மீண்டும் கட்டளையிடுகிறான்.

இலட்சியத் தணலிலே புடம்போட்ட அந்த வீரனின் நெஞ்சில் உறுதி பிறக்கிறது.

கண நேரத்திற்குள் சீலனின் தலையில் துப்பாக்கிச் சன்னங்கள் பாய்கின்றன.

புரட்சி வீரன் சீலனின் உடலை மீசாலை மண் அணைத்துப் பெருமை தேடிக்கொள்கிறது.

அதற்குள், குறிபார்த்துச் சுடுவதற்கு வாகான - வாட்டசாட்டமான தோற்றங்கொண்ட ஆனந்த் குண்டுபட்டுச் சாய்கிறான். ஆனந்த் உயர்ந்தவன் - தோற்றத்தில், தன்மானத்தில், வீரத்தில்.

"என்னையும் சுட்டுவிடு" - ஆனந்தின் வேண்டுகோள்.

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தூய்மைக்கு முத்திரை பதிக்கும் இரத்தச் சாட்சிகள்.

பிரபாகரனின் பயிற்சிக் களத்திலே வளர்ந்த வேங்கைகள்.

ஆனந்தின் தன்மானம் காக்கிறான் அந்த இளம் வீரன்.

மீசாலை மண்ணில் இரண்டு மாணிக்கங்கள் தரையிற் சரிந்ததும் இராணுவக் கூலிப்படை கும்மாளமிட்டது. வீழ்ந்துவிட்ட வீரர்களின் துப்பாக்கிகளையும் ஏந்திக்கொண்டு, மற்றைய வீரர்கள் இருவரும் தப்பிச்சென்றுவிட்டனர்.

இறந்துகிடப்பவர்கள் யார்?

இராணுவ மிருகங்கள் நெற்றியைச் சுழிக்கின்றன.

தங்களின் கைவசமுள்ள 'தேடப்படுபவர்களின்' புகைப்படக் குவியலில் இவர்களின் புகைப்படங்கள் இல்லையே!

அந்தக் கூலிப்படையின் மேஜர் ஒருவன் சீலனின் சாரத்தை உயர்த்தி, வலது காலைப் பார்க்கிறான்.

வலது காலின் முழங்கால் மூட்டுக்கு மேற்பகுதியில் ஐந்து துப்பாக்கிச் சன்னங்கள் பாய்ந்த தழும்புகள்.

அந்த மேஜர் உரத்துக் கத்துகிறான் "இவன்தான் சீலன்!".

சீலன் இருபத்து மூன்று வயதுகூட நிரம்பாத இளைஞன், அழகான முகம்; அழகாய்ச் சிரிப்பான்; அவனுடைய பேச்சிலே மழலை சொட்டும்; பழகுவதிலே அவன் குழந்தை; யாரையும் கவர்ந்திழுக்கும் வசீகரம் அவனுடையது.

ஓரத்தில் உதட்டைக் கடித்துக்கொண்டு, கண்களைச் சுருக்கிக்கொண்டு அவன் சிரிக்கும் அழகு அவனுக்கேயுரியது. இவனோடு பழகக் கிடைத்தவர்கள் அதிர்ஷ்டசாலிகள். தான் மட்டுமல்ல,

தன்னோடு இருப்பவர்களையும் எப்போதும் சிரிக்கவைத்துக்கொண்டிருப்பான். கூச்ச சுபாவம் உள்ளவன். ஆனால் பழக ஆரம்பித்தால் மிகவும் இனிமையாகப் பழகுவான். அன்பு செலுத்தத் தெரிந்த இவன் அன்பைப் பிரியமாக ஏற்றுக்கொள்வான். பிரியமானவர்கள் விளையாட்டுக்காகக் கோபித்தாற்கூட அதனை அவனால் தாங்கிக்கொள்ளமுடியாது. போலித்தனம் இவனுக்குத் தெரியாது. ஆர்ப்பாட்டமே இல்லாதவன். ஆயுதப்படைகளுக்கு எதிரான அதிரடித் தாக்குதலென்றால் யுத்தசன்னத்தனாகக் களத்திற் குதிக்கும் இவன், சாதாரணப்பொழுதுகளில் தென்றலாகத் தெரிவான். அவன் ஆத்மாவை விற்கத் தெரியாத புரட்சிக்காரன். பிழைகளைச் சுட்டிக்காட்டுவதில் நக்கீரன். சோசலிசத் தமிழீழத்தை நோக்கிய அவனது சிந்தனைகளும் செயற்பாடுகளும் திட்டவட்டமானவை. தலைவர் பிரபாகரனின் தலைமையில், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் விடுதலைப் போராட்டத்திலேயே தமிழீழம் வெல்லப்படும் என்பதில், சீலன் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தான். பிரபாகரனின் நேர்மையிலும் தூய்மையிலும் திறமையிலும் அவன் எல்லையற்ற மதிப்பு வைத்திருந்தான். தேசிய விடுதலைக்கான ஆயுதப் போராட்டத்தை முன்னெடுத்துச்செல்லும் பணியில், ஒரு தலைமறைவு இயக்கத்தின் ஒழுங்கு, கட்டுப்பாடு என்பனவற்றைப் பேணுவதிற் சீலன் காட்டிய சிரத்தை அசாதாரணமானது. அந்த வகையிலே தலைவர் பிரபாகரனின் பூரண நம்பிக்கைக்கும் அன்பிற்கும் சீலன் பாத்திரமாக இருந்தான். ஒழுங்கும் கட்டுப்பாடும் இல்லாத சுயநலமிகளும் கூட இருந்தே இயக்கத்திற்குக் குழிபறித்து விட்டு ஓடிய துரோகிகளும் பிளவுவாத நடவடிக்கையில் ஈடுபட்டுத் தூய்மையான இயக்கத்தை உடைக்க முயன்றபோது, இயக்கத்தின் கட்டுக்கோப்பைத் தளரவிடாது காப்பதிற் பிரபாகரனுடன் உறுதியாக நின்றவர்களிற் சீலன் முதன்மையானவன். பதவி இறக்கப்பட்டதற்காக இயக்கத்தைவிட்டு ஓடியவர்களைப் பார்த்து சீலன் சிரித்திருக்கிறான். அந்தச் சிரிப்பிற் சினமும் தோய்ந்திருக்கும். இயக்கத்தின் இரத்த நாளமாகவே சீலன் திகழ்ந்தான். தான் நம்பியவர்கள் எல்லோரும் பதவிப் பித்தர்களாயும் சுயநலமிகளாயும் வேஷங்காட்டித் திரிந்ததைப் பார்த்துப் பிரபாகரன் விரக்திகொண்ட கணங்களில், சீலனே இயக்கத்திற்குப் புதிய இரத்தம் பாய்ச்சுவதில் துணைநின்று பெரும் பணியாற்றியிருக்கிறான்.

சீலன் இராணுவப் படிப்புப் படித்தவன் அல்லன். வெளிநாடுகளிற் போர்ப்பயிற்சி பெற்றவனுமல்லன். போர்மூலமாகவே போரை அறிந்தவன். இயக்கத்தின் இராணுவப் பிரிவுக்குத் தலைமைவகித்து இவன் நடத்திய வெற்றிகரமான கெரில்லாத் தாக்குதல்கள், இயக்கத்திற்கு வலிமையைச் சேர்த்து, விடுதலைப் போராட்டத்தையும் முன்னெடுத்துச் சென்றன.

தமிழீழத்தின் போராட்ட வரலாற்றில் முதன்மைவாய்ந்த கெரில்லா வீரன் சீலன். படைத் தலைவன் என்பவன் ஆணை பிறப்பிப்பவன் மட்டுமல்லன் தானே முன்னுதாரணமாகத் திகழ்ந்து போரை வழிநடத்துபவன் என்பதற்குச் சீலனே ஓர் இலக்கணம்.

ஒரு கெரில்லாத் தாக்குதலை மேற்கொள்ளுமுன் அதற்கான தகவல்களைத் திரட்டுவதிலும் அதன் செயற்பாடு, விளைவு என்பவற்றை ஆராய்வதிலும் அவன் கடுமையாக உழைத்தவன். கவனப் பிசகால் எந்தவிதமான தீங்கும் ஏற்பட்டுவிடாது பார்த்துக்கொள்வதிலும் அவன் மிகவும் விழிப்புடன் இருப்பான். அசாத்தியமான துணிச்சலும் எதிரிகளின் பலவீனங்களை ஆராய்ந்து அதற்கேற்பத் திட்டங்களை வகுக்கும் நுண்ணிய அறிவுமே, குறுகிய காலத்தில் இராணுவப் பிரிவின் தலைவனாக அவனைப் பதவி வகிக்கும் நிலைக்கு உயர்த்தியது.

“ஒரு கெரில்லாப் போராளியின் வீரம் அவனது இயந்திரத் துப்பாக்கியிலன்று; அவனது மனத்தில்தான் இருக்கிறது” என்பது சீலனின் அனுபவ வாசகம்.

அவனது மனவலிமை அபாரமானது.
சாவுக்கு அவன் வாழ்க்கை ஒரு சவால்.

துப்பாக்கிப் பயிற்சி கொடுத்துக்கொண்டிருக்கும்போது முதன்முறை நெஞ்சிலே குண்டு பாய்ந்தது. இரத்தம் பீறியடிக்க விழுந்துகிடந்த நிலையிலுங்கூட அந்த வீரனின் முகத்தில் புன்சிரிப்பு மிளிர்ந்ததை

இயக்கத் தோழர்கள் என்றும் நினைவுகூர்வர். மூச்சுவிடவும் திராணியற்றுப் போன நிலையிலும் அவன் திணறித் திணறிச் சொன்ன வார்த்தைகள்:

"இயக்கத்தைக் காட்டிக்கொடுத்திடாதீங்க".

பிறகும் பேசுவதற்கு மூச்சு இடந்தந்தபோது அவன் சொன்னான்:

"இயந்திரத் துப்பாக்கியைக் கொண்டுபோய் பாதுகாப்பான இடத்தில் வையுங்கள்."

மரண அவஸ்தையிலும் அந்த மாவீரன், இயக்கம் குறித்து மட்டுமே உதிர்த்த வார்த்தைகள் கண்ணீரோடு மட்டுமல்ல; பெருமிதத்தோடும் நினைவுகூரத்தக்கவை.

உண்மைதான்.

சாவுக்குச் சவால்விட்ட அந்த விடுதலை வீரனை இறுதியிற் சாவு அணைத்தபோது, அவன் இயக்கத்தைக் காட்டிக்கொடுத்திடவும் இல்லை; இயந்திரத் துப்பாக்கியைப் பாதுகாப்பான இடத்தில் வைக்கத் தவறவுமில்லை.

சீலன் திருமலையின் வீரமண்ணிலே விளைந்த நல்முத்து. சிங்கள இனவெறியாட்சியாளர்களின் நேரடியான ஒடுக்குமுறைக்குட் சிக்குண்டுகிடந்த திருகோணமலையின் நடைமுறை அனுபவங்களை அவன் கண்ணூடாகக் கண்டவன். சிறீலங்காவின் திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களும் கடற்படை, விமானப்படையின் அடக்குமுறைகளும் சிங்களக் காடையர்கள், இராணுவம், பொலிஸ் ஆகியோரின் அரவணைப்புடன் தமிழ் மக்களைத் துன்புறுத்தும் கொடுமைகளும் திருமலையில் ஏராளம். இந்த ஆக்கிரமிப்பிற்கு இடங்கொடுத்து வந்ததால்தான் திருமலை மண்ணையே சிங்களவர்களுக்குப் பறிகொடுக்கும் நிலை வந்தது என்று சீலன் கொதிப்பான்.

கல்லூரி நாட்களிலேயே இனவெறி பிடித்த சிங்கள ஆளும் வர்க்கத்திற்கெதிரான போராட்ட உணர்வுகொண்டவனாகச் சீலன் திகழ்ந்தான். 1978ஆம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் கொண்டுவரப்பட்ட சிறீலங்கா ஜனநாயக சோசலிசக் குடியரசின் அரசியற் சாசனத்தின் அடிப் படையில், ஜே.ஆர்.ஜெயவர்த்தனா ஜனாதிபதியாகப் பதவியேற்கும் வைபவத்தினைத் தமிழீழ மண்ணில் அமர்க்களமாகக் கொண்டாட அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளை அம்பலப்படுத்த, பாடசாலை மாணவனான சீலன் முன்வந்தான். இந்த வைபவத்தினையொட்டித் திருமலை இந்துக் கல்லூரியிற் சிறீலங்காவின் தேசியக்கொடியை ஏற்றிவைக்க ஒழுங்குகள் மேற்கொள்ளப் பட்டிருந்தன. சீலன் தனக்கேயுரியதான நுட்பமான அறிவைப் பயன்படுத்தி, 'பொஸ்பரஸ்' என்னும் இரசாயனத்தை அத்தேசியக்கொடிச் சுருளில் மறைத்துவைத்தான். தேசியக்கொடி ஏற்றப்பட்டபோது அது எரிந்து சாம்பலாகியது.

சந்தேகத்தின் பேரில் 18 வயது மாணவனான சீலன் கைதுசெய்யப்பட்டு, சிங்களக் கூலிப் படையாற் சித்திரவதை செய்யப்பட்டான். அந்த வயதிலும் தனக்கு உடந்தையாக இருந்த

எவரையும் அவன் காட்டிக்கொடுக்கவில்லை. கொள்கையிலே உறுதிகொண்டவர்களைச் சிறைச் சாலைகளும் சித்திரவதைகளும் என்ன செய்துவிடமுடியும்?

தனிமனிதரீதியிலான எதிர்ப்புணர்வால் அரச இயந்திரத்தை அழித்துவிடமுடியாது என்ற அனுபவத்தையும் இவை சீலனுக்குப் போதித்தன. இந்த அனுபவமே சீலன் தன்னை ஒரு புரட்சி கர இயக்கத்தில் இணைத்துக்கொள்ள, உந்துசக்தியாக உதவியது. ஆயுதந்தாங்கிய அடக்கு முறையை

ஆயுதப் போராட்டத்தின்மூலமே தகர்க்கமுடியும் என்ற நம்பிக்கையே சீலனைத் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திலே இணைத்தது. இறுதிவரை, 'ஆயுதப் போராட்டம்மூலம் தமிழீழம்' என்று ராஜபாட்டையில் சீலன் கம்பீரமாகவே நடந்திருக்கிறான்.

இயக்கத்திற் சேர்வதற்குமுன் விட்டெறிந்துவிட்டு வருவதற்கு வளமான வாழ்க்கையோ - கை நிறையக்காசு கிடைக்கும் தொழிலோ சீலனுக்கு இல்லை. ஆனால், இவனையே நம்பி அன்றாடம் சாப்பாட்டிற்கே கஸ்ரப்பட்டுக்கொண்டிருக்கும் ஒரு வறிய குடும்பம் இருந்தது. வளமான வாழ்க்கையை அல்ல; வறிய குடும்பமொன்றின் எதிர்பார்ப்புக்களை நிர்த்தாட்சண்யமாகத் தூக்கி வீசிவிட்டுவரும் பெரும் மனத்திடமும் இலட்சியப்பிடிப்பும் சீலனிடம் இருந்தன.

சாக்குப் படங்குகளால் மறைக்கப்பட்ட சிறிய குச்சு வீடு; வேலையோ, நிரந்தரமான வருமானமோ இல்லாத தந்தை: வீடுகளிற் சமையல் வேலை செய்து குடும்பத்தைக் காப்பாற்றும் தாய்; இரண்டு அண்ணன்மார்; இரண்டு அக்காமார்; ஒரு தங்கை. சீலன் உணவில்லாமலே வாடிய நாட்கள் ஏரா ளம். சிந்திக்கும் திறன்கொண்ட சீலன் தனது குடும்பம் மட்டுமல்ல, எத்தனையோ குடும்பங்கள் ஏழ்மை நிலையில் வாடுவதைக் கண்டு நொந்திருக்கிறான்.



தேசியத் தலைவருடன் இடப்புறம் லெப். சீலன் (சாள்ஸ் அன்ரனி). வலப்புறம் லெப். கேணல் புலேந்திரன்

சீலனின் வாழ்நிலை புரட்சிகரச் சிந்தனைகளின் விளைநிலமானது. மார்க்ஸியச் சிந்தனையில் அவன் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டான். மார்க்ஸிய ஒளியில் தேசிய இனப்பிரச்சினையை அவன் தெளிவாக விளங்கிக் கொண்டிருந்தான்.

உலகெங்கும் நடக்கும் விடுதலைப் போராட்டங்களை ஆர்வத்துடன் அவதானித்து வந்தான். பெண் விடுதலைபற்றிய இவனது அபிப் பிராயங்கள் சுயசிந்தனையின் பாற்பட்டதாகவும் வியக்கத்தக்க வகையில் முற்போக்கானதாகவும் இருந்தன. இத்தகைய அரசியற்பிரக்ஞைகொண்ட சீலன், இராணுவப் பிரிவுத் தலைவனாகத் திறனோடு செயற்பட்ட காலம் குறித்துத் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் பெருமிதங் கொள்கிறது.

குறுகிய காலத்திற் சீலன் சாதித்தவை மகத்தானவை.

1981 ஒக்ரோபர் மாதம், பிரிகேடியர் வீரதுங்க சிறீலங்கா அரசாற் பதவி உயர்வுபெற்று, இராணுவக் கொமாண்டராக நியமிக்கப்பட்டபோது, தமிழீழப் போராட்ட வரலாற்றில் முதல் தடவையாக சிறீலங்கா இராணுவக் கூலிப்படைக்கு எதிரான கெரில்லாத் தாக்குதலை வெற்றிகரமாகத் தொடங்கி, இரண்டு வீரர்களைச் சுட்டு வீழ்த்திய பெருமை சீலனுக்குரியது.

1982 இல் ஜனாதிபதித் தேர்தற் பிரச்சாரத்திற்காக யாழ்ப்பாணத்திற்கு ஜே.ஆர்.ஜெயவர்த் தனா, விஜயம் செய்வதையொட்டி, காரைநகர் பொன்னாலைப் பாலத்திற் கடற்படை வீரர்களின் ட்ரக்

வண்டிகளைச் சிதைக்கும் கெரில்லா நடவடிக்கையும் சீலனின் தலைமையிலேயே நடந்தது. துரதிஷ்டவசமாகச் சிறீலங்காக் கடற்படைக் கூலிகள் இத்தாக்குதலிலிருந்து தப்பித்துக்கொண்டனராயினும் இத்தாக்குதல் நடவடிக்கை சிறீலங்கா அரசை நடுக்கமுறச்செய்தது.

1982 ஒக்ரோபர் 20ஆம் திகதி, பாசிஸ வெறியன் ஜே.ஆர்.ஜெயவர்த்தனா, தேர்தலில் மீண்டும் ஜனாதிபதியாகத் தெரிவுசெய்யப்பட்டான்.

ஒக்ரோபர் 27.

சாவகச்சேரி.

புலர்ந்தும் புலராத காலை.

யாழ் - கொழும்புப் பிரதான வீதியிற் சற்று உள்ளே தள்ளிச் சாவகச்சேரிப் பொலிஸ் நிலையம் அமைந்திருந்தது; சார்ஜ் அறை, O.I.C. இன் அறை, பொலிசார் தங்குமிடம் ஆகிய வற்றை உள்ளடக்கியது.

பொலிஸ் நிலையத்திற்குச் சற்றுத் தள்ளி ஒரு மினிபஸ் நிற்கிறது. மினி பஸ்ஸில் இருந்து இராணுவ உடைதரித்த விடுதலைப் புலிகள், சீலனின் தலைமையில் உப இயந்திரத் துப்பாக்கி - எஸ்.எம்.ஜி., தானியங்கித் துப்பாக்கிகள் சகிதம் மின்வெட்டும் வேகத்திற் பொலிஸ் நிலையத்தினை முற்றுகையிட்டனர். எதிர்த்தாக்குதல் நடத்த முனைந்த இரண்டு பொலிஸ்காரர்கள் சுடப்பட்டனர்.

அந்த அதிகாலையின் அமைதியைக் கிழித்துக்கொண்டு, துப்பாக்கி வேட்டுகள் தொடர்ச்சி யாகத் தீர்க்கப்படுகின்றன. சார்ஜ் ரூம் சிதைக்கப்படுகின்றது.

பயம் அறியாத சீலன் முன்னின்று மேற்கொண்ட தாக்குதலிற் பொலிஸ் அதிரடிப் படையின் துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இலக்கானான். வலது காலின் முழங்கால் மூட்டிற்குச் சற்று மேலே ஐந்து துப்பாக்கிச் சன்னங்கள் பாய்ந்தன.

பொலிஸ் நிலைய வளவுக்குக் கொண்டுவரப்பட்ட மினி பஸ்ஸிற்குள் ஆயுதங்கள் அனைத்தும் துரிதமாக ஏற்றப்படுகின்றன.

காலைக் கெந்திக் கெந்தி இழுத்துக்கொண்டு, தனது எஸ்.எம்.ஜி. உடன் எதிரியின் துப்பாக்கியையும் இழுத்துக்கொண்டு மினி பஸ்ஸிற்கருகில் வந்து, சகபோராளிகளின் கைகளிற் கொடுத்துவிட்டுத் தள்ளாடுகிறான் சீலன்; மயக்கமடைகிறான்.

இதற்கு ஐந்து மாதங்களுக்கு முன்புதான் துப்பாக்கிப் பயிற்சியின்போது நெஞ்சிலே குண்டு பாய்ந்து, ஆஸ்பத்திரியிற் சிகிச்சைபெற்று ஓரளவு உடல் தேறியிருந்த சீலனுக்கு இது இரண்டாவது காயம்.

இந்தத் துப்பாக்கிக் காயம் சீலனை மிகவும் பலவீனப்படுத்தியது. காயப்பட்டுவிட்டாற் சீலனை வைத்துப் பராமரிப்பது சிறிது கஷ்டந்தான். "நோவுது, நோவுது" என்று தொடர்ச்சியாய் முனகிக் கொண்டிருப்பான். முதலாவது காயத்தின்போது நோவைத் தணிப்பதற்காகப் 'பெதற்றின்' மருந்து கொடுக்கப்பட்டு, சீலன் அதற்குக் கொஞ்சம் பழகிப்போனான். "எனக்குத் தாங்க முடியாது; பெதற்றின் தாங்கோ" என்று கெஞ்சும்போது, இந்த விடுதலைப் புலி ஒரு குழந்தையாகும். ஓரிடத்திற் கிடக்கமாட்டான்; புரண்டு புரண்டுகொண்டேயிருப்பான்.

ஒருமுறை, காயத்தின் நோவிலிருந்து மீள, மன ஆறுதலுக்குக் கடவுளை நினைத்துக் கொள் என்று, சீலனிடம் வைத்தியசாலையில் அவனைக் கவனித்துக்கொண்ட நண்பன் சொன்னபோது, அவன் தீர்க்கமாக மறுத்துவிட்டான். ஆனால், பின்பொருமுறை, தனது நெருக்கமான அரசியல் நண்பன் ஒருவன் மிகவும் ஆபத்தான சூழ்நிலையில் அகப்பட்டுக்கொண்டபோது, சீலன் மனமுருகிப் போனான். பிறப்பால் மட்டுமே கத்தோலிக்கனான சாள்ஸ் என்னும் சீலன், நண்பனின் மீட்சிக்காக அர்ச்சனைத் தட்டோடு இந்துக் கோவிலின் படிகளில் ஏறியிருக்கிறான். அறிவினை உணர்வு பின்தள்ளியிருக்கிறது. புத்தகங்களிற் கிரகித்த சிந்தனைகளையும் மேவி அவனது நட்பின் உணர்ச்சிச் சுழிப்பு பிரவகித்தோடியிருந்தது.

அவன் ஓரளவு குணமாகியிருந்தாலும் கெந்திக் கெந்தித்தான் நடப்பான். ஐந்துமாத இடைவெளியில், நெஞ்சிலும் காலிலுமாக அவன் வாங்கிய துப்பாக்கிக் குண்டுகளின் காயங்களில் இருந்து நலம்பெற்று, அவன் தன்னம்பிக்கையோடுதான் செயற்பட்டான்.

நெஞ்சிலே காயப்பட்டுச் சத்திரசிகிச்சை வெற்றிகரமாக முடிந்து ஆஸ்பத்திரியைவிட்டு வெளியேறும்போது, ஆஸ்பத்திரியில் நின்ற நாட்களில் அன்பாய் அவனைப் பார்த்துக்கொண்ட நேர்ஸ் அவனிடம் கேட்டாள்.

“நீங்கள் குணமானது உங்களின் தன்னம்பிக்கையினாலா? நண்பர்களினாலா? டொக்ரரினாலா? அல்லது கடவுளின் கிருபையினாலா”?



அந்த நேர்ஸ் என்ன பதிலை எதிர்பார்க்கிறாள் என்பது, சீலனுக்கு நன்றாகத் தெரியும். விடை பெறுகின்ற நேரத்தில், அவள் எதிர்பார்க்கும் அந்தப் பதிலைச் சீலன் சொல்லிவைக்க லாமே என்று, பக்கத்தில் இருந்த நண்பர்கள் மனத்தில் நினைத்துக் கொள்கின்றனர். அவளு டைய திருப்திக்காகத்தான் ஏற்றுக்கொள்ளாத ஒரு பதிலைச் சொல்ல அவன் தயாராக இல்லை.

சிகிச்சை பெற்று ஐந்து மாதங்கூடத் தரிக்காமல், அவன் மீண்டும் தமிழீழத்தின் போராடடக் களத்தில் இறங்கினான்.

1983 மே மாதம் 18ஆம் திகதி.

சிறீலங்கா அரசு நடத்தும் உள்ளூராட்சித் தேர்தலுக்கான திகதி.

ஓட்டுப் பொறுக்கும் அரசியலில் ஊறிப்போன கட்சிகள் தேர்தலிலே திளைத்தன. யாழ். மாவட்டத்தில், தமிழர் விடுதலைக் கூட்டணியும் ஐக்கிய தேசியக் கட்சியும் தமிழ்க் கொங்கிரஸ், நவசமசமாஜக் கட்சி ஆகியனவும் தீவிரத் தேர்தற் பிரச்சாரத்தில் இறங்கியிருந்தன.

யாழ். உள்ளூராட்சித் தேர்தலைப் பகிஸ்கரிக்கும் பணியில் இயக்கம் தீவிரமாகச் செயற்பட்டது. தமிழர் விடுதலைக் கூட்டணியின் சந்தர்ப்பவாதச் சமரசத் தலைமைகளால், தமிழ் மக்களுக்கு விடிவேற்படாது என்பதை நன்குணர்ந்திருந்த சீலன், அவர்களை மக்களுக்கு இனங்காட்டுவதில் முன்னின்றான். இனவாத அரசின் தேர்தல் மாயையிலிருந்து தமிழீழமக்கள் விடுபட வேண்டுமென்று, இயக்கம் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தபோது, தேர்தற் பகிஸ்கரிப்புப் பிரச்சார வேலைகளுக்காக இரவு, பகலாக அரசியல்ரீதியாகவும் இராணுவரீதியாகவும் சீலன் உற்சாகத்துடன் பணியாற்றினான்.

பாசிஸ இனவெறியன் ஜே.ஆர். இன் சார்பில், ஐக்கிய தேசியக் கட்சியின் சார்பில் இயங்கிய மூவர்மீது, ஏப்ரில் 29ஆம் திகதி இயக்கம் மேற்கொண்ட நடவடிக்கைகள் சீலனின் தலைமை யிலேயே மேற்கொள்ளப்பட்டன.

மே 18ஆம் திகதி, தேர்தல் நிலையங்களின் பாதுகாப்புக் கருதிச் சிறீலங்கா அரசு யாழ்க் குடாநாடு முழுவதும் ஆயுதப்படைகளைக் குவித்தது. ஒவ்வொரு தேர்தல் வாக்களிப்பு நிலையத் திற்கும் விரிவான பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. ஒவ்வொரு வாக்களிப்பு நிலையத்திலும் ஆயுதந்தாங்கிய பொலிஸார் ஐவரும் ஆயுதந்தாங்கிய இராணுவத்தினர் ஐவரும் பாதுகாப்பிற்காக உசார்நிலையில் வைக்கப்பட்டிருந்தனர்.

இதனைவிட, மணித்தியாலத்திற்கு ஒருமுறை பொலிசாரும் இராணுவத்தினரும் ரோந்து பார்த்த வண்ணமாக இருந்தனர்.

மே 18ஆம் திகதி மாலை 4.15 மணி.

கந்தர்மடம் சைவப்பிரகாச மகாவித்தியாலயத்தின் வாக்களிப்பு நிலையத்திற்கருகில், மூன்று சைக்கிள்களில் இளைஞர்கள் வந்திறங்குகிறார்கள்.

காலைக் கெந்தியவாறு ஒரு சைக்கிளின் பாரிலிருந்து இயந்திரத் துப்பாக்கியுடன் இறங்கும் சீலனின் தலைமையிற் கட்டளைகள் பிறக்கின்றன.

பாதைகள் மறிக்கப்பட்டு, வாகனங்கள் திருப்பி அனுப்பப்படுகின்றன.

வீதியைத் தங்களின் கட்டுப்பாட்டிற்குட் கொண்டுவந்தபின், இராணுவக் கூலிகளுடன் சீலன் நேருக்குநேர் நின்று நடத்திய தாக்குதல், சாவைத் துச்சமாக மதித்த ஒருவனின் துணிச்சலுக்குச் சாட்சி.

இந்தத் தாக்குதற் சம்பவம்பற்றிச் சிங்கள நூலாசிரியர் ஒருவர் விபரிக்கையில், ''விடுதலைப் புலிகளோடு பாதுகாப்புப் படையினர் நின்று தாக்குப்பிடிக்கக்கூடியவர்கள் அல்லர் என்று மக்கள் கருதியதுடன் விடுதலைப் புலிகளின் இராணுவத் திறமையையும் மெச்சினர்'' என்றே குறிப்பிடுகிறார்.

கந்தர்மடச் சம்பவம் நடைபெற்று அப்போது ஒன்றரை மாதமாகிவிட்டது.

ஜூலை 5ஆம் திகதி.
நேரம் நள்ளிரவைத் தாண்டிவிட்டது.

கொக்குவில், தாவடியில் ஒரு வீட்டுக்குள், சீலன் இராணுவ உடையில் இயந்திரத் துப்பாக்கியுடன் நுழைகிறான். அந்த வீட்டுக்காரரைத் தட்டி எழுப்பி, தாங்கள் குருநகர் இராணுவ முகாமிலிருந்து வந்திருப்பதாகவும் தாவடிச் சந்தியில் தங்கள் ஜீப் பழுதாகி நிற்பதாகவும் வீட்டுக்காரரின் டெலிக்கா வேனைத் தந்துதவுமாறும் கேட்கிறான். அந்த வீட்டுக்காரரும் பவ்வியமாகத் தனது வேனைக் கொடுக்கிறார்.

நள்ளிரவைத் தாண்டி 2.30 மணியளவில், சீலனும் அவனது நண்பர் சிலரும் காங்கேசன்துறைச் சீமேந்துத் தொழிற்சாலையருகில் இந்த வேனை நிறுத்திவிட்டு, ஆயுதங்களோடு தொழிற்சாலைக்குள் நுழைகின்றனர். துப்பாக்கி முனையில், வாசலில் நின்ற காவலாளிகளையும் நேரப்பதிவாளரையும் கட்டிவைத்துவிட்டு, களஞ்சியப் பொறுப்பாளரின் சாவிகளை எடுத்துக்கொள்கின்றனர். ஐந்தே நிமிடங்களில் நான்கு பெரிய தகர்ப்புக் கருவிகளையும் பிற தேவையான உபகரணங்களையும் எடுத்துக்கொண்டு தொழிற்சாலையைவிட்டு வெளியேறுகின்றனர்.

அதிகாலை 4.30 மணியளவில், தாங்கள் பெற்றுக்கொண்ட டெலிக்கா வேனை மீண்டும் உரியவரிடம் ஒப்படைக்கின்றனர்.

மிகத்திறமையாகச் சீலன் இயக்கத்துக்குத் தேடித்தந்த தகர்ப்புக் கருவிகள், பிற்பட்டகாலத் தாக்குதல் நடவடிக்கைகளின் வெற்றிக்குப் பெருந்துணை புரிந்துள்ளன. ஆனால், இவற்றைத் தேடித் தந்தபின் பத்து நாட்களே சீலன் வாழ்ந்தான்.

1979ஆம் ஆண்டின் ஆரம்பப் பகுதியில் இயக்கத்திற் சேர்ந்த சீலன், 1981ஆம் ஆண்டிலிருந்து அரச படைகளால் தேடப்பட்டு வந்தான். இதன்பின், தலைமறைவுக் கெரில்லா வாழ்க்கையை மேற்கொண்ட சீலனின் புகைப்படங்கள் எதுவுமே அரச படைகளின் கைகளிற் சிக்காமையினால், இவன் மக்கள் மத்தியில் வெவ்வேறு பெயர்களில் அரசியற் பணிகளை மேற்கொள்வது சாத்தியமாக இருந்தது.

அரச படையினால் தேடப்பட ஆரம்பித்ததும் தனது வீட்டுக்குப் போவதைப் பூரணமாக நிறுத்திக் கொண்டான். ஆஸ்பத்திரியில் நெஞ்சில் துப்பாக்கிக் காயத்திற்காகச் சிகிச்சை பெற்றுக்கொண்டிருக்கும் சமயத்திலேதான், அவனது தந்தை இறந்த செய்தி, சில நாட்கள் கழித்து அவனுக்குத் தெரியவந்தது. தந்தையும் இல்லாத நிலையில், தன் தாய் பொறுப்பு மிகுந்த அந்தக் குடும்பத்தைக் காப்பாற்ற எவ்வளவு கஷ்ரமுற்றிருப்பாள் என்று சீலன் நினைக்காமல் இருந்திருப்பான் எனச் சொல்லமுடியாது. தனது குடும்பப் பிரச்சினைகள் குறித்து நெருங்கிய நண்பர்களிடம் மிக அபூர்வமாகவே கதைத்திருக்கிறான்.

சீலன், லூக்காஸிற்கும் ஜெபமாலைக்கும் மட்டுமேதான் சொந்தமானவன் அல்லன் என்று உணர்ந்திருந்தான்.

சீலன் இவன்தானா என்று அடையாளங்காணத் திருகோணமலையிலிருந்து யாழ்ப்பாண ஆஸ்பத்திரியின் சவச்சாலைக்குக் கொண்டுவரப்பட்ட சீலனின் தாய், ஆடாமல் அசையாமல் நிற்கிறாள் நெற்றிப்பொட்டிலே பாய்ந்த துப்பாக்கிச் சன்னத்தால் தலை சிதைந்த நிலையிலே, தான் பெற்ற அழகுச்செல்வன் கிடத்தப்பட்டிருப்பதை அவள் கண்ணீர் திரையிட உற்று நோக்குகிறாள். நான்கு வருடங்களுக்கு முன் மெல்லியவனாக வீட்டை விட்டு வெளியேறிய மகன், வாட்டசாட்டமாக - வளர்ச்சி கொண்டவனாக - அடையாளமே கண்டுபிடிக்கமுடியாத அளவு மாறிப்போய்க் கிடத்தப்பட்டிருக்கிறான். அந்த மச்சம், உதடுகள், சிதைவுக்கூடாகவும் முழுமை காட்ட முயலும் முகம் பெற்றவள் இனங்காண்கிறாள்.

அது அவளுடைய செல்வன்தான்.

அரைமணி நேரமாக அவள் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

துயரந்தோய்ந்த அந்தத் தாயின் பக்கத்திலே சீலனின் அண்ணன் அந்த உடலை வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

'வீரசீலம்' எனும் குறும்படமானது இவரது நினைவாகவே எடுக்கப்பட்டது என்பதனையும் நாம் இங்கு குறிப்பிட விரும்பு கின்றோம்.

அமைதியை இராணுவப் படையில் ஒருவன் குலைக்கிறான்.

“இது ஒண்ட மகனா?” கொச்சைத் தமிழிற் கேட்கிறான்.

கண்ணீர் வழியத் தாய் தலையசைக்கிறாள்.

தன் மகனின் உடலைத் தன்னிடம் ஒப்படைக்குமாறு அந்தத் தாய் அங்கு நின்ற மேஜரிடம் வேண்டுகிறாள்.

அவனோ வெறுப்பை உமிழ்கிறான்.

அந்தச் 'செல்வ மகனின்' உடல் அந்தத் தாய்க்குச் சொந்தம்.

அது தர்மம்.
அந்த 'விடுதலை வீரனின்' உடல் அரசுக்குச் சொந்தம்.

இது சட்டம்.

தான் பெற்ற மகனைக் கௌரவமாக அடக்கஞ்செய்ய நினைத்த அந்த ஏழைத் தாயின் உரிமையைத் 'தார்மீக' அரசின் பயங்கரவாதம் நெரித்தது.

சீலன் உயிரோடிருந்ததைவிட அவன் மரணித்தபோதுதான் அரசுக்குப் பெரும் சவாலானான். புரட்சிவாதிகளின் வாழ்க்கை சாவுக்குப் பிறகுதான் ஆரம்பமாகிறது.

அவனுடைய சடலம் கிடத்தப்பட்டிருந்த வைத்தியசாலை பலமான இராணுவக் காவலுக்கு உட்படுத்தப்பட்டிருந்தது.

அதற்குப்பின் அந்தத் தாய்க்கு அந்த வீர மகனின் சடலத்தைப் பார்க்கமுடியவில்லை.

இலட்சோப இலட்சக்கணக்கான தமிழ் மக்களின் இதயங்களிலே அணையாத புரட்சித் தீயாக ஒளி வீசிக்கொண்டிருக்கும் சீலனின் சடலம், யாருக்கும் தெரியாமல் அவசரகாலச் சட்டத்தின்கீழ் இராணுவ மிருகங்கள் சூழ்ந்துநிற்க எரிக்கப்பட்டது.

○ ○ ○

விடுதலைக்காகவே வாழ்ந்த அந்த வீரமகனைப் பிரபாகரன் கண்ணீருடன் நினைவுகூருகின்றார்:
"எவ்வளவு அற்புதமானவன் என் சீலன்!"

"ஆசையாகவல்லவா நான் அவனுக்கு இதயச்சந்திரன் என்று பெயர் வைத்தேன்!"

"இவ்வளவு சீக்கிரமா என்னைவிட்டுப் போனான்?"

"அவனது மரணச்செய்தி பொய்யாகப் போய்விடாதா என்று என் மனம் நடுங்கியதே...."

"எவ்வளவு கஸ்ரங்களில் உயிருக்குயிராய்த் துணை நின்றான்....."

"காடுகளில் அவனோடு திரிந்த காலங்கள்தான் எத்தனை மகத்தானவை...."

"இலட்சியங்களோடு காத்திருந்தானே...."

"ஏன் திடீரென இப்படி இல்லாமற் போனான்?"

"மீண்டும்...... மீண்டும்.....
நினைவிற் சுழல்கிறது –
அந்த அழகு முகம்.

அந்த மழலைச் சிரிப்பு.
அந்தப் பாட்டு.
அன்று –
இரவு சூழ்ந்துவிட்டது.
சலசலக்கும் காட்டு மரங்கள்.
சருகுகளின் ஓசை,
சில்வண்டுகளின் ரீங்காரம்.
காற்றின் வருடலில்,
கனலும் தீக்கங்குகள்.
குழுமியிருக்கும் விடுதலை இளவல்கள்.
அவர்களிடையே பல்சுவை நிகழ்ச்சி.
அது சீலனின் முறை.
அவனுக்குப் பாட்டு.
அதோ சீலன்!
எப்போதும்போல் கட்டமிட்ட சட்டை;
கணுக்காலுக்கு மேல் மடித்துவிட்ட ஜீன்ஸ்.
அவனிடம் கூச்சம்.
சிரித்துச் சமாளிக்கிறான்.
நண்பர்களின் தூண்டுதல்.
பாட்டின் ஆரம்பம்.
ஆரவாரமான வரவேற்பு.
உற்சாகமடைகிறான்.
கைகளை அகலவிரித்து கம்பீரமாகப் பாடுகிறான்.''

"அதோ அந்தப் பறவைபோல வாழவேண்டும். இதோ இந்த அலைகள்போல........"

- விடுதலைப் புலிகள் -



# வென்று வந்த வரலாற்றின் ஒரு சகாப்த வரிகள்

- அ. பார்த்திபன்

பகுதி - 02

# பிறப்பெடுத்த புலிகளின் முதல் மரபுப் படையணி

2ஆம் கட்ட ஈழப்போரின் ஆரம்பக் கட்டங்களிற் கெரில்லாப் போர் அணியாகச் செயற்பட்டுக் கொண்டிருந்த விடுதலைப் புலிகள் பின்னர் மரபுவழி இராணுவ அம்சங்களைப் பிரதிபலிப்பவர்களாகப் போரரங்கில் நுழைந்தனர். அது விடுதலைப் புலிகளின் போரியல் வளர்ச்சியில் ஒரு புதிய அத்தியாயத்தைத் திறந்துவிட்டது.

ஒரு மரபுவழி இராணுவத்தின் தேவையை அன்றைய சூழல் எமக்குத் தந்தது. எதிரி தனது முகாம்களைப் பலப்படுத்தியதுடன் ஒரு கெரில்லா அமைப்பாற் சாதாரணமாகத் தாக்கியழிக்கப்பட முடியாதவாறு தன் முகாம்களை அமைத்திருந்தான். ஏற்கனவே மரபுவழிப் படைக்குரிய அம்சங்களைக் கொண்டிருந்த தன் படைகளைப் பலப்படுத்தி, நவீன ஆயுதங்களையும் புதிய போர் நுணுக்கங்களையும் பெருமளவிலான ஆளணிகளையும் ஒன்று சேர்த்து, ஒரு பலம் வாய்ந்த மரபுப்போர் இராணுவமாகத் தன் படைகளை எதிரி ஒழுங்கமைத்திருந்தான்.

இப்புதிய ஒழுங்கமைப்பின்மூலம், தான் ஏற்கனவே எம் தாயகப் பிரதேசத்தில் அமைத்திருந்த முகாம்களை எமது தாக்குதல்களிலிருந்து காப்பாற்றியதுடன், எமது பாரம்பரிய பிரதேசங்களின்மீது ஆக்கிரமிப்பை மேற்கொண்டும் புலிகளின் தளப்பிரதேசத்தைக் கைப்பற்றியும் மக்களின் வாழ்வை அவலப்படுத்தியும் ஆக்கிரமித்தும் எம் மக்களை ஏதிலிகளாக்கும் ஒரு நீண்ட திட்டத்தை எதிரி தயாரித்திருந்தான்.

எதிரியின் இப்புதிய போர் மூலோபாயமானது எம் போராட்ட வளர்ச்சிக் கட்டத்திற் பேராபத்தை விளைவிக்கக்கூடிய தடைக்கல்லாக இருந்தது. இந்நிலையில் எதிரியின் மரபுவழி இராணுவத்தை எதிர்கொண்டு அந்த இராணுவத்தைத் தாக்கி அழிக்கத்தக்கவாறான பயிற்சி, தந்திரம், நவீன ஆயுதங்களைக் கையாளக்கூடியதிறமை, அணிகளைப் போரில் வழிநடத்தும் புலமை என்பன நிரம்பப் பெற்ற படையணிகளாக எம்மை மாற்றிக்கொண்டு விடுதலைப் போரின் அடுத்தகட்ட வளர்ச்சிக்கு எமது விடுதலைப் படையைத் தயார்ப்படுத்தத் தலைவர் முயன்றார்.

அன்றைய காலப்பகுதியில் எமது அமைப்பினால் வெற்றிகொள்ளப்பட்டிருந்த யாழ் கோட்டை மற்றும் தாக்கியழிக்கப்பட்ட கொண்டச்சி, கொக்காவில், மாங்குளம், தென் தமிழீழத்தின் பல முகாம்கள் என எல்லாமே பிராந்திய மட்டத்திற்கு உட்பட்ட எமது தாக்குதல் அணிகளாலேயே பெரும்பாலும் வெற்றிகொள்ளப்பட்டிருந்தன. ஆனாலும், சில முகாம்களின் தாக்குதல் வெற்றிகள் பல பிராந்தியப் படைகளின் ஒன்றிணைந்த தாக்குதல்களின்மூலம் கிடைத்தன. அவ்வாறான வெற்றிகள் எதிர்காலத்தில் ஒரு மரபுவழிப் படையின் தோற்றத்தையும் அது தரப் போகும் வெற்றிகளையும் கட்டியங் கூறி நின்றன.

2ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கிய சொற்ப காலத்தில் ஒரு மரபுவழிப் படையணியின் தேவைக்கான சூழல் தலைவரால் உணரப்பட்டு, அவரின் எண்ணப்படி அது உருவாக்கம் பெற்றது. விடுதலைப்

புலிகளின் இராணுவ அமைப்பானது தன்னை ஒரு மரபுவழிப் போரிற்குத் தயாரான படைப்பிரிவாக உருமாற்றியவாறு, மரபு இராணுவத்துக்குரிய தன் வளர்ச்சிப் படியில் விரைவாகவும் நிதானமாகவும் முன்னேறத் தொடங்கியது.

1991ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் திகதி மாவட்டரீதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட போராளிகள் ஒன்றிணைக்கப்பட்டு 1500 பேர்கொண்ட ஓர் அணியாகச் "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" எமது இயக்கத்தின் முதலாவது மரபுவழிப் படையணியாக உத்தியோகபூர்வமாக எமது தலைவர் அவர்களாற் பிரகடனப்படுத்தப்பட்டது.

அதுவரை காலமும் நடைமுறையிலிருந்த இராணுவக் கட்டமைப்புக்களும் போர்ப் பயிற்சித் திட்டங்களும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் உருவாக்கத்துடன் புதிய வடிவம் பெறத் தொடங்கியமை குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணம், தென்மராட்சியின் எழுதுமட்டுவாட் பகுதியில் ஒன்றிணைக்கப்பட்ட இப்புதிய படையணியானது 1200 பேர்கொண்ட தாக்குதல் அணியாகவும் 300 பேர் கொண்ட கனரக ஆயுத அணியாகவும் ஒழுங்கமைக்கப்பட்டது.

"சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" என்னும் பெயர் தலைவர் அவர்களாலேயே சூட்டப்பெற்றது. லெப்.சாள்ஸ் அன்ரனி (சீலன்) தமிழீழ விடுதலைப் புலிகளின் மூத்த உறுப்பினர். தமிழீழ விடுதலைப் போரிற் சிங்கள இராணுவத்தின்மீதான புலிகளின் முதலாவது தாக்குதலைத் தலைமையேற்று நடாத்திய, முதலாவது தாக்குதற் பிரிவுத் தளபதி. விடுதலைப் போரில் எமக் கெல்லாம் சிறந்த உன்னத வழிகாட்டியின், புலிகளின் தாக்குதற் படைப்பிரிவின் முதலாவது தளபதியின் ஞாபகமாகவே விடுதலைப் புலிகளின் முதலாவது மரபுப்போர்ப் படையணிக்கு "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" எனப் பெயர் சூட்டப்பெற்றது.

"சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" யின் தொடக்க நாள் அன்று படையணிப் போராளிகள் மத்தியில், தமிழீழத் தேசியத் தலைவர் அவர்கள் உரையாற்றும்போது "நீண்டதும் கடினமானதுமான எமது விடுதலைப் போரில் இறுதிவரை உறுதியுடன் போராட உடல், உளப் பயிற்சிகள் அவசியம். எதிரியின் பலத்தையும் பலவீனத்தையும் அறிந்து அதனை வெற்றி கொள்ளத் தேவையான தந்திரங்களையும் வகுத்துக்கொள்ளவேண்டும். இவை இருந்தால் மட்டும் ஒரு படையணி வெற்றியடைய முடியாது. இவற்றைச் செயற்படுத்தும் துணிவும் வேண்டும். பயிற்சி, தந்திரம், துணிவு இவையே ஒரு படையணியின் வெற்றியைத் தீர்மானிக்கும்" எனத் தெரிவித்தார். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி இதையே தனது தாரக மந்திரமாகக் கொண் டுள்ளது. மேலும், அவர் கூறுகையில் "விடுதலைப் போரிற் பெரிய இலக்குகளைத் தாக்கிய ழிப்பதுடன், தமிழீழத்தின் அனைத்துப் பகுதிகளிலும் செயற்படும் அணியாகவும் நீங்கள் விளங்க வேண்டும்" எனத் தெரிவித்தபோது முதன்முதலில் ஒரு சிறப்புப் படையணியாகக் கூடி நின்ற போராளிகளின் மனத்தில் அது புதிய உற்சாகத்தையும் உத்வேகத்தையும் கொடுத்தது.

இப்படைபிரிவின் உருவாக்கத்திற்காகப் பல்வேறுபட்ட பிராந்தியப் படைகளில் இருந்து வந்திருந்த போராளிகளின் மனத்தில் மகிழ்வும் ஆர்வமும் ஒத்துழைப்பும் வேகமும் மேலோங்கியிருந்தன. அன்றைய சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைச் சேர்ந்த போராளிகள் ஒவ்வொருவரதும் அயராத முயற்சியாலும் அர்ப்பணிப்பாலுமே விடுதலைப் புலிகளின் மரபுப் போர் அணிகளின் முதற்படியான "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" புலிகளின் புதிய போரியலுக்கான ஒரு திறவுகோலாகத் தன்னை அமைத்துக்கொண்டது.

ஆரம்பத்தில் இப்படைப் பிரிவின் சிறப்புத் தளபதியாகத் தளபதி கேணல் பால்ராஜ் அவர் களும் தளபதியாக லெப்.கேணல் ராஜன் (மாவீரர்) அவர்களும் துணைத்தளபதியாக லெப். கேணல் ஜஸ்ரின் (மாவீரர்) அவர்களும் தலைவர் அவர்களால் நியமிக்கப்பட்டனர்.

2ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கிய ஆரம்ப நாட்களிற் சிங்களப் படைகளின் உடனடி இலக்காக வன்னிப் பகுதியே இருந்தது. மணலாறு உட்பட வன்னியின் பகுதிகளைக் கைப்பற்றி, வடக்கு-கிழக்கைப் பிரித்தெடுக்கவேண்டிய அவசர இராணுவத் தேவை எதிரிக்கு இருந்தது. இந்திய இராணுவத்துடனான எமது போரை நடாத்திய தலைவர் தங்கியிருந்த மணலாற்றுப் பகுதியின் இராணுவ முக்கியத்துவம் எதிரிக்கு நன்கு தெரிந்திருந்தது. இதனால் வன்னியையே முதலிற் கைப்பற்ற எதிரி எண்ணினான். எனவே, எதிரியின் மரபுவழி இராணுவ நடவடிக்கையை எதிர்நோக்கி விடுதலைப் புலிகளின் "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" வன்னியிலேயே தன் ஆரம்பச் செயற்பாடுகளைத் தொடங்கியது. "வன்னியைப் பாதுகாப்பதே எமது உடனடித் தேவையாக அப்போதிருந்தது. அதற்குரிய நடவடிக்கையிலேயே நாம் உடனடியாக ஈடுபட்டோம்" என அன்றைய சூழலை நினைவுகூர்ந்தார் தளபதி பால்ராஜ்.

2ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கிய ஆரம்பகாலப்பகுதி. சிங்களப் பேரினவாத அரச இராணுவம் விடுதலைப் புலிகளை எளிதாகத் தோற்கடித்துவிடலாமென நம்பியிருந்த காலமது. எனவேதான், விடுதலைப் புலிகளைத் தொடர்ச்சியான முற்றுகைக்குள்ளாக்கி எம் நிலப்பரப்பைத் தொடர்ச்சியாக ஆக்கிரமிக்க எதிரி முயன்றான். எமது கட்டுப்பாட்டுத் தளப்பிரதேசத்தை ஆக்கிரமிப்பதன்மூலம் எம்மைத் தோற்கடிக்க எதிரி திட்டமிட்டான். அதற்காகவே அன்றைய பெரும்பாலான படையெடுப்புக்கள் எதிரியால் மேற்கொள்ளப்பட்டன. எதிரியின் இந்த முற்றுகைச் சமரை உடைப்பதில், அவனது இராணுவ நடவடிக்கைகளைக் கேள்விக்குறியாக்குவதில் அன்று சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் பங்கு பிரதான இடத்தைப் பெற்றிருந்தது. அன்று தொடக்கம் இன்றுவரை எதிரியின் திட்டமிட்ட இராணுவ நடவடிக்கைளுக்கு எதிரான முறியடிப்புச் சமர்களானாலும் எம்மால் திட்டமிடப்பட்ட வலிந்த தாக்குதல்களானாலும் அவற்றிலெல்லாம் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கு முக்கியத்துவம் வாய்ந்த பணிகளைத் தலைவர் அவர்கள் ஒப்படைத்து வருகின்றார்.

இவ்வாறு எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் உருவாக்கமானது எம் போராட்ட வடிவத்திற்கு ஒரு புதிய பரிமாணத்தைத் தந்துவிட்டது. கெரில்லாப் போராட்ட வடிவத்திலிருந்து நாம் மரபுவழி இராணுவ அம்சங்களைக்கொண்ட படையணிகளாக மாறிய போரியல் வளர்ச்சியின் ஆணிவேராக நின்று, எதிரியின் எத்தனையோ இறுக்கமான சவால்களையும் நெருக்கடிகளையும் தனக்கே உரித்தான நெஞ்சுரத்துடன் எதிர்கொண்டு, வீரத்தாலும் தியாகத்தாலும் எமது விடுதலைப்போர் வரலாற்றை நிறைத்தபடி, எமது தேசியத் தலைவரின் வழிகாட்டலிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உறுதியுடன் நிமிர்ந்து நிற்கிறது.

உலகம் அதிசயிக்கும் இன்றைய விடுதலைப் புலிகளின் போர் நுட்பங்களும் படை நகர்த்தும் திறனும் புலிப்போராளிகளினது வீரத்தாலும் தியாகத்தாலும் கட்டியெழுப்பப்பட்ட ஒரு கோபுரமாயின் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் செயற்பாடுகள் அதன் அத்திவாரக் கற்களில் ஒன்றாகும்.

ஆடி 1991 'விடுதலைப் புலிகள்' உத்தியோகபூர்வ பத்திரிகையிலிருந்து

# விடுதலைப் புலிகளின் முதலாவது மரபுவழிப் போர் அணி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் தனது முதலாவது மரபுப் படையணி ஒன்றைப் பெற்றெடுத்துள்ளது. இதற்குச் "சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி" எனப் பெயர் சூட்டியுள்ளோம்.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இப்படையணியின் பிறப்பு எமது விடுதலை இராணுவத்தின் உயர் வளர்ச்சி ஒன்றைச் சுட்டிக் காட்டி நிற்கிறது.

இது தமிழீழப் போராட்ட வரலாற்றிற் பொன் எழுத்துக்களாற் பொறிக்கப்படவேண்டிய ஒரு சரித்திர நிகழ்ச்சியாகும்.

பயிற்சி, தந்திரம், துணிவு–வெற்றி என்ற தலைவர் பிரபாகரனது வார்த்தைகளைத் தாரக மந்திரமாக இப்படையணி கொண்டுள்ளது.

திரு.சாள்ஸ் அன்ரனி – சீலன் – அவர்கள் எமது மூத்த உறுப்பினரும் தலைசிறந்த வழிகாட்டியுமாவார். 1982ஆம் ஆண்டு எமது இயக்கத்தின் தாக்குதற் பிரிவு உருவாக்கப்பட்டபோது அதற்குப் பொறுப்பாக திரு.சாள்ஸ் அன்ரனி அவர்களையே தலைவர் பிரபாகரன் நியமித்தார்.

15.07.83 அன்று வீரச்சாவடைந்த திரு.சாள்ஸ் அன்ரனி அவர்களின் பெயரைச் சூட்டிக்கொண்டதில் எமது முதலாவது மரபுவழிப் போர் அணி பெருமையும் வரலாற்றுச் சிறப்பும் பெறுகின்றது.

இச்சிறப்புப் படையணியின் பிறப்பை உலகிற்குப் பிரகடனப் படுத்துவதுடன் அன்பிற்குரிய எமது மக்களுக்கும் தெரியப்படுத்துவதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

❖ **இராணுவ ஆய்வாளர்களால் "இரும்புக் கோட்டை" என வர்ணிக்கப்பட்ட, யாழ்ப்பாணம்மீதான ஆக்கிரமிப்பின் நம்பிக்கைக் கவசமாக இருந்த ஆனையிறவுத் தளத்தைக் கைப்பற்றுவதற் காக இத்தாவிற் பகுதியில் ஊடுருவி ஏற்படுத்தப்பட்ட வரலாற்றுப் பெருமை மிக்க இராணுவ வியூகத்தில் உங்களுடைய கட்டளையின் கீழ், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை வழிநடத்தும் ஒரு வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தது. இன்று இயக்கத்தின் முன்னணிப் போர்ப்படையென்ற வகையில் இந்தப் படையணியின் வளர்ச்சிபற்றி என்ன கூறுகின்றீர்கள்?**

➤ ஆனையிறவுத்தளத்தை வீழ்த்துவதற்குத் தலைவர் அவர்களால் தரப்பட்ட போர்த்திட்டத்தின்படி மாமுனைப் பகுதியில் ஒரு தரையிறக்கம் செய்யப்பட்டு, இத்தாவிற் பிரதேசத்தில் ஏ–9 கண்டி வீதியை ஊடறுத்து ஏற்படுத்தப்பட்ட இராணுவ வியூகத்திற்காகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி என்னுடன் ஓர் இரகசிய நகர்வுமூலம் முதலில் அனுப்பப்பட்டது. முப்பத்து நான்கு நாட்கள் அங்கே நடந்த கடுமையான சமரில் இலங்கையின் முழு இராணுவ பலத்தையும் எதிரி எமது போர்வீரர்கள்மீது செலுத்தினான். எதிரியின் சகல படைவலுவையும் குறிப்பாக வீமானப்படை,

## முதலாவது சிறப்புத் தளபதி கேணல் பால்ராஜ்
### அவர்களுடனான பேட்டி



முத்த தளபதி கேணல் பால்ராஜ். தமிழீழத்தின் புகழ்மிக்க பல போர்க்களங்களை வழிநடத்தியவர் என்பது மட்டுமல்லாமல், விடுதலைப் புலிகளின் முதலாவது மரபுப்படையான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முதலாவது சிறப்புத் தளபதியாகவும் தலைவரால் நியமிக்கப்பட்டவர். 1991 முதல் 1993 வரையான காலப்பகுதியிலும் 1995 முதல் 1997 வரையான காலப்பகுதியிலும் படையணியின் சிறப்புத் தளபதியாக வழிநடத்தியவர். படையணியின் இன்றைய பெருமைகளுக்கும் சாதனைகளுக்குங்கூட அத்திவாரமாகச் செயற்பட்டவர். போராளிகளைச் செயற்படத் தூண்டியவர். இன்று விடுதலைப் புலிகளின் நடவடிக்கைக் கட்டளைத் தளபதிகளில் ஒருவராகச் செயற்படுபவர். அவரை, அவருடைய நடவடிக்கைக் கட்டளைப் பணியகத்திற் சந்தித்து உரையாடினோம்.

பீரங்கிப்படை, கவசப்படை மற்றும் காலாட் படையினரின் உச்சக்கட்டமான எதிர்ப்பையும் இரண்டுகிலோமீற்றர் அகலமே கொண்ட அந்த இராணுவ வியூகத்தில் எதிர்கொண்டோம்.

அந்தக் களத்திற் சாள்ஸ் அன்ரனி படையணிப் போராளிகளின் – குறிப்பாக இளம் வீரர்களின் உச்ச சமர்த்திறனை நான் நேரடியாகக் கண்டேன். அந்த முப்பத்து நான்கு நாட்களும் எதிரி இடையறாது மேற் கொண்ட நகர்வுகள் பலவற்றையும் முறிய டிப்பதில் இந்தப் படையணிப் போராளிகள் வெளிப்படுத்திய வீரமும் விவேகமும் உறுதியும் மதிப்பிடமுடியாதன. வரலாறு முழுவதும் நிலைத்திருக்கக்கூடியன. ஆரம்பத்தில் தலைவர் அவர்கள் என்னுடன் படையணி உருவாக்கம் தொடர்பாகக் கதைக்கும் போது, எவ்வாறு இந்தப் படையணி தமிழீழப் போரரங்கில் நெருக்கடி மிகுந்த களங்களை வெற்றி கொண்டு, தனது போர்த்திட்டங்களுக்கு வடிவம் தரவேண்டும் என எதிர்பார்த்தாரோ அதைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வீரர்கள் இத்தாவில் இராணுவ வியூகத்தில் மீண்டுமொரு முறை உச்ச அளவிற் சாதித்துக்காட்டியதை நான் நேரிற் கண்டேன்.

❖ **சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உருவாக்கம் தொடர்பாகத் தலைவர் உங்களுடன் கதைக்கும்போது படையணி பற்றிய தலைவருடைய எதிர்பார்ப்புக்கள் எவ்வாறு இருந்தன எனச் சொல்லுங்கள்?**

➢ படையணியை முதன்முதலில் உருவாக்கிய போது தலைவர் அவர்கள் என்னுடன் பல விடயங்களைக் கதைத்திருந்தார். சாள்ஸ் அன்ரனி என்ற இயக்கத்தின் முதலாவது தாக்குதல் தளபதியின் பெயரிற் சிறப்புப் படையணி ஒன்று ஆரம்பிக்கப்படவேண்டும் என்பது தலைவருடைய விருப்பாக இருந்தது. அத்துடன், தமிழீழ விடுதலைப் போரின் இறுதிவரை இப்படையணியின் பங்கு போர்க்களங்களில் இருக்கவேண்டும் எனவும் விரும்பினார். சீலன் எப்படித்தனக்கு உறுதுணையாக இருந்து செயற்பட்டாரோ அதேபோல அவருடைய முன்னுதாரணத் திற்கு அமைவாக இந்தப் படையணி செயற்படவேண்டும் என்பது தலைவருடைய எதிர்பார்ப்பாக இருந்தது.

“தமிழீழ நிலப்பரப்பை மீட்பதற்கான முதலாவது மரபுவழிப் போரணியாகச் சாள்ஸ் அன்ரனி படையணியை உருவாக்கு கின்றேன். இந்தப் படையணியை ஓர் ஆரம்பச் செயலணியாகக்கொண்டு எமது கட்டுப்பாட்டுப் பிரதேசத்தை விரிவுபடுத்தி, இறுதியிலே தமிழீழ நிலப்பரப்பு முழுவதையும் விடுதலையடையச் செய்யவேண்டும். அதற்கான செயற்பாடுகளிற் படையணி ஈடுபட வேண்டும். இதனாற்றான் நான் உன்னை இந்தப் படையணிக்கு நியமிக்கின்றேன். நீ படையணியை நான் எதிர்பார்க்கின்றபடி முன்னணிப் படையாக உருவாக்கவேண்டும்” என்று கூறினார்.

❖ **பல மாவட்டப் போராளிகளையும் ஒன்றாய் இணைத்துத் தொடங்கப்பட்ட முதலாவது படையணி என்றவகையில் அப்போது போராளிகள் மத்தியில் எப்படியான மன நிலை இருந்தது?**

➢ எல்லா மாவட்டப் போராளிகளையும் ஒன்றிணைத்து ஒரு படையணியை உருவாக்கும் திட்டத்தை 1991ஆம் ஆண்டு தலைவர் அவர்கள் என்னிடம் தந்தார். அப்போது நாங்கள் கிட்டத்தட்டப் போராளிகள் 1500 பேரை ஒரே அணியில் இணைத்தோம். போராளிகள் பல மாவட்டங்களில் இருந்து வந்திருந் தாலும் இயக்கத்தினுடைய ஒரு மரபுவழிப் படையணியாக ஒன்றிணைவதற்காகத் தலைவரால் அழைக்கப்பட்டிருக்கின்றோம் என்ற வகையில் மிகுந்த உற்சாகமாகவும் பெருமளவில் ஒன்றாகக் கூடும்போது ஏற் பட்ட அதீதமான நம்பிக்கை நிரம்பியவர் களாகவும் காணப்பட்டார்கள்.

அத்துடன், தமிழீழப் போரரங்கில் வீடு தலையுத்தத்திற்கான ஒரு சிறப்பு மரபுப் படையாகத்

தலைவர் அவர்களால் உருவாக் கப்படுகின்றோம். இதில் தலைவருடைய நேரடிக் கண்காணிப்பில் இருக்கின்றோம் என்ற உற்சாகத்தோடு, அவரின் எதிர்பார்ப் புக்களை, அவருடைய எண்ணங்கள் கருத் துக்களைச் சரியான முறையிற் செய்து முடிக்கவேண்டும் என்ற உறுதியும் அதற் கான முனைப்பும் நிரம்பப் பெற்றவர்களாகத் தளபதிகள், பொறுப்பாளர்கள், போராளிகள் அனைவரும் இருந்ததை என்னாற் காணக் கூடியதாக இருந்தது.

❖ **தலைவர் ஒரு மரபுவழிப் படையணியைத் தொடங்கி அதற்கு முதன்முதல் உங்களைச் சிறப்புத் தளபதியாக நியமித்தபோது, நீங் கள் எவ்வாறு இந்தப் படையணியை உரு வாக்கவேண்டும் என எண்ணினீர்கள்?**

➢ இயக்கத்தினுடைய முதலாவது தாக்குதல் தளபதியுடைய பெயரிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை உருவாக்கி அதற்கு முதலாவது சிறப்புத் தளபதியாக என்னை நியமித்தபோது மிகுந்த மகிழ்ச்சியாகவும் தலைவரின் எதிர்பார்ப்புக்கு ஏற்பச் செயற்பட வேண்டும் என்ற தீவிரமும் என்னிடம் இருந்தது. அதற்காக எனக்குள் உறுதியெ டுத்துக் கொண்டேன். படையணி தொடர்பாகத் தலைவர் என்னுடன் கதைத்தவற் றைக் கருத்திற்கொண்டு சாள்ஸ் அன்ரனி படையணியை ஒரு சாதனை அணியாக, பெயரைக் கேட்டாலே எதிரி அஞ்சும் படையணி யாக உருவாக்க வேண்டும் என்று எனக்குள் ஓர் இலட்சியத்தை ஏற்படுத்தியிருந்தேன்.

❖ **சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவின் சிறப்புத் தளபதியாக இருந்த காலத்திற் சமர் நட வடிக்கைகள் தொடர்பாக வரலாற்றிற் பெருமைப்படக்கூடிய சண்டைகளைச் சொல்லமுடியுமா?**

➢ முதலாவதாக, 1991ஆம் ஆண்டு இராணுவம் மேற்கொண்ட 'வன்னி விக்கிரம' நடவடிக் கைக்கு எதிரான சமரைக் குறிப்பிடலாம். இந்தச் சமர் பலவகைகளில் முக்கியத்துவம் பெறுகின்றது. இரண்டாங்கட்ட ஈழப்போர் ஆரம்பித்த பின்னர் வன்னியில் நில ஆக்கிர மிப்பு நோக்கில் அரசு ஆரம்பித்த இந்நட வடிக்கை ஆரம்பத்தில் ஓமந்தைப் பகுதியில் ஆரம்பிக்கப்பட்டது. வவுனியாவிலிருந்து முன்னேறிப் புளியங்குளம்வரை கைப்பற்றுவ தன்மூலம் வவுனியாவிலிருந்த இராணுவத் தின் முன்னணி நிலைகளைப் புளியங்குளம் வரை நகர்த்துவது இந்நடவடிக்கையின் நோக்கமாக இருந்தது. இதன்மூலம் முல் லைத்தீவையும் புளியங்குளத்தையும் இணைக்க இராணுவம் எண்ணியிருந்தது. இது ஆபத்தானது.

எமது படையணி இராணுவத்தின் நகர் வுக்கு எதிராக மேற்கொண்ட முதலாவது தாக்குதல் நடவடிக்கை என்பது மாத்திர மல்லாமல், இரண்டாங்கட்ட ஈழப்போரில் முதன்முதலில் வெற்றிகரமாகத் தடுத்து நிறுத்தப்பட்டு, முறியடிக்கப்பட்ட இராணுவ நடவடிக்கையாகவும் 'வன்னி விக்கிரம' நட வடிக்கை இருந்தது.

எமது படையணியானது தனது பயிற்சிக ளைக்கூட முற்றாக நிறைவுசெய்யாத நிலை யில் எதிரியின் நகர்வை முறியடிப்பதற்கான கட்டளை எமக்குக் கிடைத்தது.

இந்த நடவடிக்கையில் இராணுவத்தின் நகர்வுகள் வெற்றிகரமாக முறியடிக்கப்பட்ட துடன் விமான எதிர்ப்புப் பீரங்கிகள் கைவ சம் அற்ற அன்றைய சூழலில் எமது படைய ணியின் கனரகத்துப்பாக்கி அணியினரால் எதிரியின் உலங்குவானூர்தி ஒன்றும் சுட்டு வீழ்த்தப்பட்டது.

இந்நடவடிக்கையை வெற்றிகொண்ட தன் மூலம் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படை யணி தனது முதற் சமரிலேயே, எவ்வாறான சாதகமற்ற களச்சூழலிலும் தனது இலக்கை வெற்றிகொள்ளும் என்ற பெருமையை அடைந்தது. அது பெரும் நம்பிக்கையையும் உற்சாகத்தையும் தந்தது.

அடுத்ததாக, மின்னல் நடவடிக்கைக்கு எதிராகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சமரைக் குறிப்பிடலாம்.

இதேவேளை, 1992ஆம் ஆண்டு மாற்றமடைந்த தமிழீழப் போரரங்கிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பங்குபற்றிய மின்னல்வேக அதிரடித் தாக்குதல்கள் முக்கிய மானவை. இவற்றில் 1992ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் மேற்கொள்ளப்பட்ட பலாலித் தளத்தின் முன்னரங்க நிலைகள் –வளலாய்ப் பகுதிக் காவலரண்கள்– மீதான தாக்குதல்களைக் குறிப்பிடலாம்.

1992 பகுதியில் இயக்கத்தில் ஏற்பட்டிருந்த வெடிபொருட்களுக்கான பற்றாக்குறை நிலைமையை மாற்றியமைத்ததுடன் எதிரியிடமிருந்து ஆயுதங்களைப் பறித்து யுத்தத்தைத் தொடரலாம் என்ற நம்பிக்கையையும் அந்தச் சண்டை தோற்றுவித்தது. இப் படி ஒவ்வொரு காலப்பகுதியிலும் தமிழீழப் போரரங்கிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பெருமைமிகு வெற்றிகளைச் சாதித்த போர்க்களங்கள் ஏராளம். இறுதியாகப் படையணி எனது காலப்பகுதியில் மேற்கொண்ட பிரதான சமர்களில் ஓயாத அலைகள் –1 முல்லைத்தீவுத்தள மீட்புச் சமரும் ஆனையிறவு – பரந்தன் தளம்மீது மேற்கொள்ளப்பட்ட ஊடுருவித் தாக்குதலும் முக்கியமானவை.

முல்லைத்தீவுத் தாக்குதலை நாங்கள் செய்யும்போது யாழ்ப்பாணத்தைவிட்டுப் பின் வாங்கிவந்த போரின் அரசியலின் புறச்சூழல் எப்படி இருந்தது என்பது உங்களுக்குத் தெரியும். முல்லைத் தளம் மீதான ஓயாத அலைகள் –1 மீட்பு நடவடிக்கையின்போது படையணிக்குப் பிரதான தளத்தைக் கைப் பற்றும் பொறுப்புக் கொடுக்கப்பட்டது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அந்தச் சமரிற் போரிட்டதில் மரபுரீதியான இராணுவ வளர்ச்சியின் பிரதான அடித்தளமான, மரபு ஆயுதங்களான ஆட்லறிப் பீரங்கிகள் இரண்டைக் கைப்பற்றிப் பெருமை சேர்த்தது.

❖ **நீங்கள் படையணியை வழிநடத்திய காலங்களிற் போரரங்கில் உங்களுக்கு ஏற்பட்ட மறக்கமுடியாத சந்தர்ப்பங்களில் ஏதேனும் ஒன்றைச் சொல்லமுடியுமா?**

➢ நான் சிறப்புத் தளபதியாக இருந்து பல களங்களிற் படையணியை வழிநடத்தியிருக்கின்றேன். நான் வழிநடத்திய களங்களில் மறக்கமுடியாதளவிற்கு, போராளிகளின் வீரத்தையும் உறுதியையும் அவர்களின் உயர்ந்த பட்ச சகிப்புத் தன்மையையும் அவதானித்த களம் என்று 'மின்னல்' நடவடிக்கைக் களத்தைத்தான் சொல்வேன்.

எதிரி மணலாற்றுக்காடு உள்ளிட்ட நாயாறு, குமுழமுனைவரையான பிரதேசத்தை ஆக்கிரமிப்பதற்காக நித்தியகுளம் பகுதி ஊடாக முன்னேறிக்கொண்டிருந் தான். நாங்கள் தலைவருடைய பணிப்பின் படி மணலாற்றுக் காட்டை எதிரி கைப்பற்றுவதைத் தடுப்பதற்காக அனுப்பப்பட்டிருந் தோம். என்ன விலை கொடுத்தாயினும் எதிரி யின் நடவடிக்கையை முறியடிக்கும்படி தலைவர் எமக்குக் கட்டளையிட்டிருந்தார். ஒவ்வொரு நாளும் எதிரி அங்குலம் அங்குல மாக முன்னேறிக்கொண்டிருந்தான். ஜெய சிக்குறுச் சமரிலும் காணாதளவு மிகக் கடு மையான விமானக் குண்டுவீச்சையும் பீரங்கித் தாக்குதல்களையும் நான் அங்கே கண் டேன். ஒவ்வொரு அடி நிலத்திலும் எதிரி ஏவிய ஏதோ ஒரு குண்டு வெடித்துச் சிதறியிருந்தது. அடர்ந்த காட்டினுள் கிட்டத்தட்ட ஒரு மாதமளவில் எங்கள் போர்வீரர்கள் ஒரு கைகலப்புச் சண்டையெனக் கூறுமளவான மிகவும் நெருக்கமானதும் உக்கிரமானது மான சமரைச் செய்தனர். கனரக ஆயுதங்க ளும் பீரங்கிச் சூட்டாதரவும் அற்ற அன்றைய களச்சூழலில் ஓர் இராட்சத இராணுவ பலத்தை நாம் முறியடித்திருந்தோம். அடர்ந்த அந்தக் காட்டில் முகம் கழுவுவ தற்குக்கூடத் தண்ணீர் இல்லாமற் போராளி கள் சண்டை செய்தனர். அந்தளவிற்கு ஒரு கடுமையான சமரை நாங்கள்

அங்கே செய்ய வேண்டியிருந்தது. அதேவேளை எதிரியின் எவ்வகையான நகர்வையும் முறியடிக்கலாம் என்ற நம்பிக்கையையும் உற்சாகத்தையும் 'மின்னல்' நடவடிக்கையில் நாங்கள் செய்த தடுப்புச் சமர்தான் எனக்கு ஏற்படுத்தியது. அங்கே சமராடிய போராளிகள் அனுபவித்த துன்பங்களும் மிக நெருக்கடியான அன்றைய களச்சூழலில் அவர்கள் காட்டிய உறுதியும் துணிவும் வேகமும் அதனால் நாங்கள் அடைந்த அந்தப் பெருமைமிகுந்த வெற்றியும் எப்போதும் என்னால் மறக்கமுடியாதது.

❖ **விடுதலைப் புலிகளின் ஒரு கட்டளைத் தளபதி என்ற வகையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியில் நீங்கள் கண்ட முன்னுதாரணம் என்ன?**

➤ இன்று தமிழீழப் போரரங்கிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஒரு முன்னணியான தாக்குதலணியாக இருக்கின்றது. போராட்டம் ஓர் உன்னதமான கட்டத்தை அடைந்துள்ள இன்றைய நிலையில், படையணி கட்டளைத் தளபதிகள் பலரின் கட்டளையின் கீழ்ச் செயற்பட்டுள்ளது. சண்டைகளை நடத்துவதற்கென ஒவ்வொரு கட்டளைத் தளபதியிடமும் ஒவ்வொரு வகையான வழிமுறைகள் இருக்கும். எந்தத் தளபதியாய் இருந்தாலும் சரி, ஒரு சமர் நடவடிக்கையில் தனது கட்டளைத் தளபதியிடம் இருந்துவரும் கட்டளைகளின் வடிவத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு, அவருடைய கட்டளையை ஏற்று யுத்த களங்களில் வேகமான முடிவுகளுடன் இலக்கினை வெற்றிகொள்ளும் திறனை இப் படையணியின் முன்னுதாரணமான செயற்பாடாகவே நான் கருதுகின்றேன்.

➤ **தமது அசாத்தியமான செயற்பாடுகள் மூலம், சண்டைகளில் மாற்றங்களையும் சாதனைகளையும் செய்த போராளிகள் பற்றிய நினைவுகளைச் சொல்லமுடியுமா?**

➤ ஆம். அது 1992ஆம் ஆண்டு வளலாய்ப் பகுதிக் காவலரண்கள் மீதான தாக்குதலில் நிகழ்ந்தது என நினைக்கின்றேன். காவலன் என்ற போராளி இருந்த அணி அண்ணளவாக ஏழு கிலோமீற்றர் தூரம் வரை இரகசியமாய் நகர்ந்து தனக்கான தாக்குதல் நிலைகளுக்கு வரவேண்டியிருந்தது. ஆனால், ஆரம்பத்திலேயே எதிரியின் ஒரு பொறிவெடி வெடித்ததில், குறித்த போராளி தனது கால்களில் ஒன்றை இழந்திருந்தான். அந்த நிலையிலும் இராணுவத்தின் காவலரண்களுக்கு நடுவில் அவன் தனது வேதனைகளை அடக்கியவாறு சத்தம் போடாமற் சண்டை தொடங்கும்வரை, அவனது அணிப் போராளிகள் ஏழு கிலோமீற்றர் தூரம் நகர்ந்து தமது இலக்கை எட்டும்வரை, அமைதியாக இருந்தான். அந்தப்போராளி காட்டிய அசாத்திய உறுதியும் சகிப்புத்தன்மையும் அன்றைய சண்டையில் எமது வரவை எதிரி முற்கூட்டியே அறிவதைத் தடுத்துப் பெரும் வெற்றியைச் சாதிக்க வழிவகுத்தி ருந்தது.

இதேபோல 1997ஆம் ஆண்டு ஆனையிறவு – பரந்தன் இராணுவ வலயம் மீதான ஊடுருவல் தாக்குதலில் இடம்பெற்ற ஒரு சம்பவமும் என்னால் மறக்கமுடியாதது. பிரதான முகாமையும் ஆட்லறித் தளத்தையும் கைப்பற்றி அழிப்பதற்கான அணியினரால் தமக்கான நகர்வுப் பாதையின் தடைகள் பூரணமாக அகற்றமுடியாமற்போனது. இக்கட்டான அந்தப் பொழுதிற் சயந்தன் என்ற போராளி தனது உயிரைப் பொருட்படுத்தாது முட்கம்பித் தடையினுட் பாய்ந்தான். நசுங்கிக் கிடந்த முட்கம்பிச் சுருளின் மேலால் தன் அணியினர் முகாமினுள் நுழை வதற்கான நகர்வுப் பாதையை அமைத்துக் கொடுத்தான். அன்றைய சமரில் தனது அந்த வீரமான செயற்பாடுமூலம் அவன் தன் அணியினருக்கான வெற்றிக்கு வழிசமைத்தான். இப்படியான மயிர்க்கூச்செறியும் வீரத்துடனும் அர்ப்பணிப்புடனும் செயற்பட்ட போராளிகள் என்நினைவில் எப்பொழுதும் இருக்கின்றார்கள்.

❖ **இந்தப் படையணியின் முதலாவது சிறப்புத் தளபதி-படையணித் தந்தை என்று சொல்வார்கள். அந்தவகையில் இன்றுள்ள படையணிப் போராளிகளுக்கும் இனி உருவாகும் போராளிகளுக்கும் என்ன சொல்ல விரும்புகின்றீர்கள்?**

(முகத்தில் மகிழ்ச்சிக்கோடு தெரியச் சிரித்துவிட்டுக் கூறத்தொடங்கினார்.)

இன்றுவரை இந்தப் படையணியுடைய தளபதிகள், அணித்தலைவர்கள், போராளிகள் எவ்வாறு யுத்தகளங்களில் தலைவருடைய திட்டங்களுக்குச் செயல்வடிவம் கொடுத்து உறுதியான போராற்றல்மிக்க, தற்றுணிவு நிரம்பிய வீரர்களாகச் செயற்பட்டார்களோ அவர்களுடைய வழிகாட்டல்களை, அவர்கள் விட்டுச் சென்ற தடங்களைப் பின்பற்றி இந்தப் படையணி இதுவரை தமிழீழப் போர ரங்கிற் சாதித்தவற்றைப்போல இரண்டு மடங்கு சாதிக்கவேண்டும். புதிதாகப் படையணியில் இணைந்துகொண்ட போராளிகள்கூட எந்தளவிற்கு உறுதியான, திறமையான முறையிற் செய்தார்கள் என்பதை நான் இத்தாவிற் சண்டைகளில் நேரடியாக அவதானித்துப் பெருமையுற்றேன். அவ்வாறே இனிவரும் காலத்திலும் அதன் தொடர்ச்சி இருக்கவேண்டும்.

# 'ஒப்பரேசன் வன்னி விக்கிரம' எதிர்ச்சமர்

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி எமது தலைவருடைய வெற்றிக்கான எதிர்பார்ப்பு களை நிறைவுசெய்யக்கூடியதான நம்பிக்கையுடன் நிமிர்ந்து நின்றது. தலைவர் அவர்களால் உரியமுறையில் ஒழுங்கமைக்கப்பட்டதன் பின்னர் நேர்த்தியானதும் கடுமையானதுமான விசேட பயிற்சிகள் அளிக்கப்பட்டுவந்த படையணி விரைவிலேயே பெருஞ்சமர்களை எதிர்கொள்ளக்கூடிய மனத்திடத்தைப் பெற்றுக்கொண்டது. எதிரியால் திட்டமிட்டு நடாத்தப்பட்ட 'வன்னி விக்கிரம – 02' நடவடிக்கைக்கு எதிரான முறியடிப்புச் சமரே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி சந்தித்த முதலாவது களம். அதனைத் தொடர்ந்து எமது அமைப்பாற் பெருமெடுப்பில் திட்டமிட்டு நடாத் தப்பட்ட முதலாவது மரபுவழிச் சமர்க்களமான 'ஆகாயக் கடல் வெளி' சமரிலிருந்து அதன் பின் னர் எதிரிக்கெதிரான முறியடிப்புச் சமர்கள் பலவற்றிலும் எமது இயக்கத்தின் வலிந்த தாக்குதல் நடவடிக்கைகளிலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது முக்கிய பங்கைச்செலுத்திவரு கின்றது.

நடவடிக்கை ஒவ்வொன்றிலும், சிறப்புப் படையணி என்ற வகையில் நடவடிக்கைகளின் வெற்றி தோல்விகளைத் தீர்மானிக்கக்கூடிய முக்கிய பணிகள் தலைவர் அவர்களால் எமது படையணியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. எமக்குத் தரப்பட்ட கடமைகள் ஒவ்வொன்றையும் வெற்றிகரமாய்ச் செய்துமுடிப்பதற்காக ஒவ்வொரு தடவையும் சவால்கள் பலவற்றை நாம் சந்தித்தோம். இந்த வேளைகளிலெல்லாம் எமது போராளிகளின் கடும் உழைப்பும் அர்ப்பணிப்புகளும் வெற்றிக்கனிகளை எமக்குப் பெற்றுத்தந்தன. அதற்காகவே ஒவ்வொரு தடவையும் பல உயிர்களை விலையாக எமது படையணிகளை செலுத்தியது. மொத்தத்தில் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலுமே எமது தலைவர் அவர்களின் "பயிற்சி, தந்திரம், துணிவு எனும் போரியற் சுலோகத்திற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி செயல்வடிவமாக இருந்தது.

## **சாள்ஸ் அன்ரனியின் முதலாவது தாக்குதல்**: எதிரியின் "வன்னி விக்கிரம" 02, 03, நடவடிக்கைகளுக்கு எதிரான முறியடிப்புச்சமர்

மணலாற்றுக் காட்டிலிருந்து தலைவர் அவர்கள் இந்திய இராணுவத்தினருக்கு எதிரான போரை முன்னெடுத்ததிலிருந்து மணலாற்றுக்காடு புகழ்பெற்ற காடாக மாறிவிட்டது. 2ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கிய காலத்திலும் அது தொடர்ச்சியான முக்கியத்துவத்திற்குட்பட்டதாகவே இருந்துவந்தது.

புலிகள் மணலாற்றுக் காட்டுப்பகுதியைக் கட்டுப்பாட்டினுள் வைத்திருப்பது சிறீலங்காவின் அரசியல் இராணுவ நோக்கங்களிற் பாரிய தாக்கத்தினை உண்டுபண்ணக்கூடியது. ஆகவே, மணலாற்றுக்காட்டு நடவடிக்கைகளிற் புலிகளுக்குத் தலைவலியை ஏற்படுத்தும் ஆரம்ப நடவடிக்

கையாக, வன்னிப்பகுதியிற் கேந்திர நிலைகளைத் தமது கட்டுப்பாட்டிற் கொண்டுவரச் சிங்கள அரசியல், இராணுவத் தலைமைகள் முடிவுசெய்தன.

வெளிநாட்டு இராணுவ நிபுணர்கள் ஆலோசனை வழங்க, படைநகர்வுத் திட்டம் தயாரானது. வவுனியா படைநிலைகளில் இருந்து நகர்ந்து, கண்டிவீதி வழியாக ஓமந்தையைக் கைப் பற்றி, பின்னர் அங்கிருந்து கண்டிவீதிக்குக் கிழக்காகச் செல்லும் நெடுங்கேணி முல்லை வீதியை யும் வடக்காகச்செல்லும் மாங்குளம் கிளிநொச்சி வீதியையும் தனது கட்டுப்பாட்டிற்குட் கொண்டுவருவதே எதிரியின் பிரதான நோக்கமாக விளங்கியது.

இந்நோக்கமானது நிறைவேறும் பட்சத்தில், வவுனியாவில் இருந்து புளியங்குளம் வரையிலான விவசாயக்கிராமங்களும், போக்குவரத்து வீதிகளும் இராணுவக் கட்டுப்பாட்டினுட் கொண்டு வரப்படுவதன்மூலம் புலிகளின் நடவடிக்கைகளை நெருக்கடிக்குள் தள்ளுவதோடு, எமது மக்களின் வாழ்வியலுக்கான அடிக்கட்டுமானங்கள் சிதைக்கப்படுவதுடன், புலிகளுக்கும் மக்களுக்குமான உறவுநிலைகளைத் துண்டிப்பதற்குமான பயன்பாட்டை இந்நடவடிக்கைமூலம் எட்டமுடியும் என்பதே இராணுவ, அரசியல் தலைமைகளின் கருத்தாக அமைந்தது.

இதன் அடிப்படையிற் படைநகர்வுக்குத் தேவையான ஏற்பாடுகள் ஆரம்பமாகின. “ஜோசப்” முகாமில் துருப்பினர் பெருமளவிற் குவிக்கப்பட்டனர். துருப்புக் காவிகள், கவசவாக னங்கள் பெருமளவில் வந்துசேர்ந்தன. விமானங்கள் வான்பரப்பில் வட்டமடித்துத் திரிந்தன. இந்நடவடிக்கைகள் யாவும் எந்தநேரமும் படைநகர்வுகள் நடைபெறலாம் என்பதைப் புலப்படுத்தின. கடந்தகால நிகழ்காலத் தரவுகளைக் கணிப்பீடுசெய்து எதிர்கால நடவடிக்கைகளை எதிர் கொள்ளும் தலைவர், தமிழர்சேனை பெற்றெடுத்த முதல் மரபுவழிப் போரணியான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை எதிரியை எதிர்கொள்வதற்கான தயார்ப்படுத்தல்களுடன் களமிறக்கினார்.

05.05.1991 காலை “ஜோசப்” முகாமிலிருந்து எதிரியின் படைநகர்வு ஆரம்பமாகிவிட்டது. ‘வன்னி விக்கிரம – 02’ என்ற குறியீட்டுப் பெயரை எதிரி தனது நடவடிக்கைக்குச் சூட்டியிருந் தான். சிறீலங்காவின் வடபிராந்திய இராணுவத் தளபதி டென்சில் கொப்பேகடுவ தலைமையில் கஜபாகு, கெமுனு படையணியைச் சேர்ந்த இரண்டு டிவிசன்களுக்கும் மேலான படைகள் நகர்வுகளை ஆரம்பித்திருந்தன. இராணுவத்திற்கு உதவியாகக் கவசவாகனங்களும் ஆட்லறிப் பீரங் கிகளும் நெருப்பைக் கக்கிக்கொண்டிருக்க, வான்பரப்பை வை - 8, வை - 12, அவ்ரோ, பெல் - 212 ஆகிய போர் வான்கலங்கள் அமர்க்களப்படுத்தின. களப்பிரதேசத்திற் கணக்கில்லாமல் எறிகணைகளும் குண்டுகளும் வீழ்ந்து வெடித்து எதிரியின் மூர்க்கத்தைப் பறைசாற்றின. ஓமந்தைவரை முன்னேறிய படைகளுடன் சிறுசிறு தாக்குதல்களை நடாத்தியபடி, முன்னேற அனு மதித்துவிட்டு, எதிரியின் பலம், பலவீனங்களைக் கணிப்பீடுசெய்து, அதற்கேற்ப தந்திரங்களை வகுத்தவாறு புலிகள் அமைதிகாத்தனர். ஓமந்தையிலிருந்து இறம்பைக்குளம், மகிழங்குளம், பூவ ரசங்குளம் பகுதிகளைக் கைப்பற்றி, மண்ணணைகளை ஏற்படுத்தி, இராணுவம் நிலைகளை அமைத்துக்கொண்டது. இப்போது இராணுவத்தின் வியூகமானது ‘ப’ வடிவினைக்கொண்டிருந்த தாக அமைந்திருந்தது.

சிறீலங்காப் படைகளின் ஆள், ஆயுததளபாட வசதிகளுடன் ஒப்பிடுகையில் நாம் குறைந்த வளங்களையே கொண்டிருந்தாலும் போராளிகளின் மனப்பலத்தாலும் தலைவர் அவர்களின் சிறந்த வழிநடத்தலாலும் மேலோங்கியிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வாய்ப்பான களச்சூழலில், இராணுவ நிலைகளை ஊடறுத்தபடி சண்டையைத் தொடங்கியது. முதல் நாட் சண்டையிற் சாள்ஸ்

அன்ரனி சிறப்புப் படையணியின் தளபதி லெப். கேணல் ராஜன் அணிகளை வழிநடத்தினார். சண்டையின் தொடக்கமே மூர்க்கத்தனமாக இருந்தது. முன்னரங்க நிலைக்கூடாகத் தாக்குதலை எதிர்பார்த்துக் காத்திருந்த படைத்தலைமைக்கு, தமது நிலைகளுக்குப் பக்கவாட்டாக லெப். கேணல் ராஜன் புதிய



1991 இல்
படையணிப் போராளிகளுடன்
தளபதி பால்ராஜ்

களங்களைத் திறந்தது அதிர்ச்சியைக் கொடுத்தது. அதிகரித்த இழப்புக்களால் நிலைகுலைந்த எதிரி அடுத்த நடவடிக்கைக்குத் திட்ட மிட்டுக்கொண்டிருந்தபோது, மறுநாட்காலை விடிந்ததும் களம் வந்துசேர்ந்த சிறப்புத் தளபதி பால்ராஜ் களமுனையை எதிர்கொள்ளத் தனது அணிகளுடன் தயாராகிக்கொண்டிருந்தார்.

எமது வேவுப் போராளிகள் எதிரி நிலைகள்மீது ஒரு விரைவான வேவு நடவடிக்கையைச் செய்து முடித்திருந்தனர். அவர்களது செயற்பாட்டாற் பகை நிலைகள் புலிகளின் கண்முன்னாற் படமாக விரிந்தன. தாக்குதலுக்கான எல்லா ஏற்பாடுகளும் முடிக்கப்பட்டாயிற்று. இனிப்பகை நிலைகள் மீது பாய்வதுதான். எதிரி அடுத்தகட்ட நகர்வுக்காகத் தயாராகிவிட்டு, சற்று ஓய்விற்காகக் காத்திருந்தபோது பகைநிலைகள் மின்னிமுழங்கத்தொடங்கின. பகைநிலையின் வலது பக்கத்தினை ஊடறுக்கும் அணிகளை எமது சிறப்புத் தளபதி பால்ராஜ் நேரடியாகவே வழிநடத்த, இடது பக்கத்தால் ஊடறுப்புக்கு நகர்ந்த அணியினை எமது தளபதி லெப். கேணல் ராஜன் வழி நடத்திக்கொண்டிருந்தார். என்ன நடக்கின்றது என்பதை உணரமுன்னரே பல படையினர் இறந்து போனார்கள். எதிரியின் பக்கவாட்டு நிலைகள் எமது மின்னல்வேகத் தாக்குதலில் உடைத்தெறியப்பட்டன. முன்னரங்க நிலைகளிலிருந்த படையினர் என்ன நடக்கிறதோ எனத்திகைத்திருக்க, முன்னரங்க நிலைகள்மீதும் மின்னல் இறங்கியது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் கனரக ஆயுதப்பிரிவினர் பகை நிலைகளைத் தீச்சுவாலை கிளம்பவைத்தனர். ஒருமணி நேரம் கழிந்து பொழுது விடிந்ததும் பகையுடல்கள் ஆங்காங்கே சிதறிக்கிடந்தன. மோதல்கள் தொடர்ந்துகொண்டிருந்தன. நல்ல செய்திக்காகக் காதைத்தீட்டிக்கொண்டிருந்த கொழும்புப் படைத்தலைமைக்கு இடிவிழும் செய்திகளே வந்துகொண்டிருந்தன. அதிகாலை நான்கு மணியைக் கடந்து தொடங்கிய சமர் காலையைத் தாண்டியும் தொடர்ந்தது. குளிக்கப்போய்ச் சேறுபூசிய கதையாக மாறிய செய்தியறிந்த படைத்தலைமை திகைத்தது. வெற்றிவேண்டாம் தமது கௌரவத்தையாவது காப்பாற்றுங்கள் எனப் படைத்தலைமை கட்டளைமேற் கட்டளை பிறப்பித்தது. களத்தை நேரடியாக வழிநடத்திய சிறீலங்காப் படைத்தளபதிகளும் தமது கொழும்புப் படைத்தலைமையின் கட்டளைகளை மீறமுடியாது குழம்பிப்போய் நின்றனர்.

எஞ்சியிருப்பதையும் இழந்துவிடுவேனோ என்ற கலக்கம் எதிரியை உலுப்பியெடுத்தது. தம் தற்காப்பை உறுதிசெய்வதற்காகவாவது வலிந்த நகர்வுகளை எப்படியாவது மேற்கொள்ள வேண்டிய பரிதாபநிலைக்குச் சிறீலங்காப் படைகள் தள்ளப்பட்டிருந்தன.

கொல்லப்பட்டோர், காயமடைந்தோர் போக எஞ்சியோர் துடைத்தெடுக்கப்பட்டு எதிரியணிகள் மீளொழுங்குபடுத்தப்பட்டன. இருந்த முழுப்பலத்தையும் ஒன்றுதிரட்டி மற்றும் ஒரு நகர்வுக்கு அவர்கள் தயாராகினர். மீண்டும் போர்மேகம் கருக்கொண்டது. போர்ப்புயல் வீசியது. பெரும் யுத்தம் வெடித்தது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் கனரக ஆயுதப்பிரிவினர் எதிரியின் பலம் வாய்ந்த கவச அணியைத் தீரமுடன் எதிர்கொண்டனர். அவர்களின் வீரத்தில் இரண்டு துருப்புக்காவி வாகனமும், பவள் கவசவாகனமும் மூக்குடைந்துபோய்க் களத்திற் கிடந்தன. கவசப்படையை வழிநடத்திய எதிரியின் மேஜர் தரக் கட்டளைத் தளபதி உயிரிழந்து கிடந்தான். அவன் அணிந்திருந்த விசேட பட்டிகள் அவனது தரத்தை உறுதிசெய்தன. இனி எதுவுமே செய்யமுடியாத நிலை. ஓட்டமெடுப்பதைத் தவிர வேறு எந்த முடிவுகளையும் எதிரி எடுப்பதற்குக் களச்சூழல் விட்டுவைக்கவில்லை. அதிகாலையில் தொடங்கிய சமர் மதியத்தையும் கடந்து நாலு மணியாகியும் தொடர்ந்துகொண்டிருந்தபோது எதிரி வவுனியாநோக்கி ஓடிக் கொண்டேயிருந்தான். பகையுடல்களும் போர்க்கருவிகளும் ஆங்காங்கு சிதறிக்கிடந்தன. 05.05.1991 - 12.05.91 வரையும் 'வன்னி விக்கிரம – 02' என்ற குறியீட்டுப் பெயருடன் ஆரம்பித்த சிங்களத்தின் இப்பெரும் படைநகர்வை முறியடித்த புகழுடன் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தமிழீழப் போரரங்கிற் பெருமையுடன் தனது முதலடியை எடுத்துவைத்தது.

எமது படையணியின் புகழ்பூத்த இப்போர்ப்பிரசன்னத்தில் லெப். கஜன் என்ற மாவீரன் படையணியின் முதல் வித்தாக விழிமூடினான். அவனது வரிசையில் முறியடிப்பிற்காகவும் வெற்றிக்காகவும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது முதற் களத்தில் 19 புதல்வர்களை அர்ப்பணித்தது.

வெளிநாட்டு இராணுவ நிபுணர்களினது ஆலோசனையுடன், சிறீலங்காவின் படைத்தலைமைகளின் கூட்டு உருவாக்கத்தில் நடைபயின்ற 'வன்னி விக்கிரம – 02' நடவடிக்கை அதன் இலக்கை எட்டாமலே பொசுங்கிப்போனது. அதன் இழப்புக்கள் பாரியளவில் வெளியுலகிற்குப் புலனாகாமல் எதிரியால் மூடிமறைக்கப்பட்டன. இந்நகர்வு முயற்சியானது அதன் இலக்கை எட்டியிருந்தால் எமது மக்களின் வாழ்வியலிலும் பொருண்மியத்திலும் பாரிய தாக்கத்தினை ஏற்படுத்தியிருக்குமென்பதோடு, நெடுங்கேணியூடாக 'வெலி ஓயா' சிங்களக் குடியேற்றத்துடன் ஒரு தரைத்தொடர்பினை ஏற்படுத்தித் தமிழீழத் தேசிய அடையாளத்தைச் சிதைப்பதிற் சிங்களப் பேரினவாதத்திற்கு மேலும் பக்கபலமாக அமைந்திருக்கும் என்பதில் ஐயம் எதுவும் இல்லை.

ஒருவாரகாலம் நடைபெற்ற இச்சமர் உலகிற்கு ஒரு புதிய செய்தியைக் கூறிச்சென்றது. சகல இராணுவ வளங்களிலும் மேலோங்கிய ஒரு மரபுப் படையுடன் போரிடக்கூடியவகையில் ஆள், ஆயுத வளங்களைக் கொண்டிராதபோதும் பயிற்சி, தந்திரம், துணிவு ஆகியவற்றின்மூலம் எத்தகைய வலுவுள்ள மரபுவழிப் படையையும் வெற்றிகொள்ளமுடியும் என்பதே அச்செய்தியாகும். இது தலைவரால் உருவாக்கப்பட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் பிறப்பின் விளைவாகும்.

பொதுவாகப் புதிதாகக் களம்புகும் படையணி ஆரம்பத்திலே படைவீரர்கள் மத்தியில் உளவுரனைப் பாதுகாப்பதற்காகவும் மேம்படுத்துவதற்காகவும் தன்னம்பிக்கையை உண்டுபண்ணு வதற்காகவும் தனது வலிமைக்கேற்ப களங்களைத் தெரிவுசெய்வதுதான் வழக்கமானது. ஆனால், சாள்ஸ் அன்ரனி சிறப்புப்

படையணி தோற்றம்பெற்று ஒருமாத இடைவெளிக்குள் நடைபெற்ற முதற்சமரிலேயே எதிரியாற் பெருமெடுப்பில் திட்டமிடப்பட்ட பெரும் படைநகர்வுகளை முறியடிக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தமை தமிழீழ விடுதலைப் போர் வரலாற்றிற் பெருமைக்குரியதாகும்.

சிறீலங்காப் படைநிபுணர்களோடு மட்டுமல்லாது அவர்களின் அன்னிய ஆலோசகர்களுக்கும் எதிராகத் தமிழீழ விடுதலைப் புலிகளின் மரபுவழிப் போரணி போரிட்டது.

எழுபத்தைந்திற்கும் மேற்பட்ட படையினரை இழந்து, நூற்று ஐம்பதிற்கும் மேற்பட்ட படையினரை உயிராபத்தான காயங்களுக்குள்ளாக்கி, பல கவச வாகனங்களையும் இழந்த நிலையில் முற்றுப்பெற்ற 'வன்னி விக்கிரம' நடவடிக்கை, தென்னிலங்கையிலும் உலக அரங்கிலும் அரசிற்குப் பின்னடைவுகளையும் இராணுவத்தினருக்கு உளவியல் ரீதியிலான பாதிப்புக்களையும் ஏற்படுத்தியிருந்தது. இவற்றை நிவர்த்திசெய்யும் வகையில் அவசர அவசரமாகப் பெரியளவிலான விளம்பரப்படுத்தலுடன் அடுத்தகட்ட நடவடிக்கைக்குப் படைத்தரப்புத் தயாராகியது.

'வன்னி விக்கிரம – 02' நடவடிக்கையின் தவறுகள் ஆராயப்பட்டன. இளநிலைத் தளபதிகள் மாற்றப்பட்டுப் படைகள் ஒருங்கிணைக்கப்பட்டன. கொல்லப்பட்ட, காயமடைந்த படையினரின் இழப்புகள் சரிசெய்யப்பட்டு, இராணுவ முஸ்தீபுகள் ஆரம்பமாகின. இந்நடவடிக்கையும் மேஜர் ஜெனரல் டென்சில் கொப்பேகடுவவின் தலைமையின்கீழ் கஜபாகு, கெமுனு படைப்பிரிவுகளைச் சேர்ந்த இரண்டு டிவிசன்களைக்கொண்டு இரண்டு பிரிகேடியர்களின் கீழ் நடத்தப்பட்டது.

முன்னைய நடவடிக்கையிற் கற்ற பாடத்தை மீண்டுமொருமுறை படித்துவிடாமல் இருப்பதிற் படைத்தலைமை உறுதியாக இருந்தது.

நகர்வுப் பாதையில் மாற்றங்கள் செய்யப்பட்டன. வவுனியாப் படைநிலையில் இருந்து மன்னார்ப் பிரதான வீதி வழியாக நகர்ந்து, பம்பைமடுச்சந்தி, பூவரசங்குளச்சந்தி, பண்டிவிரிச்சான் சந்தி, மடுச்சந்தி போன்ற பிரதான நிலைகளைக் கைப்பற்றுவதன்மூலம் இராணுவ வலயம் ஒன்றை ஏற்படுத்தி, மன்னார்வரை நிலைகொள்வதே 'வன்னி விக்கிரம – 03' என்ற இப்படை நடவடிக்கையின் நோக்கமாக இருந்தது.

15.06.1991 காலை வான் அரங்கைக் குண்டுவீச்சு விமானங்களும் உலங்குவானூர்திகளும் ஆக்கிரமித்து அமர்க்களப்படுத்த, பீரங்கிகளின் சூட்டாதரவுடன் வவுனியாப் படை நிலைகளிலிருந்து மன்னார்ப் பிரதான வீதியைநோக்கி எதிரியின் முதற்கட்ட நகர்வுகள் ஆரம்பமாகின. கடந்த சமரில் எதிரிபெற்றிருக்கக்கூடிய அனுபவங்களின் அடிப்படையில் அடுத்தகட்ட நடவடிக்கையில் எதிரி எவ்வாறான நகர்வுகளை மேற்கொள்ளக்கூடும் என்பதை முன்கூட்டியே ஊகித்துக் கொண்டு தயார்நிலையிலிருந்த புலியணிகள் எதிரியை எதிர்கொண்டன.

யாழ் மாவட்டத்தில் நிலைகொண்டிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அதன் சிறப்புத் தளபதி பால்ராஜ் தலைமையில் தலைவர் அவர்களால் உடனடியாகவே களமிறக்கப்பட்டது. அங்கிருந்து பூநகரியூடாக மன்னார்சென்று வவுனியா நோக்கிச்செல்லும் பிரதான வீதியால் நகர்ந்து எதிரியின் படைநகர்வை எதிர்கொண்டனர். பின்தளம் முற்றிலும் வலுவாக இருந்தபோதிலும் போர்த்தளபாடங்கள் மிகையாகக் காணப்பட்டபோதிலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் கனரக ஆயுதப் பிரிவினரின் தாக்குதலை எதிர்கொள்ளமுடியாது திண்டாடினர் பகைவர். பம்பைமடுச்சந்தி, பூவரசங்குளச்சந்தி, பண்டிவிரிச்சான்சந்தி

போன்ற இடங்களில் நடைபெற்ற சமர்களில் படையினர் கடும் இழப்பினைச் சந்தித்தனர். பூவரசங்குளச் சந்திப்பகுதியில் நடைபெற்ற கடுமையான சமரிற் சிறீலங்கா வான்படைமீதான எமது படையணிப் போராளிகளின் தாக்குதலில் 'பெல்' ரக உலங்குவானூர்தி ஒன்று சுட்டுவீழ்த்தப்பட்டது. இது போராட்ட வரலாற்றில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி புரிந்த முக்கிய சாதனையாகும். எதிரியின், கவசவாகனங்கள் பலவும் சேதமாகின. களத்தில் மூக்குடைபட்ட எதிரி தன் அநாகரிகத்தை வெளிப்படுத்தி அண்டியிருந்த மக்கள் குடியிருப்புக்கள்மீது கண்மூடித்தனமான குண்டு வீச்சுக்களை நடாத்தி னான். 19.06.1991 வரை நடந்த கடுமையான சமரில் 50 இற்கு மேற்பட்ட படையினரையும் ஆயு தங்களையும் இழந்ததுடன் 150 இற்கு மேற்பட்ட படையினர் படுகாயமடைந்ததிற் படையினர் பின் வாங்கத் தொடங்கினர். புலிகளின் பலம்பற்றி இராணுவ விமர்சகர்கள் வியந்து நின்ற இச்சமரின் வெற்றிக்காகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைச் சேர்ந்த போராளிகள் 22 பேர் வரலாறா கினர்.

'வன்னி விக்கிரம' நடவடிக்கைகளில் இலங்கை இராணுவத்தினரின் இழப்பைப்பற்றி ஆராய்ந்த பி.பி.சி. உலக சேவையின் இலங்கை முகவர் கருத்து வெளியிடுகையில் இலங்கைத்தீவில் இலங்கை இராணுவம் புலிகளிடம் புதிய சிக்கல்களை எதிர்கொள்ளவேண்டியுள்ளதாகத் தெரிவித்தார். அவ்வளவிற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் 'வன்னி விக்கிரம' எதிர்த்தாக்குதல் வலுப்பெற்றிருந்ததை உலகம் அறிந்துகொண்டது.

# 'ஆகாயக் கடல் வெளி' நடவடிக்கை

2ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கியது. வெறும் வான் தொடர்புகளை மட்டுமே நம்பி எமது மண்ணில் எதிரி அமைத்துவைத்திருந்த இராணுவ முகாம்களான கோட்டை, கொக்காவில், கொண்டச்சி என்பன போரின் ஆரம்பக் கட்டத்திலேயே இறுக்கமான முற்றுகைக்குட் கொண்டு வரப்பட்டதால் எமது கைகளுள் வீழ்ந்தன. எனவே, எதிரி இப்போது வான்படை, கடற்படை, தரைப்படையென முப்படைகளினதும் தொடர்புகளுடன்கூடிய அல்லது அவ்வாறான தொடர்புகளை உடன் ஏற்படுத்தக்கூடிய இராணுவக் கூட்டுத்தளங்களை மட்டுமே எமது பிரதேசங்களில் வைத்திருப்பதற்கு நிர்ப்பந்திக்கப்பட்டான்.

ஆனையிறவுத் தளமும் இத்தகைய அமைப்பைக் கொண்டதாக இருந்தது. இம்முகாம் மீது நாம் தாக்குதலைத் தொடுக்கும் பட்சத்தில் வான், கடல், தரையென மும்முனைகளிலும் எமது நடவடிக்கைகளை எதிர்கொள்ளக்கூடிய வாய்ப்பான சூழ்நிலையில் ஆனையிறவு இராணுவத்தளம் இருந்தது. யாழ்ப்பாணக் குடாநாட்டிற்கும் தமிழீழத்தின் ஏனைய பகுதிகளுக்குமான ஒரேயொரு தரைப்பாதையாக ஆனையிறவுக் கடல்நீரேரியூடாக ஒடுங்கிச்செல்லும் பாதையில், குடாநாட்டின் கழுத்தை நெரிப்பதுபோல் ஆனையிறவு இராணுவத்தளத்தை எதிரி நீண்டகாலமா கவே வைத்திருந்தான். கடல்நீரேரியும் நீண்ட உப்புவெளிகளைக் கொண்டிருந்த பிரதேசங்களும் எதிரியின் பாதுகாப்பிற்கு நம்பிக்கை கொடுப்பதாக அமைந்திருந்தன.

இவ்வாறு, சகலவழிகளிலுமே எதிரிக்குச் சாதகமாக இருந்த ஆனையிறவுத் தளத்தின்மீது ஒரு முற்றுகைத் தாக்கியழிப்புச் சமரை மேற்கொண்டு, அதை வீழ்த்துவதென எமது இயக்கம் முடிவுசெய்தது. ஒரு மரபுவழிச் சமருக்குரிய ஆட்பலநிலையிலும் கருவி நிலையிலும் எதிரி பல மடங்கு மேலோங்கியிருந்தான். எனினும், ஒரு கெரில்லாப் போராட்ட அமைப்பிற்குரிய ஆட்பல நிலையையும் கருவிநிலையையும் மட்டுமே கொண்டிருந்த எமது இயக்கம், மரபுவழிச் சமருக்கு முகங்கொடுக்கக்கூடிய எமது போராளிகளின் மனத்திடத்தை மட்டுமே நம்பிச் சமரரங்கைத் திறக்க முடிவுசெய்தது. எமக்குக் கிடைக்கக்கூடிய வளங்களை வைத்து, எமது போராளிகளின் தனித்து வமான தொழினுட்ப அறிவை மட்டுமே பயன்படுத்தி மரபுவழித் தாக்குதலுக்கு மிகவும் இன்றிய மையாததாயிருந்த போர்க்கலங்கள் ஆனையிறவுச் சமருக்காகத் தயாரிக்கப்பட்டிருந்தன. உழவு இயந்திரம், புள்டோசர் என்பன பெரும் வெட்டைகளூடாக எமது அணிகளை நகர்த்துவதற்குத் தேவையான கவசவாகனங்களாக உருமாற்றப்பட்டிருந்தன. எமதியக்கத்தால் தயாரிக்கப்பட்ட 'பசீலன் - 2000' என்ற அதிகதாக்கம் விளைவிக்கக்கூடிய குறுந்தொலைவீச்சுப் பீரங்கியும் எம்மிடம் இருந்தது.

எனவே, போராளிகளின் மனப்பலத்தை மட்டுமே பெரிதாக எண்ணித் திட்டமிடப்பட்ட 'ஆகாய, கடல், வெளி' நடவடிக்கையில், முகாமின் தென்பகுதியூடான நடவடிக்கைகளுக்கான பிரதான பணி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் வழங்கப்பட்டது. ஏனைய படையணிகளையும் உள்ளடக்கி இத்தென்சமர்முனையைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதி பால்ராஜ் அவர்கள் வழிநடத்தினார்.

10.07.1991 இரவுப் பொழுதில். 'ஆகாய, கடல், வெளிச்' சமரின் முதற்கட்டத் தாக்குதல் நடவடிக்கை ஆரம்பிக் கப்படவிருந்தது. தென் முனையின் சுற்றுலா விடுதி முகாமே அதன் முதற்குறி. ஏற்கனவே, அன்று அதிகாலை நேரம் முகாமுள் வீழ்ந்து வெடித்த 'பசீலன் - 2000' எறிகணைகளும் நகர்த்தப்பட்ட எமது கவசவாகனங்களின் இரைச் சல்களும் எதிரியை விழிப்படைய வைத்திருந்தன. இவற்றிற்கு முன்னதாகவே எதிரிக்குக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் 'ஆனையிறவுத் தளத்தைப் புலிகள் தாக்கப்போகிறார்கள்' என்ற எச்சரிக்கை அறிவிப்பு முகாமிற்கு வழங்கப்பட்டிருந்தது. அதனடிப்படையிலேயே பெருந்தாக்குதல்களை முறியடிப்பதற்குரிய முன்னேற்பாடுகளைச் செய்துவைத்து எதிரி எம்மவரைப் பார்த்திருந்தான்.



சாள்ஸ் அன்ரனி சிறப்புத் தளபதி பால்ராஜுடன் கேணல் சூசை

நேரம் இரவு பத்துமணி. சுற்றுலாவிடுதி முகாமுக்குள் 'பசீலன் - 2000' வீழ்ந்து வெடிக்க சண்டைகள் ஆரம்பமாகின. எந்தவொரு இயற்கை மறைப்புகளுமற்றிருந்த அந்த உப்புவெளியைக் கடக்கவேண்டிய அணிகளுக்குக் காப்பரண்களாகக் கவசமிடப்பட்ட வாகனங்கள முன்னே நகர்ந்து சென்றன. எதிரி தனது முழுப்பலத்தையும் முன்னேறும் அணிகள்மீதும் கவச வாகனங்கள் மீதும் பிரயோகிக்கத் தொடங்கினான். தீவிரமான எறிகணைத் தாக்குதல்களுக்கு முகங்கொடுக்க வேண்டியிருந்த எமது கவசவாகனங்கள் சில செயலிழந்துபோயின. எஞ்சியவற்றைப் பயன்படுத்தித் தொடர்ந்து முன்னேறிய எமது அணிகள் சுற்றுலாவிடுதி முகாமின் முன்னணிக் காவல ரண்களை வீழ்த்தி முகாமைத் தொடர்ச்சியான தாக்குதல்களுக்குட் சிக்கவைத்தன. சுமார் இரண்டு மணிநேரக் கடுஞ்சமர் நடந்தது. நேரம் நள்ளிரவு பன்னிரண்டு மணி. சுற்றுலாவிடுதி முகாம் முற்றுமுழுவதுமாக எமது வீரர்களின் கட்டுப்பாட்டிற்குள் வீழ்ந்தது. ஏராளமான படையினர் கொல்லப்பட எமது தாக்குதலின் தீவிரத்திற்கு முகங்கொடுக்கமுடியாத எதிரி அடுத்திருந்த உப்பள அலுவலக முகாமிற்கு ஓட்டம் பிடித்தான். ஆனையிறவுத் தளம்மீதான எமது முற்றுகைத் தாக்குதலில் முதலாவதும் குறிப்பிடத்தக்க வெற்றியை ஈட்டித்தந்ததுமான சுற்றுலாவிடுதி முகாம்மீதான இத்தாக்குதலில் ஏனைய படையணிகளுடன் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் முக்கிய பங்கெடுத்தது.

அதேவேளை அத்தாக்குதல் நடவடிக்கைக்குத் துணையாக ஒரு தந்திரோபாய நடவடிக்கை, தளபதிகளால் திட்டமிடப்பட்டிருந்தது. சுற்றுலாவிடுதி முகாம்மீது எமது அணிகள் தாக்குதல் நடாத்தும் சமநேரத்தில், பின்னணியில் எதிரிக்கான விநியோக நடவடிக்கைகளைத் தடுக்கும் நோக்குடன் எமது அணியொன்றை ஈடுபடுத்துவதென முடிவு செய்யப்பட்டது. இதற்காக ஆனையிறவுப் பிரதான முகாமிற்கும் உப்பளத்திற்குமிடையே இருந்த நீரேரியூடாகச் செல்லும் பாதையில் மேஜர் பாலா தலைமையிலான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் ஒரு கொமாண்டோ அணி உட்புகுந்திருந்தது. எதிரியின் பிரதேசத்தில் நுழைந்து செயற்படப்போகும் அவ்வணி, ஒரு கரும்புலி அணியைப்போன்றே உட்புகுந்தது. இறுதிவரை தமக்குத் தரப்பட்ட பணியைச் செவ்வனே செய்துமுடித்த மேஜர் பாலாவின் அணி இறுதியில்

இழப்புக்கள் எதுவு மின்றி வெளியேறியது. (மேஜர் பாலா பின்னர் நடந்த 'பலவேகய' 02, நடவடிக்கையில் வீரச்சாவடைந்தார்).

முற்றுகைச் சண்டையின் மூன்றாம் நாள் பதின்மூன்றாம் திகதி இரவு 7.00 மணி. எமது கைகளுக்குள் வீழ்ந்திருந்த சுற்றுலாவிடுதி முகாமிற்கு அடுத்திருந்த உப்பள அலுவலக முகாமைக் கைப்பற்றுவதற்கான சண்டை ஆரம்பித்தது. சுற்றுலாவிடுதி முகாமிலிருந்து ஒடுங்கிய, மிகவும் சிறியதான தரைத்தொடர்பை மட்டுமே கொண்டிருந்த உப்பள அலுவலக முகாமைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்துவைத்திருப்பதில் எதிரிக்குச் சிரமம் இருக்கவில்லை. அந்த ஒடுங்கிய பாதையிலேயே தனது முழுக்கவனத்தையும் வைத்திருந்த எதிரி, சுற்றுலாவிடுதி முகாமை நாம் கைப்பற்றிய நாளிலிருந்தே எமது நகர்வுகளை எதிர்பார்த்திருந்தான். எதிரி நூற்றுக்கு நூறுவீதம் எதிர்பார்த்திருந்த பாதையினூடாக, எதிரி புதைத்துவைத்திருந்த கண்ணிவெடி களையும் பொறிவெடிகளையும் கடந்து பலத்த எதிர்ப்பின் மத்தியிலும் எமது அணிகள் எதிரியின் நிலைகளுக்குட் புகத்தொடங்கின. எமது அணிகளுக்குக் காப்பரணாகச் சென்றுகொண்டிருந்த கவசவாகனங்கள் எதிரியின் தாக்குதலாற் செயலிழக்க எமது அணிகள் கூடுதலான இழப்புக்க ளைச் சந்திக்கத் தொடங்கின. எமது நகர்வுகள் எல்லாமே பெரும் சிக்கலுக்குள் தள்ளப்பட்டன. அதேவேளை, பிரதான வீதியூடாக மேஜர் ரெட்டி தலைமையில் உட்புகுந்த இன்னொரு படைய ணியினர் முகாமின் பல காவலரண்களைக் கைப்பற்றி எதிரியின் பல ஆயுதங்களையும் மீட்டி ருந்தனர். எனினும், எல்லா அணிகளிலுமாக 52 போராளிகள் வீரச்சாவடைந்தும் நூற்றுக்கு மேற் பட்ட போராளிகள் காயமடைந்தும் உட்புகுந்த அணிகள் பலவீனப்பட்டிருந்த நிலையிற் சாதகமற்ற அக்களத்திலிருந்து தற்காலிகமான பின்வாங்கலொன்றைச் செய்ய நேரிட்டது.

இவ்வாறே ஆனையிறவுத் தளத்தின் வடமுனையிலும் யாழ்மாவட்டத் தளபதி தினேஸ் அவர்களின் தலைமையில் உக்கிரமான தாக்குதல்கள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. பல முனைகளிலும் தாக்கப்பட்ட நிலையில் ஆனையிறவுப் படைத்தளம்மீது இறுக்கப்பட்ட முற்றுகையின் தீவிரங்கண்டு எதிரித்தலைமை நடுங்கியது. ஆனையிறவுத் தளம் புலிகளின் கையிற் சிக்குண்டால் இராணுவ, அரசியல்ரீதியில் சிங்கள அரசிற்கு ஏற்படப்போகும் பேரிழப்பு எதிரியை அவசரப்படுத் தியது. தாமதிக்கும் ஒவ்வொரு கணத்தையும் பேரபாயத்திற்குரிய கணமாகவே எதிரி எண்ணி னான். அதற்காகவே, பத்துமைல்களுக்கு அப்பாலிருந்த வெற்றிலைக்கேணிக் கடற்கரையில் மிகப் பெரும் தரையிறக்கல் நடவடிக்கையொன்றைச் செய்து, ஆனையிறவுத் தளத்தைக் காப்பாற்ற எதிரித்தலைமை முடிவுசெய்தது. சிறீலங்காவின் மிகப்பெரும் மரபுவழிப் படையெடுப்பான 'பலவேகய' 01, எனப் பெயரிடப்பட்ட இந்நடவடிக்கைக்கு, ஆனையிறவுத் தளத்தை முற்றுகையிட்டிருக்கும் சமநேரத்திலேயே, எமதியக்கம் முகங்கொடுக்க நேரிட்டது. உலகமும் எதிரியும் வியக்கும் வகையில் சுமார் இருபது நாட்கள்வரை பெரும் வெட்டைவெளிப் பிரதேசங்களிலெல்லாம் நடந்த இச்சமரிற் போரிட்ட விடுதலைப் புலிகளின் போரணிகளில் ஒன்றான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் தீரமுடன் போரிட்டுப் பெருமை பெற்றது.

சுமார் இருபது நாட்களுக்கும் மேலாக ஆமைவேகத்தில் நகர்ந்த எதிரியின் 'பல வேகய' இறுதியில் ஆனையிறவு இராணுவத் தளத்திற்கு உயிர்கொடுத்தது. சுமார் 800 வரையான இரா ணுவத்தினரை மட்டுமே கொண்டிருந்த ஆனையிறவுத் தளத்தைக் கைப்பற்றுவதற்கான எமதியக்கத்தின் முற்றுகைப்போர் இறுதியில் 8,000 இற்கும் மேற்பட்ட இராணுவத்திற்கெதிரான மிகப்பெரும் மரபுவழிப் போராகமூண்டு 'ஆகாய கடல்வெளி' என்ற வரலாற்றுச் சமராக நடந்துமுடிந்தது. தனது அதீத படைக்கலச் சக்தியாலும் ஆட்பலச் சக்தியாலும் தற்காலிகமாகத்தப்பிக் கொண்ட எதிரி, எமக்குப் பல போரியல் அனுபவங்களைக் கற்றுத்தந்தான். உலகம் எமது போரியல் ஆற்றல்கண்டு வியந்துநின்றது.

"புலிகள் ஆனையிறவை முற்றுகையிட்டு உக்கிரமான தாக்குதல்களை நடாத்திக்கொண் டிருக்கிறார்கள். அதைத் தடுத்து நிறுத்த இராணுவம் கடும் பிரயத்தனப்பட்டுக்கொண்டிருக்கிறது.

இழப்புக்களைப்பற்றி இராணுவத் தரப்பிலிருந்து வரும் தகவல்கள் நம்பகத்தன்மை அற்றவையாக உள்ளன. பத்துவருட உள்நாட்டுப் போரில் முதல் தடவையாக மரபுவழிப் போர்முனையில் புலிகள் போரிடுகிறார்கள்" என்றும் "இலங்கையில் இப்போது இரண்டு இராணுவங்கள்" என்றும் சர்வதேசமெங்கும் புலிகளின் போராற்றல்பற்றிய பேச்சுகள் ஓங்கி ஒலிக்கத்தொடங்கின.

இவ்வாறாக இராணுவ, அரசியல்ரீதியில் எம்மை உயர்த்திவிட்ட 'ஆகாயக் கடல் வெளிச் சமரில்' முக்கிய பங்கெடுத்த புலிகள் படையணிகளுள் எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கும் ஒரு முக்கிய பங்கு இருக்கிறது. சுமார் ஒரு மாதம்வரை நடந்த இப்பெருஞ்சமரில் வித்தாகிய 602 மாவீரர்களுள் எமது படையணியின் 87 மாவீரர்களும் சேர்ந்துகொண்டார்கள். இச்சமரில் ஈடுபட்டுக்கொண்டிருந்த காலப்பகுதியிலேயே எமது சிறப்புப் படையணி இயக்கத்தின் உத்தியோகபூர்வ ஏடான 'விடுதலைப் புலிகள்' ஏட்டின்மூலம் உலகிற்கும் எமது மக்களுக்கும் பிரகடனப்படுத்தி வைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

# 'ஒப்பரேசன் மின்னல்' எதிர்ச்சமர்

"விடுதலைப் புலிகள் ஒருபொழுதும் யாராலும் புரிந்துகொள்ளப்படமுடியாதவர்கள்" என்ற கருத்து இன்று உலகில் அனைவராலுமே உணரப்பட்டுவிட்டது. ஆனால், சிங்களம் இந்த அனுபவத்தை அன்று கற்றிருக்கவில்லை. ஆ.க.வெ. சமரில் எமக்கு ஏற்பட்ட ஆள், ஆயுத இழப்பும் சோவியத் யூனியனின் வீழ்ச்சிக்குப் பின் மாறிவிட்ட உலக ஒழுங்கில் விடுதலை இயக்கங்களின் வீழ்ச்சியும் ராஜீவ் காந்தியின் கொலையின் பின்னால் விடுதலைப் புலிகளின் நடவடிக்கைகள் இந்தியாவில் தடைசெய்யப்பட்டமையும் சிங்களத்தின் கண்களுக்கு எமது விடுதலை இயக்கத்தைப் பலவீனப்படுத்திக் காட்டின. எனவே, எமது விடுதலைப் போராட்டத்தை முற்றாக அழிப்பது என்ற தனது இலட்சியத்திற்காகச் சிங்களம் அவாக்கொண்டது. 'விடுதலைப் புலிகள் பலவீனப்பட்டுவிட்டார்கள், அவர்களை அழிப்பதற்கு இதுதான் சந்தர்ப்பம்' என்று தமிழீழத்தின் இதயபூமியான மணலாறுமீதான 'ஒப்பரேசன் மின்னல்' என்ற இராணுவ நடவடிக்கையை உடனடியாகவே ஆரம்பிக்க முடிவுசெய்தது.

தமிழரின் தாயகத்தைச் சிதறடிப்பதற்கு மணலாற்றைத் தமிழரிடமிருந்து பறித்தெடுத்துச் சிங்களமயமாக்கவேண்டும் என்பது சிங்கள பௌத்த பேரினவாதத்தின் அடிப்படைத்திட்டம். இத்திட்டத்திற்குக் குறுக்கே நிற்பது தமிழர் தாயகத்தின் இதயப்பகுதியான மணலாறு. எனவே, மணலாற்றை எமதியக்கத்திடமிருந்து நிரந்தரமாகப் பறித்துவிடவேண்டும் என்பதைச் சிங்களப் பேரினவாதம் நீண்டகாலமாகவே திட்டமிட்டிருந்தது. ஆனாலும், இந்திய இராணுவக் காலகட்டத்திற் புலிகளின் வீரத்தாற் புகழ்பெற்ற மணலாற்றின் வீரக்கதைகள் எதிரியைக் கனவிற்கூட அச்சுறுத்துவனவாக இருந்தன. 'ஒப்பரேசன் பாஸ்', 'ஒப்பரேசன் புயல்', 'ஒப்பரேசன் செக்மேற் 01, 02, 03......' என உலகின் வல்லரசுப் படையான இந்தியப்படை எம்மிடம் வாங்கிக்கட்டியது சிங்களத்தால் மறக்கமுடியாதது. எனினும், புலிகளை அழிப்பது என்ற தனது மூலோபாயத்தில் மணலாற்றைக் கைவிடமுடியாது என்பதிற் சிங்களம் உறுதியாகவே இருந்தது.

மணலாற்றின் ஊடாகவே தமிழீழம் முழுவதற்குமான தமது நடவடிக்கைகளைப் புலிகள் ஒருங்கிணைக்கின்றார்கள். எனவே, மணலாற்றைக் கைப்பற்றுவதன்மூலம் தமிழர்களின் ஒருங்கிணைக்கப்பட்ட போராட்ட சக்தியை அழித்துவிடமுடியுமென்பது சிங்களத்தின் நினைப்பு. இதனா லேயே மணலாற்றைக் கைப்பற்றுவதற்கான தனது நடவடிக்கைக்கான ஏற்பாடுகளைச் சிங்களப் படைகள் ஏற்கனவே நிதானத்துடன் மேற்கொண்டிருந்தன. ஒரு பெருஞ்சமருக்கான ஆயுதத் தளபாடங்களையும் சண்டையிடும் வல்லமைமிக்க வீரர்களையும் ஒருங்குதிரட்டிச் சமருக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இவ்வேற்பாடுகளை எமது ஆகாய, கடல், வெளி நடவடிக்கை சின்னாபின்னப்படுத்தியது. மணலாற்றைக் கையகப்படுத்திப் போராட்டத்தை நசுக்கிவிடத் திட்டமிட்ட சிங்களப்படைகள் பறிபோகப்போகும் சிங்களத்தின் கௌரவத்தை மீட்கும் நிலைக்குத்தள்ளப்பட்டன. மணலாற்றிற் பெரும் நடவடிக்கைக்காகக் காத்திருந்த படைகள் ஆனையிறவுப் போர்முனைக்காக அனுப்பப்பட்டன. இருந்தபோதும், ஆனையிறவில் விடுதலைப் புலிகளின் முழுக்கவனமும் செலுத்தப்பட்டிருக்கிறது என்ற தப்புக்கணக்குடன் சிங்களம் செய்த 'ஒப்பரேசன் ஹயசேன' 01, 02, 03 என்ற தொடர் நடவடிக்கைகளெல்லாம் மண்கௌவிப்போயின.

1991 ஆவணி 29, மணலாற்றில் ''புலிகளின் உயிர் எடுப்பிற்கான'' 'ஒப்பரேசன் மின்னல்' ஆரம்பித்தது. முன்னர், ஆனையிறவிற் புலிகளின் முழுக்கவனமும் இருக்கிறது என்ற தப்புக்கணக்குடன் 'ஹயசேன'; இப்போது, ஆனையிறவுடன் புலிகள் பலமிழந்துவிட்டார்கள் என்ற நம்பிக்கையுடன் மின்னல். மணலாற்றின் போரியல், அரசியல் முக்கியத்துவம் கருதிப் புலிகள் தமது போர்வலுவை ஒருங்குதிரட்டி முழுமூச்சுடன் போரிடுவார்கள் என்பதை விளங்கிக்கொண்டு அதற்கேற்பப் போருபாயங்களைச் சிங்களப் படைத்தலைமை வகுத்தது. இதன்மூலம் விடுதலைப் புலிகளின் எஞ்சிய போர்ப்பலத்தையும் ஒரே முனையில் எதிர்கொண்டு அழித்துவிடலாமெனச் சிங்களத் தரப்பால் நம்பப்பட்டது.

இம்முறை நெருக்கமான சண்டை. 15-20 மீற்றர்கள் என நெருக்கமாக எதிரியைச் சந்தித்துக் கொண்டிருந்தோம். ஆனையிறவில் ஒரு மாதம் ஓயாது போரிட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி மின்னல் களத்திலும் தனது பங்கை எடுத்துக்கொண்டது. காட்டுப் போர்முறை அனுபவமும் முன்னெப்போதுமில்லாத எமது அதிகரித்த கனரக ஆயுதப் பயன்பாடும் எமது போராளிகளின் மனவலிமைக்குப் பக்கத்துணையாக இருந்தன.


முதலாவதுதுணைத் தளபதி லெப். கேணல் ஜஸ்ரின்

சிங்களத்தின் போரியல் வரலாற்றிலேயே அது முதல் தடவையாக ஒரே நாளில் அதிக குண்டுகளைவீசிச் சண்டையிட்டது. நாளொன்றுக்குச் சராசரியாக இருப தாயிரம் கிலோ மொத்த நிறையுள்ள குண்டுகள் விமானம்மூலமும் எறிக ணைகளாகவும் மணலாற்றுக் காட் டிற்குள்ளே வீழ்ந்து வெடித்தன. இத்தனை வெடிப்பதிர்வுக்குள்ளும் குண்டுச் சிதறல்களுக்குள்ளும் எமது வீரர்கள் தொடர்ந்தும் சண்டையிட்டுக் கொண்டிருந்தமை சிங்களத்திற் குத் திகைப்பைக் கொடுத்தது. சாப்பாடு, தண்ணீர், நித்திரை, ஓய்வு.... போன்ற மனிதத் தேவைக ளுக்கு அப்பால் அவற்றையெல்லாம் மறந்து விடுதலைப் போராளிகள் என்ற நிலையிலிருந்து இரவு, பகல் என எல்லா வேளைகளிலும் எமது போராளிகள் போரிட்டார்கள். சுமார் ஒரு மாதப் போரின் இறுதியில் ''இந்திய இராணுவத்தால் சாதிக்கமுடியாமற்போனதை எமது வீரர்கள் சாதிக்கப் போகிறார்கள்'' என நம்பிக்கை மொழி பேசிச் சிங்களம் அனுப்பிவைத்த வீரர்களைக் கலைத்துத் துரத்தினார்கள் எமது புலிவீரர்கள். இப்பெருமைமிகு சமரிற் சிங்களப் படைகளுக்குச் சிம்மசொப்பனமாக இருந்து பல சாதனைகளை நிலைநாட்டிப் பெருமை பெற்றது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. அதன்மூலம் பல போர் அனுபவங்களைப் பெற்றுத் தனது வளர்ச்சிப்படிகளாகச் சிங்களத்தின் 'மின்னலை' மாற்றிக்கொண்டது. என்றென்றும் உயிர்வாழும் இந்த வீரவரலாற்றிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் துணைத் தளபதி லெப்.கேணல் ஜஸ்ரின் உட்பட படையணியின் போராளிகள் 44 பேர் தமது இன்னுயிர்களைத் தியாகம் செய்தார்கள்.

# 'ஒப்பரேசன் சிக்சர்' [கஜபகு] எதிர்ச்சமர்

1992ஆம் ஆண்டின் தொடக்கப்பகுதியில் மணலாற்றைக் கைப்பற்றுவதற்கான இன்னொரு தயார்ப்படுத்தலை எதிரி செய்துகொண்டிருந்தான். இம்முறை கொக்குத்தொடுவாய் இராணுவ முகாமிலிருந்து வெளியேறி நாயாற்று முகத்துவாரத்தைக் கைப்பற்றுவதே இராணுவத்தின் இலக் காக இருந்தது. 'ஒப்பரேசன் மின்னலில்' எதிரி எம்மிடம் பெற்ற அனுபவங்களும் அவனது புதிய திட்டத்திற் கருத்திலெடுக்கப்பட்டிருந்தது. இம்முறை சீனாவிலிருந்து கொள்வனவு செய்யப்பட்ட ராங்கிகள், RCL எனப்படும் பின்னுதைப்பற்ற பீரங்கிகள் எனத் தனது ஆயுதப் பயன்பாட்டை மேலும் நவீனப்படுத்தியிருந்தான் எதிரி. ஒட்டுமொத்தமாக, மணலாற்றில் இதுவரை நடந்த நடவடிக்கைகளிற் சிங்களப்படைகள் பட்டறிந்த பாடமும் இந்தியப் படைகளிடம் கேட்டறிந்த பாடமும் 'ஒப்பரேசன் சிக்சர்' நடவடிக்கையின் திட்டமிடலில் இடம்பிடித்துக்கொண்டன.

பங்குனி மாதம் வெயில் கொளுத்திக்கொண்டிருந்தது. 'ஒப்பரேசன் சிக்சர்' இற்கான தயார்ப்படுத்தலை ஏற்கனவே எம்மால் ஊகிக்கக்கூடியதாக இருந்தது. எதிரி தனது நகர்வுக்காகத் தெரிவுசெய்யக்கூடிய பகுதிகள் எமது தளபதிகளால் ஊகிக்கப்பட்டு, எதிரியின் நடவடிக்கைகளை முறியடிக்கக்கூடிய பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்வதில் எமது அணிகள் முற்கூட்டியே ஈடுபடுத்தப்பட்டிருந்தன. இம்முறை 'ஒப்பரேசன் சிக்சர்' இற்கு எதிராக மேலும் குறைந்த ஆள், ஆயுத பலத்தையே நாம் பயன்படுத்தவேண்டியிருந்தது. எனவே, மிகவும் நுணுக்கமான திட்டமிடலும் போராளிகளின் அதிக உழைப்பும் எமது முறியடிப்புச் சமரின் வெற்றியைத் தீர்மானிக்கும் விடயங்களாக இருந்தன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியுடன், இம்ரான் பாண்டியன் படையணியும் மணலாறு மாவட்டப் படையணியும் இணைந்து எதிரியின் வரவுகாத்து வியூகமிட்டிருந்தன.

நீண்டநாளைய காத்திருப்பு, தமது அன்றாடத் தேவைகள் எதையுமே பூர்த்தி செய்துகொள்ள முடியாத களநிலையிலும் எதிரியின் வருகைக்காகப் பொறுமையுடன் காத்திருந்தார்கள் போராளிகள். 1992 பங்குனி, 15ஆம் நாள். எதிரியின் யுத்த முழக்கத்தைப் பறைசாற்றுவதுபோல் கொக்குத்தொடுவாய் இராணுவ முகாமிலிருந்து அவ்வப்போது ஓரிரு எறிகணைகள் ஏவப்பட்டன. எதிரியின் விமானப்பறப்புகளும் அதிகரித்திருந்தன. பங்குனி 17ஆம் நாள், 'ஒப்பரேசன் சிக்சர்' படைகள் எம்மால் எதிர்பார்க்கப்பட்டது போலவே தமது நகர்வை ஆரம்பித்திருந்தன.

இம்முறை எதிரிக்குப் பேரிடி காத்திருந்தது. எதிர்ப்புக்களைக் காட்டாது எதிரியை ஊடுருவ அனுமதித்து, பின்னணியைத் தாக்கி, அவனைச் சிதறடிக்கும் தந்திரோபாயத்தை எமது தளபதிகள் வகுத்திருந்தார்கள். எமது வியூகத்தை அறியாத எதிரி ராங்கிகள், பவள் கவச வாகனங்கள், RCL பீரங்கிகள் சகிதம் எமது பொறிக்குள் ஊடுருவிக்கொண்டிருந்தான். எம்மால் எதிர்பார்க்கப்பட்ட தூரம்வரை எதிரி ஊடுருவிவிட்டான். சண்டைக்கான கட்டளையைத் தளபதி பால்ராஜ் பிறப்பித்தார். வீரச்சமர் வெடித்தது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளி லெப். இராகவனின் RPG முழங்க, முன்னால் எதிரியின் RCL பீரங்கியைச் சுமந்துவந்த மொட்டை ஜீப் செயலிழந்து தடுமாற, எமது அணிகள் சண்டையைத் தொடக்கின. எதிரி எதிர்பார்த்திராத அடி அவன் பிடரியில் விழுந்தது. எமது போராளிகளின் வீராவேசத்தினால் எதிரி நிலைகுலைந்தான். ஏற்கனவே, மணலாற்றில்

படையெடுத்தவர்களுக்கு நடந்த கதைகள் எதிரியின் மனத்திரையிற் பொறிதட்டியிருக்கக்கூடும். பல முனைகளிலும் உக்கிரசமர் மூண்டிருந்தது. மீண்டும் இராகவனின் RPG, முன்னால் வந்துகொண்டிருந்த எதிரியின் பவள் கவசவாகனத்தை நோக்கி முழங்கியது. பவள் சேதமடைந்து நின்றது. எமது தாக்குதல்களின் தீவிரம் எதிரியை எதுவும் செய்ய அனுமதிக்கவில்லை. நடப்பதைப் புரிந்துகொள்ள அவகாசமற்ற எதிரி நிலைகுலைந்து ஓட்டமெடுக்கத் தொடங்கினான். நூற்றுக்கணக்கிற் படையினர் பலியாக, நூற்றுக்கணக்கானோர் காயமடைய எதிரி ஓட்டம்பிடித்தான். "புலிகளை விரட்டியடிக்க" அவன் கொண்டுவந்த RCL பீரங்கியையும் கைவிட்டுச் சென்றான். அப்பீரங்கியைக் கைப்பற்றியதன்மூலம் அக்காலப்பகுதியிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பிரபல்யம் பெற்றிருந்தது. இறந்த எதிரிகளின் உடல்களும் ஏராளமான ஆயுதத் தளபாடங்களும் அங்கே சிதறிக்கிடந்தன.

'ஒப்பரேசன் சிக்சர்' இனால் சிங்களத்திற்கு ஏற்பட்ட அவமானப் புண்ணுக்கு மருந்து கட்டவேண்டிய அவசர நிலைக்குச் சிங்களத் தலைமை தள்ளப்பட்டது. பட்ட புண்ணுக்கு மருந்து கட்டவேண்டிய சிங்களப் படைகளோ திகைத்துப்போய், செய்வதறியாது முழியைப்பிதுக்கும் மோசமான மனநிலையில் இருந்தன. சிங்களப் படைத்தளபதிகள் உடனடியாகக் களத்திற்கு விஜயம் செய்து, நிலைமையைச் சீர்படுத்தி, மீண்டுமொரு படை நகர்வை அவசரமாகச் செய்துமுடித்துத் தமது அவமானத்தை மூடிமறைத்துவிட முயன்றனர்.

பங்குனி - 19, மீண்டும் 'சிக்சர்' படைகள் முன்னேறத் தொடங்கின. இம்முறை சிங்க ளத்தின் அதிவிசேட பயிற்சிபெற்ற காட்டுப்போர் அனுபவம்மிக்க கொமாண்டோ படையணியினர் களத்தில் இறங்கியிருந்தனர். முன்னேறிய கொமாண்டோக்களை ஊடறுத்து இறங்கிய எமது படையணியின் ஒரு அணி சிங்களத்தின் கொமாண்டோக்களைச் சிதறடித்தது. அவர்களின் கொமாண்டோக்களும் தம் பங்கிற்கு நவீன ஆயுதங்களையும் இறந்த தமது சகாக்களின் உடல்களையும் விட்டுவிட்டு கொமாண்டோப் பாணியிலேயே மிகவும் வேகமாக ஓட்டம்பிடித்தனர். இந்த வெற்றிகர முறியடிப்புத் தாக்குதலில் மொத்தம் 40 கொமாண்டோக்கள் உயிரைவிட்டனர்.

இப்படியாக எதிரியின் அனைத்து முயற்சிகளும் அடிசறுக்கிப்போக, மணலாற்றுமண் மீண்டும் ஒரு வெற்றிச் சரித்திரத்தைப் பதிவுசெய்தது. இச்சரித்திரத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப் புப் படையணியும் தன் சாதனைப் பட்டியலைப் பதிவுசெய்தது. இவ்வரலாற்றுச் சமரிற் காவியமான மாவீரர்களுடன் எமது படையணியைச் சேர்ந்த பத்தொன்பது போராளிகளும் மணலாற்று மண்ணில் விதையானார்கள்.

# மின்னல் வேகத் தாக்குதல் நடவடிக்கைகள்

1992ஆம் ஆண்டு விடுதலைப்போர் வரலாற்றிற் பல்வேறு தரப்பினரதும் கவனத்தை ஈர்த்த ஆண்டாகும். 1991இல் நடைபெற்ற ஆகாய கடல் வெளிச் சமரிலும் அதன் பின்னர் சிங்களப் படையினரால் மேற்கொள்ளப்பட்ட பாரிய படை நடவடிக்கைகளிலும் புலிகள் இயக்கம் சந்தித்த பாரிய ஆள், ஆயுத இழப்புக்களும் அக்காலப்பகுதியில் மாற்றம் பெற்றிருந்த பிராந்திய, சர்வதேச அரசியற் சூழலும் அனைவரையும் எமது இயக்கத்தின் செயற்பாடுகளை உற்றுநோக்க வைத்தன.

“இருபதாம் நூற்றாண்டில் ஒரு தலைசிறந்த கெரில்லா இயக்கத்தின் விடுதலைப் போராட்டம் முடிவிற்குக் கொண்டுவரப்படுகின்றது” என ஆய்வுகளை வெளியிட்டு, அவற்றின் முடிவிற்காக ஆய்வாளர்கள் காத்திருந்தனர். எமது தலைவர் அவர்களின் அடுத்த கட்டப் போரியற் செயற்பாடுகளை மட்டுமே நம்பி, எமது இனத்தின் வரலாறு காத்திருந்தது.

தமிழீழப் போரரங்கில் ‘மின்னல்வேக அதிரடித் தாக்குதல்’ என்ற புதிய வடிவத்தை அறிமுகம் செய்தார் தலைவர் அவர்கள். எமது தேவைக்கேற்பச் சிங்களப் படைமுகாம்களின் வரையறுக்கப்பட்ட இலக்குகளைத் தெரிவுசெய்தல், அவற்றைத் துல்லியமான வேவு நடவடிக்கைக் குட்படுத்துதல், எதிரிக்கு அதிக ஆளிழப்பையும் பொருளிழப்பையும் ஏற்படுத்தி அச்சத்தைக் கொடுத்துச் சலிப்படையவைத்து அவனது உளவுறுதியைச் சிதைத்தல், எமது தரப்பில் இழப்புக்களின்றி அல்லது மிகக்குறைந்த இழப்புகளுடன் எதிரியிடமிருந்து பெருமளவு ஆயுதங்களையும் வெடிப்பொருள்களையும் கைப்பற்றக்கூடிய வேகம்மிக்க தாக்குதல் நடவடிக்கைகளைத் தமிழீழத் தின் எல்லாப் பகுதிகளிலும் எதிரிமீது தொடர்ச்சியாக மேற்கொள்ளுதல் ஆகியனவே தலைவர் அறிமுகம் செய்த மின்னல் வேக அதிரடித்தாக்குதலின் அடிப்படைகளாகும். 1991 காலப்பகுதி யின் தொடர் நடவடிக்கைகளால் அச்சமூட்டத்தக்க வகையில் வற்றிப்போயிருந்த எமது ஆயுதக் கிடங்குகளை நிரப்புவதிலும் எழுச்சி பெற்றிருந்த சிறீலங்காப் படையினரின் போரிடும் மனவுறுதியைச் சீரழிப்பதிலும் எமக்கிருந்த தேவையைத் தனது இப்புதிய போர்முறை நிவர்த்திசெய்யுமெனத் தலைவர் உறுதியாக நம்பினார்.

இதேவேளை, சிறீலங்காப்படைத் தலைமையோ புலிகள் இயக்கத்தின் நெருக்கடி நிலையைக் கருத்திற்கொண்டு, யாழ்க் குடாநாட்டை முழுமையாக ஆக்கிரமித்துவிடுவதற்கான இறுதிக்கட்ட ஏற்பாடுகளில் ஈடுபட்டிருந்தது. இந்நிலையிலேதான் தலைவர் அறிமுகம் செய்த புதிய போர்முறை சிங்களத்தின் போர்த்திட்டத்தின் மூலவேரையே உலுப்பியெடுக்கத் தொடங்கியது.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் தலைவரின் புதிய போர்முறைக்குத் தன்னை முழுமையாகத் தயார்ப்படுத்திக்கொண்டு களமிறங்கியது.

10.01.1992 அன்று யாழ், பொன்னாலைப் பகுதிச் சிறீலங்காப் படைகளின் காவலரண்களைத் திடீரெனத் தாக்கிப் படையினர் பத்துப்பேரைக் கொன்று, ஆயுதங்களையும் வெடிபொருட்களையும் கைப்பற்றிய சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது புதிய அத்தியாயம் ஒன்றைத் திறந்து

வைத்தது. இவ்வெற்றிகரத் தாக்குதலிற்கான வேவு நடவடிக்கைகளிற் சிறப்பாகவும் துணிவோடும் ஈடுபட்ட எமது படையணியின் போராளிகள் மூவரைப் பாராட்டித் தலைவர் அவர்கள் பரிசில் வழங்கிக் கௌரவித்தார். "வேவு நடவடிக்கைகளே எமது புதிய போர்ச்செயற்பாடுகளின் முதுகெலும்பு" எனத் தலைவர் அவர்கள் கூறியிருந்தமை குறிப்பிடத்தக்கது.

இதேபோல 11.05.1992 அன்று கிளிநொச்சி மாவட்டப் படையணியுடன் எமது சிறப்புப் படையணியும் இணைந்து, ஆனையிறவின் கிழக்கு அரணாக அமைந்த, தட்டுவன்கொட்டித் தொடர்காவலரணில் இருபத்தியிரண்டு அரண்கள்மீது ஒரு திடீர்த்தாக்குதலை நடாத்தியது. 15 படையினரைக் கொன்று, ஆயுதங்களையும் மீட்டுவந்த இவ்வெற்றிகரத் தாக்குதலில் வேவுபார்த்ததிலிருந்து, திட்டமிட்டுத் தாக்குதலை நடத்தியதுவரை அனைத்திலும் உழைத்த எமது படையணியின் முன்னாட் சிறப்புத் தளபதி மேஜர் கிண்ணியை நாம் 10.07.1992 இல் எதிரி எடுத்த 'பல வேகய - 2' என்ற படையெடுப்பிற்கு எதிரான சமரில் இழக்கவேண்டி நேர்ந்தது.



கட்டைக்காடு ஆயுதக்கிடங்கில் இருந்து கைப்பற்றப்பட்டதில் ஒரு தொகுதி ஆயுதங்கள்

தமிழீழத்தின் அனைத்து மாவட்டங்களிலும் இயக்கத்தின் பிராந்திய மட்டத்திலான படையணிகளால் திடீர் அதிரடிகள் தீவிரம் பெற்றன. இதிலே குறிப்பிடக்கூடிய பெருந்தாக்குதலாக அமைந்தது, 01.10.92 அன்று நள்ளிரவில் யாழ். கட்டைக்காடு சிங்களப்படை முகாமின் $2^1/_2$ கிலோ மீற்றர் நீளக்-காவலரண்தொடர் தகர்த்தெறியப்பட்டு, பாரிய ஆயுதக்கிடங்கொன்றைக் கைப்பற்றிய அதிரடித் தாக்குதலாகும். ஐந்துகோடி உரூபா பெறுமதியான ஆயுதங்கள் வெடிப்பொருட்கள் மற்றும் படைத்தளபாடங்களைக் குறுகிய நேரத்தில், ஒரே தடவையிற் கைப்பற்றித் தமிழீழப் போரிற் புதிய சாதனை படைத்த இத்தாக்குதலுக்காகத் துல்லியமான வேவுத்தரவுகளைப் பெற்றுத்தந்து, வெற்றிக்கு மூலவேராய் அமைந்தவர்களுள் எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைச் சேர்ந்த வேவு வீரர்கள் எழுவருக்குத் தலைவர் பரிசில் வழங் கிக் கௌரவித்தமை படையணியின் பெருமைக்குரிய பதிவாகும். இவ்வேவுப் பணியில் ஈடுபட்டிருந்தபோது 12.08.1992 அன்று படையணியின் தளபதி கப்டன் சுபாஸ்கரை நாம் இழந்தோம்.

மீண்டும் ஒரு பெரிய தாக்குதலுக்கான வேவு நடவடிக்கைகள் பூர்த்தியாகியிருந்தன. 1992ஆம் ஆண்டு தமிழீழத் தேசிய மாவீரர் நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. 23.11.1992 அன்று யாழ்ப்பாணத்திற் சிங்களப் படைகளின் பலாலிக் கூட்டுப்படைத் தளத்தின் கிழக்கு எல்லையின் $4^1/_2$ கிலோமீற்றர் நீளத் தொடர்க் காவலரண் வேலி குறிவைக்கப்பட்டது. முக்கியத்துவம் வாய்ந்த இத்தாக்குதலிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பிரதான பங்கேற்றது. "இது குறுகிய நேரத்தில் நடந்த மிகக் கொடிய யுத்தம். கனரக ஆயுதங்களையும் போர் ராங்கிகளையும் பயன்படுத்தியபோதும் படையினர் தோற்றுப்போய்விட்டனர்" எனச் சிங்களப் படைத்துறை உயரதிகாரிகளையே ஒப்பாரி வைக்கச்செய்த



அதிரடித் தாக்குதல் ஒன்றுக்குப் புறப்படுமுன் தளபதி ராஜன் படையணிப் போராளிகளுடன் உரையாடுகின்றார்.

இப்பெரும் தாக்குதலிற் பிரதான முனைகளைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் போர்த்தளபதிகள் பொறுப்பேற்றிருந்ததுடன், இறுக்கமான முனைகள் படையணி வீரர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. தளபதி பால்ராஜ் அவர்களால் ஒருங்கிணைக்கப்பட்ட இத்தாக்குதல் நடவடிக்கையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அதன் தளபதிகளான லெப். கேணல் கில்மன், லெப்.கேணல் சிவாஜி ஆகியோரின் தலைமையில் இருமுனைகளூடாகத் தனித்துக் களமிறக்கப்பட்டது. இதே வேளை கடற்பகுதியால் நகர்ந்து எதிரிக்குப் பக்கவாட்டாகக் களமிறங்கிய யாழ் மாவட்டப் படையணியை உள்ளடக்கிய அணிக்கு எமது படையணியின் தாக்குதல் தளபதிகளில் ஒருவரான சுசீலன் தலைமையேற்றிருந்தார். முழுமைப்படுத்தப்பட்ட வெற்றியைப் பெற்றுத்தந்த இத்தாக்குதலில் எமது சிறப்புப் படையணி பொறுப்பேற்றிருந்த அத்தனை பணிகளுமே கனகச்சிதமாக நிறைவேற்றப்பட்டிருந்தன.

யாழ்க் குடாநாட்டின்மீதான இறுதித் தாக்குதலுக்குச் சிங்களம் தயாராகிக்கொண்டிருந்த வேளை புலிகளால் மேற்கொள்ளப்பட்ட பலாலிப் படைத்தளம்மீதான இந்த அதிரடி எதிரியின் போர்த்திட்டத்தைச் சீர்குலைத்துவிட்டது. அது மட்டுமல்லாது, ஆயிரக்கணக்கில் மட்டுமே இருந்த புலிகளின் துப்பாக்கி ரவைக் களஞ்சிய இருப்பை, இலட்சக்கணக்காக மாற்றிவிட்டது. சண்டைக்காகப் புறப்பட்ட எமது போராளிகளுடனான இறுதிச் சந்திப்பில் தலைவர் அவர்கள் துப்பாக்கி ரவைகளின் தேவையையே மீண்டும்மீண்டும் வலியுறுத்தியிருந்தமை குறிப்பிடத்தக்கது. அதன்படியே, சண்டையின் முடிவு சிங்களத்தின் படையெடுப்பை எதிர்கொள்ளக்கூடியவாறு எமது ஆயுத, வெடிபொருள் இருப்பை பெருமளவில் அதிகரித்துவிட்டது.

“விடுதலைப்புலிகளுக்குக் கடல்மூலம் ஆயுதங்கள் வருவதைத் தடுப்பதிற் கடற்படையினர் ஈடுபட்டிருக்கும்போது, தரையிற் கோடிக்கணக்கான உரூபா பெறுமதியான ஆயுதங்களைப் புலிகள் எம்மிடமிருந்தே அள்ளிச் சென்றிருப்பது ஏமாற்றத்தையும் விரக்தியையும் தருகிறது” எனக் கூறுமளவிற்குச் சிறீலங்காவின் கடற்படைத் தளபதியை இத்தகைய தாக்குதல்கள் விரக்திகொள்ளச் செய்திருந்தன.

எமது தலைவர் பிரபாகரன் அவர்களின் புதிய போருபாயம் பெரு வெற்றிகளைக் குவித்து அதன் பயன்களை வெளிப்படுத்தத் தொடங்கியது. தமிழீழத்தின் அனைத்துப் பகுதிகளிலும் சிறிலங்காப் படைகள்மீது தொடுக்கப்பட்ட ‘மின்னல்வேகத்’ தாக்குதல்களும் 08.08.1992 இல் யாழ் அராலித்துறையில் லெப். ஜெனரல் கொப்பேகடுவ, மேஜர் ஜெனரல் விஜயவிமலரட்ண, அட்மிரல் ஜெயமகா உட்பட வடபிராந்தியப் படைத்தலைமை, புலிகள் இயக்கத்தால் பூண்டோடு அழிக்கப்பட்டமையும் அதன்பின்னான பூநகரி இராணுவத் தளத்தின் 62 காவலரண்கள்மீதான அழித்தொழிப்புத் தாக்குதல், கட்டைக்காடு, வளலாய்த் தாக்குதல்கள் போன்ற பெருந்தாக்குதல்களும் சிறீலங்கா இராணுவ இயந்திரத்தை ஈடாடவைத்தன. சிறீலங்கா இராணுவத்தைப் பொறுத்தவரை “இது மோசமான காலம்” என பி.பி.சி. உலக சேவை தன் ஆய்வை வெளியிட்டிருந்தமை அந்தக் காலப்பகுதியின் உண்மை நிலையைப் புலப்படுத்துவதற்குத்தக்கதொரு சான்றாகும்.

வெற்றிகளால் நிறைந்த 1992ம் ஆண்டில் மொத்தம் 1379 படையினர் கொல்லப்பட்டதுடன் 1284 ஆயுதங்களும், ஏழு இலட்சத்திற்கும் அதிகமான ரவைகளும், பெருந்தொகை எறிகணைகள், கைக்குண்டுகள் என்பனவும் புலிகளாற் கைப்பற்றப்பட்டன. "இராணுவத்திலிருந்து 4000 பேர் ஓடிவிட்டனர். புலிகளின் தொடர்ச்சியான தாக்குதல்களால் மனவுறுதி குலைந்த நிலையில் இவர்கள் ஓடினர்; பலர் தம்மைத்தாமே காயப்படுத்திக்கொண்டு செல்கின்றனர்; சிலர் தற்கொலை கூடச்செய்கின்றனர்" என இராணுவ வட்டாரங்களை மேற்கோள்காட்டிக் கொழும்பு ஆங்கில ஏடான 'சண்டே ஐலண்ட்' செய்தி வெளியிட்டிருந்தது. இவ்வாறே "புலிகளின் தொடர் தாக்குதல்களினாற் படையினர் மத்தியிற் களைப்புத்தோன்றியுள்ளது. அவர்கள் இயந்திரமாக்கப்பட்டுள்ளனர். அவர்கள் நடமாடும் எலும்புக்கூடுகளாக மாறிப்போயுள்ளனர். இத்தகைய கொடூரமான சூழ்நிலைகள் படையினரைச் சண்டைக்குத் தகுதியற்றவர்கள் ஆக்கிவிட்டன" என ஒரு படை அதிகாரியை மேற்கோள்காட்டி 'சண்டே ரைம்ஸ்' ஆங்கில ஏடு எழுதியிருந்தது. சிங்களத்தின் போர் உறுதி மீது தலைவரின் புதிய போருபாயம் எத்தகைய தாக்கத்தை விளைவித்தது என்பதை எடுத்துக் காட்டுவதற்கு இந்த மேற்கோள்கள் மட்டுமே போதுமானவை.

இவ்வாறு சிறீலங்காவின் அரசியல், இராணுவ நிலையிற் பெருந் தாக்கத்தை ஏற்படுத்தி, சர்வதேசத்தின் கருத்து நிலையில் தலைகீழான திருப்பத்தைக்கொண்டுவந்து, எமது இயக்கம் சந்தித்த பாரிய நெருக்கடிகளிலிருந்து எம்மை மீளெழவைத்த தலைவரின் படை நடத்தலுக்கு அவரின் பெரும் எதிர்பார்ப்புகளில் ஒன்றான எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி காத்திரமான பங்காற்றிப் பெருமை பெறுகின்றது.

எமது விடுதலைப்போர் வரலாற்றில் விசேட கவனிப்பிற்குரிய இக்காலகட்டத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அதன் ஆரம்பக்கட்ட வளர்ச்சியில் துணைநின்ற ஆற்றல்மிக்க தளபதிகள் மூவரை இழந்து நின்றது. கப்டன் சுபாஸ்கர், மேஜர் கிண்ணி ஆகியோருடன் எமது சிறப்புப் படையணி ஆரம்பிக்கப்பட்டபோது அதன் தளபதியாகத் தலைவரால் நியமிக்கப்பட்ட லெப்.கேணல் ராஜன் அவர்களை 27.08.1992 அன்று யாழ் மாதகலில் நடந்த மோதல் ஒன்றின் போது நாம் இழந்து நின்றோம். இவர்களுடன் மொத்தமாகப் போராளிகள் 51 பேரைப் படையணி அர்ப்பணித்து நின்றது.

# தலைநகர் நோக்கிய நகர்வு

வடதமிழீழத்திற் சாதனைகள் பல படைத்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் வரலாற்றில் திருமலை நோக்கிய நகர்வு ஒரு முக்கிய பதிவாகும். திருமலையிற் புரியப் பட்ட சாதனைகளுக்காகப் பல வேதனைகளையும் படையணி சந்தித்தது. ஒவ்வொருநாள் நிகழ்வுகளும் எல்லோரும் அறிந்து கொள்ளவேண்டிய முன்மாதிரியான வரலாற்றுப் பதிவுகளாயின. படையணியின் பெயருக்குரியவரான சாள்ஸ் அன்ரனியின் மண்ணிற் பெருந்துன்பங்களிடையேயும் சமராடியது பெருமைக்குரியதாகும்.

திருமலை எங்கள் தமிழீழ நாட்டின் தலைநகரம். உலக அரங்கிற் கேந்திர முக்கியத்துவம் மிக்கது திருமலையின் இயற்கைத் துறைமுகம். அதன் முக்கியத்துவம் கருதியே அதனைத் தமதாக்கிக்கொள்ள உலகின் வல்லரசுகள் எப்போதுமே போட்டிபோட்டுக் கொண்டுவருகின்றன. இந்த வகையில்தான் தமிழீழ மண்ணை அபகரித்துச் சிறீலங்கா என்ற சிங்களத்தீவை உருவாக்கவேண்டுமென்ற சிங்களப் பேரினவாதத்தின் திட்டத்திற்குத் திருமலையும் பிரதான இலக்கானது.

திருமலையில் தமிழர்களின் தனித்துவத்தை அழித்து, அதைப் படிப்படியாகச் சிங்களப் பிரதேசமாக மாற்றிவிடுவதிற் சிங்களம் அக்கறையாக இருந்து வருகின்றது. திட்டமிட்ட சிங்களக் குடியேற்றத்தின்மூலம், தமிழீழத்தின் ஏனைய பகுதிகளுடனான தொடர்புகளைத் துண்டித்து, திருமலையைத் தனிமைப்படுத்தி, அதை முற்றுமுழுதாகச் சிங்களப் பிரதேசமாக மாற்றிவிடுவதற்கான நடவடிக்கைகள் சிங்கள அரசால் எப்போதோ ஆரம்பிக்கப்பட்டுவிட்டன. ஆரம்பகாலங்களிற் புறக்கணிக்கத்தக்க விகிதத்தில் மிகமிகச் சிறிய தொகையினராக இருந்த சிங்களவரின் குடித்தொகை, இன்று மிகப்பெருந் தொகையில் அதிகரித்திருக்கின்றது. திட்டமிட்ட இராணுவ நடவடிக்கைகள், இன அழிப்பு என்பவற்றின்மூலம் தமிழ் மக்களை அவர்களின் வாழ்விடங்களிலிருந்து விரட்டியடித்து, அவற்றைத் தமதாக்கி வருகிறார்கள் பேரினவாதிகள். சிங்களத்தின் இத்தகைய திட்டமிட்ட செயற்பாடுகள் எதிர்காலத்தில் தமிழீழத்திற்கு ஏற்படுத்தப்போகும் நெருக்கடிகள் அபாயகரமானவை.

எனவே, தமிழீழ நாட்டை மீட்டெடுக்கும் எமது போராட்டத்தின் பிரதான இலக்குகளில் ஒன் றாகத் திருமலையை மீட்டெடுக்கும் பணி இருக்கிறது. அதைச் செய்துமுடிப்பதென்பது எமது இயக்கத்தின் அதியுயர் இராணுவ வளர்ச்சிக் கட்டத்திலேயே சாத்தியமாகக்கூடியது. அதுவரையும் எதிரியின் அபாயகரமான இத்திட்டத்தை முறியடிக்க, அல்லது தாமதப்படுத்தக்கூடிய எமது செயற்பாடுகள் அங்குப் பிரதானமானவை. இப்போர்த்திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்குத் திருமலையின் காட்டைப் பாதுகாப்பது எமது அடிப்படைத் தேவைகளில் ஒன்றாக இருக்கிறது. அத்துடன், தமிழீழப் போரரங்கில் எதிரியின் படைப்பலத்தைப் பரம்பலடையவைத்து பகுதி பகுதியாக வெற்றிகொள்வதற்கும் திருமலையில் எமது படையணியின் செயற்பாடு அவசியமானது.

2ஆம் கட்ட ஈழப்போரின் இறுதிக்காலத்தில் திருமலையில் எமது இயக்கத்தின் செயற்பாடுகளை மட்டுப்படுத்துவதில் எதிரி ஓரளவு வெற்றிகண்டிருந்தான். காடுகளுள் இருந்த எமது பாசறைகள்மீது

அடிக்கடி தாக்குதல் நடவடிக்கைகளை மேற்கொண்டு எம்மை ஓரிடத்தில் நிலை கொள்ளவிடாது தாக்கிக்கொண்டிருந்தான். இந்நிலையை 3ஆம் கட்ட ஈழப்போரின்போது மாற்றிய மைக்கவேண்டும் என்பது தலைவரின் திட்டமாக இருந்தது. திருமலை மண்ணில் எதிரியைக் காடுகளுக்குள் இறங்கவிடாது, அவற்றை எமது பூரண கட்டுப்பாட்டினுட் கொண்டுவந்து, எமது செயற்பாடுகளுக்கான வலுவான தளங்களாக அவற்றை மாற்றவேண்டும் என்பது தலைவரின் திட்டத்தின் பிரதான இலக்காக இருந்தது. அத்துடன், திருமலையில் இராணுவரீதியில் அரசிற்குப் பெருமளவிலான நெருக்கடிகளை எம்மாற் கொடுக்கமுடியுமானால் அது பலவகையிலும் எமக்குச் சாதகமாக இருக்கும். எனவே, 3ஆம் கட்ட ஈழப்போரில் தலைவரின் போர்த்திட்டங்களின் பிரதான பணிகளில் ஒன்றான திருமலைச் செயற்பாட்டிற்காக சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் ஓர் அணியை அனுப்பிவைக்க தலைவர் முடிவுசெய்தார்.

எமது இயக்கத்தின் முதலாவது மரபுவழித் தாக்குதற் படையணி ஒரு மரபுவழித் தாக்குதலுக்கான களநிலையை ஏற்படுத்துவ தற்காகத் திருமலை நோக்கிப் புறப்படத் தயாரானது. அணிக்குப் பொறுப்பாகப்



திருமலையில் எங்கள் படையணி

படையணியின் அப்போதைய சிறப்புத் தளபதி கில்மன் தலைவரால் நியமிக்கப்பட்டார். அணிகள் உரிய இடத்திற்குப் பாதுகாப்பாகச் சென்றடையவேண்டும். திருமலைக்குச் செல்வதற்கான அனைத்து வழிகளுமே எதிரியால் ஆக்கிரமிக்கப்பட்டும் எதிரியின் கண்காணிப்புக்குட்பட்டும் இருந்தன. கடல்வழிப் பாதைகூட எதிரிக் கடற்படையின் அச்சுறுத்தலுக்கு உட்பட்டு இருந்தது. இவற்றிற்கு மத்தியில் பலநூறு போராளிகளை உள்ளடக்கிய அணிகளை நகர்த்துவது அசாத்தியமானதொரு செயலாகும். இத்தகைய நிலையில் வடதமிழீழத்திலிருந்து கால்நடையாகவே புறப்பட்டார்கள் எமது போராளிகள்.

காட்டுப்பாதை, அதுவும் எதிரியின் கண்காணிப்பு அபாயத்திலிருந்து தப்புவதற்காகச் சுற்றிச் சுழன்று நீண்டுசெல்லும் பயணம். ஒவ்வொரு போராளியின் முதுகிலும் பெருஞ்சுமை. தமது இலக்கிற்குப் போய்ச்சேரும்வரை அவர்களின் பைகளில் இருக்கும் சொற்ப அளவு உணவில்தான் பசிக்குத் தீர்வுகாணவேண்டும். காட்டுப் பசியின் கோரம் ஒருபுறம். ஒவ்வொரு நாளைய நீண்ட நடையின் களைப்பைப் போக்குவதற்குத் தண்ணீர்கூட போதியளவு கிடைக்கவில்லை. இப்படியாகப் பெரும் இன்னல்களுக்கு மத்தியில் எமது அணி தனது பயணத்தின் இலக்கைச் சென்றடைந்தது.

திருமலையைச் சென்றடைந்த எமது அணி மேலும் பல சிரமங்களுக்குள்ளாக வேண்டியிருந்தது. எமது அணியை நிலைப்படுத்த முன்னரே எமது வரவு எதிரிக்குத் தெரிந்துவிட்டால் விளைவுகள் அபாயகரமானதாக இருக்கும். அதுவரை எமது செயற்பாடுகள் மிகவும் இரகசியமாக இருக்கவேண்டும். ஒவ்வொரு நாளைய உயிர்வாழ்வும் பெரும் போராட்டமாக இருந்தது. ஒரு நாளைக்குக் கிடைக்கக்கூடிய ஆகக்கூடிய உணவான ஒரு ரொட்டியும் சிறிதளவு மிளகுத் தண்ணீரும் கிடைத்துவிட்டாலேபோதும் அவர்கள் தமது உயிர்வாழ்வதற்கான போராட்டத்தில் வெற்றிபெற்றுவிடுவார்கள் என்ற நிலையே சிறிது காலம் நிலவியது. காடுகளுக்குள் வரக்கூடிய காயங்களுக்கு நிவாரணியாக இருக்கக்கூடிய ஆகக்குறைந்த மருத்துவ வசதிகூட அங்கு இருக்க வில்லை. இந்நிலையிற் வடபகுதித் தளத்துடன் தொடர்புகொள்ளக்கூடிய கடல்வழிப் பாதையை பாதுகாப்பதற்காகவும் உணவுத் தேவையைப் பூர்த்திசெய்து கொள்வதற்காகவுமே தாக்குதல்களைச் செய்யவேண்டிய நிலையிற் கில்மனின் தலைமையிலான எமது அணி இருந்தது. பல தடவை காடுகளுக்குள் இருந்து நகரங்களுக்குள் உணவுக்காக நுழைந்த எமது அணிகள் எதிரியின் பதுங்கித் தாக்குதல்களுக்கு இலக்காகி இருந்தன. அதற்காகவே எமது போராளிகளிற் சிலரின் உயிர்களைக்கூட நாம் அர்ப்பணிக்க வேண்டியிருந்தது.

இத்தனை நெருக்கடிக்குள்ளும் இருந்துகொண்டு எதிரியுடன் சண்டையிடுவது எவ்வளவிற்குச் சாத்தியமாகும்? தளபதி கில்மன் தனது போராளிகளுக்கு அடிக்கடி சொல்லிக்கொள்வார், "நாங்கள் இப்படியே சாப்பாட்டை மட்டும் பார்த்துக்கொண்டிருந்தால் தலைவர் எதிர்பார்த்து அனுப்பியதைச் செய்யேலாது. இதுக்குள்ளை இருந்தே நிறையச் சாதிக்கிறதுக்கான அடித்தளங்களை இப்பவே போடவேணும்" அதற்காகவே பல்வேறு நடவடிக்கைகளும் முடுக்கிவிடப்பட்டன.

19.04.1995 அன்று 3ஆம் கட்ட ஈழப்போரின் ஆரம்பநாள். அன்று அதிகாலை திருமலைத் துறைமுகக் கடற்படைத் தளத்துள் பாரிய தாக்குதலொன்று கடற்புலிகளால் நடாத்தப்பட்டது. அதேதினம் காலை துறைமுகத்திலிருந்து வீதித்தடையை அகற்றவந்த பொலிசார் மீது தாக்குதல் ஒன்றை நடத்திய எமது படையணியின் போராளிகள் ஐந்து பொலிசாரைக் கொன்று ஆறு பேரைக் காயப்படுத்தினர். 3ஆம் கட்ட ஈழப்போரின் முதல் நாளிலேயே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தலைநகர்ப் போர்ப்பக்கங்கள் விரியத்தொடங்கின. இதுபோலவே 21.04.1995 அன்று 6ஆம் கட்டைப் பொலிஸ் நிலையத்திலிருந்து தடையை அகற்றவந்த இராணுவத்தினர்மீது தாக்குதலை நடாத்தியதில் ஆறு இராணுவத்தினர் கொல்லப்பட்டனர். எமது இத்தகைய திடீர்த்தாக்குதல்கள் சிறீலங்காப் படைத்தரப்பைப் பேரதிர்ச்சிக்குள்ளாக்கியது. புலிகள் எங்கோ தம்மை உறுதியாக நிலைப்படுத்திவிட்டார்கள் என அவர்கள் அஞ்சினார்கள். இப்படியான நிலைமைகளை ஆராய்வ தற்கென்றே சிறீலங்காவின் இராணுவத் தளபதி திருமலைக்கு உடன் விஜயம் செய்து அங்குள்ள உயர் இராணுவத் தளபதிகளுடன் கிழக்கின் பாதுகாப்பு நிலைபற்றி ஆராய்ந்தார்.

எமது தீவிரமான தாக்குதல்களால் நிலைகுலைந்த இராணுவத் தலைமை, திருமலையின் காட்டுப்பகுதியிற் கூடியகவனம் செலுத்தியதுடன் எமது விநியோகத்தின் முதுகெலும்பாய் இருந்த கடல்வழிப்பாதையின் கண்காணிப்பை மேலும் இறுக்கியது. எமது ஒவ்வொரு தாக்குதலின் பின்னாலும் நாம் மேலும் மேலும் பலமான நெருக்கடிகளைச் சந்திக்கவேண்டியிருந்தது. எதிரி எமது காடுகளுக்குள் இறங்கத் தொடங்கினான். நாம் உணவு எடுப்பதற்கான பாதைகள் எதிரியின் பதுங்கித் தாக்குதலுக்கான இலக்குகளாயின. எம்மை நெருக்கடிக்குள் தள்ளுவதன் மூலம் எமது செயற்பாகளைக் கைவிடநிர்ப்பந்திக்க முடியுமென எதிரி நம்பினான். 13.05.1995 அன்று குச்சவெளிக்குள் நகர்ந்துகொண்டிருந்த எமது அணியொன்று எதிரியின் பதுங்கித் தாக்குதலுக்கு அகப்பட்டது. நீண்ட நேரம் நடந்த சண்டையில் ஐந்து பேரைப் பலிகொடுத்து எதிரி எம்மவரில் பத்துப்பேரை வீழ்த்தினான். எம்மால் ஏற்கனவே எதிர்பார்க்கப்பட்ட எதிரியின் இத்தகைய செயற்பாடுகளை முறியடிப்பதற்காகத் தக்க பதிலடி ஒன்றைக் கொடுப்பதற்கு தளபதி கில்மன் திட்டமிட்டார். சரியாக இரண்டு தினங்களின் பின்னர் 15ஆம் திகதி

அதிகாலை, கல்லிறவு இராணுவ முகாமிலிருந்து 400 மீற்றர் தூரத்திற் பதுங்கித்தாக்கும் நோக்குடன் பதுங்கியிருந்துவிட்டு முகாம் திரும்பிய இராணுவ அணி எம்மவர்களின் பதுங்கித் தாக்குதலுக்கு இலக்கானது. இத் தாக்குதலிற் படையினர் பதினான்குபேர் கொல்லப்பட்டனர். இழப்புக்கள் இன்றியே எமது பதிலடி வெற்றியில் முடிந்தது. இதன் பின்னரும் எம்மால் நடத்தப்பட்ட பல்வேறு தாக்குதல்களிற் பல படையினர் கொல்லப்பட்டனர்.

25.05.1995 அன்று தளபதி கில்மன் தலைமையில் நடந்த கல்லிறவு இராணுவ முகாம் மீதான தாக்குதல் திருமலையில் நடந்த தாக்குதல்களில் முக்கியத்துவமானது. எமது கடல் வழிப் பயணத்திற்குப் பெருந்தடைக்கல்லாக இருந்த இம்முகாமைத் தாக்குவதன்மூலம் எமது கடல்வழிப் பாதையைப் பாதுகாப்பதுடன், அங்கிருக்கும் உணவுப் பொருட்களைப் பறித்தெடுப்பதும் இத்தாக்குதலின் நோக்கமாக இருந்தது. எனினும், தாக்குதலுக்கான நகர்வின்போது சில சிரமங்களை எம்மவர்கள் சந்திக்கவேண்டியிருந்தது. கடல் கடந்து சென்ற போராளிகளின் ஆயுதங்கள் நீரில் நனைந்ததால், தாக்குதலின்போது அவை இயங்கமறுத்தன. அந்நிலையிலும் உதவி அணிகளை அழைத்தும் கைக்குண்டுகளைப் பயன்படுத்தியும் உறுதி தளராது தாக்குதல் நடாத்தி, கடினமான முயற்சியின் பின் அப்படைமுகாம் வீழ்த்தப்பட்டது. அதிலிருந்த உணவுப் பொருட்கள் கைப்பற்றப்பட்டுப் படகுகள்மூலம் எமது தளத்திற்குக் கொண்டுவரப்பட்டன.

திருமலையிற் புலிகளால் எதுவும் செய்யமுடியாதென இறுமாந்திருந்த சிங்களப் படைக ளுக்கு, சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அப்போரரங்கிற் பிரசன்னமாகிக் கொடுத்த வெற்றிகரமான அடிகள் பாரிய ஏமாற்றத்தையும் அச்சத்தையும் கொடுத்தன. நிலைமை இப்படியே நீளுமாயின் படையினரின் மனவுறுதி சரிந்து, அவர்கள் முகாம்களுக்குள் முடங்கியிருக்கவேண்டிய கட்டாயம் ஏற்படும். அது புலிகளின் கைகளை ஓங்கச்செய்துவிடும் என்பதே, படைத்தரப்பின் அச்சத்திற்குக் காரணமாகும். இந்நிலையைத் தவிர்ப்பதற்காக உறுதியானதொரு நடவடிக்கையை எடுப்பதற்குப் படைத்தலைமை முடிவுசெய்தது.

31.05.1995 அன்று திரியாய்க் காட்டுப்பகுதியில், 'ராமசக்தி – 03' என்ற குறியீட்டுப் பெயருடன் பெருமெடுப்பிலானதொரு நடவடிக்கையை இராணுவத்தினர் தொடங்கினர். இக்காட்டுப் பகுதியில், புலிகளின் முகாம்களை முற்றுகையிட்டு அழிப்பதே தமது நோக்கமெனக் கூறிக்கொண்டு, காட்டுப் போர்முறையில் அனுபவம் மிக்க கொமாண்டோப் படையினர் இந்நடவடிக்கை யில் ஈடுபட்டனர். இந்நடவடிக்கை பற்றிக் கருத்து வெளியிட்ட அன்றைய இராணுவப்பேச்சாளர் சரத்முனசிங்கா "3ஆம் கட்ட ஈழப்போர் தொடங்கியதும் திருமலையில் நடக்கும் மிகப்பெரும் தாக்குதல் இது" எனக் குறிப்பிட்டார். சிங்களப் படைகள் பெரும் நம்பிக்கையுடன் நடத்திய இத் தாக்குதல் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகளால் ஆரம்பத்திலேயே முறியடிக்கப்பட்டது. நடவடிக்கையை வழிநடத்திய லெப்.கேணல் காமினி பெர்ணாண்டோவும் (பின்னர் கேணலாகப் பதவி உயர்வு பெற்றார்) கப்டன் தர அதிகாரிகள் இருவரும் காட்டுப்போர் முறையில் வல்லமைபெற்ற படையினர் பலரும் பலியாகினர். இதுபற்றிக் கருத்து வெளியிட்ட பாதுகாப்பமைச்சு படையினர் பதினேழுபேர் கொல்லப்பட்டதாகவும் 35 இற்கு மேற்பட்டோர் காயமடைந் தததாகவும் படையினர் பலரைக் காணவில்லையென்றும் அறிவித்தது. இச்சண்டையின்போது தமது பத்துச் சகாக்களின் உடல்களையும் பெருமளவு ஆயுதங்களையும் கைவிட்ட கொமாண்டோப் படையினர் பின்வாங்கினர். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் இச்சாதனை பரபரப்பான செய்தியாகச் சகல மட்டங்களாலும் பேசப்பட்டது.

"கிழக்கு நிலைகுறித்து இராணுவத் தரப்புக் கவலை; அதிகாரிகள் கூடி ஆராய்வு"
"கிழக்குப் பகுதியிற் கடமைபுரியப் பொலிசார் மறுப்பு"

"அதிகாரிகள் பதவியேற்க மறுப்பு"
"பொலிசார் பலர் பதவி துறப்பு"

எனச் செய்திகள் பத்திரிகைகளில் தொடர்ச்சியாக இடம்பிடித்தன. "திருமலையைக் கட்டுப்பாட்டிற்குட் கொண்டுவரப் புலிகளின் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி சென்றுள்ளது" என்று தெரிவித்தார் பாதுகாப்பமைச்சர்.

தலைநகர் நோக்கிப் புறப்படுமுன் படையணியைத் தலைவர் சந்தித்தபோது படையணித் தளபதி லெப். கேணல் கில்மனுடன் உரையாடுகின்றார்.

இப்படியாகத் திருமலை மண்ணிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது முத்திரைகளைப் பதித்துக்கொண்டி ருந்தது. சவால்களுக்குள் இருந்து சாதனை படைத்து வரும் தன் போராளிகளை எண்ணித் தலைவர் அவர்கள் பெருமைகொண்டார். தன்னால் உருவாக்கப்பட்ட சிறப்புப் படையணி எதற்குள்ளும் நின்று எதை யும் செய்யக்கூடியது என்ற நம்பிக்கையைப் படையணியின் தலைநகர்ச் செயற்பாடுகள் தலைவருக்குக் கொடுத்தன. இந்நிலையில்தான் அந்த துரதிஷ்டம் நடந்தது. 28.06.1995 அன்று திருமலைப் பிரதான வீதியில் இராணுவத் தளபதி ஒரு வர்மீது பதுங்கித் தாக்குதல் ஒன்றை நடாத்தும் பொருட்டு, அதற்கான தயாரிப்பு வேலைகளில் நேரடியாக ஈடுபட்டுக் கொண்டிருந்த எமது சிறப்புத் தளபதி லெப். கேணல் கில்மன் எதிர்பாராத விதமாக, வெடிவிபத்தின்போது வீரச்சாவடைந்தார்.



தலைநகர் நோக்கிப் புறப்படுமுன் படையணியைத் தலைவர் சந்தித்த போது படையணித் தளபதி லெப். கேணல் கில்மனுடன்

லெப். கேணல் கில்மன் அவர்களின் இழப்பு திருமலையில் எமது படையணிக்கு ஏற்பட்ட பாரிய இழப்பாக இருந்தது. எம்மை நிலைப் படுத்துவதற்கே சாதகமற்ற பிரதேசத்தில், பலத்த சவால்களின் மத்தியில் எமக்கென்ற ஒரு சாதக நிலையை ஏற்படுத்தித்தந்த அந்த மாவீரனின் இழப்பு உண்மையிலேயே பேரிழப்பாக இருந்தது. எனினும், லெப். கேணல் கில்மன் ஏற்படுத்தித்தந்த சூழலில் அவரின் இழப்பின் பின்னாலும் எமது படையணி தொடர்ந்தும் வெற்றிகரமான தாக்குதல்களில் ஈடுபட்டது. உண்மையிலேயே ஒரு தளபதியின் ஆளுமை, அவனின் இழப்பின் பின்னரும் அவனது படையணியை வழிநடத்தும் பண்பைப் பெற்றிருக்கவேண்டும்.

அதுவே ஓர் உயரிய தலைமைப் பண்பாகும். இத்தகைய பண்பை எங்கள் தளபதியும் கொண் டிருந்தான் என்பதை அவனது இழப்பின் பின்னரும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப்படையணியின் வெற்றிகரமான செயற்பாடுகள் நிரூபித்தன. தளனபதி கில்மன் வீரச்சாவடைந்த மறுதினமே திரியாய்

இராணுவ முகாமிற்கு அண்மையில் நடாத்திய கண்ணிவெடித் தாக்குதல் மூலம் இராணுவத்தினர் அறுவரைக்கொன்று ஆயுதங்களையும் எமது படையணி கைப்பற்றியது.

தளபதி கில்மனின் வீரச்சாவின் பின்னர் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியால் நடாத்தப்பட்ட ஏராளமான தாக்குதல்களினுட் பிரதான மாகக் குறிப்பிடப்படவேண்டியது திருமலை ஆறாம் கட்டையில் அமைந்திருந்த சிங்கள பொலிஸ் நிலையம்மீதான 28.08.1995 அன்றைய தாக்குதலாகும். இத்தாக்குதலில் எழுபதிற்கும் மேற்பட்ட பொலிசார் கொல்லப்பட்டமை முக்கியத்துவம் பெற்றது. இதன் பின்னர் புல்மோட்டையில் அமைந்திருந்த காவலரண் தகர்ப்பும் இறக்கக்கண்டி முகாம் தாக்குதலில் அம்முகாம் கட்டுப்பாட்டிற்குட் கொண்டு வரப்பட்டதும் குறிப்பிடக்கூடிய பெரியளவிலான தாக்குதல்களாக இருந்தன.

இப்படியாகத் தலைநகரிற் புயலாக வீசிய சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி விடுதலைப் போராட்டத்தில் ஒரு முக்கிய சரித்திரப் பதிவை அங்கே வரைந்தது. நூற்றுக்கணக்கில் இராணு வத்தினரைக் கொன்று குவித்து, சிறீலங்காவின் இராணுவச் செயற்பாடுகளுக்குப் பெரும் அச்சு றுத்தலை ஏற்படுத்தியது. முக்கியத்துவம் வாய்ந்த இருபத்தைந்து தாக்குதல்களை மிகக்குறுகிய காலப்பகுதியிலேயே வெற்றிகரமாக மேற்கொண்டது. அதற்காய்த் தனது சிறப்புத் தளபதி லெப். கேணல் கில்மன் உட்பட ஐம்பது பெறுமதிமிக்க போராளிகளை மாவீரர்களாகத் தலைநகர் மண்ணில் வித்தாக்கி, மீண்டும் வட தமிழீழப் போரரங்கில் முக்கிய மாற்றங்களை ஏற்படுத்துவதற்காய் வடதமிழீழம் திரும்பியது.

## சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகள் மத்தியில் தலைவர் ஆற்றிய உரையிலிருந்து...

*"....இதுவரை காலமும் நாங்கள் சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவை வைத்து திருகோணமலை மாவட்டத்திற் சண்டைகளில் ஈடுபடவில்லை. ஆனால், இங்கே நாங்கள் செய்த சண்டைகள்மூலம் சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவை எதிரிக்கு நன்கு தெரியும். இன்று சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவு என்றால் எதிரிகள் நடுங்குவார்கள். இனிச் சாள்ஸ் அன்ரனி பிறந்த மண்ணிலும் நீங்கள் சண்டைபிடிக்கப் போகின்றீர்கள். அவருடைய தேசவிசுவாசத்துடனும் அவருடைய உறுதியுடனும் நீங் கள் உங்களுடைய சண்டைகளைச் செய்ய வேண்டும். முதலில் காட்டுப் பகு தியை உங்களுடைய கட்டுப்பாட்டிற் குள் நீங்கள் கொண்டுவரவேண்டும்.*

*இங்கே சாள்ஸ் அன்ரனி படை யணி எவ்வாறு பெயர்பெற்றதோ அதேபோல சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவு அங்கே வந்திருக்கிறது என எதிரிகள் அஞ்சுமளவிற்கு உங்களுடைய செயற்பாடுகள் இருக்கவேண்டும். இந்த வேளையில் ஒன்றை நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறன். அதாவது யுத் தத்திற்கு என வந்துவிட்ட பின்னர் அச் சம் என்பது உங்களுடைய மனத்தில் இருந்து அகல-வேண்டும். அப்பொழுது தான் வெற்றி-யென்பதை உங்களாற் சாதிக்கமுடியும்."*

# 'ஓயாத அலைகள்-I' நடவடிக்கை

சிறீலங்காப் படைகளின் அதியுயர் பாதுகாப்பு ஏற்பாடுகள்கொண்ட பெரும் இராணுவத் தளங்களில் ஒன்றாக முல்லைத்தீவு இராணுவத்தளம் இருந்தது. மணலாற்றைச் சிங்களமயமாக்கி தமிழீழத் தாயகக் கோட்பாட்டைச் சிதைக்கும் பேரினவாதச் சிந்தனைக்கு நம்பிக்கை நட்சத்திர மாக முல்லைத்தளத்தையும் எதிரி வைத்திருந்தான். சிங்களத்தின் இராணுவக் கனவுகளுக்குப் பேரிடியாக உருவெடுத்துவரும் எமது இயக்கத்தின் கடற்புலிகளின் நகர்திறனைக் கட்டுப்படுத்தக் கூடியதாக, முல்லைத் தளத்தின் அமைவு இருந்தது. அதனால், கடல்வழி விநியோகத்தை மட் டுமே நம்பியிருந்த வடபகுதி ஆக்கிரமிப்பு வலயத்தின் உயிர்நாடி என்ற கேந்திர முக்கியத்து வத்தை அது பெற்றுவிட்டது. இத்தனை அரசியல், இராணுவ முக்கியத்துவங்களின் வெளிப் பாடாக, அதியுயர் பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கொண்டதாக, முல்லைத்தீவு இராணுவத்தளம் எதி ரியால் அமைக்கப்பட்டிருந்தது.

அத்தகைய அதியுச்சப் பாதுகாப்பு ஏற்பாடுகளைக்கொண்ட வலுவான முல்லைத் தளத்தை அழித்தொழிப்பதென, எமது தேசியத்தலைவர் அவர்கள் முடிவுசெய்தார். அன்று நிலவிய அரசியல், இராணுவச் சூழ்நிலையில் தலைவர் எடுத்த இம்முடிவானது முக்கியத்துவம் வாய்ந்த திருப்பங்களை ஏற்படுத்தக்கூடிய நிலையிலிருந்தது.

'சூரியக்கதிர்' நடவடிக்கைகள்மூலம் சிறீலங்கா, யாழ்க் குடாநாட்டைத் தன் முழுமையான ஆக்கிரமிப்பிற்குட் கொண்டுவந்தது. அதுவரை எமது போராட்டத்தின் அரசியல், இராணுவ மையமாக விளங்கிய யாழ்க் குடாநாட்டைப் புலிகளியக்கம் இழந்தமை, அவர்கள் ஒழித்துக்கட்டப் படக்கூடிய நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டார்கள் என்ற சிங்களத்தின் பரப்புரைக்கு வாய்ப்பாக அமைந்துவிட்டது. இதன்மூலம், எமது மக்கள் மத்தியிலும் சர்வதேச மட்டத்திலும் எமது போராட்டம்மீதான நம்பிக்கையீனத்தை ஏற்படுத்திவிடும் நாசகார முயற்சியிற் சிங்களம் வெற்றிகரமாய் ஈடுபடமுடிந்தது. "விடுதலைப் புலிகளின் 90% பலம் அழிக்கப்பட்டுவிட்டது. ஏனையவர்கள் வன்னிக்காடுகளுட் பதுங்கியிருக்கிறார்கள். அவர்களையும் எமது படைகள் விரைவில் அழித்துவிடும்'' எனச் சிறீலங்காவின் பிரதிப் பாதுகாப்பு அமைச்சர் உள்ளிட்ட அனைத்துத் தரப் பினரும் சூளுரைத்தபடி இருந்தனர். இந்நிலையில், எமது விடுதலை இயக்கத்தின் இராணுவப்பலத்தை வெளிப்படுத்தி, சிறீலங்காவிற்கு வாய்ப்பாக அமைந்திருந்த சூழலில் தலைகீழ் மாற்றத்தை ஏற்படுத்துவதற்கு, உலக வரலாற்றில் அதிசயங்களை ஏற்படுத்தவல்ல பெருஞ்சமர் ஒன் றிற்கான ஏற்பாடுகளில் எமது இயக்கம் ஈடுபட்டுக்கொண்டிருந்தது.

சுமார் 1500 இற்கு மேற்பட்ட படைவீரர்களையும் மரபுவழித் தாக்குதல்களுக்குத் தேவையான அதிநவீன ஆயுதங்களையும் கொண்டிருந்த முல்லைத்தளம், அதில் நிலைகொண்டிருப்பவர்களுக்கு இயற்கையான பாதுகாப்பை வழங்கக்கூடிய பூகோள அமைப்பைக் கொண்டிருந்தது. பெருங்கடல், நீரேரி, சதுப்புநிலம், வெட்டைவெளிகள் என எமது ஊடுருவலைத் தடுக்கவல்ல இயற்கை அரண்கள் முல்லைத் தளத்திற்கு இருந்தன. இவற்றைவிடவும் எதிரி தன் இராணுவ நுணுக்கங்களைப் பயன்படுத்தி, பலவகையான மேலதிக பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துவைத்திருந்தான். இத்தகைய போர்வலு நிறைந்த படைத்தளம் ஒன்றின்மீது சந்தேகத்திற்கிடமற்ற வெற்றியொன்றைப் பெறுவது, நீண்டதும்

கடினமானதுமான அடிப்படைப் போர்த்தயாரிப்பு வேலைகளிலேயே தங்கியிருந்தது. இதில் அதீத அக்கறை எடுத்த தலைவர், தானே நேரடியாக நின்று திட்டமிடலின் அனைத்து முனைகளையும் ஒழுங்கமைத்தார்.

மிக நீண்ட வேவு நடவடிக்கையொன்று முல்லைத்தளம்மீது மேற்கொள்ளப்பட்டு, கணிசமான பகுதி நிறைவுசெய்யப்பட்டது. எமது அமைப்பின் மூத்த தளபதிகளில் ஒருவரான தளபதி தீபன் அவர்களின்கீழ், ஆற்றல்மிக்க வேவுப்படையொன்றைத் தலைவர் அவர்கள் இதற்காக நியமித்தார். "எந்தப் பலத்திலும் ஒரு பலவீனம் இருக்கும்" என்ற தலைவரின் சிந்தனையை வேவுக்கான அடிப்படைத் தத்துவமாகக் கொண்டிருந்த எமது வீரர்களால், முல்லைத்தளத்தின் பாதுகாப்பு ஏற்பாடுகள் சல்லடை போடப்பட்டன. நீண்ட கடினமான இந்த வேவுப் பணியிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் போராளிகளைக்கொண்ட வேவு அணியொன்றும் முக்கியத்து வம்வாய்ந்த பகுதிகளில் வேவு நடவடிக்கையில் ஈடுபட்டு, வெற்றியின் அடிக்கட்டுமானத்திலேயே அர்ப்பணிப்பு நிறைந்த தன் உழைப்பைச் செலுத்தியது.



சாள்ஸ் அன்ரனி சிறப்புத் தளபதியும் இந்நடவடிக்கைப் பிரதம கட்டளைத் தளபதியுமான கேணல் பால்ராஜ் சமரின் முதல்நாள் படையணிப் போராளிகள் மத்தியில் தளபதி தீபனுடன் கலந்தாலோசித்தல்.

சமருக்குரிய அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டு, தாக்குதல் அணிகள் கடுமையான பயிற்சிகளில் ஈடுபடுத்தப்பட்டிருந்தன. சமருக்கான திட்டமிடலில் அணுவணுவாகக் கண்காணித்து அயராது உழைத்த தலைவர், புலிகளின் பலத்தை உலகிற்கு ஓங்கி உரைக்கப் போகும் எமது 'ஓயாத அலைகள் - 01' நடவடிக்கையின் இதயமான, முக்கியத்துவம்வாய்ந்த பணிகளைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் அசையாத நம்பிக்கையுடன் ஒப்படைத்தார். முல்லைத்தீவுப் படைத்தளப் பிரதான தளத்தின் ஆட்லறி நிலைகளைக் கைப்பற்றுவதும் பிரிகேட் தலைமையகத்தைக் கைப்பற்றுவதும் எமது படையணியிடம் வழங்கப்பட்ட பிரதான பணிகளாகும்.

திட்டமிடலுக்கு ஏற்பவே எமது படையணி மூன்று அணிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதலாவது அணி முல்லைத் தளத்தின் வடபகுதியூடாக எதிரியின் முன்னணி நிலைகளை உடைத்து, உட்புகுந்து இரண்டாவது பாதுகாப்பு வரிசையையும் உடைத்துச் சென்று எதிரியின் ஆட்லறி நிலைகளைக் கைப்பற்றும். இரண்டாவது அணி, எதிரியின் பிரிகேட் தலைமையகத்தைக் கைப்பற்றும். மூன்றாவது அணி எதிரியின் உடைக்கப்பட்ட முன்னரங்க நிலைகளில் மேலும் காவலரண்களைக் கைப்பற்றி மற்றைய பாதைகளூடாக வரும் படையணிகளுடன் இணைந்துகொள்ளும்.

பிரதான முகாமைப் பொறுத்தவரை அது உச்சப் பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கொண்டிருந்தது. தளத்தின் முதற்கட்டப் பாதுகாப்பு ஏற்பாடுகளாக, கம்பித்தடைகள் அமைத்து, மிதிவெடிகளையும் கண்ணிவெடிகளையும் விதைத்து, சூட்டுவெளிகளையும் கண்காணிப்பு நிலைகளையும் ஏற்படுத்தி, வலுவான முன்னணிப் பாதுகாப்பு வேலியை அமைத்துவைத்திருந்த எதிரி அவற்றை மின் விளக்குகள்மூலம் ஒளியூட்டி வைத்திருந்தான். இவற்றைவிடவும் மேலும் பல பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இத்தகைய பலமான முன்னணிப் பாதுகாப்பை உடைத்து, பிரதான

முகாமிற்குள் நுழையும் எமது அணிகள் அங்கு மேலும் பல தடைகளைச் சந்திக்க வேண்டும். அங்கு முன்னணி நிலைகளைப்போலவே மூன்று நான்கு வலயங்கள் எதிரியால் அமைக்கப்பட்டிருந்தன. இவற்றுள் ஆயிரக்கணக்கில் மிதிவெடிகளை எதிரி விதைத்துவைத்திருந்தான். உள்ளேயிருந்த ஒவ்வொரு வீடும் கட்டடமும் எதிரிகளின் காவல் நிலைகளாக மாற்றப்பட்டிருந்தன.

இத்தனை தடைகளையும் உடைத்தெறிந்து சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியினர் வெற்றியை உறுதிப்படுத்துவர் என்று தலைவர் அவர்கள் நம்பிக்கை வைத்ததுபோலவே படையணியின் போராளிகள் ஒவ்வொருவரும் தமது வீரத்தில் நம்பிக்கை கொண்டிருந்தனர். கடுமையான பகுதியிற் சண்டையிடுவதில் உள்ள ஆர்வம் எல்லாப் போராளிகளின் மனத்திலும் உத்வேகத்தை அளித்தது.

17.07.1996 அன்று நள்ளிரவுப் பொழுது. தளபதி பால்ராஜ் அவர்களின் நேரடிக் கட்டளையில் தளபதி தீபன் களத்தை வழிநடத்த, தேசியத்தலைவரின் நேரடி நெறிப்படுத்தலில் அந்த வரலாற்றுப் புகழ்மிகு சமர் மூண்டது. களமிறக்கப்பட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடமிருந்து வெற்றிச் செய்திகளே வந்துகொண்டிருந்தன. மிகக் குறுகிய நாட்களுட் புலிகளியக்கம் பெரும் போரியற் சாதனையைச் செய்துமுடித்தது.



புலிகள் கைப்பற்றிய முதல் ஆட்லறி

படையினரில் ஏறக்குறைய 1200 பேரை ஒரே தடவையில் கொன்றழித்த 'ஓயாத அலைகள் - 01' தாக் கியழிப்புச் சமர் எதிர் பார்க்கப்பட்டது போலவே எமக்குச் சாதகமான இராணுவ, அரசியல் மாற்றங்களை ஏற்படுத்தியது. இவ்வரலாற்றுச் சமரிற் பங்கெடுத்துப் பெருமைபெறும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தமிழீழப் போர் வரலாற்றிற் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய இன்னொரு சாதனையையும் நிலைநாட்டியது. தலைவரால் உருவாக்கப்பட்ட முதலாவது மரபுவழிப் படையணி, புலிகளியக்கத்தின் மரபுசார் போரியலைப் புதிய வீச்சிற்கு இட்டுச்செல்லவல்ல இரண்டு ஆட்லறிப் பீரங்கிகளை 'ஓயாத அலைகள் - 01' நடவடிக்கையிற் கைப்பற்றியமையே அச்சாதனையாகும். இதில் வேறு படையணிகளின் பங்களிப்பும் இருந்தமை குறிப்பிடப்பட வேண்டியதாகும். தமிழீழப் போராட்ட வரலாற்றில் முதன்முதலிற் கைப்பற்றப்பட்ட இந்த ஆட்லறிப் பீரங்கிகளைக்கொண்டு புலிகளின் எதிர்காலப் போரரங்கிற் பாரிய வளர்ச்சிக்கு வித்திட்ட பெருமையைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி 'ஓயாத அலைகள் - 01' இல் தன் சாதனைகளில் ஒன்றாக உள்ளடக்கிக்கொண்டது.

# 'ஒப்பரேசன் சத்ஜய' எதிர்ச்சமர்

புலிகள், ஓயாத அலைகள் ஒன்று படைநடவடிக்கைமூலம் சிங்களப்படையின் ஆயிரத்துக்கு மேற்பட்ட வீரர்களைக் கொன்றுகுவித்து, கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த படைத்தளம் ஒன்றை அழித்து, பலகோடி ரூபா பெறுமதியான போர்க்கருவிகளைக் கைப்பற்றியதோடு மட்டுமல்லாமல் எவ்வகையிலும் மூடிமறைக்கமுடியாத அவமானத் தோல்வியையும் ஏற்படுத்தினர். புலிகளாற் சிங்களத்துக்கு ஏற்படுத்தப்பட்ட அவமானத்தின் விளைவுகள் அரசியல் இராசதந்திர நடவடிக்கைகளாற் சமாளிக்கக்கூடியவையல்ல.

சுமார் இருபது வருட ஈழப்போரிற் புலிகளுக்கெதிராகச் சிங்களம் சாதித்த இமாலய வெற்றியாக யாழ்க் குடாநாட்டு ஆக்கிரமிப்புக் கொண்டாடப்பட்டது. அதன்பின் சிங்களம் வெளியிட்ட கணிப்பீடுகளும் திமிர்த்தனமான சூளுரைகளுமே புலிகளின் 'ஓயாத அலைகள் - 01' வெற்றியின் பரிமாணத்தை உச்சத்திற்கு இட்டுச்சென்றன. யாழ்ப்பாணத்தில் ஈட்டிய இராணுவச் சாதனையின் இராஜதந்திரப் பயன் சூடுபிடித்திருந்தவேளை, சுமார் மூன்று மாதக் குறுகியகால அவகாசத்தினுள்ளேயே அது புலிகளாற் பறித்தெடுக்கப்பட்டுவிட்ட கையறு நிலையிற் சிங்களம் நின்றது. சுமார் 800 வரையான படையினரின் உயிர்களைக் கொட்டிக்கொடுத்து வெற்றிச் சிகரத்திலேயே ஏறிவிட்டதாகத்தானும் நம்பி, மற்றவர்களையும் நம்பவைக்கக் காரணமாக இருந்த 'ஒரு மாபெரும் வெற்றி'யின் அறுவடைகளை மூன்றே மாதங்களிற் புலிகளிடம் பறிகொடுக்கும் நிலையைச் சிங்களத்தாற் செரித்துக்கொள்ளவே முடியவில்லை.

26.07.1996 அன்று, புலிகளியக்கத்தின் முன்னணிச் சண்டையணிகள் முல்லைத்தளத்தில் நிலைகொண்டிருந்தவேளை ஆனையிறவிற் புலிகளின் காப்பணையைச் சிங்களத்தின் படைவெள்ளம் உடைத்துப் பெருக்கெடுக்கத் தொடங்கியது. உண்மை வெற்றி என்ற பொருளில் 'சத்ஜய' என்று நடவடிக்கைக்குப் பெயர் சூட்டப்பட்டது. புலிகளின் 'ஓயாத அலைகள் - 01' பற்றியே அலசியபடியிருந்த உள்நாட்டு, வெளிநாட்டு ஊடகங்களைத் தனது 'சத்ஜய' மூலம் பங்கிட்டுக் கொள்ளவோ ஈர்த்துக்கொள்ளவோ முடியும் என்பதே அவர்களின் நம்பிக்கை. யாழ்ப்பாணத்தில் தமது ஆக்கிரமிப்பின் நிலைப்பிற்கு ஆனையிறவு இராணுவ வலயத்தை மேலும் விஸ்தரிக்க வேண்டியதன் தேவையின்பால் ஏற்கனவே திட்டமிடப்பட்டிருந்த இந்நடவடிக்கை, இப்போது 'ஓயாத அலைகள் - 01' இன் மூலம் யாழ் வெற்றி புலிகளால் அர்த்தமிழக்கச் செய்யப்பட்டு விட்ட நிலையில் அவசர அவசரமாகத் தொடக்கப்பட்டுவிட்டது. 'சத்ஜய' இன் முதலாம் கட்டத்தில் எதிரி வெற்றிபெற்று பரந்தன்வரை முன்னேறியிருந்தான்.

எதிரிக்குக் காத்திரமான பதிலடியை வழங்குவதற்குத் தீர்மானித்த தலைவர் அவர்கள், முல்லைத்தீவில் நின்றிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியையும் ஏனைய சண்டைத் திறன்வாய்ந்த எமது முன்னணிப் படையணிகளையும் 'சத்ஜய' களத்திற்கு நகர்த்தி முறியடிப்பிற்கான ஏற்பாடுகளில்

ஈடுபடுத்தினார். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியும் புலிகள் இயக்கத்தின் அப்போதைய இராணுவத் துணைத் தளபதியுமான தளபதி பால்ராஜ் புலியணிகளுக்குத் தலைமையேற்றிருந்தார்.

ஓகஸ்ற் நான்காம் நாள், கிளிநொச்சிமீதான இறுதி நகர்வு எனப் பரப்புரையில் ஈடுபட்ட படியே 'உண்மை வெற்றி' யின் இரண்டாம் கட்டத்தை எதிரி நம்பிக்கையுடன் தொடக்கினான். நுட்பமாக வியூகமிட்டிருந்த புலிகளின் நிலைகளைப் பகைவன் உடைத்தான். விட்டுக்கொடுப் பிற்கு இடமேயில்லையென முறியடிப்பிற் குதித்த புலியணிகளின் தாக்குதலால் இதுவரை நடந்திராத மரணச்சமர் வெடித்தது. புலிகளின் முறியடிப்பு அணியில் அவர்களின் புகழ்பூத்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி இடம்பெற்றிருந்தது. எதிரியின் ஊடறுப்பு முனைகள் முறிய டிக்கப்படுவதும் வேறுமுனையில் எதிரி ஊடறுப்பதுமாக மாறிமாறிக் கடுஞ்சமர் தொடர்ந்துகொண் டேயிருந்தது. எந்தத்தரப்பாலும் உறுதியான தீர்மானம் செய்துவிடமுடியாதபடி சமர் நீண்டு கொண்டே போனது.

கண்டி வீதிக்கு இடப்புறமாகவும் வலப்புறமாகவும் இரு முனைகளில் முன்னேறிய எதிரிகள் எமது வீரர்களிடம் மரண அடி வாங்கினர். 3ஆம் வாய்க்காற் பகுதியில் முன்னேறிய எதிரியின் இரண்டு ராங்கிகளை எமது படையணி வீரன் ஒருவன் தகர்த்தெறிந்தான். களத்தில் எதிரிக்கு அச்சத்தையும் இழப்பையும் கொடுத்தது புலிகள் சேனை. அன்றைய நாள் முழுவதும் தொடர்ந்து நடந்த சண்டைக் களத்தில் எதிரிகள் 75 பேர் கொல்லப்பட்டனர். தொடர்ந்து மூன்று நாட்களாய்ச் சகல வழங்கலுடனும் கூடிய சிறீலங்காவின் மரபுப் போர்ப்படைக்கும் ஒப்பீட்டளவில் மிகவும் சிறியதான புலிப்படையின் அணிகளுக்குமிடையில் நடந்த கடுமையான பலப்பரீட்சையிற் சக்திவாய்ந்த விடுதலைப் போர்ப்பண்பைத் தன்னகத்தே கொண்டிருந்த புலிப்படையின் மனவுறுதியே வென்றது. இந்தப் பலப்பரீட்சையிற் புலிகள் தரப்பிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படை யணி காத்திரமான பங்காற்றியது. மூன்று ராங்கிகள் அழிந்தன. படையினரில் 150 பேர்வரையில் மாண்டனர். நூற்றுக்கணக்கானோர் காயமடைந்து உயிர்தப்பியதையிட்டு நிம்மதியடைந்தவர்களாய்க் களத்தைவிட்டோடினர். இத்தோல்வியாற் சிங்களப்படையினர் அவமானமடைந்தனர். இவ்வாறு அவமானமடைந்தவர்கள் சிங்களத்தின் புகழ்பூத்த சிறப்புப் பயிற்சி பெற்ற கொமாண்டோ அணியினர் என்பது குறிப்பிடத்தக்கது.

அதுவரை காலமும் தமிழீழப் போரரங்கில் எதிரி பயன்படுத்திய போர்க்கலச் சக்தியிற் 'சத்ஜய' களம் மேலோங்கி இருந்தது. இன்னும் சொல்வதானாற் சிங்களப் படைகள் 'சூரியக்கதிர்' நடவடிக்கையில் யாழ்ப்பாணத்திற் பயன்படுத்திய எறிகணை, விமானக்குண்டுகளின் இருமடங்கை 'சத்ஜய' விற் பயன்படுத்தின. இருந்துங்கூட 'சத்ஜய' வின் 2ஆம் கட்ட நடவடிக் கையில் எதிரி படித்துக்கொண்ட பாடம் என்னவெனில், புலிகளின் நிலைகளை நேருக்குநேர் முட்டிமோதி ஒருபோதும் வென்றுவிடமுடியாது என்பதுதான்.

22.09.1996 அன்று, எதிரி உண்மை வெற்றியின் மூன்றாம் கட்டத்தைத் தொடக்கினான். புலிகள் அமைத்துவைத்துக் காத்திருந்த அழிவு வலயத்திலிருந்து தப்பித் தனது நிலைகளிலிருந்து 5கி.மீ. தூரத்திலிருந்த கிளிநொச்சியைக் கைப்பற்றுவதற்காக 15கி.மீ. சுற்றிச்சுழன்று போகும் நகர்வுப்பாதையைத் தெரிவுசெய்தான். பீரங்கிக் குண்டுகளையும் விமானக் குண்டுகளையும் துப்பாக்கி ரவைகளையும் அள்ளியிறைத்தபடி முதலிற் கண்டி வீதிக்குக் கிழக்காக முரசு மோட்டைப் பகுதியை நோக்கி முன்னேற எத்தனித்த படையினரைப் புலிகள் இடையில் வழி மறித்து வியூகமிட்டனர். உக்கிரமான சண்டைகளால் முன்னேற முடியாத எதிரி இரண்டாம் நாள் நள்ளிரவிற் கிழக்கு முனையிற் சண்டையை நிறுத்தி, கண்டி வீதிக்கு மேற்குப்புறமாக எமது நிலைகளை விட்டுவிலகி, கிளிநொச்சி நோக்கிய தமது

நீண்ட பயணத்திற்கான களத்தைத் திறந்தான். இம்முறை புலியணிகளைத் தலைவர் அவர்களின் ஆலோசனைக்கிணங்க தளபதிகள் தீபன், பானு ஆகியோர் வழிநடத்தியபடி இருந்தனர்.

எதிரி விரைவிலேயே பல கிலோமீற்றர் களைக் கடந்துசெல்ல எமதணிகள் அனுமதித் தன. மூன்றாம் நாளிற் கிளிநொச்சிக்குப் பக்க வாட்டில் முன்னேறிவந்த படையினர்மீது சிறிய தொரு ஊடுருவல் தாக்குதலை நடத்தி, எதிரி யின் மூன்று ராங்கிகளைச் சேதப்படுத்தி இழப் புக்களைக் கொடுத்தமை எதிரியைத் தற்காலிக முடக்கத்திற்கு நிர்ப்பந்தித்தது.

26.09.1996 அதிகாலை 5.30 மணி. அன்று தியாகி திலீபனது நினைவுநாள். ‘சத் ஜய’ படையின் மூன்றாம் கட்டத்தின் ஐந்தாம் நாள். படைகளிற்குப் பேரழிவிற்குரிய நாள். உருத்திரபுரம் புனித பற்றிமா கல்லூரிக்கருகில் நிலைகொண்டு, அடுத்தகட்ட நடவடிக்கைக்குத் தயாராய் இருந்த படைமுகாமினுள் நுழைந்தன புலிகளின் சக்திமிக்க அணிகள். மூன்று முனைகளில் எதிரி நிலைகளை ஊடுருவிய புலி வீரர் வீரச்சமராடினர். ஊடறுப்பின் பிரதான அணியாகக் களமிறக்கப்பட்டது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியே.

மூன்று மணிநேரம் உயர்வலு மின்சாரம் பாய்ச்சப்பட்டதுபோல், எமது அணிகள் பகைவனின் பிடரியைப் பிடித்து உலுப்பியெடுத்தன. எதிரி துவண்டுபோனான். உண்மையில் அவன் எம்மிடமிருந்து இப்படியொரு மரணகாண்டத்தை எதிர்பார்க்கவேயில்லை. எதிரியின் கனரக ஆயு தங்களுடன்கூடிய உச்சக்கட்ட முறியடிப்பு முயற்சிகளெல்லாம் அவனுக்கு மேலும் அழிவுகளைக் கொடுத்தன. குறைந்தது 200 பேர் வரை மாண்டுபோக நூற்றுக்கணக்கானோர் காயமடைந்தனர். எதிரியின் படைமுகாமிற் செய்யவேண்டியதைச் செய்து முடித்துவிட்டுத் திட்டமிட்டபடியே எமதணிகள் களத்திலிருந்து

**சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகள் மத்தியில் தலைவர் ஆற்றிய உரையிலிருந்து...**



*“....நான் உங்களுக்கு இன்னும் ஒன்றையும் சொல்லவேண்டும். எங்களுக்கு ஏற்பட்ட பெரிய இராணுவ எதிர்ப்புகளை எல்லாம் இந்த விசேட படைப்பிரிவினைப் பயிற்றுவித்ததன்மூலம் எங்களால் தடுத்து நிறுத்த முடிந்தது. நாங்கள் சாள்ஸ் அன்ரனி படைப் பிரிவை ஆரம்பித்தபோது ஆயிரத்திற்கும் மேலானவர்கள் அதில் உறுப்பினர்களாக இருந்தார்கள். இதன்மூலம் அப்போது ஓமந்தையை நோக்கி முன்னேறிய இராணுவத்தை நாம் தடுத்து நிறுத்தினோம். பெரியளவிலான தாக்குதல் நடந்த சந்தர்ப்பங்களி லும் மற்றும் எமது வலிந்த தாக்குதல்களிலும் சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவை ஈடுபடுத்தி நாங்கள் பெரிய வெற்றிகளை எடுத்தோம். உங்களுடைய காலத்திலும் நீங்கள் பெரும் இராணுவ வெற்றிகளை ஈட்டுபவர்களாகத் திகழவேண்டும்.”*

வெளியேறின. இது 'சத்ஜய' எதிர்ச்சமரிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி நிலைநாட்டிய இரண்டாவது காத்திரமான சாதனையாகும்.

'சத்ஜய' படைநடவடிக்கை முடிவுவரை ஏறக்குறையப் படையினர் 500 பேரைப் பலி கொடுத்து எழுபதாவது நாளில் எதிரி கிளிநொச்சி நகரைக் கைப்பற்றினான். அத்தோடு நிறுத் தப்பட்டது 'சத்ஜய' நடவடிக்கை.

சிறீலங்காவின் இராஜதந்திரக் காய்நகர்த்தலின் அடிப்படைகள் பிசுபிசுத்துப்போன நிலையில், அதைச்சீரமைக்க மேற்கொள்ளப்பட்ட படைநகர்த்தலாலுங்கூட எதையுமே சாதிக்க முடியவில்லை. புலிகள் தமது எச்சசொச்சப்பலம் அனைத்தையும் திரட்டியே முல்லைத்தீவிற் போரிட்டதாகவும் அதில் தாம் பெருமளவான புலிகளைக் கொன்றுவிட்டதாகவும் புலிகளின் தலைவர்கூட காயமடைந்துவிட்டதாகவும் பரப்புரை செய்து யுத்தமுழக்கமிட்ட சிங்களத்தின் 'சத்ஜய' நடவ டிக்கை; 'ஓயாத அலைகள் - 01' இன் வெற்றியை மேலும் வெளிச்சம் போட்டுக் காட்டியது. முல்லைச் சமரிற் சிங்களம் பேரழிவைச் சந்தித்ததோடு, புலிகளின் படைக் கட்டுமானத்தையும் பன்மடங்கு பெருக்கிவிட்டதென்ற இரகசியத்தை சத்ஜய வெளிப்படுத்தியது.

முல்லைக் களத்தில் மிகக்குறுகிய காலத்தில் மிகக் கடுமையாகப் போரிட்டபோதும் களைப்படையாமற் சத்ஜயவிற்கு முகம்கொடுத்துத் தம் வீரத்தால் வெற்றிக்கொடி நாட்டியதன் வீரர்களை எமது வரலாறு என்றென்றும் போற்றியபடியேவிருக்கும். அதிற் சாள்ஸ் அன்ரனி சிறப் புப்படையணியும் பெருமைகொள்ளும்.

# ஆனையிறவு – பரந்தன் ஊடறுப்புச் சமர்

விடுதலைப் புலிகளின் போரியற் சாதனைப் பட்டியலிற் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய முக்கியத்துவம் வாய்ந்த சமராக ஆனையிறவு - பரந்தன் படைத்தளங்கள்மீதான ஊடறுப்புச் சமர் அமைகிறது. தளத்தின் மையப்பகுதிவரை ஊடுருவி, அதன் உயிர்நாடியான ஆட்லறித் தளங்களையும் பிரிகேட் தலைமையகத்தையும் கட்டுப்பாட்டிற்குள்கொணர்ந்து, எதிரியின் ஆட்லறி நிலைகளிலிருந்தே அவற்றைப் பயன்படுத்தி அவனுக்கெதிரான தாக்குதலை நடத்தி, இறுதியிற் பெரும் ஆயுதக்களஞ்சியங்களையும் ஒன்பது ஆட்லறிகளையும் அழித்து, நூற்றுக்கணக்கில் இராணுவத்தினரைக்கொன்று எதிரியின் இதயத்துள்ளேயே எமது படையணிகள் புரிந்த வீரச்சமர் நிகழ்வுகளை இவ்வூடறுப்புச் சமர் தன்னகத்தே அடக்கியுள்ளது.

சிங்கள இனத்தின் வீரச்செயல்களில் ஒன்றாகக் கருதப்பட்ட, சந்திரிகா அரசின் யாழ்ப்பாணப் பறிப்பைத் தொடர்ந்தும் தக்கவைத்திருப்பதற்கு ஆனையிறவு இராணுவ வலயத்தைப் பாதுகாப்பது இன்றியமையாதது. அது சிறீலங்காவின் போர் மூலோபாயத்தின் உயிர்மையம். யாழ்ப்பாணத்தைப் பெருநிலப்பரப்புடன் இணைக்கின்ற ஒரே தரைப்பாதையைக் கொண்டிருக்கும் அதன் கழுத்துப் போன்ற ஆனையிறவு புலிகளிடம் வீழ்ச்சியடைவது சிங்களத்தின் யாழ்ப்பாண வெற்றியை மட்டுமன்றி அதன் போர்மூலோபாயத்தையே சிதறடித்துவிடும். எனவேதான், ஆரம்பத்திற் சிறிய தடை முகாமாக இருந்த ஆனையிறவை ஓர் இராணுவக் கூட்டுத்தளமாக மாற்றியிருந்த சிங்களம், யாழ் ஆக்கிரமிப்பின் பின் அதையொரு பாரிய இராணுவ வலயமாக மாற்றியது. கிளிநொச்சி, பரந்தன், ஆனையிறவென அகன்று விரிந்து பல்லாயிரக்கணக்கான இராணுவத்தினரை உள்ளடக்கிய அந்த இராணுவ வலயம், 30,000 இற்கு மேற்பட்ட இராணுவத்தைக் கொண்டிருந்த யாழ்ப்பாணத்தைத் தன் பின்பலமாகக் கொண்டிருந்தது. அதன் முக்கியத்திற்கேற்ப அதிநவீன போராயுதங்களையும் கொண்டிருந்தது.

இத்தகைய பலம்வாய்ந்த ஆனையிறவு இராணுவ வலயம் 1997இல் மேலும் முக்கியத்துவம் பெற்றது. ‘சத்ஜெய’ நடவடிக்கைமூலம் கைப்பற்றப்பட்ட பகுதிகளோடு, இராணுவ வலயத்தை மேலும் விஸ்தரிக்கும் நோக்குடனும் யாழ்க் குடாநாட்டிற்கான தரைவழிப்பாதையைத் திறக்கும் முயற்சியில் மேலும் முன்னேறும்பொருட்டும் ஆனையிறவை இயங்கு தளமாகக்கொண்ட பாரிய படையெடுப்பு ஒன்றிற்குச் சிங்களப்படை தயாராகியது. மேலும் முன்னணிப் படையணிகள் குவிக்கப்பட்டும் முன்னகர்வுக்குத் தேவையான அதிசக்திவாய்ந்த மரபுப் போர்க்கருவிகள், தளபாடங்கள் பெருமளவிற் குவிக்கப்பட்டும் படைத்தலைமையின் இறுதிக் கட்டளைக்காகக் காத்திருந்தது ஆனையிறவு.

இந்நிலையிற் போரியலிற் களயதார்த்தத்திற்கேற்ப அனைவரையும் ஆச்சரியப்படவைக்கும் முடிவுகளை நடைமுறைப்படுத்தும் எமது தலைவர், ஆனையிறவு - பரந்தன் கூட்டுத் தளம்மீது வியப்பூட்டும் ஓர் ஊடறுப்புச் சமரைச் செய்வதென முடிவுசெய்தார். சிங்களப் படைகளின் போர் ஏற்பாடுகளைச் சின்னாபின்னப்படுத்துவதுடன், களநிலைமைக்கேற்பத் தொடர் நடவடிக்கைகளை முன்னெடுக்கும் அம்சங்களை உள்ளடக்கிய தாக்குதல் திட்டத்தை வரைந்திருந்தார்.

ஆனையிறவு - பரந்தன் ஊடறுப்புச் சமரிற்கான திட்டத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கு எப்போ தும் போலவே கடினமானதும் சிக்கல் நிறைந்ததுமான பணிகள் தலைவரால் ஒப்படைக்கப்பட் டன. ஆனையிறவுத் தளத்தின் முன்னரண்களை உடைத்தெறிந்து கொண்டு பிரதான தளத்துள் நுழையும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அங்கிருக்கும் முதல்தர ஆட்லறி நிலைகளையும் புளியடியில் அமைந்திருக்கும் மோட்டார்த் தொகுதிகளை உள்ளடக்கிய பிரிகேட் தலைமையகத்தையும் கட்டுப்பாட்டிற்குட் கொண்டு வர வேண்டும். அதேவேளை, சின்ன உப்பள முகாமின் முன்னணிக் காவலரண் வரிசையைக் கைப்பற்றும் பணியும் எமது படையணியிடம் ஒப்படைக்கப-பட்டது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் செயற்பாடே ஆனையிறவு - பரந்தன் ஊடறுப்புச் சமரின் திட்டத்திற்கு உயிரூட்டும்.



ஊடறுப்புச் சமரிற் புலிகள் சேனையுடன் எமது படையணியும்

09.01.1997 அன்று கடல்நீரேரியாற் சூழப்பட்டதும், பெரும் வெட்டைவெளிப் பிரதேசத்தை உள்ளடக்கியது-மான தமது இலக்கைநோக்கி எமது படையணிப் போராளிகள் நகர்ந்துகொண்டிருந்தனர். அது எமது போரியல் வரலாற்றிலேயே சிக்கல்வாய்ந்த நீண்ட நகர்வு. எல்லோராலும் விரும்பப்பட்டது போலவே எதுவித சிக்கல்களுமின்றித் தமது நகர்வுகளை முடித்துக் கொண்டு இறுதிக் கட்டளைக்காகக் காத்திருந்தார்கள் போராளிகள். நள்ளிரவைத் தாண்டிய நேரம், சமரை வழிநடத்திய தளபதி பால்ராஜிடமிருந்து சண்டையை ஆரம்பிப்பதற்கான கட்டளை தொலைத்தொடர்புச் சாதனத்திற் பறந்தது.

புயல்வேகத்திற் சண்டையைத் தொடக்கிய எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அணிகள் எதிரியின் முதல்தரப் பாதுகாப்பு அரண்களை உடைத்தெறிந்தன. ஆட்லறித் தளத்தினுள் நுழைந்தவர்கள் அவற்றை எதிரி எதுவும் செய்துவிடாதபடி பறித்தெடுக்கும் நோக்கில் தமது உயர் செயற்றிறனை வெளிப்படுத்தினர். வேகமான தாக்குதலால் நிலைகுலைந்த எதிரி தன் ஆட்லறிகளையும் ஆயுதக் களஞ்சியங்களையும் அப்படியே விட்டுவிட்டு ஓட்டம்பிடித்தான். பெரும் பயன்பாடு ஒன்றிற்கு ஏற்றவகையில் நிலைப்படுத்தப்பட்டு, துப்புரவு செய்யப்பட்டு, துணிகளாற் போர்த்தப்பட்ட நிலையில் எட்டு ஆட்லறிகள் பத்திரமாய் நின்றன. ஆட்லறி நிலைக்குள் நுழைந்த மேஜர் கார்முகிலனின் தலைமையிலான எமது அணியினர் அவற்றை எதிரிக்கு எதிராகப் பயன்படுத்தத் தொடங்கினர். அதற்காகவே எமது படையணியின் ஓர் அணியினருக்கு ஆட்லறிகளை இயக்குவதற்கான சிறப்புப் பயிற்சி வழங்கப்பட்டிருந்தது.

அதேவேளை புளியடி பிரிகேட் தலைமையகம் மற்றும் மோட்டார் நிலைகளை உள்ளடக்கிய தளத்தைக் கைப்பற்றுவதற்காக நுழைந்த லெப்.கேணல் ராகவனின் தலைமையிலான எமது மற்றைய அணியினரும் வேகமான முறையில் அதைச் செய்துமுடித்தனர். சின்ன உப்பள முன்னணி நிலைகளைக் கைப்பற்றவேண்டிய எமது மற்றைய அணி எதிர்பார்த்த வெற்றியிலக்கை எட்டமுடியாமற் சிரமங்களைச் சந்தித்துக்கொண்டிருந்தது.

ஆனையிறவு - பரந்தன் படைத்தளங்கள் அதிர்ந்துகொண்டிருந்தன. அடுத்த சிலநாட்களில் தமது பெரும் படையெடுப்பிற்கான கட்டளைகளை வழங்கத் தயாராயிருந்த படைக் கட்டளைப்பீடம் தனது படைத்தளங்களின் தொடர்புகளை இழந்து, அங்கு என்ன நடக்கிறது என அறியமுடியாது தவியாய்த் தவித்தது. சிறீலங்காவின் அரசியல் இராணுவத் தலைமைகள் புலிகளின் இந்த அதிர்ச்சி வைத்தியத்தால் திகைத்துப்போயின. அடுத்து என்ன நடக்கப்போகிறதோ என்ற ஏக்கம் அவர்களைத் தாக்கியது.



திட்டமிட்டதுபோலவே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் ஒப்படைக்கப்பட்ட பிரதான வெற்றிகள் யாவும் எட்டப்பட்டிருந்தன. சமரின் முதலாவதும் பிரதானமானதுமான நோக்கம் நிறைவு செய்யப்பட்டது. நடவடிக்கையைத் தொடர்ந்து முன்னெடுக்க முடியாதபடி களத்தில் ஏற்பட்ட சிக்கல்கள் எதிரிக்கு அதிஸ்டத்தைக் கொடுத்தன. அப்படியான சமயங்களிற் சமரைத் தொடர்வதில்லையென்பது ஏற்கனவே எமது திட்டமாக இருந்தது. எமது அணியினராற் கைப்பற்றப்பட்டிருந்த ஆட்லறிகள், வெடிபொருள், களஞ்சியங்கள் எல்லாந் தகர்த்தெறியப்பட்டன. ஆனையிறவுத் தளம் பெரும் வெடியோசைகளால் அதிர்ந்தது. வெடிபொருள் குதங்களின் தகர்ப்பு, தளத்தை ஒளிவெள்ளத்தால் நிறைத்தது. எதிரிக்கெதிரான ஏற்பாட்டுக் குலைப்பு நடவடிக்கையொன்றை வெற்றிகரமாகச் செய்துமுடித்த புலியணிகள் தளம் திரும்பின. சமரில் எதிரியின் பீரங்கிநிலை ஒன்றைக் கைப்பற்றியிருந்த எமது படையணியின் லெப். கேணல் ராகவனின் தலைமையிலான நியூட்டனின் அணி அங்கிருந்து இரண்டு 120மி.மீ. பீரங்கிகளை மீட்டு வந்தது குறிப்பிடத்தக்கது.

சமரின் முடிவில், போர்த்தயாரிப்புகளுடன் ஆரவாரித்திருந்த பகைவனின் படைத்தளம் அமைதியாக உறைந்துபோனது. ஆனையிறவிலிருந்தான தனது படையெடுப்புத் திட்டத்தை எதிரி கைவிட்டான். எமது போராட்ட வரலாற்றில், இச்சமரில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி நிலைநாட்டிய பெறுமதிவாய்ந்த சாதனைகள் என்றும் எவராலும் பேசப்பட்டுக் கொண்டேயிருக்கும்.

# ‘ஒப்பரேசன் ஜயசிக்குறுய்’ எதிர்ச்சமர்

எமது விடுதலைப் போராட்ட வரலாற்றுப் பயணத்தில் ஓர் அக்கினிப் பிரவேசமாக வன்னிச் சமர்க்களத்தில் எதிரியின் ‘ஜயசிக்குறுய்’ என்ற மிகப்பெரிய படையெடுப்பை எமதியக்கம் எதிர் கொண்டது. இவ்வக்கினிப் பிரவேசத்தில், எதிரியின் ஒருங்கிணைக்கப்பட்ட படைப்பலச் சக்திக்கெதிராக வீரமுடன் சமர் புரிந்து, அதன் நகர்வு வேகத்தைத் தடுத்து நிறுத்தி, வன்னிக் காடுகளுள் அதன் படைப்பலத்தைச் சிதறடிக்கச்செய்து, மீளமுடியாத பொறிக்குள் அகப்படுத்தி, இராணுவ வரலாற்றில் ஓர் ஒப்பற்ற சாதனையைப் புலிகளியக்கம் பதிவுசெய்தது. எமது விடுதலைப்போரில் எமதியக்கம் சந்தித்த இந்த அபாயகரமான வரலாற்று வேள்வியிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப்படையணியும் தீக்குளித்து எழுந்தது.

யாழ்க் குடாநாட்டிலிருந்து பின்வாங்கிய எமதியக்கத்தின் இயங்குதளமாக இருந்தது வன்னி. எனவே வன்னியின் பூகோள ஒருமைப்பாட்டைச் சிதைப்பதே, புலிகளியக்கத்தை அழிப்பதை மூலோபாயமாகக்கொண்ட சிங்களத்தின் பிரதான குறியாகும். அதன்மூலம் விடுதலைப் புலிகளின் இராணுவப் பலத்தைச் சிதைத்து, வட தமிழீழத்தைத் தென்னிலங்கையுடன் இணைப்பதன்மூலம் எமது போராட்டத்தின் அரசியற் கோட்பாட்டைச் சிதைத்துவிடமுடியும் என்று சிங்களம் உறுதியாக நம்பியது. எனவே, வன்னியின் மையத்தை ஊடறுத்துச்செல்லும் யாழ் - கண்டி (A-9) நெடுஞ்சாலையைக் கைப்பற்றுவதன்மூலம் போராட்டத்தின் இதயத்தை இருகூறாகப் பிளந்து, யாழ்க் குடாநாட்டைச் சிங்கள தேசத்துடன் இணைத்துவிடும் நோக்கோடு, பெருமெடுப்பிலான படையெடுப்பொன்றைச் சிங்களம் மேற்கொண்டது. அதிற் புலிகள் இயக்கத்தின் மீது பிரயோகிக்கப்படப்போகும் படைக்கல மற்றும் ஆளணிச் சக்தியில் அசையாத நம்பிக்கை கொண்டு, தனது படையெடுப்பிற்கு ‘வெற்றியுறுதி’ எனப் பெயரிட்டது சிங்களத் தலைமை.

எதிரியின் இந்த நாசகார நடவடிக்கையின் ஆபத்தான உள்நோக்கத்தைப் புரிந்துகொண்ட எமது தலைவர், அதன் அதிசக்திவாய்ந்த படைவலுவை எதிர்த்து, இறுதிவரை போரிடுவதென முடிவுசெய்தார். அதற்காக ஏற்கனவே பெருமெடுப்பிலான போர்த்தயாரிப்பு வேலைகளை மேற்கொண்ட தலைவர், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியையும் பெரும்போர் ஒன்றிற்கு முகங்கொடுக்கவல்ல வகையில் தயார் செய்தார்.

13.05.1997 அன்று காலை ‘ஜயசிக்குறுய்’ என்ற பெரும் படைப்பிரவாகம் புலிகள் அமைத்திருந்த பாதுகாப்பு எல்லையில் முட்டிமோதியது. “இது சாதாரண சமரன்று; சமர்களுக்கெல்லாம் தாய்ச்சமராக, எமது மண்ணில் நிகழ்ந்த பெருஞ்சமர். இந்தச் சமரில் எதிரி தனது முழுப்பலத்தையும் வளத்தையும் குவித்துப் போரிட்டான். மூன்று பெரும் படைப்பிரிவுகளைச் சேர்ந்த முப்பதாயிரம் இராணுவத்தினரும் விசேட பயிற்சிபெற்ற சிறப்புப் படையணிகளும் பின்னணிப் படைகளாகக் கடற்படையினரும் காவல்துறையினருமாகப் பாரிய படைப்பலத்தோடு இந்தச் சமர் நிகழ்ந்தது. கனரக ஆயுத சக்தியாகப் பெருமளவு பீரங்கிகளும் ராங்கிகளும் தரைப்படைக்கு வலுச்சேர்க்க, ஆகாயப் படையைச் சேர்ந்த குண்டுவீச்சு விமானங்களும் தாக்குதல் ஹெலிகளும் இந்தச் சமரிற் பெரும்பங்கு வகித்தன.

எமது போராட்ட வரலாற்றில் என்றுமே சந்தித்திராத கடினமானதும் நீண்டதுமான கள வாழ்வை இச்சமரில் எமது போராளிகள் அனுபவித்தார்கள். ஓய்வில்லாது தொடர்ச்சியாக நீண்ட இப்போர்க்கள

வாழ்வில் ஓய்வுறக்கமின்றி, சீரான உணவின்றி, கடுமையான காலநிலைகளுக்கு முகங்கொடுத்தபடி, நோய்களுக்குள்ளும் உயிர்வாழ்ந்து ஓய்வில்லாத எறிகணை, குண்டுவீச்சுத் தாக்குதல்களுடன் நகர்ந்த இராணுவப் பூதத்தை எமது இயக்கத்தின் ஒட்டுமொத்தமான சேனைகளுடன் இணைந்து எதிர்த்துநின்று சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் சரித்திரம் படைத்தது. எமது படையணியின் ஒருவருடத்தையும் தாண்டிய நீண்டவரலாறும் இதனுள் அடங்குகிறது.

''மலையாக எதிரியும் மடுவாக நாமும் சமச்சீரற்ற இராணுவ நிலையில் நின்றபோதும், இந்த நீண்ட சமரிற் எமது போராளிகள் வெளிக்காட்டிய நெஞ்சுறுதியானது எமக்கு மலையான பலத்தைக் கொடுத்தது. இந்த மலையான பலமே, வன்னியிற் சிங்கள இராணுவத்தை நிலைகுலைய வைத்தது'' என எமது தலைவர் அவர்கள் தனது போர்வீரர்களை இட்டுப் பெருமையுடன் குறிப்பிட்ட இந்த நீண்ட போர்க்காவியத்தில் எல்லாப் படையணிகளையும் போலவே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் சாதித்தவை ஏராளம். அவற்றில் இராணுவ, அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தவற்றை மட்டுமே இங்குக் குறிப்பிட முயல்கிறோம்.



புளியங்குளப் போர்முனையில் முறி யடிப்புத் தந்திரத்தை விளங்க வைக்கும் சிறப்புத் தளபதி தீபன்

எமது இயக்கத்தின் பாதுகாப்புப் போர்த்திறனுக்குத் தலைசிறந்த உதாரணமாய் விளங்கிய புளியங்குளம் சமரிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பிரதான பங்கெடுத்தது. தமிழீழத்தில் அதிகம் பேசப்படாதிருந்த ஒரு காட்டுப்பட்டணத்தை அதிசயிக்கத்தக்க போர்த்திறன்மூலம் உலகப்போர் வரலாற்றில் ஒரு போர்ப்பட்டணமாகப் பேசவைத்தது புலிகளியக்கம். எதிரியின் பிரமாண்டமான மரபுப் போர்ச்சக்திக்கு முன்னால், புளியங்குளச் சந்தியை ஒரு புலிக்குகையாக மாற்றி, அதை எதிரிக்கு ஓர் அழிவுப் பொறியாக மாற்றிப் போரிடுவது எனத் தலைவர் ஒரு போர்முறைத் திட்டத்தை வரைந்தார். அத்திட்டத்தின் கடுமை நிறைந்த ஆரம்ப ஏற்பாட்டுப் பணிகளும் அதைத் தொடர்ந்த சவால்கள் நிறைந்த போர்ப் பணிகளும் தலைவர் அவர்களாற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் ஒப்படைக்கப்பட்டன. அப்போது 'ஜயசிக்குறுய்' எதிர்ச்சமரின் துணைக்கட்டளைத் தளபதியாகத் தலைவர் அவர்களால் நியமிக்கப்பட்டிருந்த எமது படையணியின் சிறப்புத் தளபதி கேணல் தீபன் அவர்கள், புளியங்குளத்தை ஒரு போர்ப்பட்டணமாக மாற்றுவதற்கான கடுமை நிறைந்த தயாரிப்புப் பணிகளுக்கான பொறுப்பை, பிற்காலத்தில் எமது படையணியின் சிறப்புத் தளபதியாக இருந்த லெப். கேணல் ராகவனிடம் ஒப்படைத்தார்.

புளியங்குளம் புரட்சிக்குளமாய் நிமிர்ந்துநின்று போரிட்டது. சிங்கள இராணுவப்பூதம் நிலைகுலைந்துபோனது. ஐந்து மாதங்கள்வரை மாறிமாறி எத்தனையோ சண்டைகளைத் தொடுத்தபோதும் சிங்களம் தோற்றுப்போனது. அவமானத்தாலும் தலைகுனிவாலும் தோல்விகளால் எழுந்த அரசியற் சிக்கல்களாலும் சிங்களத் தலைமை மூர்ச்சையடைந்து தடுமாறியது. எமது இயக்கத்தின் இராணுவப் பலம்பற்றித் தவறான கணிப்புக்கொண்டவர்களால் வெறியூட்டப்பட்டு அனுப்பப்பட்டிருந்த பல நூற்றுக்கணக்கான சிங்களச் சிப்பாய்கள் புளியங்குளத்திற் புலிகள் வெளிப்படுத்திய அக்கினிப் பிரவாகத்திற் பொசுங்குண்டு போனார்கள். புலிகளின் புளியங்குளப் பாதுகாப்பு வலயத்தை நேர்நின்று உடைக்கும் திராணியற்றுப்போன பகைவன் கண்டி வீதியை விட்டு வன்னிக்காடுகளுள் அகலக்கால்வைக்க நிர்ப்பந்திக்கப்பட்டான். இப்புளியங்குளம் மறிப்புச் சமரில் எமது போராளிகள் அபாரமான மனத்திடத்தையும் தற்றுணிவையம் வெளிப்படுத்தினர். அதற்காகத் தம்மை வருத்தி உழைத்த தளபதிகளுள், எமது

படையணியைச் சேர்ந்த லெப். கேணல் ராகவன், லெப். கேணல் சேகர் ஆகியோரது அயராத உழைப்பைச் சமரிற் பங்கெடுத்த போராளிகளும் தளபதிகளும் இன்றும் நினைவுகூருகின்றனர்.

இவ்விடத்தில், புளியங்குளத்தை எதிரி அண்மிப்பதற்கு முன்பதாக, ஜயசிக்குறுவின் கட்டளை மற்றும் வழங்கல் மையமான தாண்டிக்குளம்மீது எமதியக்கம் தொடுத்த அதிர்ச்சியூட்டும் ஊடறுப்புச் சமர்பற்றிக் குறிப்பிட்டே ஆகவேண்டும். இவ்வூடறுப்புச் சமரில் ஜயசிக்குறுய் படையினருக்கும் தென்னிலங்கைக்குமான நேரடித் தொடர்பினைத் துண்டிப்பதற்காக லெப். கேணல் நியூட்டனின் தலைமையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் ஓர் அணி ஈடுபடுத்தப்பட்டது. இந்த அணி சமரின் ஒரு கட்டத்தில் வெடிபொருட்கள் தீர்ந்துவிடும் நிலையிலும், உணவற்ற நிலையிலும் இருபுறத்திலுமிருந்துவந்த எதிரிகளை வீரமுடன் எதிர்கொண்டு போரிட்டு, மிகவும் கடுமையான களத்தில் நின்று தனது பணியை ஆச்சரியப்படத்தக்கவகையிற் செய்துமுடித்தமை சமரை வழிநடத்திய தளபதிகளின் பாராட்டைப் பெற்றது.

போரியல் முக்கியத்துவம் வாய்ந்த புளியங்குளம் சமர் நடவடிக்கையில் எமது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஈடுபட்டிருந்தவேளை தன் ஆற்றல்மிக்க தளபதிகளில் ஒருவரான லெப். கேணல் பாக்கியராஜ் அவர்களை இழந்தது. ‘ஓயாத அலைகள் - 01’ நடவடிக்கையில் களமிறங்கிய சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிகளுக்கான வழிநடத்துநனாக நியமிக்கப்பட்டது உட்பட பல்வேறு சமர்களிற் படையணியின் அணிகளை வழிநடத்திய அந்தத் தளபதியை 12.06.1997 அன்று எதிரியின் பதுங்கித் தாக்குதல் ஒன்றில் நாம் இழந்தது வேதனைக்குரியதாகும்.

புளியங்குளத்தை அடுத்து மேலும் விரிந்த சமரரங்கின் தென்முனையில் மாங்குளம் வரையான சண்டைகளிலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பங்குபற்றியது. மாங்குளத்தில் எதிரி தன் அடுத்த இயலாமையைச் சந்தித்தான். புளியங்குளத்திற் பெற்ற அனுபவங்களின் அடிப்படையில் மேலும் கடினமான பாதுகாப்பு வலயத்தை மாங்குளத்திற் புலிகளியக்கம் அமைத்தது. இந்நிலையில் ஜயசிக்குறுய் சமரின் வடமுனையிற் கிளிநொச்சியூடாக இராணுவம் நகர்வை முன்னெடுக்கும் என எதிர்பார்த்த தலைவர் எதிர்ச்சமரின் துணைக்கட்டளைத் தளபதி கேணல் தீபன் அவர்களை அச்சமர்முனைக்குக் கட்டளைத் தளபதியாக நியமித்தார். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வட முனையான கிளிநொச்சிக் களத்திற்கு நகர்த்தப்பட்டது. ஏனைய படையணிகளுடன் சேர்ந்து வட முனையின் பாதுகாப்பைப் பலப்படுத்தச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உழைத்தது.

கிளிநொச்சி முனையில் எதிரியெடுத்த முயற்சிகளெல்லாம் முறியடிக்கப்பட்டன. எதிரி தனது நிலைகளிலிருந்து ஓர் அடியைத்தானும் முன்னே எடுத்துவைக்க முடியவில்லை. இந்நிலையில் கிளிநொச்சியில் நிலைகொண்டிருந்த ஜயசிக்குறுய் படையினர்மீதான பாரிய அளவிலான ஊடறுப்பு ஒன்றிற்குப் புலிகளியக்கம் தயாராகியது.

‘சுதந்திரப் பொன்விழாக்’ கொண்டாட்டத்திற்கான ஏற்பாடுகளிற் சிங்களதேசம் பெருமெடுப்பில் ஈடுபட்டது. அதற்கிடையே தமிழர்மீதான இராணுவ வெற்றியொன்றை ஈட்டி, தனது சுதந்திரக் கொண்டாட்டத்தின்போது தமிழர்களின் அவமானத்தின்மீது தனது கௌரவத்தை நிலைநாட்ட அது எண்ணியது. ஜயசிக்குறுய் நடவடிக்கையை முழுமூச்சுடன் முன்னெடுத்து எப்படியாவது தரைவழிப் பாதையைத் திறந்துவிடுவது என எதிரி முடிவுசெய்தான். சுதந்திரப் பொன் விழாவிற்கு முன்னர் ஜயசிக்குறுய் படைகள் தமது நோக்கத்தை நிறைவுசெய்து, கிளிநொச்சியில் தமது சகாக்களுடன் கைகுலுக்கிக்கொள்ளும் என்றும் சிங்களத்தின் வெற்றியின் அடையாளமாகத் தமிழர்களை ஏற்றிய பேருந்து ஒன்றினைப் பொன்விழா நிகழ்விற்காகக் கண்டி வீதி வழியால் தலதாமாளிகைக்குக் கொண்டுசெல்வதென்றும் சிங்களத் தலைமை சூளுரைத்தது. இவ்வாறு சிங்களம் வீறாப்புப் பேசியபடி இருக்க, ஜயசிக்குறுய் நடவடிக்கையின் மூலோபாயத்தையே தடுமாறவைக்கும் பதிலடிக்குப் புலிகளியக்கத்தைத் தயாராக்கினார் தலைவர்.

ஏ 9 பாதையைத் திறந்து கிளிநொச்சியில் தமது சகாக்களுடன் கைகுலுக்கித் தமது வெற்றிக்கு அடையாளமாய் தமிழர்களைப் பேருந்தில் ஏற்றிச் செல்வதெனச் சிங்களப் படைகள்

கனவுகண்டுகொண்டிருந்தபோது, 1998 பெப்ரவரி முதலாம் நாள் இரவு கிளிநொச்சிப் படைத்தளம் புலிகளின் பாய்ச்சலால் அதிரத் தொடங்கியது.

ஊடறுப்புத் தாக்குதலுக்கான பிரதான பங்கை ஏற்றிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அணிகள், தளத்தின் முன்னணியிற் கண்டி வீதியை ஊடறுத்துச்செல்லும் எதிரியின் நீண்ட பலம்வாய்ந்த முன்னணி நிலைகளைக் கிளிநொச்சி ஜெயந்திநகர்ப் பகுதியூடாக மூன்று முனைகளில் ஊடறுத்தன. இப்பகுதிகளின் ஊடறுப்பிற்கு, சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அப்போதைய சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகர் தலைமையேற்றிருந்தார். எதிரியின் கடுமையான எதிர்த்தாக்குதலுக்கும் விடாமுயற்சிக்கும் மத்தியிற் சுமார் 3கி.மீ. நீளக்காவலரண்களைக் கைப்பற்றி, இறுதிவரை பாதுகாத்து, தளத்தின் மத்திய பகுதிவரை முன்னேறிச் சமரில் தமக்குத் தரப்பட்ட பணியைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அணிகள் நிறைவு செய்தன.

கிளிநொச்சி டிப்போச்சந்தியில் நின்ற எதிரி கிளிநொச்சிச் சந்திவரை துரத்தியடிக்கப்பட்டான். தனது தளத்தின் ஓர் அடியைத்தானும் விட்டுக்கொடுக்க விரும்பாத எதிரி மீண்டும் மீண் டும் போரிட்டான். மீட்ட பகுதிகளைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டிருந்த எமது படையணியின் அணிகள் எதிரியால் மாறிமாறித் தாக்கப்பட்டுக்கொண்டேயிருந்தன. எதிரி ஒரே நாளிலேயே ஐந்திற்கும் மேற்பட்ட தடவைகள் கனரக வாகனங்களின் உதவியுடன் முன்னேற முயன்று இறுதியில் தோற்றுப்போனான். அடுத்தடுத்த நாட்களிற் செய்யப்பட்ட முயற்சிகளையும் சேர்த்து மொத்தம் பத்துத் தடவைகள் எதிரியின் முயற்சிகள் முறியடிக்கப்பட்டன.

தனது சுதந்திரப் பொன்விழாவை எப்படி நடத்துவதெனத் தெரியாது சிங்களத் தலைமை தலை குனிந்தது. அவமானத்தால் அது ஆடிப்போனது. சிங்களத்தின் ஆணவத்தின்மீதும் இராணுவத் திமிரின்மீதும் ஓங்கியடித்த புலிகளின் வெற்றியில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வகித்தது. 3கி.மீ. நீளக் காவலரண்களைத் தகர்த்தெறிந்து, உள்நோக்கி 2கி.மீ. வரை மீட்கப் பட்டு இச்சமரை வெற்றிகரமாக நடத்தி முடித்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, பின்னர் 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கைமூலம் கிளிநொச்சிப் படைத்தளம் வெற்றிகொள்ளப்படுவதற்கு ஊன்றுகோலாய் நின்றது.

கிளிநொச்சி ஊடறுப்பிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வெளிப்படுத்திய உச்சக்கட்டச் செயற்றிறன் எமது அமைப்பின் அனைத்துத் தரப்பினராலும் பாராட்டப்பட்டது. அந்த வெற்றிச்சமரில் வீரமுடன் போரிட்டுச் சாதித்துவிட்ட பெருமையுடன் படையணியின் போராளிகள் 23 பேர் மாவீரராயினர். அவர்களுள் வீரமும் மதிநுட்பமும் வாய்ந்த மேஜர் லெனின் என்ற முன்னணி அணித்தலைவனும் ஒருவன்.

கிளிநொச்சிப் படைத்தளத்திற் புலிகள் ஈட்டிய இந்த வெற்றி சிங்கள இராணுவத்துறையால் என்றும் செரிக்கமுடியாததாக இருந்தது; கிளிநொச்சித்தளத்தின் பாதுகாப்பைக் கேள்விக்குறியாக்கியது; ஜயசிக்குறுய் நடவடிக்கையின் அடிப்படையே தகர்த்துவிட்டது. எனவே இழந்த பகுதிகளை எப்படியாவது கைப்பற்றிவிடும் உறுதியோடு ஜயசிக்குறுய் நடவடிக்கையின் கிளிநொச்சி முனையிற் சிங்களப் படைகள் மேற்கொண்ட நகர்வு அம்முனையில் அதுவரை மூளாத பெருஞ்சமரை மூட்டிவிட்டது.

1998 யூன் 04 அதிகாலை 6.30 மணி, எமது போராளிகளின் நிலைகளை அதிரச்செய்தபடி கண்டி வீதி, திருநகர், கணேசபுரம் ஆகிய முனைகளூடாகச் சிங்களப் படைகள் எமது நிலைகளை உடைத்தெறிந்தன. உடைக்கப்பட்ட பகுதிகளூடாகப் பெருமளவிலான படைகள் உள்ளே தள்ளப்பட்டன. இழந்த பகுதிகளைப் பிடிக்கவேண்டும் என்று வெறியூட்டப்பட்டிருந்த படைகள் மூர்க்கமாகப் போரிட்டன. ஏற்கனவே அப்பகுதிகளில் நிலைகொண்டு, பரிச்சயம் கொண்டிருந்த 5 ஆவது கஜபாகு, 7 ஆவது காலாட்படை அணிகளே அந்நடவடிக்கையிற் களமிறக்கப்பட்டன. தனது நடவடிக்கைகளின் ஆரம்ப கட்டங்களை எதிரி வெற்றிகரமாக நிறைவுசெய்தான்.

சண்டைகள் மூர்க்கத்தனமாய் நடந்துகொண்டிருந்தன. எப்படியோ தனது வெற்றி இலக்கு எட்டப்பட்டுவிட்டது போல எதிரி கருதிய வேளையிற் புலிகள் காத்திரமான முறியடிப்பிற்குதித்தனர். எமது படையணியின் தளபதி லெப்.கேணல் ராகவனின் தலைமையிற் கனகபுரப் பகுதியிலிருந்தும் சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகரின் தலைமையில் 3ஆம் வாய்க்காற் பகுதியிலிருந்தும் முன்னேறிய எமது படையணியுடன் அப்பகுதியில் ஏற்கனவே நிலைகொண்டிருந்த பிற படையணிகளும் இணைந்தன. மாலை 4.00 மணிவரை நடந்த நீண்ட சமரில் எதிரிகள் இழக்கப் பட்டகாவலரண்கள் எமது அணிகளால் மீட்கப்பட்டன. உள்நுழைந்த எதிரிகள் தொடர்புகள் துண்டிக்கப்பட்ட நிலையில் தனிமைப்படுத்தப்பட்டனர்.

கொலை வெறிகொண்ட பகைவனின் படையணிகள் ஆரம்பத்தில் வெற்றிக்களிப்பை அனுபவித்துக் குறுகிய நேரத்திற்குள்ளேயே மரண பயத்தால் அல்லோலகல்லோலப்படத் தொடங்கின. எமது முற்றுகையுட் சிக்கிய படைகள் துடைத்தழிக்கப்பட்டன. படையினர் 200 பேரைக் கொன்றும் 400 பேரைக் காயப்படுத்தியும் எதிரியை வெற்றிகொண்ட எமது போராளிகள் 50 இராணுவச் சடலங்களையும் பெருந்தொகை ஆயுதங்களையும் கைப்பற்றித் தமது வீரத்தை மீண்டும் நிலை நிறுத்தினர். இந்த முறியடிப்புச் சமரில் தன் வீரத்தின்மூலம் வெற்றிக்கு வழிசமைத்த மேஜர் வாணன் என்ற அணித்தலைவனையும் எமது போராளிகள் சிலரையும் நாம் இழந்தோம்.

மூன்றுநாள் இடைவெளியின் பின், எட்டாம் திகதி அதிகாலை 5.30 மணி, முன்னைய சண்டையிற் சேதமடைந்திருக்கக்கூடிய புலிகளின் அணிகள் மீளொழுங்குபடுத்தப்படுவதற்கு முன்னதாகவே, அவற்றைத் தனது புதிய அணிகளைப் பயன்படுத்தி வெற்றிகொண்டுவிடலாம் என்ற நப்பாசையில், வழமையான இராணுவப் பாணியில் மீண்டும் முன்னேறி வந்தன ஆக்கிரமிப்புப் படைகள். இம்முறையும் அதே முனைகளில் ஒன்றான திருநகர் எதிரியின் இலக்கானது. அணையுடைத்த ஆற்று வெள்ளம்போல் புலிகளின் நிலைகளை உடைத்தபடி எதிரி உள் நுழைந்துவிட்டான். மீண்டும் புலிகள் முறியடிப்பில் இறங்குமுன் தன் படைகளை டிப்போச் சந்திவரை நிலைப்படுத்திவிட படைத்தலைமை அவசர அவசரமாக முயன்றது. சாதகமற்ற களநிலையிலும் எதிரியை முறியடித்தே தீருவதென்ற முடிவுடன் தளபதி கேணல் தீபன் எமது அணிகளுக்குக் கட்டளைகளை வழங்கியபடியிருந்தார்.

ஊரியான் பகுதியிலிருந்து வரவழைக்கப்பட்ட எமது படையணியின் லெப். கேணல் ராஜன் / ராஜசிங்கம் தலைமையிலான முறியடிப்பு அணிகளைச் சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகர் களமிறக்க, லெப். கேணல் விமல் தலைமையிலான முறியடிப்பு அணிகளைத் தளபதி லெப். கேணல் ராகவன் களமிறக்க, சண்டை உச்சத்தைத் தொட்டது. 4ஆம் திகதிச் சண்டைகளின் முடிவையே இம்முறையும் சிங்களப் படைகள் சந்தித்தன. இம்முறையும் நூற்றுக்கணக்கிற் படையினரை இழந்து, எஞ்சியோர் ஓட்டம்பிடிக்க, 35 இராணுவச் சடலங்களும் ஆயுதங்களும் எமது பகுதிக்குட் சிதறிக்கிடந்தன. அதன்பின் இப்படியான பாரிய நடவடிக்கைகளில் ஈடுபடுவதையே கிளிநொச்சி முனையில் எதிரி தவிர்த்துவிட்டான்.

ஜயசிக்குறுய் நடவடிக்கையில், முக்கியத்துவத்திற்குரிய இவ்விரு முறியடிப்புகளிலும் காத்திரமான பங்காளனாய்ச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியே இருந்தது. தொடர்ந்தும் கிளிநொச்சி முனையில், ஏனைய படையணிகளுடன் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி சாதனைகளைக் குவித்தது. எதிரி நம்பிக்கையிழந்து போனான்.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் 'ஜயசிக்குறுய்' காலச் சாதனைப் பட்டியலின் இன்னொரு பக்கத்தையும் குறிப்பிட்டே ஆகவேண்டும். நடவடிக்கையில் ஈடுபட்ட படையினருக்கு எதிரான தந்திரோபாயச் செயற்பாடுகளின் பக்கமே அதுவாகும். எதிரிப் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட வேவு நடவடிக்கைகளிலும் எதிரிமீது மேற்கொள்ளப்பட்ட சிறுசிறு தாக்குதல்களிலும் எமது சிறப்புப் படையணியின் போராளிகள் திறமையுடன் செயற்பட்டனர். 1999ஆம் ஆண்டின் புதுவருட தினத்திற்

கரிப்பட்டமுறிப்பில் எதிரியின் உலங்குவானூர்திமீதான கரும்புலிகளின் தாக்குதலுக்கு உறுதுணையாகச் செயற்பட்ட எமது படையணியைச் சேர்ந்த வேவுவீரன் மேஜர் மோகனைத் தலைவர் அவர்கள் பாராட்டிப் பரிசளித்தமை இங்குக் குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டாகும்.

சிங்களப் படையின் திமிரை அடக்கிய 'ஜயசிக்குறுய்' எதிர்ச்சமரின்போது இவ்வாறு சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது உயர் செயற்றிறனை வெளிப்படுத்தியது. சிங்களம் புலிகளின் இராணுவப் பொறிக்குட் சிக்குண்டு மீளமுடியாத நிலையில் திமிரடங்கிக் கிடந்தது. சிங்களத்தின் 'ஜயசிக்குறுய்' இன் மூலோபாயத்தை உடைப்பதற்கான அடுத்தகட்டத் திட்டமிடலில் ஈடுபட்டிருந்த தலைவருக்கு உறுதுணையான செயற்பாடுகளிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி இறங்கியது. படையணியின் வேவு அணிகள் உச்சப்பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கொண்ட கிளிநொச்சிப் படைத் தளம்மீதான வேவு நடவடிக்கையில் ஈடுபட்டன. தொடர்ந்தும் கிளிநொச்சியில் 'ஜயசிக்குறுய்' படைகளை எதிர்த்து அரணமைத்து எம் தேசத்தைக்காப்பதில் ஏனைய புலிச்சேனைகளுடன் செயற்பட்டுக்கொண்டிருந்தது.

''ஜயசிக்குறுய் சமரில் எமது போராளிகள் வெளிப்படுத்திய மனவலிமையும் செயலாற்றலும் அபாரமான சகிப்புத் தன்மையும் பெரிதும் பாராட்டத்தக்கவை. எனது வீரர்களின் இந்தத் தலைசிறந்த போர்ப்பண்புகளைக்கண்டு நான் பெருமைகொள்கிறேன்'' என எம் தேசத்தின் தலைவன் தன் போர்வீரர்களுக்குச் சூட்டிய மகுடத்தாற் சமரின் அனைத்து முனைகளிலும் ஓயாது சமராடித் தனித்துவமான சாதனைகளை நிலைநாட்டித் தலைவனுக்குத் தோள்கொடுத்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வீரர்கள் பெருமையடைந்தார்கள்.

# 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கை

வன்னிக்களம் இறுகியிருந்தது. தமது ஒட்டுமொத்தப் போராற்றலையும் வன்னிக் களத்திலேயே குவித்தபடி இருதரப்பினரும் போரிட்டனர். எதுவித மாறுதல்களுமற்று விடாப்பிடியான யுத்தத்தை இருதரப்பினரும் தொடர்ந்தபடியே இருந்தனர்.

சிறீலங்காவைப் பொறுத்தவரை, வன்னியை விடுத்து வேறுமுனையிற் களத்தைத் திறக்கத்தக்க வல்லமை அப்போது அதனிடம் இருக்கவில்லை. ஆனாலும், விடுதலைப் புலிகள் ஒரு வலிந்த தாக்குதல் நடவடிக்கையில் ஈடுபட முடியாதபடி, அவர்களின் போர்வலுவை முழுமையாகக் கவர்ந்திழுத்து, வைத்திருப்பதற்குத் தன்னால் முடியுமென அது உறுதியாக நம்பியது. உண்மையில் ஒரு பெரும் வலிந்த தாக்குதலுக்கான மனிதவலுவையும், ஆயுத வலுவையும் ஒருங்கிணைக்க முடியாதபடி, தொடர்ச்சியான பாதுகாப்புச் சமரில் எம்மை ஈடுபடுத்தி வைத்திருந்தான் எதிரி. சற்றும் தளர்வற்ற இக்கள நிலையில் ஏதும் அற்புதம் நிகழ்ந்தாலன்றி எவராலும் எவ்விதத்திலும் மாற்றமெதையும் நிகழ்த்திவிட முடியாது என்பதே போரியல் வல்லுநர் அநேகரின் முடிவாக இருந்தது.

எது எப்படி இருந்தபோதும், எவரும் முடியாதெனக் கருதுவதைச் சாதிப்பதையே தனது தனித்துவமான போர்க்கலை நுணுக்கமாகக்கொண்டுள்ள எமது தலைவர், வன்னிக் களத்திற் புலிகளாற் சாதிக்க முடியாதென அனைவரும் கருதியதைச் சாதித்துவிடத் துணிந்தார். அதன் மூலம் வன்னிக் களத்தில் ஓர் அதிசயத்தைத் தன்னால் நிகழ்த்த முடியும் என அவர் நம்பினார். அதற்கான ஆற்றலும் முன் அனுபவமும் அசைக்கமுடியாத துணிவும் எம் தலைவனிடம் இருந்தன. எத்தகைய அசாத்தியங்களுக்குள்ளும் வெற்றிக்காய் இறுதிவரை தன்னம்பிக்கையுடன் போராடவல்ல விடுதலைப் போராளிச் சேனையை அவர் தனக்கே உரித்தான உயர் பண்புகளுடன் வளர்த்தெடுத்தார். உயர் போர்ப்பண்புகளைத் தன்னகத்தே கொண்டிருந்த புலிப்படை, ஒரு வலுவானதும், முக்கியத்துவம் வாய்ந்ததுமான வலிந்த தாக்குதல் நடவடிக்கைக்குத் தயார்ப்படுத்தப்பட்டது. அதுவே, புலிகளின் தனித்துவமான அதிசயிக்கத்தக்க போரியலைத் தன்னகத்தே உள்ளடக்கிய 'ஓயாத அலைகள்' 02 நடவடிக்கையாகும்.

ஜயசிக்குறுய் வன்னிச் சமர்க்களம் இழுபறியில் இருந்த நேரத்திற் புலிகளால் மேற் கொள்ளப்படவிருந்த ஓயாத அலைகள் 02 நடவடிக்கை பிற்காலக் களச்சூழலில் வலுவானதாக் கங்களை ஏற்படுத்துமென எதிர்பார்க்கப்பட்டது. புலிகள் இயக்கம் முழுமையானதும் உறுதியான துமான வெற்றியை ஈட்டும்பட்சத்தில் அது 'ஜயசிக்குறுய்' இன் போர்முறைத்திட்டத்தின் மூலோபாயத்தைச் சிதறடித்து, அந்த நடவடிக்கைமீதான புலிகளின் வெற்றியை உறுதிப்படுத்திவிடும். மாறாக, 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கையைச் சிங்களப் படைகளாற் காத்திரமான முறியடிப்பின்மூலம் வெற்றிகொள்ள முடிந்துவிட்டால், அது புலிகளின் பெருமளவு ஆளணி வலுவைச் சிதறடித்து வன்னிச் சமர்க்களத்தில் இராணுவத்தின் போக்கை வெகுவாக இலகுபடுத்தி விடும். மொத்தத்திற் புலிகளின் வெற்றி தோல்வியில்தான் தங்கிநின்றது 'ஜயசிக்குறுய்' இன் எதிர்காலம். அன்றைய நிலையில் வன்னிச்

சமர்க்களத்தின் எதிர்காலத்தைத் தனது 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கைமூலம் உறுதியாகத் தீர்மானிக்க முடியும் எனத் தலைவர் நம்பினார்.

தமது பாதுகாப்பு அரண்களில் காவல் காத்தபடி 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கைக்கான கடினப் பயிற்சியிற் போராளிகள் ஈடுபட்டார்கள். வன்னிச் சமர்க்களத்தில் ஒரு வருடதிற்கும் மேலாக எமது போராளிகள் சுமந்த போர்வாழ்வின் சுமை இரட்டிப்பானது. எல்லாப் பகுதிகளிலும் எதிரியரண்களுக்கு முன்னாலேயே, அவன் அறிந்துகொள்ளும்படியே, அவனது அழிவிற்கான ஒத்திகைகளிற் புலிகள் சேனை தன்னை ஈடுபடுத்திக்கொண்டிருந்தது. நுணுக்கமான திட்டமிடலுக்கு ஏற்பவே நுணுக்கமான பயிற்சித் திட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. சமரின் வெற்றியைத் துல்லியமாக உறுதிப்படுத்தும் வகையிற் கடுமையும் தந்திரமும் நிறைந்த பயிற்சிகளாக அவை அமைந்தன.

கிளிநொச்சிச் சமர்க்களத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தளபதிகளின் நேரடி மேற்பார்வையில், பல்வேறு படையணிகளையும் உள்ளடக்கிய பயிற்சி நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டன. அதேவேளை, கிளிநொச்சிப் பிரதான தளம் மீதான வேவு நடவடிக்கைகளில் தளபதி தீபனின் கட்டளைப் பணியக வேவு அணியும், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் வேவு அணியும் தொடர்ச்சியாகவே ஈடுபட்டன. பெரும் பகுதி வேவு வேலைகள் பூர்த்தியாக்கப்பட்ட நிலையில், கிடைத்த தரவுகளின் அடிப்படையில் மிகவும் நுணுக்கமான தாக்குதல் திட்டம் தலைவர் அவர்களால் உருவாக்கப்பட்டது. எப்போதும் போலவே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் சமரின் காத்திரமான பணிகளை ஒப்படைப்பதெனத் தலைவர் முடிவுசெய்தார்.

எதிரியின் தளத்தின் முன்னணிக் காவல் வரிசையைக் கைப்பற்றி தளத்தின் பிரதான வலயத்தை வீழ்த்தும் பணியை தளபதி கேணல் தீபன் அவர்களிடம் ஒப்படைத்த தலைவர் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை அவரிடம் ஒப்படைத்து முக்கிய பணிகளையும் அதற்கு வழங்கினார். அத்துடன் எதிரியின் தளத்தினுள் ஊடுருவி ஆனையிறவு இராணுவ வலயத்திலிருந்து கிளிநொச்சிப் படைத்தளத்தைத் தனிமைப்படுத்தும் பொறுப்பைத் தலைவர் மூத்த தளபதி கேணல் பால்ராஜ் அவர்களிடம் ஒப்படைத்தார்.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைப் பொறுத்தவரை அது இச்சமரின் வெற்றிக்காகப் பல சவால்களை எதிர்நோக்கியது. ஒரு வருடச்சமரில் தொடர்ச்சியாகப் பங்கெடுத்த எமது படையணி அதற்காகத் தன் அனுபவம்வாய்ந்த, ஆற்றல் நிறைந்த, அற்புதமான முன்னணி வீரர்களை அர்ப்பணித்தது. 'ஜயசிக்குறுய்' நடவடிக்கைக்கெதிராக எமதியக்கத்தால் மேற்கொள் எப்பட்ட ஊடறுப்பு, பாதுகாப்பு நடவடிக்கைகளின்போதெல்லாம் அந்தக் கடினமான பணிகளைச் செய்தும் செய்வித்தும் வெற்றிக்கு விதையானவர்கள் பெறுமதியான அனுபவம்மிக்க முன்னணி வீரர்களே.

இப்போது 'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கையிற் புதிதாக இணைக்கப்பட்ட வீரர்களைப் பெருமளவில் உள்ளடக்கிய அணிகளையே நாம் ஈடுபடுத்தவேண்டியிருந்தது. அவர்கள் சண்டையைச் சந்திக்கப்போகும் பகுதிகளோ சிக்கல் நிறைந்தவை; மிகவும் பலம் வாய்ந்தவை. அப்பகுதியில் எம்மால் ஈட்டப்படவேண்டிய வெற்றிகள் இறுதியிற் போராளிகளின் அதீத மனவுறுதியால் மட்டுமே எட்டப்படவேண்டியவை. இருந்தபோதும், அச்சமரின் சாவால்மிக்க பணிகளிற் சிலவற்றைத் தலைவர் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடமே ஒப்படைத்தார். தமது வீரர்களுக்குச் சண்டையில்வைத்தே சண்டை பழக்கி, சண்டையை வென்றெடுக்கவல்ல ஆளுமையும் அனுபவமும் மரபுங்கொண்ட படையணியின் அணித்தலைவர்களிடம் தலைவர் அவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தார்.

இப்பெரும் நடவடிக்கையில், கண்டி வீதியை ஊடறுத்துச்செல்லும் எதிரித் தளத்திலேயே மிகவும் பலம்வாய்ந்த முன்னணி நிலைகளைக் கைப்பற்றுவதுடன், அதனூடாக முன்னேறி 600மீ. தூரத்தில் 'உச்சப் பாதுகாப்பு' வலயத்துள் அமைந்துள்ள பிரதான முகாமை வீழ்த்தும் பெரும்பணியைச் செய்துமுடிப்பதற்கும் தலைவர், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைத் தேர்ந்தெடுத்தார்.

எமது படையணி கைப்பற்றவேண்டிய முன்னணி நிலைகளைப் பொறுத்தவரை அவை விசேட பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கொண்டவையாகவே இருந்தன. தளத்தின் பிரதான பகுதி மிகவும் குறுகிய தூரத்தில் இருந்தது (1998 பெப்ரவரிச் சண்டையில் இத்தளத்தின் முற்பகுதியில் $2^1/_2$ கி.மீ. கைப்பற்றப்பட்டாயிற்று). தளத்தின் பிரதான பகுதியைக் கண்டி நெடுஞ்சாலை ஊடறுத்துச் சென்றமையே



நடவடிக்கைக்கு எமது படையணி புறப்படுமுன் வாழ்த்தியனுப்பும் மூத்த தளபதி பால்ராஜ்

எதிரி அதிக பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்தமைக்குக் காரணமாகும். 10 – 15 மீற்றர்களுக்கு ஒன்றாக நெருக்கமான காவலரண்களை அமைத்த எதிரி அவற்றிற்கு இடையே போலி நிலைகளையும் அமைத்திருந்தான். இதை விடவும் இன்னும் பல சிறப்புப் பாதுகாப்பு ஏற்பாடுகளும் அங்குச் செய்யப்பட்டிருந்தன. அப்பகுதியில் எதிரியின் சண்டையிடும் முன்னணிப் படையணிகளுள் மிகவும் பலம்வாய்ந்த ஆறாவது கெமுனு வோஜ் (6GW) படைப்பிரிவைச் சேர்ந்த அணிகள் நிறுத்தப்பட்டிருந்தன.

சண்டையிடப்போகும் எமது போராளிகளைப் பொறுத்தவரை அவர்களிடம் மிகுந்த தன்னம்பிக்கை தெரிந்தது. சாதிக்கவேண்டும் என்ற வெறி எல்லோரிடமும் இருந்தது. புதிய அணிகள்

பயிற்சியின்போது காட்டிய ஆர்வமும் சண்டைபற்றிய அவர்களின் எதிர்பார்ப்பும் வெற்றிக்கான நம்பிக்கையை எம்மில் ஏற்படுத்தின. "மச்சான் சரியான கஸ்டமான பகுதியடாப்பா. இதுக்குள்ளையும் சண்டைபிடிச்சு எங்களால வெண்டு காட்ட ஏலும் எண்டதை இந்தச் சண்டையில சாதிச்சுக் காட்டவேணும்" என்று அடிக்கடி கதைத்துக்கொள்ளும் அணித்தலைவர்களினதும் போராளிகளினதும் முகங்களில் வெற்றியின் பிரகாசம் தெரிந்தது.

தாக்குதல் அணிகள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. ஒன்று, முன்னணி நிலைகளைக் கைப்பற்றுவதன்மூலம் பிரதான தளத்துக்குள் நுழையும் அணிக்கான பாதுகாப்பான பாதையை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். மற்றையது, பிரதான தளத்தின்மீது தாக்குதல் நடத்தி அதை வெற்றிகொள்ள வேண்டும். இவ்வணிகளுக்கு முறையே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தாக்குதல் தளபதிகளில் ஒருவரான லெப். கேணல் நியூட்டன், படையணியின் அப்போதய துணைத் தளபதி லெப். கேணல் முகுந்தன் ஆகியோர் தலைமையேற்றனர். முன்னணிக் காவல்நிலைகளில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கென ஒப்படைக்கப்பட்ட பகுதி 'M4' எனக் குறியிடப்பட்டிருந்தது எமது படையணியின் இவ்விரு நடவடிக்கைகளுடன், புலனாய்வுத் துறைத் தாக்குதலணியின் 'M1' பகுதி, மாலதி படையணியின் 'M2' பகுதி, சிறுத்தைப் படைய ணியின் 'M3' பகுதி ஆகியவற்றிற்குமான நடவடிக்கைத் தளபதியாக சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அப்போதய சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகர் நியமிக்கப்பட்டார். இதன் இரண்டாவது தளபதியாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அப்போதய தளபதி லெப். கேணல் ராகவன் நியமிக்கப்பட்டு, தளபதி கேணல் தீபனின் கட்டளைப் பணியகத்தில் மேலதிக அணிகளுடன் வைக்கப்பட்டிருந்தார்.

1998.09.26 ஆம் நாள் பின்னிரவுப் பொழுது. சண்டையணிகள் தமது இறுதி நகர்வுகளை ஆரம்பித்துவிட்டன. நேரம் நள்ளிரவை அண்மித்தபோது, தமது நகர்வை வெற்றிகரமாக முடித்த போராளிகள், தளபதியின் இறுதிக் கட்டளைக்காகக் காத்திருந்தார்கள். நேரம் மறுநாள் அதிகாலை 1.20 மணி. கிளிநொச்சித் தளத்தின் நாலாபுறமும் அதிர்ந்த குண்டொலிகளும், வானலைகளை நிறைத்துச் சடுதியாகப் பாய்ந்த கட்டளைகளும் அந்த வரலாற்றுச் சமரின் உதயத்தைப் பறைசாற்றின.

எதிரி அமைத்து வைத்திருந்த தடைகளை உடைத்தெறிந்த முதலாவது அணி எதிரியுடன் மூர்க்கமாகப் பொருதியது. கடுமையான யுத்தமாக அது மூண்டது. நெருக்கமான தமது காவல ரண்களில் இருந்து எதிரி செறிவான சூட்டு வலுவைப் பிரயோகித்தான். எம் வீரர்களின்மேல் எதிரி கைக்குண்டுகளை அள்ளி இறைத்தான். கனரகச் சுடுகலங்கள் எல்லாம் வகைதொகையின்றி எல்லாத் திசைகளிலிருந்தும் பொறிகக்கின. எமது முக்கிய தாக்குதலுக்குட்பட்டிருந்த பகுதிமீது எதிரியின் பின்னணித் தளத்திலிருந்து, மழைபோல எறிகணைகள் விதைக்கப்பட்டுக் கொண்டிருந்தன. இத்தனையையும் தாண்டி எதிரியின் 'மரண எல்லைக்குள்' நுழைந்தார்கள் எம் வீரர்கள். விழவிழ முன்னேறிய எம் வீரர்கள் இறுதியிற் காயங்களுடனும் எதிரி நிலைகளைத் தொட்டு, தாக்குதல் அணிகள் நுழைவதற்கான பாதையைத் தமது உயிர்கொண்டு அமைத்துக் கொடுத்தார்கள். அங்கு எமது வீரர்கள் வெளிப்படுத்திய வீரமும் ஈகமும் 'ஓயாத அலைகள் - 02' சமரில் முக்கிய பதிவைப்பெறுகிறன.

எம் வீரர்கள் அமைத்த 'உயிர்ப்பாதை' வழியே எங்கள் நில மீட்பிற்கான எமது சண்டையணிகள் நுழைந்தன. எதிரி விட்டுக்கொடுக்காது போரிட்டான். உண்மையில் எதிரியின் முழுமையான வீரத்துடன் நாம் போரிட்டோம். மாறிமாறி இழுபறிப்பட்டகளத்தின் அன்றைய இரவுப்பொழுதிற் குறிப்பிடத்தக்க பகுதிகள் எமது வீரர்களாற் கைப்பற்றப்பட்டன. எனினும், முழுமையான சாதகநிலை எட்டப்படாததாற் பிரதான தளத்திற்கான லெப்.கேணல் முகுந்தனின் அணிகள் சில, லெப். கேணல் நியூட்டனுடன் இணைக்கப்பட்டுப் போரிட்டன. அன்றைய காலை புலர்வதற்கான நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

'ஓயாத அலைகள் - 02' நடவடிக்கையின் ஒட்டுமொத்த நிலையைப் பொறுத்தவரை ஆரம்பத்தில் நாம் களத்தில் மேலோங்கி நின்றபோதும், எதிரி நிலைகள் பெருமளவில் எம்மால் வீழ்த்தப்பட்டபோதும் விடிகாலையளவில் எதிரியே களத்தில் மேலோங்கி நின்றான். எம்மிடம் வீழ்ந்த காவலரண்கள் பல எதிரியால் மீளக்கைப்பற்றப்பட்டன. மொத்தமாக பதின்மூன்று முனைகளில் உடைப்பை நிகழ்த்திய எமது தாக்குதல் அணிகளாற் சில முனைகள் முற்றாகக்கைவிடப்பட்டன. தளபதி கேணல் பால்ராஜ் அவர்களின் தலைமையிலான ஊடறுப்பு அணிகளோ தமது நடவடிக்கையில் முழுமையான வெற்றியையீட்டி, கிளிநொச்சித் தளத்தை அதன் தாய்த்தளத்துடனான தொடர்புகளிலிருந்து தனிமைப்படுத்திவிட்டன. இந்நிலையில் எதிரிக்கு அவகாசம் வழங்காது முன்னணியில் எதிரிக்கிருந்த சாதகநிலையை மாற்றியமைத்தேயாகவேண்டிய உடனடி நிர்ப்பந்தம் எமக்கு ஏற்பட்டது.



நடவடிக்கையிற் சிறப்புத் தளபதி சேகர்

தளபதி கேணல் தீபன் சில மாற்றுத்திட்டங்களை உடனடியாகவே வகுத்தார். தளபதி லெப். கேணல் சேகரின் கட்டளையின்கீழ் இருந்த 'M' பகுதி, எதிரித் தளத்தின் பாதுகாப்பிற்கு இன்றியமையாததாக இருந்ததால், அவற்றில் ஒரு காத்திரமான சண்டையை முன்னெடுப்பதன் மூலம் களநிலையில் மாற்றத்தை ஏற்படுத்திவிட முடியுமென முடிவு செய்தார்.

27ஆம் திகதி காலை, கிளிநொச்சித் தளத்தின் இறுதி முடிவை எடுக்கவல்ல அந்தப் பகற் சமர் வெடித்தது. எமது இயக்கத்தின் வரலாற்றிலே புகழ்பூத்த பகற்சமராக அன்றைய சமர்தான் அமைந்தது என்று சொல்லலாம். பல்வேறு படையணிகளையும் உள்ளடக்கிய படைத்தொகுதியுடன் ஆவேசத்துடன் துணிகரமாகக் களம் புகுந்தார் எமது படையணியின் தளபதி லெப். கேணல் ராகவன். மரண களமான அந்தச் சமர்க்களத்தின் மையத்தில் ராகவனைப்போன்ற தளபதி ஒருவரை எதிரி தனது வழிநடத்துநனாகப் பெற்றிருக்கவே மாட்டான். நீண்டுசென்ற சமரில் எதிரி மோசமான அடிகளாற் பின்தள்ளப்பட்டுக்கொண்டே போனான். சண்டையின் இறுக்கம் தளர்ந்துகொண்டு போனது. அதே சமயம் மறுமுனையிலிருந்து லெப். கேணல் முகுந்தன், லெப். கேணல் நியூட்டன் ஆகியோரின் கட்டளையின்கீழ்ச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் மற்றைய அணிகளும் முன்னேறத் தொடங்கின.

மறுநாட்காலை எதிரித் தளத்தின் இறுமாப்பு உடைந்துபோனது. மேலும் மேலும் முன்னேறிய அணிகள் எதிரியின் காவலரண் வரிசையை முழுமையாக வீழ்த்தத்தொடங்கின. தொடர்ந்து, பல்வேறு அணிகளை உள்ளடக்கிய படைத்தொகுதி தளபதி லெப். கேணல் ராகவனின் கட்டளையின்கீழ் எமது படையணியின் தாக்குதல் தளபதிகளில் ஒருவரான லெப். கேணல் விமல் தலைமையில் ஒருமுனையாலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிச் சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகரின்

கட்டளையின்கீழ் லெப். கேணல் முகுந்தன் தலைமையில் மறுமுனையாலும் பிரதான முகாமிலிருந்த எதிரியை விரட்டிச்சென்றன.

கிளிநொச்சித் தளம் அப்போதும் மின்னொளியில் மிதந்தபடியே இருந்தது. தளத்தின் கட்டளை மையமான பிரிகேட் தலைமையகம், படைப்பிரிவுகளின் 'பற்றாலியன்' தலைமையகங்கள் எல்லாமே எம் வீரர்களாற் சல்லடை போடப்பட்டன. எங்கும் எதிரியுடல்கள் சிதறிக்கிடந்தன. ஆயிரம் பகைவர்கள் கொல்லப்பட, புலிகளின் வீரியம் வரலாற்றிற் கலந்தது. எமது மக்களும், சர்வதேசமும் புலிகளின் போராற்றல்பற்றியும் சிங்களத்தின் இயலாமைபற்றியும் இடைவிடாது பேசிக்கொண்டிருந்தனர்.

'ஜயசிக்குறுய்' ஆட்டங்கண்டது. வன்னியிற் சிங்களத்தின் போரிடும் மனபலம் உடைத்தெறியப்பட்டது. அசாத்தியமென்று அனைவரும் கருதிய அதிசயத்தைப் புலிகள் நிகழ்த்திக் காட்டினர். இராணுவ உலகின் பெரும் சாதனைச் சமர்களுள் ஒன்றாகிவிட்ட 'ஓயாத அலைகள் - 02' இன் வெற்றிச் சரித்திரத்திலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தன் வீரத்தையும் தியாகங்களையும் நிலைநிறுத்தியது. எதிரி விரைவிலேயே 'ஜயசிக்குறுய்' நடவடிக்கையைத்தான் கைவிட்டுவிட்டதாக தனது அவமானத்தை வெளியுலகிற்கு அறிவித்தான்.

# 'ஓயாத அலைகள் - 03' நடவடிக்கை

மீண்டும் ஒரு காத்திருப்பு. எமக்கான சில இராணுவத்தேவைகளுக்காகவும் வாய்ப்பானதொரு சூழலுக்காகவும் அந்தக் காத்திருப்பு நீண்டுசென்றது. நெருக்கடி மிகுந்ததொரு யுத்த களத்தில் எவராலும் புரிந்துகொள்ளமுடியாத நீண்ட மௌனம் காத்தார் எமது தலைவர்.

எமது கட்டுப்பாட்டிலுள்ள வன்னிப்பகுதியின் எல்லா வாயில்களிலும் முட்டிமோதி அவற்றை உடைத்துவிட முயன்றுகொண்டேயிருந்தான் எதிரி. ஜயசிக்குறுய் நடவடிக்கைக்கெதிரான முறியடிப்புத் தாக்குதல்களாலும் ஓயாத அலைகள் 02 நடவடிக்கை மூலமும் வன்னிச் சமரில், எதிரி யின் மூலோபாயத்தை புலிகள் முறியடித்துவிட்டனர். இந்நிலையிற் புதிய திட்டம் ஒன்றை வகுத்த எதிரி 1998 டிசம்பர் 13ஆம் நாள் "ரிவிபல" நடவடிக்கைமூலம் எமது கண்காணிப்பில் இல்லாத ஒட்டுசுட்டானை ஆக்கிரமித்தான். அதனைத் தனது பெரிய வெற்றியாகப் பறைசாற்றி அதன் மறைப்பில் "ஜயசிக்குறுய்" நடவடிக்கையின் அவமானத் தோல்வியை ஒப்புக்கொண்டு அந்நட வடிக்கையைக் கைவிட்டான். வன்னியில் அகலக்கால் வைப்பதன் இடரை எதிரி நன்கு அறிந்தி ருந்தாலும் தன் பலவீனத்தைப் புலிகள் பயன்படுத்தி விடாதபடி தடுப்பதற்காகத் தனது திட்டமிட்ட வியூகத்துக்குட் சிக்கவைக்கும் போர் நகர்வுகளைத் தன்னாற் செய்ய முடியுமென நம்பினான். அத்தகைய நகர்வுகளில் ஒன்றே ரிவிபல நடவடிக்கை.

"ரிவிபல" நடவடிக்கைமூலம் திறக்கப்பட்ட புதிய போர்முனை வன்னியின் எப்பகுதியிலும் எந்நேரத்திலும் எதிரி படையெடுக்கலாம் என்ற நிலையை உருவாக்கிவிட்டது. அதனால் வன்னியைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான கிலோமீற்றர்களுக்குத் தொடர்ச்சியான பாதுகாப்பு வேலியை அமைத்துக் காவலிடுவதற்கு எமதியக்கம் நிர்ப்பந்திக்கப்பட்டது. எல்லா முனைகளிலுமே பரவலாக நடவடிக்கைகளை முன்னெடுத்த எதிரி, முன்னணி நிலைகளின் எப்பாகத்திலிருந்தும் எமது அணிகளை நகரவிடாதபடி செயற்பட்டான். அத்துடன், எமது போராளிகளைச் சலிப்பிற்குள்ளாக்கி அவர்களது போராற்றலைச் சிதைத்துவிடும் நோக்கோடு தனது கொமாண்டோ அணிகள் மூலம் தொடர்ச்சியான தொந்தரவு நடவடிக்கைகளை எமது நிலைகள்மீது முன்னெடுத்தான்.

எல்லாவற்றினதும் உள்நோக்கங்களையும் அடிப்படைகளையும் நன்கு புரிந்துகொண்ட எமது தலைவர் எதிரியின் புதிய திட்டத்தை முறியடிப்பதற்கான எதிர்த் திட்டத்தை வகுத்தார். சூழலுக்கேற்ற புதிய பயிற்சித் திட்டங்களை வகுத்து மூத்த தளபதிகள்மூலம் புதிய களச்சூழலிற் போராளிகளை வழிநடத்தினார். தலைவரின் புதிய செயற்றிட்டத்தின்மூலம் புலிகள் சேனை எவ்வாறு தயார்ப்படுத்தப்பட்டிருந்தது என்பதற்கு மன்னார்ப் பகுதியில் எதிரியின் 'ரணகோச' நடவடிக் கைகளுக்கெதிரான முறியடிப்புக்கள் காத்திரமான எடுத்துக்காட்டுகளாக அமைந்தன. ஆயினும், புலிகளால் எத்தனை காலந்தான் இவ்வாறு தாக்குப்பிடிக்கமுடியும் என்ற வினா அனைத்துத் தரப்பினர்களிடையேயும் எழுந்துகொண்டே இருந்தது.

இப்படியான புதிய சவால்களுக்குள் எமது தாயகப் போராட்டம் பிரவேசித்திருந்த வேளை, அதன் தாங்குசக்திகளுள் முக்கியமானதொன்றான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, தலைவர் அவர்களின் திட்டங்களுக்கும் ஆலோசனைகளுக்கு மேற்பத் தன்னைத் தயாா்ப்படுத்தியபடியேயிருந்தது.



முதலில் தளபதி கேணல் தீபனதும் பின்னா் தளபதி கேணல் பால்ராஜினதும் கட்டளையின்கீழ்க் கிளிநொச்சிக் களமுனையிலேயே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தொடா்ந்தும் செயற்பட்டுக்கொண்டிருந்தது. அக்காலப்பகுதியின் ஒரு கட்டத்திற் படையணியின் சிறப்புத் தளபதியாக லெப். கேணல் ராகவன் அவா்கள் பொறுப்பேற்றிருந்தாா்.

தலைவரின் புதிய புதிய தந்திரங்கள் அவ்வப்போது களமுனையிற் பயிற்சித் திட்டங்களாகப் போராளிகளுக்குப் பயிற்றுவிக்கப்பட்டுவந்தன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முன்னணி அணிகள் சில, எதிரியின் பலம்வாய்ந்த காவலரண்களைத் தகா்ப்பதற்காக நுட்பமானதும் புதிய வடிவிலானதும் கடினமானதுமான பயிற்சிகளைத் தொடா்ச்சியாகப் பெற்றபடியிருந்தன.

உண்மையில் எதிரி சலிப்பூட்டும் போரையே முன்னெடுத்தான். இப்படியான சலிப்பூட்டும் களத்தில் எப்போதும் போா் வீரா்களுக்கு நம்பிக்கையையும் புதுத்தெம்பையும் ஊட்டவல்லவை வெற்றிகரமான வலிந்த தாக்குதல்கள் மட்டுமே. ஆனால், பெரியதொரு வெற்றிக்கான எதிா்பாா்ப்புடன் தலைவா் எதிரியின் செயற்பாடுகளைப் பாா்த்திருந்தபோது, அதைச் சரியான முறையிற் புரிந்துகொண்டு, களத்தில் வேதனைகளையும் சோதனைகளையும் தாங்கியபடியே தன்னை மேலும் மேலும் புடமிட்டபடி இருந்தது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. தளபதிகளிலிருந்து அணிகளின் தலைவா்கள்வரை ஒவ்வொருவருமே தலைவரின் எதிா்பாா்ப்பிற்கு இணங்கப் படையணியைத் தயாா்ப்படுத்துவதற்காகத் தம்மை வருத்தி உழைத்தனா். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி மேலும் மேலும் வைரம் பெற்றது.

புதிய களச்சூழல் ஒரு வருடத்தைக் கடந்து தொடர்ந்தது. எது எப்படியிருந்தபோதும் தாம் பெற்றுவிட்ட உறுதியான பாதுகாப்புப் போர் வலுவை வன்னிக் களத்திற் புலிகள் சேனை நிரூபித்திருந்தது. விரிந்த களத்திற் புலிகளின் போர்ப்பலம் சிதறிக்கிடந்தது. அவர்களது படையணிகளை நகர்த்தமுடியாதபடி களத்தில் ஆங்காங்கே கவர்ந்திழுத்துவைத்திருப்பதற்காகச் சிங்களப் படைகள் இடையறாது செயற்பட்டுக்கொண்டேயிருந்தன. ஆயினும் சிங்களம் மேற்கொண்ட படையெடுப்புக்கள் எல்லாமே இறுதியில் உறுதியாக முறியடிக்கப்பட்டன.

தலைவரின் திட்டங்களுக்கும் இறுதிக்கட்டளைக்குமாகப் போராளிகள் பயிற்சி பெற்றபடியே காத்திருந்தார்கள். தலைவர் எதிர்பார்த்துக் காத்திருந்த சூழல் உருவாகிக்கொண்டிருந்தது. உலகப் போரியல் வரலாற்றில் ஒப்பற்ற சாதனைகளைப் படைக்கப்போகும், தனது படைநகர்த்தல்கள் பற்றியே தலைவர் அவர்கள் இடையறாது சிந்தித்தபடியும் செயற்பட்டபடியும் இருந்தார். தன் தளபதிகளுடன் அடிக்கடி கூடி ஆராய்ந்தார். எப்போதும் போலவே அவர்களது ஆலோசனைகளையும் பெற்றுக்கொண்டார்.

* * *

அப்போதுதான் எதிரி களத்தில் உச்சக்கட்டமானதொரு நெருக்கடி நிலையைத் தோற்றுவித்தான். ஒருபெரும் சரித்திரப் படைப்பிற்கான மேகம் கருக்கொண்டது.

எமது பாதுகாப்பு நிலைகளை உடைத்துத் தான் ஈடுபட்ட ஆக்கிரமிப்பு முயற்சிகளில் படுதோல்வியடைந்த எதிரி, இம்முறை புதியதொரு தந்திரத்தை வகுத்தபடி களமிறங்கினான். தனது முன்னணிப் படைவலுவுடன் மட்டுப்படுத்தப்பட்ட நடவடிக்கையை மேற்கொண்டு, எமது முன்னணி நிலைகளின் குறித்த பகுதிகளைக் கைப்பற்றி, அதிக ஆளிழப்பை ஏற்படுத்தி, அப்பகுதிகளைத் தொடர்ந்தும் தக்கவைத்திருந்து, படிப்படியாக நடவடிக்கையை முன்னெடுப்பதே எதிரி வகுத்த புதிய திட்டம். 14.10.1999 அன்று 'வோட்டஷெட்' என்ற பெயருடன், எதிரி தன் இலக்கில் முதல் வெற்றியை ஈட்டினான். கிளிநொச்சியில் நிலைகொண்டிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, எதிரி நடவடிக்கையில் ஈடுபட்ட அம்பகாமப் பகுதிக்கு உடனடியாகவே தலைவர் அவர்களால் அனுப்பப்பட்டது. அப்போது எதிரி தனது இரண்டாவது கட்ட நடவடிக்கையை முன்னெடுத்தான்.

அடுத்து என்ன நடக்கப்போகிறது? அனைவராலும் எழுப்பப்பட்ட கேள்வி அதுவே. வன்னியின் எஞ்சிய நிலப்பகுதிகளும் சிங்களப் படைகளிடம் வீழ்ந்துவிடப் போகின்றனவா? இவ்விடத்தில் அதுவரை நிலவிய இன்னொரு கள யதார்த்த நிலையையும் நோக்கவேண்டும். வன்னியில் எம்மால் மேற்கொள்ளப்பட்ட ஒவ்வொரு பாரிய வலிந்த தாக்குதலின் பின்னரும் சிங்களப் படைகள் தமது தோல்வியை மூடிமறைக்க இன்னொரு முனையில் முன்னேறி புதிய பகுதியொன்றைக் கைப்பற்றுவதில் வெற்றிபெற்று வந்தன. உதாரணமாக, 'ஓயாத அலைகள் - 02' மூலம் நாம் கிளிநொச்சி நகரை மீட்டுப் பெருவெற்றியைப் பெற்றிருந்தவேளை மாங்குளத்திற்கு அருகில் நிலைகொண்டிருந்த படைகள் சில கிலோமீற்றர்கள் முன்னேறி மாங்குளச் சந்தியைக் கைப்பற்றின. அப்போது சிறீலங்காவின் பிரதிப் பாதுகாப்பமைச்சர் "புலிகள் ஓர் இடத்தைக் கைப்பற்றினால் இன்னோரிடத்தைக் கைப்பற்ற எம்மால் முடியும்" எனச் சூளுரைத்தார். அவரது இக்கூற்று அப்போதைய வன்னியின் களச்சூழலில், புலிகளால் ஒரு வலிந்த தாக்குதல் மேற்கொள்ளப்பட்டு ஓரிடம் மீட்கப்படும்போது சிங்களப் படைகளால் இன்னொரு கேந்திர முக்கியத்துவம்வாய்ந்த பகுதியைக் கைப்பற்ற முடியுமானால், புலிகளால் தொடர்ந்தும் வன்னிக் களத்தில் நின்றுபிடிக்கமுடியுமா என்ற ஐயத்தைப் பலரிடமும் தோற்றுவித்தது.

இப்படிப்பட்டதொரு சூழலில் எமது தலைவர் அவர்களின் உள்நோக்கம் பலராலும் பல கோணங்களிலும் துருவித்துருவி ஆராயப்பட்டவண்ணமிருந்தது. உண்மையில் நடக்கப்போவதை எவராலும்

ஊகித்துக்கொள்ள முடியவில்லை. தனது போர் ஏற்பாடுகளைச் சிங்களத்தால் குலைத்துவிட முடியாதபடி பார்த்திருந்த தலைவர் பரபரப்பு மிகுந்த அவ்வேளையில் தனது பெரும் போர் நடத்தலுக்கு இறுதித் திகதி குறித்தார்.

1999 நவம்பர் 01ஆம் நாள் வரலாற்றுப் புகழ்மிக்க ஓயாத அலைகள் 03 படைநடவடிக்கையின் நாயகர்கள் காரிருளினூடாக ஒட்டுசுட்டான் மண்மீது நடந்துகொண்டிருந்தனர். நீண்டு பரந்து விரிந்து செல்லப்போகும் அந்தச் சாதனை நடவடிக்கையின் முதல் இலக்குகளாக ஒட்டுசுட்டானி லும் நெடுங்கேணியிலும் நிலைகொண்டிருந்த எதிரியின் படைத்தளங்களை வீழ்த்தவேண்டுமென்பதே எமது தலைவரின் திட்டமாகும்.

'ஓயாத அலைகள் - 03' இன் பிரதான சமரணிகளுட் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி இணைக்கப்பட்டிருந்தது. கேந்திர முக்கியத்துவம் வாய்ந்ததும் தலைவரின் சமர்த்திட்டத்தின்படி கட்டாயம் வெல்லப்படவேண்டியதுமான ஒட்டுசுட்டான் படைத்தளத்தை வீழ்த்தும் பணி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் ஒப்படைக்கப்பட்டது. களத்தில் நேர்நின்று, நேர்த்தியாக வழி நடத்தி, அந்த முதல் வெற்றியைப் பத்திரமாய் ஈட்டித் தரும் நம்பிக்கைக்குரிய பொறுப்பை எமது சிறப்புத் தளபதி லெப். கேணல் ராகவனிடமே தலைவர் ஒப்படைத்தார்.



பெரும் சமருக்கான முதலுடைப்பை நிகழ்த்தப்போகும் எமதணிகளுக்கு திட்டத்தை விளங்கப்படுத்துகிறார் சிறப்புத் தளபதி லெப். கேணல் ராகவன்

அன்று அதிகாலையில் வெடித்த சமரிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஒட்டுசுட்டான் படைத்தளம்மீது மின்னலெனப் பாய்ந்தது. தலைவன் வகுத்த திட்டங்களை ஒவ்வொன்றாக நிறைவு செய்தபடி முன்னேறியது. ஆனால், தலைவரின் எதிர்பார்ப்பிற்கு உரியவனும் போராற்றலும் அனுபவமும் நிறைந் தவனுமான தன் சிறப்புத் தளபதி லெப். கேணல் ராக வனையே படையணி தன் முதல் வித்தாக அர்ப்பணித்தது. அதனைத் தொடர்ந்து அணிகளை வழிநடத்தி எதிரியரண்களுக்குள் நுழைந்து முன்னேறத் தொடங்கியவேளை, எத்தனையோ சமர்களின் வெற்றிக்காய்த் தன் உழைப்பைச் செலுத்தியவனும் எமது படையணியின் தாக்குதல் தளபதிகளுள் ஒருவனுமான லெப். கேணல் நியூட்டனையும் படையணி இழந்தது. அந்தத் தளபதிகளும் அவர்கள் வளர்த்தெடுத்த போராளிகளும் தம் உயிர்கொண்டு வழிசமைக்கச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தீரமுடன் போரிட்டு எதிரிகளை வீழ்த்தியபடி முன்னேறியது. படையணியின் அப்போதைய துணைத்தளபதி லெப். கேணல் ராஜசிங்கன் தொடர்ந்து வழிநடத்திச் சென்றார்.

ஆர்ப்பரித்தெழுந்த புலிகளின் பேரலை எதிரியின் படைத்தளங்களைச் சின்னாபின்னப்படுத்தியது. அதன் ஆர்ப்பரிப்பு உலகின் மூலைமுடுக்கெல்லாம் எதிரொலித்தது. புலிகளியக்கத்தின் போர்வீரமும் எமது தலைவர் பிரபாகரனின் மதிநுட்பம்வாய்ந்த போர்க்கலையும் எங்கும் பேசப்பட்டன. ஒட்டுசுட்டானிலிருந்து ஒலுமடு, கரிப்பட்டமுறிப்பு, கனகராயன்குளம், புளியங்குளம் வரையிலான படைத்தளங்கள் வீழ்த்தப்பட்டன. புலிகளின் முதல் தாக்குதல் தளபதி சீலனின் நாமத்தினின்றும் ஊற்றெடுத்த வீரத்தை எங்கும் நிலைநாட்டியபடி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வீரர்கள் போரிட்டார்கள்.

சமர்த்திட்டத்தின் முதற்கட்டம் நிறைவுசெய்யப்பட்டது. போர்க்களத்தில் ஓயாது சுழன்றடித்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்குச் சிறப்புத் தளபதியாக லெப். கேணல் ராஜசிங்கம் / ராஜன் நியமிக்கப்பட்டார். 'ஓயாத அலைகள் - 03' இன் 2ஆம் கட்டம் மன்னார் மண்ணை மீட் கப் புறப்பட்டபோது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி அங்கு அனுப்பப்படவில்லை. முதற் கட்டச் சமரில் மீட்கப்பட்ட பகுதியில் எதிரி மீண்டும் நுழைவதைத் தடுப்பதற்கான வலுவான, நிலையிலான பாதுகாப்புப் பணியில் அது ஈடுபடுத்தப்பட்டது. பின்னர், மன்னாரிற் சமர் முடிந்த சில வாரங்களில் அப்பகுதியின் பாதுகாப்புப் பணிக்காக அங்கு அனுப்பப்பட்டது.

மீண்டும் போரலை மூர்க்கங்கொண்டது. அது அனைவரினதும் எதிர்பார்ப்பைப் பெற்றதாய்ச் சிங்கத்தின் 'ஆனையிறவுப் பெருங்குகை' மீது வீசியது. 'ஓயாத அலைகள் - 03' ஐ உலகப் போரியலின் சிகரத்தில் ஏற்றிவைத்த, ஆனையிறவு இராணுவ வலயத்தை வெற்றிகொள்வதற்கான அந்தச் சமர் 10.10.99 அன்று அதன் முக்கியமான படைத்தளங்கள்மீது தலைவர் அவர்களால் தொடக்கிவைக்கப்பட்டது. அப்போதும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை மன்னாரிலேயே நிறுத்திவைத்திருந்தார் தலைவர். அந்தப் புகழ்பூத்த சமர் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பங்குபற்றாமலேயே தொடர்ந்துகொண்டிருந்தது. தலைவரோ முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சமருக்காகவே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைச் சண்டைகளில் ஈடுபடுத்தாது நிறுத்திவைத்திருந்தார். அப்போது அந்தப் பணிக்காகவே படையணி அவரால் அழைக்கப்பட்டது. ஆனையிறவின் முன்கவசமான பலம்வாய்ந்த பரந்தன், உமையாள்புரம் படைத்தளங்கள் மீது ஒரு நேரடியான தாக்குதலுக்குத் தலைவர் கட்டளையிட்டார். தளபதி கேணல் தீபன் அவர்களை அச்சமர்முனைக்கான கட்டளைத் தளபதியாக நியமித்து சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியையும் அவரிடம் ஒப்படைத்தார்.

எதிரியின் இரண்டு பிரிகேட்டுகள் நிறுத்திவைக்கப்பட்டிருந்த வலுவான தளங்களாகப் பரந்தன் உமையாள்புரப் படைத்தளங்கள் இருந்தன. அவை ஆனையிறவு மையத்தளத்தின் முன் கவசமாக இருந்தன. பரந்தன் உமையாள்புரப் படைத்தளங்கள் எம்மிடம் வீழ்ச்சியடையுமாயின் ஆனையிறவு மையத்தளத்தை எமது படையணிகள் நெருங்கிவிடும். அதனால் ஆனையிறவின் பாதுகாப்பிற்கு அச்சுறுத்தலேற்படுவதோடு அதன் நடவடிக்கைகளும் முடங்கிப்போகும். ஆனையிறவு யாழ்க் குடாநாட்டின் பாதுகாப்பிற்கான கேந்திரமுக்கியத்துவம் வாய்ந்த இடமாகையாலும் ஆனையிறவின் மீதான தாக்குதல்கள் ஏற்கனவே தொடங்கப்பட்டிருந்தமையாலும் பரந்தன் உமையாள்புரப் படைத்தளங்களில் இராணுவத்தினர் முழு உசார்நிலையில் வைக்கப்பட்டிருந்தனர். ஓயாத அலைகள் 03 நடவடிக்கை ஒட்டுசுட்டானில் ஆரம்பிக்கப்பட்ட சமயமே பரந்தன் படைத் தளத்தில் இருந்த எதிரி தம்மீது தாக்குதல் நடத்தப்படக்கூடிய வழிவகைகளை ஆராய்ந்து தீர் மானித்து, அதன் அடிப்படையில் ஒத்திகைப் பயிற்சிகளைச் செய்துமுடித்துக் காத்திருந்தமை பரந்தன் படைத்தளம் வீழ்ந்தபின் எமக்குக் கிடைத்த ஆவணங்களிலிருந்து தெரியவந்தது.

பரந்தன் படைத்தளம்மீதான சமர் எமது வழமையான சமர் மரபுகளிலிருந்து வித்தியாசமாகவே திட்டமிடப்பட்டிருந்தது. வரவை எதிர்பார்த்திருந்த ஒரு படைத்தளம்மீது எம்மிடமுள்ள மரபுப்போர் ஆயுதங்களைப் பயன்படுத்தி, போராளிகளின் வீரத்தை மூலதனமாகக்கொண்டு, முதன்முதலில் ஒரு

பகற்சமரைத் தொடக்க நாம் காத்திருந்தோம். எதுவும் புலிகளாற் சாதிக்கப்படக்கூடியதே என்பதைத் தமிழீழப் போரரங்கில் நிகழ்த்திக் காட்டுவதற்காகத் தலைவரால் தரப்பட்ட சந்தர்ப்பமாகக் கருதி, சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியும் ஏனைய படையணிகளும் களத்தில் இறுதித் தயார்ப்படுத்தலில் ஆர்வமுடன் இறங்கியிருந்தன.

அந்தச் சமர்க்களத்தில் எதிரித் தளம்மீது முதலில் மூன்று முனைகளூடாகத் தாக்குதலை முன்னெடுப்பதென முடிவுசெய்யப்பட்டது. அவற்றுள் ஏ-9 வீதியூடாக எதிரித் தளத்திற்கு நேராக ஒரு முனையும் பரந்தன் - முல்லை வீதியிலிருந்து எதிரிக்குப் பக்கவாட்டமாக ஒரு முனையுமாக இரு பிரதான முனைகள் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் ஒப்படைக்கப்பட்டன. மாலதி படையணியின் அணிகளும் இதிற் கலந்துகொண்டன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தளபதி லெப். கேணல் விமல், சிறப்புத் தளபதி லெப்.கேணல் ராஜசிங்கம் ஆகியோர் தலைமையேற்று வழிநடத்தினர். மற்றைய மூன்றாவது முனை புலனாய்வுத்துறைத் தாக்குதலணியிடம் லெப். கேணல் அறிவின் தலைமையில் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

அன்று 1999 மார்கழி 16ஆம் நாள். எமது காவல்நிலைகளுக்கு முன்னாற் கம்பிவேலிகள் நீக்கப்பட்டு, தடைகள் வெட்டியகற்றப்பட்டு, மிதிவெடிகள், கண்ணிவெடிகள் எடுக்கப்பட்டு முன்னேறுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டாயிற்று. எமது அணிகள் உடைப்பை ஏற்படுத்த இருந்த எதிரியின் நிலைகள்மீது கேணல் கிட்டுப் பீரங்கிப் படையணியின் பீரங்கிகள் தமது இலக்கைச் சீர்செய்து கொண்டன. எல்லா ஏற்பாடுகளையும் செய்துமுடித்துத் தனது கட்டளைப் பணியகத் தில் தொலைத்தொடர்பு கருவிகளுக்கு முன்னாற் காத்திருந்த கட்டளைத் தளபதி கேணல் தீபனின் தொலைத்தொடர்பு அலைவரிசையிற் குறுக்கிட்டான் எதிரியின் உயர் அதிகாரியொருவன். அவன் தளபதி தீபனுடன் உரையாடிய சில வரிகள் இங்கே குறிப்பிடப்படவேண்டியவை.

''உன்ர 5-2 வினை (தளபதி ராகவனின் சங்கேதப் பெயர்) ஒட்டுசுட்டானில போட்டிட்டம் இனி என்ன செய்ய ஏலுமெண்டு வந்திருக்கிறாய்''

தளபதி தீபனிடம் கேட்டான் அந்த எதிரித் தளபதி. தளபதி லெப். கேணல் ராகவன் கிளிநொச்சியில் நிலைகொண்டு சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைத் தலைமை ஏற்று நடத்திய சமர்கள்மூலம் எதிரி அவரை நன்றாக அறிந்துவைத்திருந்தான்.

''அதுக்குத்தான் இப்ப உன்னட்ட வந்திருக்கிறம். என்ன செய்யப்போறமெண்டு இருந்து பார்'' தளபதி தீபன் திருப்பிச்சொல்ல,

''எங்களை ஒட்டுசுட்டான் ஆமியெண்டு நினைச்சுப்போட்டியோ'' என்று சவால்விடுத்தான் எதிரித் தளபதி.

''கொஞ்சம் இருந்துபார். பிறகு உனக்குக் கனக்க விளங்கும்'' என்று நிதானமாகப் பதிலளித்துத் தொடர்பைத் துண்டித்தார் தளபதி கேணல் தீபன் அவர்கள்.

சரியாகப் பகல் 1.00 மணி. மழை பெய்து அப்போதுதான் ஓய்ந்திருந்தது. எங்கும் வெள்ளக்காடாய்க் கிடந்தது. பீரங்கிகள் முழங்க, வேட்டுக்களைத் தீர்த்தபடி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தடைகளை உடைக்கும் அணி தனக்குத் தரப்பட்ட பகுதியால் முதலில் முன்னேற, மூர்க்கமாய் வெடித்துவிட்டது அந்த விடுவிப்புச்சமர். அந்தப் பட்டப்பகற் சண்டையில் எதிரிக்கு நேர்நின்று மோதி வீரச்சமர்புரிந்து, அவனை வெற்றிகொண்டு, எதிரித் தளத்தினுள் நுழைந்தனர்

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முதலாவது அணியினர். லெப். கேணல் ராஜசிங்கனின் முனையிற் சண்டை கடினமாக இருந்ததால் வீண் இழப்புக்களைத் தவிர்க்கும் பொருட்டு, லெப். கேணல் அறிவின் தலைமையில் வென்றெடுக்கப்பட்ட பாதையூடாக அந்த அணிகளை நகர்த்த முடிவுசெய்தார் தளபதி கேணல் தீபன். பின்னர் அந்த முனையினூடாக உட்புகுந்த லெப். கேணல் ராஜசிங்கனின் அணி தளத்தின் கிழக்குப்பகுதி முன்காப்பரண்களைத் தகர்த்தெறிந்தபடி முன்னேறத் தொடங்கியது. அப்பகுதியின் மற்றைய அணிகள் கண்டி வீதியால் முன்னேறிய லெப். கேணல் விமலின் அணிகளை நோக்கி முன்னேறின. இரு முனைகளூடாகவும் முன்னேறிய அணிகள் இருட்டுவதற்குள் தமக்குள் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டன. மறுநாள் 11.00 மணிவரை தொடர்ந்துகொண்டேயிருந்த சமரில் எதிரியின் எட்டாவது கஜபாகு றெஜிமண்ட் (8GR), ஆறாவது கெமுனு வோஜ் பற்றாலியன் (6GW) ஆகியவற்றின் தலைமையகங்கள் உள்ளிட்ட பரந்தன் சந்தித்தளம் எமது வீரர்களிடம் வீழ்ச்சியடைந்தது.

இருபதாம் திகதிவரை தொடர்ந்த உக்கிர சமர்களினாலும் எமது படையணி வீரர்களின் தந்திரோபாயச் செயற்பாடுகளினாலும் எதிரி தோற்றுப்போக, பரந்தன் இரசாயனத் தொழிற்சாலையில் அமைந்திருந்த எதிரியின் 54-4வது பிரிகேட் தளம் வீழ்ச்சிகண்டது. மாண்டவர்கள் போக எஞ்சியவர்களை விரட்டி அடித்தார்கள் எமது வீரர்கள். “எங்களை என்ன ஓட்டுசுட்டான் ஆமி யெண்டோ நினைத்தாய்” என்று இறுமாப்புப்பேசிய அந்தச் சிங்களத் தளபதி எப்படித்தான் ஓட்ட மெடுத்திருப்பானோ? இப்போது எதிரியின் 54 – 5வது படையணி உமையாள்புரத்தளத்தில் எமது வரவுகாத்து நின்றது.

மீண்டும் 27ஆம் திகதி. பரந்தன் சமர்முனையில் எமது படையணிகள் தமது அடுத்த இலக்குநோக்கி முன்னேறத் தயாராகின. இம்முறையும் எமது படையணியின் வீரர்களும் ஏனைய படையணிகளைச் சேர்ந்த வீரர்களும் லெப். கேணல் ராஜசிங்கம், லெப். கேணல் விமல், லெப். கேணல் அறிவு ஆகியோரின் தலைமையில் மும்முனைகளில் முன்னேறினார்கள். ஆனையிறவு மையத்தளத்தின் பாதுகாப்பின் இன்றியமையாத் தேவையின்பொருட்டு சிறீலங்காவின் படைவீரர்கள் எமது வீரர்களின் மூர்க்கமான தாக்குதல்களையும் எதிர்கொண்டபடி விடாப்பிடியாகச் சண்டையிட்டார்கள். ஆனால், அப்போதும் எதிரி தோல்வியையே பெற்றான். அவனது 54 - 5வது பிரிகேட் தளமும் வீழ்ச்சிகண்டது. தலைவரால் வழங்கப்பட்ட முதற்கட்டப் பணிகள் நிறைவுசெய்யப்பட்டன.

16 நாட்கள் ஆனையிறவுத் தளத்துடன் நேர் நின்று மோதி, அதன் முன்கவசங்களான இரு பிரிகேட் தளங்களை வீழ்த்தி, அதன் அருகே உறுதியாக முன்னேறியிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஆற்றிய காத்திரம்மிக்க சமர்ப்பணியும் அதன் தளபதிகளின் நேர்த்தியானதும் நுட்பமானதுமான வழிநடத்தலும் வெற்றியின் முதுகெலும்பாயின.

‘ஓயாத அலைகள் - 03’ இன் மூன்றாங்கட்டச் சமர், ஆனையிறவின் கட்டைக்காடு, வெற்றிலைக்கேணி விநியோகத் தளங்களையும் பரந்தன் - உமையாள்புர முன்கவசங்களையும் பக்கவாட்டாக யாழ்க் குடாநாட்டினுள் பூநகரியூடாகக் கேரதீவு அறுகுவெளித் தளங்களையும் வெற்றி கொண்டு நிறைவுபெற்றது. சமர் முடிந்ததும் முதலில் உமையாள்புரத்திற் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, பின்னர் அடுத்த கட்டத் தேவைகளின் பொருட்டு இயக்கச்சி, முகாவிற் பகுதிக்குத் தலைவர் அவர்களால் அனுப்பப்பட்டு, அங்குப் பாதுகாப்புப் பணியிலும் வேவுப் பணியிலும் ஈடுபட்டது.

ஆனையிறவிற்கான அபாயச் சங்கு ஊதப்பட்டாயிற்று. அது இலங்கைத் தீவில் மட்டுமல்ல அகிலம் எங்கணுமே எதிரொலித்தபடியிருந்தது. சிறீலங்காவின் போரிடும் ஆற்றலுள்ளவர்களைக்கொண்டதெனக் கருதப் படும் படையணிகள் எல்லாமே ஆனையிறவிற் குவிக்கப்பட்டுவிட்டன.



பரந்தன் களத்திற் காயமுற்றும் சண்டையை வழிநடத்தும் அணித்தலைவன்

அனைத்தும் ஒருங்கிணைக்கப்பட்டு, ஆனையிறவில் திரட்சிபெற்றிருந்த சிறிலங்காவின் போர்வலுவை அடியோடு சாய்ப்பதற்கான பெரும் திட்டமிடல் ஒன்றில் ஈடுபட்டிருந்தார் எமது தலைவர். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி களத்தில் எதிரியின் வரவை முறியடிக்கும் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டிருக்க, ஏனைய படையணிகளைச் சேர்ந்த அணிகளுக்கு தலைவர் நேரடிக் கண்காணிப்பிற் பயிற்சிகள் வழங்கப்பட்டுக் கொண்டிருந்தன.

2000 மார்ச் 26ஆம் நாளை அதிசய நாளாய் உலகிற்கு அளித்தது தமிழீழம். ஆனையிறவை வீழ்த்துவதற்கான போர்த்-திட்டத்தின் தந்திரோபாய நகர்வுகளை முடித்துக்கொண்ட தலைவர் அதன் மூலோபாய நகர்வை அதிசயிக்கத்தக்க வகையில் அன்றுதான் தொடக்கிவைத்தார். உலகப் போரியற் சாதனைகளில் ஒன்றாய்க் குறிப்பிடப்பட்ட வரலாற்றுப் புகழ்மிகு தரையிறக்கத்தின்மூலம், ஆனையிறவுப் போர்க்களத்தின் இதயச் சமரான இத்தாவிற் சமர்க்களத்தினுட் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பிரசன்னமாகியது. சிறீலங்காவின் ஆயிரக்கணக்கான இராணுவத்தினரைக கொண்ட பல முன்னணிப் படைகள் எரிமலைக் குழம்பெனக் குமுறியபடியிருந்த அந்தக் கொடிய பூமியுள் ஊடுருவிய புலியணிகளுக்குத் தளபதியாகத் தலைவனின் போர்த்திட்டங்களை நடைமுறைப்படுத்தும் ஆற்றல்மிகு தளபதியான மூத்ததளபதி கேணல் பால்ராஜ் நியமிக்கப்பட்டார். அவரின் வலுவான தூண்களுள் ஒன்றாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உறுதியாய் நிமிர்ந்து நின்றது. சிறப்புத் தளபதி லெப். கேணல் ராஜசிங்கனின் தலைமையில் அந்தப் பூமியுள் நுழைந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் போர்வீரன் ஒவ்வொருவனும் எதிரிமீது எரிமலையாய் வெடிக்கும் திடம் கொண்டிருந்தான்.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் முக்கிய பணிகள் தலைவர் அவர்களால் ஒப்படைக்கப்பட்டிருந்தன. அவை வெற்றிகரமாக நிறைவேற்றப்படு வதிலேயே நடவடிக்கையின் வெற்றி தங்கியிருந்தது.

நடவடிக்கையின் முதற்கட்டமாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் இரு அணிகள் அதன் துணைத்தளபதி லெப். கேணல் நேசனின் தலைமையில் முன்னரே குடாரப்புவில் தரையிறக்கப்படும். அந்த அணி ஒரு வெற்றிகரமான இரகசிய நகர்வை மேற்கொண்டு ஏ-9 வீதி வரை சென்று, மேஜர் கோபித், மேஜர் இலக்கியன் ஆகியோரின் தலைமையிலான இரு அணிகளாகப் பிரிந்து ஆனையிறவை நோக்கியும் யாழ்ப்பாணத்தை நோக்கியும் உள்தடுப்பு, வெளித்தடுப்பு அரண்களை அமைத்து

எதிரித்தளத்தைப் பிளந்து நிலைகொள்ளும். இந்த ஆரம்பச் செயல்களின் வெற்றிகளிலேயே அடுத்தகட்டங்களின் எதிர்காலம் தங்கிநின்றது. லெப். கேணல் நேசனின் அணிகள் வெற்றிகரமாகத் தம் பணியை முடித்து நிற்க, அடுத்ததாகத் தரையிறக்கப்படும் படைத்தொகுதிகளுடன் தரையிறங்கும் சிறப்புத் தளபதி லெப். கேணல் ராஜசிங்கன் தனது மேஜர் நகுலன், மேஜர் றோய் ஆகியோரின் அணிகளுடன் நகர்ந்துவந்து இணைப்பை ஏற்படுத்துவார். எல்லாப் படையணிகளையும் இணைத்து கேணல் பால்ராஜ் அவர்கள் கண்டி வீதியிலிருந்து பெருங்கடல் வரையான நீண்ட பகுதியில் எதிரித் தளத்தைப் பிளந்து, உறுதியான, உள்தடுப்பு, வெளித்தடுப்பு அரண்களை அமைத்து, வியூகத்தை ஏற்படுத்தவேண்டும். ஆனையிறவுத் தளத்தின் பிரதான விநியோகப் பாதையைத் துண்டித்து, எதிரியின் போர்ப்பலத்தைக் கவர்ந்து சிதறடித்தபடி நிலைமைக்கேற்ப முன்னகர்வுகளை மேற்கொள்ளவேண்டும். தலைவர் அவர்களால் இறுதிக்கட்ட நகர்வுகள் மேற்கொள்ளப்பட்டு ஆனையிறவுத்தளம் வீழ்த்தப்படும் வரை இத்தாவிற் களத்திற் போரிடவேண்டும்.

எதிரியை மட்டுமன்றி இந்த அகிலத்தையே வியக்கவைத்த போர்த்திறனையும் மனத் திடத்தையும் எமது வீரர் இத்தாவிற் போர்க்களத்தில் வெளிப்படுத்தினர். அந்த யுத்த பூமியில் கடினம் நிறைந்த கண்டிப் பிரதான வீதியை நேரடியாகக் காவல்காத்தபடி, அனைத்துப் பகுதிகளிலும் நடைபெற்ற அத்தனை படையெடுப்புகளின் முறியடிப்புகளிலும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி முதுகெலும்பாய் நின்றது. சிறீலங்காவின் ஒட்டுமொத்தப் போர்வலுவும் திரண்டு நின்று அந்த இத்தாவில் மூலோபாய நகர்வு வலயத்தை உடைத்துவிட முழுமூச்சாய் நின்றபோதும், அத்தனையையும் முறியடித்து வென்றுகாட்டிய சாதனைகளிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் பெருமைக்குரியதும் முக்கியத்துவம் வாய்ந்ததுமான சண்டைகளை மட்டுமே இங்குக் குறிப்பிடுகிறோம்.

இத்தாவிலில் நாம் நிலையெடுத்திருந்த இரண்டாம் நாள், மார்ச் 28ஆம் திகதி மாலை 4.00 மணி. களத்தில் எமது வரவை நன்கு அறிந்திருந்தாலும் அங்கு நாம் கொண்டிருந்த போர்ப்பலத்தை நன்கு கணிப்பீடு செய்யாத எதிரி, கண்டி வீதி வழியாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி நிலைகொண்டிருந்த பகுதிக்கு நேராக ஒரு படையெடுப்பைச் செய்தான்.

ஆனையிறவிலிருந்து மூன்று முனைகளாற் புறப்பட்ட எதிரி ராங்கிகள் எமது காவலரண் களை ஏறி மிதித்தன. தனது படைக்கலச் சக்தியை ஒன்றுதிரட்டியிருந்த எதிரி எமது நிலை களை உடைத்துவிட்டான். தரையிறங்கி ஒருநாள் மட்டுமே கடந்தநிலையில் அதிகம் பலப்படுத் தப்பட்டிராத அரண்களிலிருந்தவாறே எதிரியின் பீரங்கிகளினதும் ராங்கிகளினதும் செறிவான தாக் குதல்களுக்கு முகங்கொடுத்து எமது வீரர்கள் போரிட்டார்கள். நிலைகளை உடைத்து முன்னேறிய எதிரியைத் தடுத்து நிறுத்துவதில் வெற்றி பெற்ற எமது வீரர்கள் முறியடிப்பில் இறங்கினார்கள். மேஜர்கள் ஐயன், கமல், பல்லவன் ஆகியோரின் தலைமையிலான மூன்று முறியடிப்பு அணிகள் களமிறக்கப்பட்டன. இரவு 11.00 மணிவரை தொடர்ந்த கடும்சமரின் பின் எதிரி விரட்டியடிக்கப்பட்டான். அன்றைய நாளில் எதிரி தான் எதிர்பார்த்திராத பலத்த இழப்புக்களைச் சந்தித்தது மட்டுமல்லாது களத்தில் நாம் கொண்டிருக்கக்கூடிய போர்ப் பலத்தின் தன்மையையும் உணர்ந்துகொண்டான்.

எமது வீரர்கள் இரவு முழுவதும் தூங்காது விழித்தேயிருந்தனர். இரவு விடிந்தது. மீண்டும் போர்முழக்கம் செய்தான் எதிரி. அதிகாலைப் பொழுதில் ராங்கிகளின் பேரிரைச்சலும் வாகனங்களின் விதம்விதமான உறுமல்களும் அங்குப் பெரும் பிரளயம் வெடிக்கப்போவதை முன்னறிவிப்புச் செய்தன. எதிரியின் பீரங்கிகள் முழங்கத்தொடங்கின. எங்கும் புழுதிமண்டலம் கிளம்பியது. இம்முறையும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி காவல்காத்த அதே பகுதிதான் எதிரியின் குறியிலக்காக அமைந்தது. எறிகணைகள் கிளறிவிட்ட புழுதியூடாகப் பேரிரைச்சலுடன் எதிரியரண்களிலிருந்து ராங்கிகள் புறப்பட்டு வந்தன.

துப்பாக்கிகள் முழங்கின. எமது பீரங்கிகளும் எதிரிமீது குண்டுமாரி பொழிந்தன. கண்களின் முன்னாலேயே எதிரி நெருங்கி நெருங்கி வந்தான். தத்தமது அரண்களினுள்ளேயே அசையாது நின்று போரிட்டனர் எம் வீரர். எதிரி மூன்று முனைகளில் உடைத்திருந்தான். பல்லவன், வீரன், அமுதன் ஆகியோரின் அணிகள் எதிரியால் தனித்தனியே கூறிடப்பட்டன. ஒரு முனையில் எதிரியின் ராங்கி நேராய்த் தாக்கியபடி வந்துகொண்டிருக்க உறுதிதளராது தன் காப்பரணிலேயே நின்று போரிட்ட மேஜர் ஐயன் இறுதியில் அந்த ராங்கியால் நெரியுண்டு உயிர்விடும் வரை எதிரியை எதிர்த்துப் போரிட்டான். அவ்வாறே அவனது அணியின் அத்தனை வீரர்களும் போரிட்டனர்.

சமர் நீண்டுகொண்டே போனது. பகல் கடந்து மாலை நேரம் ஆயிற்று. தளபதி கேணல் பால்ராஜின் இடையறாத வழிநடத்தலாற் களநிலை சீர்செய்யப்பட்டது. எதிரியாற் சூழப்பட்டிருந்த நிலையிற் பல்லவன், அமுதன், வீரன் ஆகியோர் தத்தமது அணிகளுடன் உள்ளிருந்தபடி போரிட்டுக்கொண்டேயிருந்தனர். கண்டிவீதியின் மேல் எதிரிகள் நடுவே வீரனுடன் நின்ற இயல்வாணனின் PK அணியினர் வீரப்போர் புரிந்து எதிரிகள் பலரைக் கொன்றொழித்தபடி எதிரிக்குச் சவாலாக நின்றனர். கேணல் பால்ராஜின் கட்டளைப்படி படையணிச் சிறப்புத் தளபதி லெப். கேணல் ராஜன் முறியடிப்பு அணிகளை ஒழுங்குசெய்தார். உள்ளிருந்து போரிட்ட வீரர்கள் எதிரி மீது துல்லியமான பீரங்கிச் சூட்டிற்கு வழிசமைத்தபடியிருக்க, முறியடிப்பிற்கான வாய்ப்பானதொரு சூழல் உருவாக்கப்பட்டது. மேஜர் இலக்கியன், மேஜர் சிந்து ஆகியோரின் முறியடிப்பு அணிகளுடன் அவற்றிற்குத் தலைமையேற்று களமிறங்கினார் மேஜர் கோபித். அப்போது மாலை 4.00 மணி.

முறியடிப்புச்சமர் உக்கிரம் பெற்றது. மாலை 6.00 மணிவரை இரண்டு மணித்தியாலங்களாக நீண்ட சமரில் எதிரிக்கு ஓட்டமெடுப் பதைத் தவிர வேறு வழி யெதுவுமே இருக்கவில்லை. அன்றேல் அவர்களின் சாவிற்கான பாதைமட்டுமே களத்தில் விட்டுவைக்கப்பட்டிருந்தது. இத்தாவில் மண்ணிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வீரம் விதைத்து மெச்சத்தக்க சாதனைகள் படைத்தது. அன்று எமது படையணி புரிந்த வீரச்சமரில் எதிரிகள் இருநூற்றைம்பது பேர்வரை மாண்டுபோக எழுநூற்றைம்பது பேர்வரையானோர் காயமடைந்தனர். ஏறக் குறைய ஆயிரம் போர்வீரர்களை இழந்த எதிரி தன்னைச் சூழ்ந்திருப்பது பேரபாயமே என்பதை முழுமையாக உணர்ந்தான்.



இத்தாவிற் சமர்க்களம் பலராலும் பேசப்பட்டது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் களச்சாதனைகள் ஏற்படுத்திய விளைவுகள் சகல மட்டங்களிலும் பரபரப்பை ஏற்படுத்தின. எதைச் செய்வதெனத் தெரியாது சிறீலங்காவின் படைத்துறையே குழம்பியபடி இருந்தது. ஆனாலும் முழுமையான தன் இயலாமையை எதிரியால் இன்னமும் உணர முடியவில்லை. நடைபெற்று முடிந்த இரண்டு நடவடிக்-

கைகளிலும் பலநூறு முன்னணி வீரர்களை இழந்துவிட்டபோதும் தான் பெரும் சாதனையொன்றை ஈட்டிக்காட்டுவதற்கு இதுவே வாய்ப்பான களம் என்று எதிரி இன்னமும் நம்பியிருக்கக்கூடும். அதனால்தான் வித்தியாசமான திட்டமிடலுடன் அடுத்த பெரும் நடவடிக் கைக்கு எதிரி தயாரானான்.

ஏப்ரல் 2ஆம் திகதி. வித்தியாசமான தந்திரோபாயத்துடன் பாரிய படைப்பலத்தைப் பயன் படுத்தியபடி எதிரி களத்தைத் திறந்தான். இத்தாவிற் சமர்க்களத்தில் நடந்த நெஞ்சை நெகிழ வைக்கும் சமர் அது. கேணல் பால்ராஜ் உடன் அங்கு நிலைகொண்டிருந்த அத்தனை வீரர்களும் எம் தேசத்தின்மீது அவர்களின் உயிரினும் மேலான பற்றுறுதியை வெளிப்படுத்தினர். நம்பிக்கை தளராத புலிகளின் உயரிய போர்ப்பண்பை அன்றுதான் எதிரி அத்தனை கொடுமையாய்ப் பரீட்சித்துப்பார்த்தான் போலும். இறுதியில் அதுவே அவனுக்கு ஒரு விசப்பரீட்சையாக மாறி புலி களின் உடைக்கமுடியாத உறுதிபற்றிய பெரிய படிப்பினையை அவனுக்குக் கொடுத்தது.

அன்றைய சமரில் எதிரி ஒரு உளவியல்சார் போர்த்திட்டத்தையே வகுத்திருந்தான். இத்தாவிலில் அதுவரை நடந்த நான்கு முயற்சிகளிலும் கற்றுக்கொண்டவற்றைவைத்து, இம்முறை தன் போர்ப்பலத்தை எம் வீரர்களின் மனங்களை வெல்லும் தந்திரத்துடன் பிரயோகித்தான். எமது வீரர்கள் நிலைகொண்டிருந்த வலயத்தின் பிற்பகுதியின் நீரேரியை அண்டிய பகுதியில் ஒரு ஊடறுப்பைச்செய்து, எமது வீரர்களிடையே அச்சத்தை உண்டுபண்ணி, தப்பிப்பிழைக்கும் மன நிலையை ஏற்படுத்துவதன்மூலம் அவர்களின் மன உறுதியைச் சிதைத்து வெற்றிபெற எதிரி திட்டமிட்டான். அதில் தன்னால் வெற்றிபெறமுடியுமென எதிரி உறுதியாகவே நம்பியிருப்பான். ஏனெனில், இப்படியான சந்தர்ப்பங்களில் உலகின் எத்தனை திறன் வாய்ந்த படையும் திணறிப் போகும் என்பது போரியல் விஞ்ஞானத்தின் முடிவு. எதிரிகூட இத்தகைய அனுபவங்களைப் பல சந்தர்ப்பங்களில் எம்மிடம் பெற்றிருந்தான். பல்லாயிரக்கணக்கான எதிரிகள் சூழ்ந்த அந்தக் களத்தில் அப்படியொன்று நிகழும் பட்சத்தில் எத்தகைய விளைவுகள் ஏற்படும் என்பதை இராணுவத் துறையுடன் தொடர்புடையவர்களால் மட்டுமே புரிந்துகொள்ளமுடியும்.

எதிரி ஆனையிறவுத் திசையிலிருந்து ராங்கிகள், கவசவாகனங்கள் சகிதம் மாலதி படை யணிப் போராளிகள் நின்ற பகுதியூடாக முன்னேறினான். அதுபோலவே யாழ்ப்பாணத் திசையிலிருந்தும் எதிரியணிகள் முன்னேறின. அந்தச் சமர் உச்சத்தைத் தொட்டது. சமரின் ஒரு கட்டத்தில் எதிரி திட்டமிட்டது போலவே நீரேரியை அண்டிய பகுதியில் எமது அணிகளை முற்றுகையிடத்தக்க வகையில் முன்னேற்றத்தைக் கண்டிருந்தான். எதிரிக் கவசவாகனங்கள், ராங்கிகள் எல்லாம் எமது வலயத்தினுட் புகுந்து திமிர்த்தனமாய் ஓடித்திரிந்தன. எதிரி வெற்றிபெற்றுவிட்டதாகவே உணர்ந்தான். வரலாற்றில் மிகக்கடுமையான பலப்பரீட்சை நடந்துகொண்டிருந்த அந்நேரத்தில், சிறீலங்காவின் உயர்மட்டங்களில் எப்படியான மகிழ்ச்சிப் பரபரப்பு நிலவியது என்பதைக் காட்டுவதற்கு, அவர்களுடன் நெருங்கிய தொடர்புகளை வைத்திருந்த பிரபல்ய இராணுவ ஆய்வாளர் ஒருவர் வெளியிட்ட கருத்தை இங்குக் குறிப்பிட விரும்புகிறோம்.

"அப்போது சிறீலங்காவின் உயர்மட்டங்களிடையேயும் சமரின் கட்டளைப்பீடத்திலும் பதற்றமும் பரபரப்பும் நிலவிக்கொண்டிருந்தது. எல்லோருமே தொலைபேசிவழியே கட்டளைப்பீடத்துடன் அடிக்கடி தொடர்புகொண்டபடியிருந்தனர். எப்போது அந்தச் செய்தி வரப்போகிறது? பால்ராஜூம் அவரது அணியினரும் உயிருடன் சரணடையப் போகின்றனரா? அல்லது அவர்கள் தம்மைத்தாமே மாய்த்துக்கொள்ளப் போகின்றனரா? அந்த முடிவிற்காக எல்லோருமே பரபரப்புடன் காத்திருந்தோம்."

வென்று வாழ்வதன்றி வேறெதுவும் நினைப்பவர்களா தமிழர்? புலிவீரர்களின் உயர்தியாகச் சமரைத் தலைமையேற்று நடத்திக் கொண்டிருந்தார் கேணல் பால்ராஜ். பெண் போராளிகள் தமது உயர் உளவுரணால் எதிரியுடன் மயிர்க்கூச்செறியும்படி சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். அணிகளை

ஒன்றிணைத்துக் கொண்டிருந்தார் தளபதி பால்ராஜ். அது எதற்காக என்பதை இன்னும் சிறிது நேரத்திற் பகைவன் அறிந்துகொள்வான். கண்டி வீதியில் நிறுத்தப்பட்டிருந்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் மேஜர் றோய் / கௌதமன் தலைமையிலான ஒரு வீரம்மிக்க முறியடிப்பு அணியைக் களத்திற்கு நகர்த்தி வருமாறு லெப். கேணல் ராஜனுக்குக் கட்டளை இட்டார் கேணல் பால்ராஜ். பெண் போராளிகளையும் இணைத்து அந்தக் களத்தின் நிலையை மாற்றியமைக்கும் வெறியோடு போரிற் குதித்தது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி.



எதிரிக்குகைக்குள்ளேயே குகையமைத்த இத்தாவிற் போர்க்களத்தில், முறியடிக்க வந்த எதிரியை முறியடிப்பதற்காக சிறப்புத் தளபதி ராஜன் சமரை வழிநடத்து கிறான்.

முறியடிப்புப் போர் உக்கிரம்பெற, தான் பெற்றெடுத்த வெற்றி-வாய்ப்பைக் கைநழுவவிடுவது பற்றிக் கற்பனைசெய்-வதையே விரும்பாத எதிரித்-தலைமை சமரை மேலும் மேலும் தீவிரப் படுத்தும் கட்டளைகளை வழங்கிய-படியிருந்தது. பாவம் எதிரிகள், கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போவதன் ஏமாற்றத்-தையும் அவமானத்தையும் அன்று உணரவேண்டிய-தாயிற்று. களத்திற் குதித்த எமது அணித்தலைவன் மேஜர் றோய் தன் வீரத்தால் அணிகளை வழிநடத்தி எதிரியை வென்றபடியிருந்தான். எம்மைச் சுற்றிவளைக்க வியூகமிட்டு வந்த எதிரி இப்போது எமது வியூகத்துட் சிக்கிவிட்டான். எதிரியின் வியூகத்திலுள்ளிருந்து மீண்டெழுந்து போரிடும் புலிகளுக்கு நிகரான போர் உறுதியைப் பகைவனுக்கு எவராலும் ஊட்டிவிட முடியவில்லை. அன்று இருளும்வரை நீடித்த சமரில் எஞ்சிய எதிரிகள் சிறீலங்காவிற்குக் கிடைத்த அவமானத்தைத் தம் தோள்களில் சுமந்தபடி ஓடித்தப்பினார்கள். புலிகளின் சரணடைவையும் பேரழிவையும் எதிர் பார்த்திருந்த பகைவர்கள் தம் வீரர்களின் அழிவுக்கணக்குகளால் அதிர்ந்துபோய் நின்றார்கள்.

வெறிகொண்ட பகைவர்களின் குருதியால் தோய்ந்துபோய்க் கிடந்தது இத்தாவில் மண். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி களத்தில் தன் பெருமைமிகு வரலாற்றின் பக்கங்களை வரைந் தது. உறுதி தளராத தளபதி கேணல் பால்ராஜ்ஜின் கட்டளைகளை உறுதியுடன் களத்தில் நிறைவேற்றியது அவர் வளர்த்தபடையணி. வீரமுடன் அணிகளை வழிநடத்திய மேஜர் றோயும் இன்னும் சில தோழர்களும் சண்டையின் முடிவில் எம்மிடம் இருக்கவில்லை.

எதிரிகளின் உடல்கள் களத்திற் சிதறிக்கிடந்தன. இராணுவத்தினரின் உடல்கள் அறுபது மட்டும் மீட்கக்கூடியனவாய் இருந்தன. சிங்களப் படைத்தலைமை மீண்டுமொரு நூற்றுக்கணக்கைத் தன் முன்னணிப் படையிருப்பிலிருந்து கழிக்கவேண்டியதாயிற்று. அச்சமரில் எதிரி நம்பி வந்த ராங்கி ஒன்றும் துருப்புக்காவி ஒன்றும் எமது வலயத்துட் சிக்குண்டு பின்னர் எம்மவரால் தகர்க்கப்பட்டன. ஆறு ராங்கிகள் சேதப்படுத்தப்பட்டன. நவீன ஆயுதங்கள் பொருத்தப்பட்ட இரு பவள் கவச வாகனங்களைக் கைப்பற்றிய புலிகள் அவற்றைக் களத்தில் எதிரிக்கு எதிராகப் பயன்படுத்தினர்.

அன்று புலிகள் தப்பித்துக்கொண்டது அதிஷ்ரத்தாலென எதிரி எண்ணியிருக்க வேண்டும். மறுநாள் மீண்டும் அதேபோன்றதொரு நடவடிக்கையைச் செய்த பகைவன் முன்போலவே மூக்குடைபட்டுப்போனான். களத்திற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முறியடிப்பு அணிகள் தேவைப்படவில்லை. அன்றைய சமரிலும் கொத்துக் கொத்தாய் பகைவர்கள் சாய்க்கப்பட்டார்கள். அந்த இரு நடவடிக்கைகளுக்கும் எதிரி நம்பிக்கையுடன் சூட்டிய பெயர் 'வெலிகதற'.

எதிரி ஆட்டம் கண்டான். எப்படியேனும் வென்றேயாவது என்று அவன் தொடுத்த நடவடிக்கைகளெல்லாம் தோல்வியடைந்தன. அதுமட்டுமல்லச் சிறீலங்காவின் போர்ப்பலமும் வெற்றி நப்பாசையாற் புலிவீரர்களின் வியூகத்துட் சிக்குண்டு சிதறி அழிந்தது. அந்தப் பெரும் தோல்விகளைப் பொறுப்பேற்ற சிங்களத்தின் 'ஆற்றல்மிக்க' 53ஆவது படையணியின் கட்டளை அதிகாரி "என் ஆற்றல்மிகு வீரர்களை மற்றவர்களின் நிர்ப்பந்தத்திற்காக, வெல்லமுடியாத போர்க் களத்தில் அநியாயமாகப் பலிகொடுப்பதற்கு நான் தொடர்ந்தும் காரணமாக இருக்கமாட்டேன்" என்று தன் பதவியைத் துறந்தான். அந்த எதிரித் தளபதிக்கு 'ஞானம்' பிறப்பதற்குப் பல நூற் றுக்கணக்கான சிங்களச் சிப்பாய்களை எம்மிடம் பலிகொடுக்கவேண்டியிருந்ததோ?

எமது வீரர்களின் மனங்களை அச்சுறுத்தி வெற்றிகொள்வதில் நம்பிக்கையிழந்துபோன எதிரி, தனது 'வீரசாகசங்களை' நிறுத்தினான். எப்படியாவது தனது பிரதான விநியோக நெடுஞ் சாலையைக் காப்பாற்றியே ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தத்தின்பொருட்டு, மீண்டுமொருமுறை களமிறங்க முடிவுசெய்தான். புதிய தளபதிகள் களத்திற்கு வரவழைக்கப்பட்டனர். மேலும் போர்ப்பலம் ஒருங்கிணைக்கப்பட்டது. அதுவரை பிரயோகிக்கப்பட்டிருக்காத அதிக பலத்திரட்சியோடு உச்சக்கட்ட முயற்சியில் மீண்டும் குதித்தான் பகைவன். அது ஏப்ரல் பத்தாம் நாள்.

காலை 6.30 மணி. வரலாற்றில் அதுவரை பிரயோகிக்கப்படாத படைப்பிரயோகத்தை எதிரி அன்று ஒரே தடவையிற் பிரயோகித்தான். குறிப்பாக எதிரியின் கவசப் படைப்பலம் அன்றுதான் அத்தனை அரக்கத்தனமாய் எம்முடன் மோதியது. கண்டி வீதியின் குறித்த பிரதேசம் சிறீலங்காவின் உச்சப் போர்வலுவைச் சந்தித்தது. முதலிற் கொடிகாமத்திலிருந்து மூன்று முனைகளில் முன்னேறிய எதிரி சோதியா படையணி நிலைகொண்டிருந்த எமது முன்னரங்கக் காவல்நிலைப் பகுதிமீது தாக்குதலைத் தொடுத்தான். எதிரியின் ராங்கிகள், கவசவாகனங்கள் ஏறிவரக் கண்டி வீதியின் அந்தப் பாதுகாப்பு நிலைகளை எதிரி உடைத்தான். குறித்த பகுதிகள் அவனது கைகளுள் வீழ்ந்தன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முறியடிப்பு அணி களமிறக்கப்பட்டது.

மேஜர் அமுதன், பிரதாபன் ஆகியோரின் அணிகளுக்குத் தலைமையேற்று பல்லவன் களமிறங்கினார். லெப். கேணல் நேசனால் நேரடியாக வழிநடத்தப்பட்ட அந்த அணி எதிரியுடன் தீவிரமான முறியடிப்புப் போரில் ஈடுபட்டு முன்னேறத்தொடங்கியது. கைப்பற்றப்பட்ட பகுதியிலிருந்து எதிரி படிப்படியாக விரட்டப்பட்டுக்கொண்டே போனான். தாக்குதல் நடத்தியபடியிருந்த எதிரியின் ராங்கி ஒன்றைக் குறிவைத்து திருச்செல்வத்தின் RPG முழங்கியபோது அது சேதமடைந்து களத்திலிருந்து ஓட்டமெடுத்தது. எமது அணிகள் மேலும் முன்னகர்ந்தன. களத்தில் ஏற்கனவே சேதமடைந்த ராங்கி ஒன்றைக் கட்டியிழுத்தபடி வந்துகொண்டிருந்த இன்னொரு ராங்கியையும் திருச்செல்வம் மீண்டும் குறிவைத்தான். அது தீப்பற்றிக்கொண்டது. அது கட்டியிழுத்துச்சென்ற ராங்கி அப்படியே களத்தில் நின்றது. தொடர்ந்து அணிகள் படிப்படியாக முன்னேறியபடியே இருந்தன. தனது முன்னேற்றம் முறியடிக்கப்படப்போவதை உணர்ந்த எதிரி மீண்டும் ஆனையிறவிலிருந்து எமது படையணி வீரர்கள் நிலைகொண்டிருந்த பகுதியூடாகக் களத்தைத் திறந்தான்.

ஆனையிறவிலிருந்து மூன்று முனைகளில் ராங்கிகளைப் பயன்படுத்தி, எறிகணைகளை அள்ளியிறைத்து எதிரி முன்னேறினான். யாழ்ப்பாணத் திசையில் நடைபெற்ற முறியடிப்பு நடவடிக்கையை நிறுத்தி முதலில் ஆனையிறவுத் திசையில் முறியடிப்புச் சமரை முன்னெடுப்பதென முடிவுசெய்தார் தளபதி கேணல் பால்ராஜ். பல்லவனது முறியடிப்பு அணிகள் தாம் கைப்பற்றிய பகுதிகளைச் சோதியா படையணியிடம் ஒப்படைத்துவிட்டு மீண்டும் தமது பகுதிக்கு வந்துவிட்ட எதிரிகளை முறியடிப்பதற்காகக் களமிறங்கின.

களத்தில் ராங்கிகளே எங்கும் வியாபித்திருந்தன. லெப். கேணல் விக்ரர் விசேட கவச எதிர்ப்பு அணி வீரர்கள் அவற்றைக் களத்திலிருந்து வெளியேற்றி எப்போதும்போலவே எமது வெற்றிக்குத் துணைநின்றார்கள். அதிகாலையில் தொடங்கிய அந்தக் கடுமைநிறைந்த சமர் மாலையாகியும் உக்கிரம் தணியாது இன்னுமின்னும் தீவிரமாய் மூண்டபடியே இருந்தது.

கண்டி வீதியில் நின்ற எதிரியின் ராங்கி ஒன்று முன்னேறிய எமது அணிகள்மீது தாக்குதலை நடத்தியபடியே இருந்தது. அதை உடைக்கும் நோக்கில் எமது படையணியைச் சேர்ந்த மதி என்ற வீரன் RPG ஐ ஏவியபோது அது அந்த எதிரி அரக்கனை உடைத்துத் தீப்பற்றச் செய்தது. களத்தில் மேலும் மேலும் எதிரியை அழித்தபடி முன்னேறினார்கள் எமது வீரர்கள். சிந்து, பல்லவன் ஆகியோரின் அணிகள் மேஜர் கோபித்தின் தலைமையில் எதிரியை முறியடித்து, இழந்த பகுதிகளை இருள் சூழ்வதற்குள் மீட்டெடுத்தன. வென்றது புலிவீரம். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தன் மூத்த போராளியும் அதன் போர்ச்சாதனைகள் பலவற்றிற் பங்கெடுத்தவனுமாகிய லெப். கேணல் மதனை அக்களத்தில் இழந்தது.

அன்றைய சமரில் தளபதி கேணல் பால்ராஜ் அவர்களின் நிதானமானதும் வீரத்தை ஊட்டுவதுமான கட்டளைகளின்படி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை அதன் சிறப்புத் தளபதி லெப். கேணல் ராஜன் வழிநடத்தினார். பதினெட்டு மணிநேரம் நீண்டு, நள்ளிரவு 12.30 வரை நடந்த அந்தச் சமரிற் படையினர் நூற்று இருபதுபேர்வரை கொல்லப்பட்டும் நானூற்றைம்பது பேர்வரை காயமடைந்தும் இருந்ததை எம்மால் அப்போது உறுதிப்படுத்தமுடிந்தது. பெருமளவு கவசவூர்திகள் உடைக்கப்பட்டும் சேதப்படுத்தப்பட்டும் எதிரியின் கவசப்படை சிதைக்கப்பட்டது.

முதல்நாட் சமரில் தனது இழப்பிற்கேற்ப எமது பலமும் சிதைக்கப்பட்டிருக்கும் என்ற எண்ணத்தில் 11ஆம் திகதியும் எதிரி முன்னேறிவந்தான். புலி வீரர்கள் நிலைகொண்டிருந்த பகுதிக்கு நேராய் முன்னேறிவந்த எதிரிகள் எமது காவலரண்களை எட்ட முன்னரே தோற்கடிக்கப்பட்டார்கள். அன்றுடன் கடும் இழப்புக்களால் எதிரி முடமாக்கப்பட்டான். சிங்களத்தின் வீரமெல்லாம் இத்தாவில் மண்ணிற் பொசுங்குண்டுபோனது. எம்மை என்ன செய்வதென்ற முடிவை இறுதிவரை எதிரியால் எடுக்கமுடியவில்லை.

ஆனையிறவுச் சமரின் தந்திரோபாய நகர்வின் நோக்கங்கள் வெற்றிகரமாக நிறைவுசெய்யப்பட்டிருந்தன. எதிரியின் முன்னணிப் போர்வலு பெருமளவிற் சிதைக்கப்பட்டுக் காலாட்படையும் கவசப்படையும் இயலாமையில் நின்றன. எதிரியின் இத்தகைய நிலைக்காக எதிர்பார்த்துக் காத்திருந்த தலைவர் சமரின் இறுதிக்கட்ட நகர்வை முன்னெடுத்தார். ஆனையிறவுத்தளம் மீது பெரும் சமர் வெடித்தது. கேணல் தீபன் தலைமையிலான புலிகள் சேனை ஆனையிறவுத் தளத்தை வீழ்த்தி இத்தாவிலில் எமது வீரர்களுடன் தொடர்புகொள்ளும் நோக்கோடு வந்துகொண்டிருந்தது.

ஏப்ரல் 28ஆம் நாள். இத்தாவிலில் அந்தச் சமரரங்கு ஒரு மாதகாலத்தை நிறைவு செய்த இரண்டாம் நாள். ஆனையிறவிலிருந்து வந்த ஒருங்கிணைப்புத் தளபதி கேணல் பானுவுடன் கை

குலுக் கிக் கொண்டபோதுதான் அந்த யுத்தகளம் அமைதியடைந்தது. இத்தாவிற் களத்தின் கோரக்காட்சிகள் அக்களத்தைச் சென்றுபார்த்த அனை வருக்கும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உட்பட ஏனைய படையணிப் போராளிகளின் வீரத்தை உணர்த்தியபடியே இருந்தன. இதற்குள்ளா எம் வீரர்கள் உயிர் வாழ்ந்து எமக்காய் போரிட்டார்கள் என்ற பிரமிப்பில் அனைவரும் உறைந்துபோனார்கள்.



*இத்தாவிலில் 34 நாட்கள் நிலை கொண்ட போராளிகளை ஆனையிறவை வீழ்த்தி கண்டி வீதியால் வந்து சந்தித்த சமரின் ஒருங்கிணைப்புத் தளபதி கேணல் பானு எமது படையணிச் சிறப்புத் தளபதி ராஜனுடன் கைகுலுக்கு கிறார்.*

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தலைவராற் களத்திலிருந்து அழைக்கப்பட்டது. ஆனையிறவுக் களத்தில் தீரம்மிக்க சாதனைகள் புரிந்த புகழ்பூத்த படையணியின் போராளிகளைத் தலைவர் அவர்கள் சந்தித்துப் பாராட்டி மகிழ்வுற்றார். 'ஓயாத அலைகள் - 03' இல் அதுவரையும் ஓயாது சுழன்றடித்த படையணி மீண்டுமொரு சமருக்காகத் தலைவரின் தயார்ப்படுத்தலில் தன்னையும் ஆயத்தஞ்செய்யத் தொடங்கியது.

ஆனையிறவுத்தளம் மீதான மாபெரும் வெற்றி, சிறீலங்காவின் ஒட்டுமொத்தப் போர்ப்பலம் மீதான புலிகளின் வெற்றியாகவே உலகாற் கணிக்கப்பட்டது. அத்தோடு சிங்களத்தின் யாழ் ஆக்கிரமிப்பும் உறுதியற்று ஈடாடியது. ஆனையிறவைக் கட்டுப்பாட்டினுள் வைத்திருப்பவரே யாழ்ப்பாணத்தைத் தமது ஆளுகைக்குள் வைத்திருக்கமுடியும் என்ற தவிர்க்கமுடியாத யதார்த்தம் சிங்களத்தின் எதிர்காலத்தைச் சூனியமாக்கியது. புலிகளின் யாழ்ப்பாணம் மீதான இறுதிப்பாய்ச்சலை உலகம் எதிர்பார்த்திருக்கத் தொடங்கியது. அதற்காகவே தமிழர் தலைவன் தனது போர்ச் சேனைகளைத் தயார் செய்தபடியிருந்தான்.

2000 மே 9, அதுவும் சிங்களத்தை நிலைகுலைய வைத்த நாள். புதிய தளபதிகளை யாழ்ப்பாணக் களத்தில் நியமித்து, மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் யாழ் ஆக்கிர மிப்பைத் தூக்கிவைத்தபடி இருந்த சிங்களத்திற்கு முகாரி இசைத்தபடி 'ஓயாத அலைகள் - 03' அடிக்கத்தொடங்கியது. அது அப்பெரும் நடவடிக்கையின் ஐந்தாம் கட்டம்.

தளபதி கேணல் சொர்ணத்தின் தலைமையில் இயங்கிய இச்சமர்க்களத்திற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை, வழமைபோலவே பிரதானமான சில பணிகளை ஒப்படைத்து எதிர்பார்ப்புகளுடன் அனுப்பிவைத்தார் தலைவர்.

ஏனைய படையணிகளை உள்ளடக்கிய படைத்தொகுதி ஒன்றுடன் முக்கிய பணிகளை ஏற்றிருந்தது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. கிழக்கு அரியாலையிலிருந்து ஒரு இரகசிய

நகர்வின்மூலம் எதிரியின் முதலாவது காவலரண் தொடரைச் சத்தமின்றிக் கடந்து, நாவற்குழியை அண்டிக் கண்டி வீதிக்குச் சமாந்தரமாக இருக்கும் எதிரியின் காவலரண்களைத் திடீரெனத் தாக்கிக் கைப்பற்றிக் கண்டி வீதியைக் கட்டுப்பாட்டிற்குட் கொண்டு வரவேண்டிய முக்கியத்துவம் வாய்ந்த பெரும் பணியை ஏற்றுப் புலிகளின் சிறப்புப் படையணி களமிறங்கியது.

இந்த முதற்கட்டச் செயற்பாடுகளிலேயே சமர்த்திட்டத்தின் ஏனைய நடை முறைகள் தங்கிநின்றன. சமரின் கட்டளைப் பணியகங்கள் அந்த வெற்றிச் செய்திக்காய்க் காத்துநின்றன. லெப். கேணல் ராஜனின் தலைமையில் முதலாவது அணியாக நகர்ந்தது எமது சிறப்புப் படையணி. தன் வெற்றிகரமான நகர்வு மூலம் எதிரியரண்களை அது சந்தடியின்றித் தாண்டியது. திடீரெனப் பின்னால் கேட்டன வேட்டொலிகள். பின்னே நகர்ந்து வந்துகொண்டிருந்த அணிகளை எதிரி கண்டுவிட்டதாற் சண்டைமூண்டுவிட் டது. நடந்துவிடக்கூடாது என்று எல்லோருமே எண்ணியிருந்தது நடந்துவிட்டது. இப்போது மாற்றுத்திட்டங்கள்மூலம் நிலைமையைச் சீர்செய்து சமரைத் தொடர வேண்டும். அந்த நெருக்கடியை உடைத்தெறிய எதிரிமீது பாய்ந்தது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. அது எல்லோருக்கும் நம்பிக்கையைக் கொடுத்தது. ஆற்றல்மிகு புலிவீரர்களை உள்ளடக்கிய அந்தப் போரணி பேரிடியென எதிரி நிலைகள்மீது இறங்கியது.

வழமைபோலவே எதிரி நிலைகளைப் பிரித்தெறிந்தபடி களத்தைத் தம்வசப்படுத்திச் சமர்த் திட்டத்தை முன்னெடுத்தார்கள் புலிகளியக்கத்தின் அந்த ஆற்றல்மிகு போரணியின் வீரர்கள். எதிரி நிலைகளைக் கைப்பற்றி, நாவற்குழிக்கும் செம்மணிக்கும் இடையிலான ஏ-9 வீதியைக் கட்டுப்பாட்டினுட் கொண்டுவந்து, தன்னுடன் அழைத்துச்சென்ற ஏனைய அணிகளை அங்கு நிலைப்படுத்தி, முன்னேறிக்கொண்டிருந்தது புலிகளின் முதல் மரபுப் போர்ச்சேனை.



அரியாலை போர்க்களத்திற் சமரின் முன்னணியில் எமது அணித்தலைவன்

"யாழ்ப்பாணம் வரவேற்கிறது" வரவேற்புப் பலகையையும் கடந்து எமது படையணி வீரர்களின் பாதங்கள் நடந்தன. சுமார் பத்தொன்பது வருடங்களுக்கு முன்னர் நாம் ஒரு சிறிய அமைப்பாக இருந்த காலத்தில் எம் சீலனை வீழ்த்திய சிறீலங்காப் படைகளை ஒரு பெரும் மரபுப்போர் அணியாகச் சந்தித்தவாறு, முக்கிய களப் பணிகளை ஆற்றியபடி களத்திற் சுழன்று கொண்டிருந்தது அவன் நாமம் பெற்ற சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படை அணி. கண்டி வீதியிலி ருந்து தொடர்ந்து முன்னேறி அரியாலை முதற் கொழும்புத்துறை வரையான களத்தில் ஏனைய படையணிகளுடன் எதிரியைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வெற்றிகொண்டது.

எதிரி மூர்ச்சையிழந்து திணறிய-படியிருந்தான். 30,000 சிங்களப் படைகளை என்ன செய்வ தென்று தெரியாது சிறீலங்காத்

தலைமை பதறித்துடித்தது. உலக நாடுகளின் காலடிகளிலெல்லாம் வெட்கம் விடுத்து விழுந்து கெஞ்சியது சிறீலங்கா. அடுத்த பாய்ச்சலுக்கும் புலிகள் சேனை தயாராகிவிட்டால் என்ன நடக்கும் என்பதை நினைத்து நினைத்து அவர்கள் ஏங்கினார்கள். வெட்கங்கெட்ட சிங்களத்தின் இரத்தல் உலகத்தவரிடம் எடுபட்டது. வெளிநாடுகள் சில சிறீலங்காவிற்கு முண்டுகொடுத்தன. நவீன ஆயுதங்களைத் தாமதம் எதுவுமின்றிக் களத்திற் கொணர்ந்து சேர்த்தான் பகைவன். நிதானம் கடைப்பிடித்த தலைவர் மீண்டுமொரு தயார்ப்படுத்தலுடன் எதிரியைச் சந்திப்பதென்ற முடிவோடு சமரரங்கை நிறைவுசெய்தார். அதற்காகவே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைக் களத்திலிருந்து அழைத்திருந்தார்.

'ஓயாத அலைகள் - 03' நடவடிக்கை தலைவர் அவர்களால் நிறைவுசெய்யப்பட்டது. ஆனாலும் அரசியல், இராணுவ அரங்கில் அது தொடர்ந்தும் அலைமோதியபடியே இருந்தது. உலகப் போரியலில் ஒரு தனித்துவமான போர்த் தொகுப்பைக் கொடுத்தது 'ஓயாத அலைகள் - 03'. அதில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் பங்கு காத்திரமானது. நெருக்கடியான கட்டங்களில் தடைநீக்கியாகச் செயற்பட்டது. எப்போதும் போலக் களச்சூழலைத் தீர்மானிக்கும் தன் வீரத்தை வெளிப்படுத்திச் சமரைத் தொடர வழிசமைத்த பெருமையை நடவடிக்கையின் ஒவ்வொரு கட்டத்திலுமே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி நிலைநாட்டியது. 'ஓயாத அலை கள் - 03' இன் போரியலைக் கற்கும் எவரும் புலிகளின் புகழ்பூத்த சிறப்புப் படையணியின் போராற்றலையும் ஆழமாக அறிந்துகொள்வர். படையணி ஈந்த மாவீரர்களின் அர்ப்பணிப்புக் களும் காத்திரமான செயற்பாடுகளும் அந்த உயரிய வரலாற்றின் உயிர்த்துடிப்பாக இருக்கும்.

# 'ஓயாத அலைகள் - 04' நடவடிக்கை

'ஓயாத அலைகள் - 03' இன் நிறைவிற்குப் பிற்பட்ட காலப்பகுதியிற் களநிலையில் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. வெளிநாடுகளின் தாராள உதவியுடன் அதிநவீன ஆயுதங் களை உடனடியாகவே களத்தற்குக் கொண்டுவந்த எதிரி, எமது முன்னகர்வுகளைத் தாமதத்திற் குள்ளாக்கி, தனக்கான கால அவகாசம் ஒன்றைப் பெற்றான். என்னதான் இருந்தபோதிலும் தென்மராட்சியில் எமது படையணிகள் குடாநாட்டின் இறுதிச் சமருக்கான வலுவான இயங்குதளம் ஒன்றைப் பெற்று, இறுதிப் பாய்ச்சலுக்கான தயார்நிலையிலேதான் வைக்கப்பட்டிருந்தன. முதலில் வடமராட்சி கிழக்கில் முன்னேறி ஆனையிறவைப் பறித்தெடுத்து பச்சிலைப்பள்ளியின் பெரும்பகுதியைத் தன் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவந்தது புலிப்படை. அடுத்து யாழ்ப்பாணத் தின் நகராட்சி எல்லை மற்றும் தென்மராட்சியின் மையப்பகுதிகள்வரை முன்னேறியது. யாழ் ஆக்கிரமிப்பு அரக்கன் அரைப்பிறை வடிவிற் சுற்றிவளைக்கப்பட்டு சேடமிழுத்தபடி கிடந்தான். இந்நிலையிலிருந்து எப்படியோ மீண்டாகவேண்டிய நிர்ப்பந்தத்தில், தனக்கு நம்பிக்கைதந்த அதி நவீன மரபுப்போர் ஆயுதங்களின் துணையுடன் பாரிய படையெடுப்புகளுக்கு எதிரி தயாராகி வந்தான்.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி 'ஓயாத அலைகள் - 03' இன் 5ஆம் கட்டத்திற் குடாநாட்டிற்கான தென்சமர்முனைப் பணிகளை முடித்துக்கொண்டபின், பின்னணித்தளத்திற்கு அழைக் கப்பட்டது. தலைவரின் எதிர்காலத் திட்டங்களுக்கேற்ப புதியபலம் சேர்க்கப்பட்டு, புதிய பயிற்சித்திட்டங்களிற் படையணி ஈடுபடுத்தப்பட்டது. அப்போது குடாநாட்டின் தென்சமர்முனையில் வலிகாமம், தென்மராட்சிப் பகுதிகளை நோக்கி எதிரி பாரிய படையெடுப்பிற்குத் தயாரானான். சிக்கல் நிறைந்ததாக எதிர்பார்க்கப்பட்ட அக்களத்திற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை அனுப்புவதென முடிவாகியது.

பெரும் போர் ஒன்றை எதிர்நோக்கியவாறு களம்புகத் தயாராய் இருந்தசமயம் துரதிஷ்டவசமாக எம் படையணி முதல்வனை நாம் இழந்துபோனோம். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிற் பல்வேறு நிலைகளிலும் அணிகளை ஆறு மாதங்களேயானாலும் 'ஓயாத அலைகள் - 03' என்ற வரலாற்றுக் காலகட்டத்தில் அதன் சிறப்புத் தளபதியாய்த் தலைமையேற்று வழி நடத்திய லெப். கேணல் ராஜசிங்கனை நாம் தண்ணீரில் இழந்துபோக நேர்ந்துவிட்டது. அந்தத் தளபதியை இழந்த துயருடன் படையணியின் போராளிகள் களம்போனார்கள். படையணியின் சிறப்புத் தளபதியாக லெப். கேணல் சேகர் அவர்களைத் தலைவர் மீண்டும் நியமித்தார். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி களம் புகுந்திருக்க, யூலை மாதத்தின் பத்தாம் நாள் பகலவனை வரவழைக்கத் தயாராகிக்கொண்டிருந்தது. நேரம் காலை 5.30 மணி. இயற்கை அன்னையின் சூரியக்கதிர்களை எதிர்பார்த்தபோது சிங்களத்தின் நவீன போராயுதங்கள் எம் பாதுகாப்பு நிலைகளைத் தாக்கத்தொடங்கின. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி நிலைகொண்டிருந்த சுமார் 1700மீ. நீளப் பாதுகாப்பு வேலியை எதிரி மூன்று முனைகளில் தாக்கினான்.

எதிரி எங்கும் பரவி நின்றான். தான் புதிதாகப் பெற்ற பலகுழற் பீரங்கிகள், யுத்த விமானங்கள் ஆகியவற்றின் செறிவான தாக்குதற் பலத்துடன் எமது அணிகளைச் சிதறடித்தவாறு, களத்தில் எதிரி வெற்றிபெற்றபடி இருந்தான். குறுகிய நேரத்தினுள்ளேயே நீண்ட பகுதிகளைக் கைப்பற்றமுடிந்ததால்,

தான் முழுமையாக வெற்றி அடைந்துவிட்டதாகவே எதிரி நம்பினான். புலிகளின் அணிகள் சிதறடிக்கப்பட்டுவிட்டதென்றும் அப்பகுதியின் புவியியற்சூழல் புலிகளுக்குச் சாதகமற்றதென்றும் கருதிய எதிரி அவர்களின் முறியடிப்பு என்பதற்கே இனி இடமில்லையென்றே நம்பியிருக்கக்கூடும். எதிரியால் மூன்று கூறாக்கப்பட்ட பகுதிக்குள் ஆங்காங்கே தனிமைப்படுத்தப்பட்டிருந்தபோதும் எமது வீரர்கள் உறுதி தளராது போரிட்டுக்கொண்டே இருந்தார்கள். அந்த உறுதிதளராத வீரர்களின் விடாப்பிடியான நம்பிக்கை தமக்கு அத்தனை பெரிய அவலத்தை ஏற்படுத்துமென எதிரி எதிர்பார்க்கவில்லை. தம்மால் முற்றுகையிடப்பட்ட எமது வீரர்கள் பீதியடைந்து, தாமாகவே மாண்டுகொள்வார்கள் என்றுகூட எதிரி எண்ணியிருக்கக்கூடும். ஆனால், தனித்தனியே மூன்று இடங்களிற் சுற்றிவளைக்கப்பட்டு எதிரியின் உள்ளிருந்து போரிட்ட அந்த வீரர்களின் துணையுடனேயே எமது முறியடிப்பு அணிகள் களமிறங்கிவிட்டன. நேரம் காலை பத்து மணியைத் தொடுகிறது.

எதிரியின் இறக்குமதி செய்யப்பட்ட சூட்டுவலுவும் அதன்மூலம் அவன் மீண்டும் பெற்றுக் கொண்ட போர் வெறித்தனமும் எமது வீரர்களின் மனப்பலத்தின் முன்னால் மண்டியிடத் தொடங்கியது. எமது படையணியின் அப்போதய துணைத் தளபதி லெப். கேணல் வீரமணியுடன் மேஜர் குயிலனின் முறியடிப்பு அணி மூர்க்கமாக எதிரியை மோதியது. மேஜர் பல்லவனின் மற்றைய அணியொன்று மறுமுனையில் எதிரிமீது தாக்குதலைத் தொடுத்தது. மேஜர் கோபித் (பின்னர் தீச்சுவாலை முறியடிப்பிற்காகத் தலைவரால் லெப். கேணல் நிலைக்கு உயர்த்தப்பட்டவர்) கிட்டுப் பீரங்கிப் படையின் மோட்டார்ச் சூடுகளைத் துல்லியமாக ஒருங்கிணைத்துக் கொடுத்தார். கேணல் சொர்ணம் அவர்களின் கட்டளையின்கீழ் படையணியின் சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகர் தலைமையேற்ற அந்தத் தாக்குதல் எதிரிமீது இடியாய் இறங்கியது.

சில மணித்தியாலங்களே நீடித்த முறியடிப்புச்சமர் பகலில் முடிவிற்கு வந்தது. எதிரி ஊடறுத்த மூன்று முனைகளிலும் எதிரியுடல்கள் சிதறிக்கிடந்தன. அந்தச் சமர் சிங்களத்தின் முன்னணிப் போர்வீரர்களில் 50 பேரின் வெற்றிடத்தையும் நூற்றுக்கணக்கான காயமடைந்த வீரர்களையும் எதிரிக்குப் பரிசளித்து ஓய்ந்தது. களத்திற் சமராடிய சாள்ஸ் அன்ரனி சிறப்புப்படை யணியின் வீரம் தலைவர் அவர்களாலும் சமரை வழிநடத்திய கட்டளைத் தளபதியாலும் பாராட்டப்பெற்றது. அந்தச் சமர் முடிந்ததும் தனது புதிய திட்டமிடல் ஒன்றின் பொருட்டு மீண்டும் பின்தளத்திற்குச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியை வரவழைத்தார் தலைவர்.

எதிரி குடாநாட்டில் தான் இழந்த பகுதிகளை ஆக்கிரமிப்பதிலேயே மீண்டும் குறியாய் நின்றான். அப்பகுதியின் புவியியற்சூழல் எதிரிக்கே சாதகமாக இருந்தது. அத்தகையதொரு களத்தில், கேந்திர முக்கியத்துவம்வாய்ந்த அப்பகுதிகளிலிருந்து புலிகளை அப்புறப்படுத்து வதன்மூலம் குடாநாட்டைக் கைப்பற்றும் அவர்களின் எண்ணத்தில் மண்ணைத் தூவிவிடலாம் என்ற கனவுடன் எதிரி செயற்பட்டுக் கொண்டிருந்தான். எமது தலைவர் அவர்களோ தனது எதிர் கால நடவடிக்கை ஒன்றிற்கான முன்தயாரிப்பு வேலைகளில் ஈடுபட்டிருந்தார்.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படைய ணியையும் வேறு சில படையணிகளையும் சேர்த்து கேணல் தீபன் அவர்களின் தலைமையில் வலிந்த தாக்குதற் படையணி ஒன்றைத் தலைவர் உருவாக்கினார். பிரத் தியேகப் பயிற்சித் தளம் ஒன்றில், தலைவர் அவர்களின் நேரடிக் கண்காணிப்பின் கீழ், எதிரியின் புதிய ஆயுதப் பலத்தை எதிர் கொண்டு, இழப்புக்களின்றி வெற்றிகொள்வதற்கான தந்திரோபா யப் பயிற்சிகள் உள்ளிட்ட கடுமையான பயிற்சிகளில் அவ்வணி ஈடுபடுத்தப்பட்டது. இந்நிலையிற் குடாநாட்டினுள் தனது ஆக்கிரமிப்பைத் தீவிரப்படுத்திய பகைவன் 'கிணிகர 1, 2'....... எனத் தன் படை நடவடிக்கையை முன்னெடுத்தபடியிருந்தான். அவற்றில் எதிரியால் ஓரளவு வெற்றிகளைப் பெறமுடிந்தாலும், அவற்றை எமதியக்கம் எதிர்கொண்ட விதம் எதிரிக்குக் கலக்கத்தையே கொடுத்தது.



*புதிய கனரக ஆயுதப் பிரிவு ஒன்றின் சூட்டுப் பயிற்சியில் ஈடுபடும் எமது படையணிப் போராளிகள்.*

"விடுதலைப் புலிகள் தமது முன்னணிப் படைப்பிரிவுகளைச் சண்டையில் ஈடுபடுத்தாதது தமக்கு ஐயத்தைத் தருவதாக இராணுவத் தரப்பினர் குழப்பம்"

"புலிகள் தமது முன்னணிப் படைப்பிரிவுகளைப் படையினர் மேற்கொள்ளும் சண்டைகளில் ஈடுபடுத்திச் சீரழிக்காது செயற்படுவது அவர்கள் எங்கோ விரைவிற் பாரிய தாக்குதலை நடத்தப்போகிறார்கள் என்பதையே காட்டுகிறது."

"புலிகளின் முன்னணிப் படையணிகள் சிங்களப் படையினரின் தற்போதைய நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்படவில்லை. அவர்களுக்குப் புதிய பயிற்சிகளை வழங்கி, குடாநாடுமீதான பாரிய இறுதித் தாக்குதலுக்குப் பிரபாகரன் தயார்செய்து வருகின்றார்" என்ற செய்திகளும் ஆய்வுகளும் அனைத்துத் தரப்பினராலும் வெளியிடப்பட்டுக்கொண்டிருந்தன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி வன்னித்தளத்திற் சிறப்புப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தது. விரைவான வலிந்த தாக்குதல் ஒன்றிற்கான தேவையைத் தலைவர் உணர்ந்தார்.

குடாநாட்டுப் போர்முனையில் தாம்பெற்ற கால அவகாசத்தின்மூலம் தாக்குதல் நிலைக்குத் தம்மைச் சீரமைத்துக்கொண்டுவிட்டதாகவும் புலிகளைப் பாதுகாப்பு நிலைக்குத் தள்ளிவிட்டதாகவும் பறைசாற்றியபடி இருந்த பகைவனுக்குப் பதிலடியாக, தலைவர் அவர்கள் 'ஓயாத அலைகள் - 04' சமர்த்திட்டத்தை உருவாக்கினார். அப்போதைய இராணுவ, அரசியல் தேவைகளுக்கேற்ற இலக்குகளை உள்ளடக்கிய வரையறுக்கப்பட்ட தாக்குதல் திட்டமாக அது இருந்தது.

பாதுகாப்புப் போர்முறைகளுக்குச் சாதகமற்றிருந்த, ஆனாலும் தந்திரோபாய முக்கியத்துவம்வாய்ந்த குடாநாட்டின் உட்களச் சமர்முனையில் எமது படைப்பலத்தை ஈர்த்துச் சிதைத்து அப்பகுதிகளைப் பறித்தெடுத்ததன்மூலம், பாதுகாப்பு நிலையில் எம்மை வைத்திருந்த எதிரி ஆனையிறவையும் விரைவிற் கைப்பற்றிவிடலாம் என்ற அழகான கற்பனைத் திட்டத்தை வரைந்து, அதற்கான முயற்சியில் ஈடுபட்டான். இந்நிலையில் எதிரியின் திட்டங்களை முறியடிப்பதில் வல்லவரான எமது தலைவர் மாற்றுத் தந்திரோபாயம் ஒன்றை வகுத்திருந்தார். வலிந்த ஒரு தாக்குதல் மூலம் குடாநாட்டின் தென்முனைக்கு (ஆனையிறவு) எதிரியின் முன்னணிப் படையை ஈர்த்து அதை இயலுமானவரை அழிப்பதுடன் எப்போதும் எதிரிக்குப் பாரிய அச்சுறுத்தலை ஏற்படுத்த வல்ல வாய்ப்பான பகுதிக்கு எமது முன்னரண்களை நகர்த்துவதன்மூலம் எதிரியின் முன்னணி வீரர்களைத் தொடர்ச்சியான பாதுகாப்பு நிலைக்குத் தள்ளிவிட தலைவர் முடிவுசெய்தார்.

26.09.2000 அன்று தியாகி திலீபனின் நினைவுநாள். சாள்ஸ் அன்ரனி சிறப்புப்படையணியின் களமுனை வரவை எமது அணித்தலைவர்களின் தொடர்பாடல்கள்மூலம் எதிரி அறிந்திருக்கமுடியும். எமது அணித்தலைவர்கள் எதிரிக்கு நன்கு பரிச்சயமானவர்களாகவே இருந்தார்கள். எண்ணற்ற களங்களில் அவர்களுடன் ஏற்பட்ட பலப்பரீட்சையில் எதிரி எத்தனையோ தடவைகள் தோற்றுப்போயிருக்கிறான். இப்போது குடாநாட்டினுள் தன்னால் ஒரு நடவடிக்கை முன்னெடுக்கப்படும் வேளையில், புலிகளின் ஆற்றல்வாய்ந்த முன்னணிப் படையணியான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஆனையிறவுப் பகுதியூடாக வருகை தந்திருப்பதன் உள் நோக்கம் எதிரியால் உணர்ந்துகொள்ளப்பட முடியாததல்ல. தலைவன் கொடுத்த சமர்த்திட்டங்களுடன் எமது வலிந்த தாக்குதற் படையணிகள் தக்கதொரு நேரத்திற்காகக் காத்திருந்தன. இதில் எமது படையணியுடன் விசேட மகளிர் அணியும் இணைக்கப்பட்டிருந்தது. சமரின் திட்டமிடலுக்கு ஏற்ப வரையறுக்கப்பட்ட அணிகளாகவே அவையிருந்தன.

நேரம் பகல் இரண்டு மணியைக் கடந்து நகர்ந்துகொண்டிருந்தது. எதிரி வீரர்கள் ஒருவேளை, மதிய உணவை முடித்து உற்சாகத்துடன் எம்மை எதிர்கொள்ளக் காத்திருப்பரோ? அல்லது உண்ட களைப்பில் தூங்கிவழிந்தபடியிருப்பரோ? எது எப்படியோ எமது அணிகள் சமரின் முதற்கட்ட நடவடிக்கைக்கான தயார் நிலையில் வைக்கப்பட்டன. கேணல் கிட்டுப் பீரங்கிப் படையணியின் பீரங்கிகள் தெரிவுசெய்யப்பட்ட தத்தமக்கான இலக்குகள்மீது எறிகணைகளை ஏவி, தமது இலக்குநோக்கித் தம்மைச் சீர்செய்துவிட்டு மௌனமாய்க் காத்திருந்தன. தொலைத் தொடர்புக் கருவிகள் தளபதி கேணல் தீபனின் கட்டளை ஒலியைப் பரப்புவதற்கேற்ப தயார்ப் படுத்தப்பட்டிருந்தன. அப்போது நேரம் சரியாகப் பகல் 2.45 மணி. ‘ஓயாத அலைகள் - 04’ இன் போர் ஓசையால் எதிரி நிலைகள் அதிரத்தொடங்கின.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகரின் தலைமையில் நான்கு முனைகளில் எதிரி நிலைகள் பிளக்கப்பட்டன. கிளாலியிலிருந்து நாகர்கோவில் வரையான எதிரியின் பாதுகாப்பு அரண்களைக் குறிவைத்து, அதைக் கைப்பற்றுவதையே நோக்கமாகக்கொண்டு எமது அணிகள் முன்னேறின. சமர் வெற்றிகரமாகத் தொடர்ந்தது. சில முனை களிற் பின்னடைவுகள் ஏற்பட்டபோதிலும் மாற்றுத்திட்டங்கள்மூலம் அவை சீர்செய்யப்பட்டன. மறுநாளும் தொடர்ந்த சமரின் முடிவில், குறிவைக்கப்பட்டதுபோலவே எதிரியின் முக்கியத்துவம் வாய்ந்த கிளாலி, எழுதுமட்டுவாள் படைத்தளங்களுக்கு அமைக்கப்பட்டிருந்த சுமார் 9கி.மீ. நீள முன்னரண்களைத் தகர்த்தெறிந்து, அவற்றைக் கைப்பற்றின எமதணிகள். எதிரியின் நவீன போர்க்கருவிகள் தோல்வியடைந்துபோக, ‘கருவிகள் அல்ல மனிதர்களே போரின் வெற்றி தோல் விகளைத் தீர்மானிப்பவர்கள்’ என்ற போரியல் முதுமொழியைச் சிங்களத்திற்கு இந்தத் தடவையும் களத்தில்வைத்துப் படிப்பித்தார்கள் எமது வீரர்கள்.

யாழ்ப்பாணத்தின் தென்மராட்சியிற் சிங்களத்தின் இருப்பிற்கு ஆதாரமாக இருந்த படைத்தளங்கள் தமது பாதுகாப்பு அரண்களை இழந்தன. அருகில் வந்துவிட்ட தன் பகைவர்கள் அடுத்து என்ன செய்யப் போகிறார்களோ என்ற ஐயத்துடன் அவை கிலிகொண்டு நின்றன.

அன்றிலிருந்து ‘ஓயாத அலைகள் - 04’ களத்தில் எதிரிமீதான தமது ‘கொலைப் பொறியை’ களத்தில் இயக்கியபடியே இருந்தனர் புலிகள். எதிரியின் முன்னணிப் படையணியைத் திட்டமிட்டவாறு கவர்ந்துகொண்டு, அவ்வப்போது மட்டுப்படுத்தப்பட்ட தாக்குதல்கள் நடத்தப்பட்டன. சமரின் அடுத்த முக்கிய கட்டம் வடமராட்சி கிழக்கு நாகர்கோவிற் படைத்தளத்தின் பாதுகாப்பு அரண்மீது நடாத்தப்பட்டது.

சமருக்கு முதல் நாள். எமது படையணியின் இருண்ட நாட்களுள் ஒன்றாயிற்று. சமருக்கான இறுதி ஏற்பாடுகளையெல்லாம் செய்துமுடித்து, மறுநாள் தன் வீரர்கள் போரிடப்போகும் பகுதிகளின் நிலைகளைப் பார்வையிட்டு உறுதிப்படுத்தச் சென்ற சிறப்புத் தளபதி லெப். கேணல் சேகர் எதிரியின் பதுங்கித் தாக்குதலிற் கடுமையான விழுப்புண்ணடைந்து களத்திலிருந்து எடுத்துச்செல்லப்பட்டார்.



களத்தில் அணிக்குக் கட்டளையிடும் துணைத்தளபதி வீரமணி

இன்றைய நவீன சண்டைமுறையில் தேர்ச்சிபெற்ற அந்த ஆற்றல்மிகு தள பதியை 23.10.2000 ஆம் நாளில் நாம் இழந்தோம்.

19.10.2000 ஆம் நாள் திட்டமிட்டதுபோலவே நாகர்கோவிற் பகுதியில் சமர் வெடித்தது. இம் முறையும் நான்கு முனைகளாற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பாய்ந்தது. அவற் றிற்கு லெப். கேணல் முகுந்தன், லெப். கேணல் வீமன் ஆகியோர் தலைமையேற்றனர். சிக்கல் நிறைந்ததும் முக்கியத்துவம் வாய்ந்ததுமான கடற்கரைப் பகுதியூடான ஒரு முனையும் எமது வீரர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அதில் வீரச்சமர் புரிந்த எமது வேங்கைகள் எதிரியை வெற்றிகொண்டு அவனது நிலைகளை ஊடுருவி கைப்பற்றியிருந்தமை எதிரிக்கு அழிவைக்கொடுத்த அன்றைய சமரின் பெரும் சாதனையாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

அன்றைய சமரில் எதிரி பாரிய இழப்புக்களைச் சந்தித்தான். படையினர் 250 பேர் வரை அன்றைய பகலிலும் இரவிலும் மாண்டுபோயினர். எதிரி வான்படையின் ஒரு MI – 24 உலங்கு வானூர்தி 'ராதா விமான எதிர்ப்பு அணியினரின்' தாக்குதலாற் களத்திலேயே எரிந்து அழிந்து விழ, மற்றொன்று சேதமடைந்தது. உடற்சேதமடைந்த பல நூறு படையினரை ஏற்றியபடி அங்கு மிங்கும் ஓடித்திரிந்த வாகனங்களும் விமானங்களும் யாழ்ப்பாணத்தினதும் தென்னிலங்கையினதும் வீதிகள், வான்பரப்பு, வைத்தியசாலைகள் எங்கும் எமது தாக்குதலின் உக்கிரத்தை அம் பலப்படுத்தின. எதிரியின் படைப்பலத்திற் பாரிய அழிவை உண்டு பண்ணுவதில் எமது அணிகள் பெரும் வெற்றியைப் பெற்றன.

இவ்வாறு 'ஓயாத அலைகள் - 04' சமர்முனை எதிரிகளுக்கு ஒரு 'கொலை முனையாக' இயங்கிமுடிந்தது. 19.10.2000 வரையான 25 நாட்களில் எதிரியின் முன்னணி வீரர்கள் 700 பேர் வரை மாண்டுபோயினர். 2500 பேர் காயங்களுடன் களத்திலிருந்து அகற்றப்பட்டனர். தமக்கு ஏற்பட்ட

பேரழிவை ஓரளவாவது ஒப்புக்கொண்டே ஆகவேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளான சிறிலங்கா அரசதரப்பு தம்மில் 266 பேர் கொல்லப்பட்டதாகவும் 2000 பேர் காயமடைந்துள்ளதாகவும் அறிவித்தது.

எமதியக்கம் முன்னெடுத்த இவ் 'ஓயாத அலைகள் - 04' நடவடிக்கை சுமார் ஒரு மாதம் நடைபெற்று ஓய்ந்தது. மட்டுப்படுத்தப்பட்ட ஆளணியையும் பிறவளங்களையும் பிரயோகித்து, குறித்தசில நோக்கங்களுக்காக முன்னெடுக்கப்பட்ட இந்நடவடிக்கை, தனது நோக்கங்களில் வெற்றியடைந்தது. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள முக்கியத்துவம்வாய்ந்த இரு சண்டைகள் உட்பட, அவ்வப்போது எதிரிகளைக் கொன்றொழித்த பரவலான சண்டைகள்வரை, 'ஓயாத அலைகள் - 04' எதிரியின் முன்னணிப் படைக்கட்டமைப்பைக் குறிப்பிடத்தக்களவு சீர்குலைத்திருந்தது. எதிரியின் தாக்குதற் படைப்பிரிவுகளான 55, 53வது டிவிசன்களைச் சேர்ந்த தாக்குதல் அணிகளே எமது பொறிக்குள் அகப்பட்டு அழிவுகளைச் சந்தித்தன.

'ஓயாத அலைகள் - 04' எதிரிக்கு ஒரு 'கொலைப்பொறியாக' அமைந்தது மட்டுமன்றி, அதன் முடிவின் பின்னரும் எதிரியின் படைவலுவைத் தொடர்ச்சியாக ஈர்த்து வைத்திருக்கக்கூடிய நிலையிலேயே முடிக்கப்பட்டது. எமது படையணிகளின் முன்னேற்றம் கிளாலி, எழுதுமட்டுவாள், நாகர்கோவிற் படைத்தளங்களின் விளிம்புவரை நிகழ்ந்ததும் அவற்றிற்கான விநியோகப் பாதைகளைத் துண்டிக்கக்கூடிய அச்சுறுத்தலை ஏற்படுத்தியதும் எதிரியை ஒரு வலுவான பாதுகாப்பு நிலைக்குத்தள்ளின.

அன்றைய அரசியற் சூழலிலும் இராணுவச் சூழலிலும் பெரும் முக்கியத்துவத்தை உள்ளடக்கிய இவ் 'ஓயாத அலைகள் - 04' நடவடிக்கையில் முக்கியமான பெரும் பங்கைச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி செலுத்தியிருந்தது. சமரின் மூலம் மீட்டெடுக்கப்பட்ட 20 சதுர கிலோமீற்றர் நிலப்பகுதியைப் பாதுகாத்தபடி, எதிரியைத் தொடர்ந்தும் அச்சுறுத்தும் வகையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி களத்தில் நிறுத்திவைக்கப்பட்டது. அடுத்துவரும் காலங்களில் முக்கியத்துவம் பெறப்போகும் ஆனையிறவை மீளக்கைப்பற்றும் எதிரியின் நடவடிக்கையை முறியடிப்பதிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது காத்திரமான பங்கை ஆற்றும்.

# அக்கினிக்கேலா இராணுவ நடவடிக்கைக்கு எதிரான முறியடிப்புச் சமர்

மாபெரும் யுத்தம் ஒன்றிற்கு எதிரி தன்னைத் தயார்ப்படுத்தியபடியிருந்தான். ஆனையிறவைப் பறிகொடுத்த நாட்களை அவமான நாட்களாகவே எதிரி கருதினான். அந்த அவமானத்திலிருந்து விடுபடுவதற்காகவும் யாழ்ப்பாணத்தைத் தொடர்ந்தும் தமது கட்டுப்பாட்டில் வைத்திருப் பதற்காகவும் ஆனையிறவை மீண்டும் கைப்பற்றவேண்டுமெனக் கங்கணம் கட்டினான். பகைவனின் போர்வளங்கள் ஒன்றுகுவிக்கப்பட்டன. அவமானத்தைப் போக்குவதற்காகச் செய்யும் ஆக்கிரமிப்பு உணர்வைவிடத் தம் உயிர்களின் காப்பின் நோக்கமே அங்கு மேலோங்கி நின்றது.

தென்மராட்சியின் எழுதுமட்டுவாட் பகுதியில் எமது பாதங்கள் பதிந்திருந்தன. ஓயாத வெடிமுழக்கங்களுக்குள் நின்றபடி மக்களும் நாங்களுமாகக் காப்பு நிலைகளை அமைப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தோம். தேசத்தின் தலைவிதியைத் தீர்மானிக்கவல்லதொரு யுத்தத்தில் நாம் பங்கு கொள்ளப்போகின்றோமென்ற உணர்வு எங்கள் எல்லோருள்ளும் இருந்தது. களத்தில் எங்களுக்கு உதவுவதற்காக முன்னெப்போதும் இல்லாதவாறு பெருமளவில் மக்கள் வந்து கொண்டிருந்தனர். எதிர்ச்சமருக்கான இத்தகைய ஏற்பாடுகளிலேயே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முழுமையான பலமும் ஈடுபடுத்தப்பட்டுக்கொண்டிருந்தது.

எமது படையணியைப் பொறுத்தவரை அவை வித்தியாசமான நாட்கள். சரியாகப் பத்து வயதை எமது படையணி கண்டிருந்தது. தமிழீழத்தின் எல்லா மாவட்டங்களிலும் இருந்து நாங்கள் முதன்முதலில் ஒன்றுகூடிய அதே மண்ணில் இப்போதும் நிற்கிறோம். அதோ! எதிரிப்பகுதியில் சில கிலோமீற்றர்கள் உள்ளே அந்தத் "தாய் நிலம்" தெரிகின்றது. நாங்கள் ஆயிரத்து ஐந்நூறு பேர் அணிவகுத்து நிற்க எங்கள் தலைவன் எம்முன் தோன்றி எல்லோருக்கும் வீரமூட்டிய முதலாவது பாசறை அது. இப்போது நீண்ட போர்வாழ்வின் பின் எஞ்சியிருந்த வீரர் சிலர் வந்திருக்கின்றோம். விழ விழப் புதிது புதிதாய் எழுந்த எம் படையணிப் போராளிகளிற் கணிசமானோருக்கு அந்தத் தாய்மடியைத் தெரியாது. எங்கள் உணர்வுகள் பேசின.

ஆனையிறவுக் கனவை எத்தனை ஆண்டுகளாக எங்கள் இதயங்களில் நாங்கள் சுமந்தோம். இந்தப் பத்தாண்டுகால நீண்ட போர் வாழ்வில் அதிகமான காலங்களை இந்த ஆனையிறவைச் சூழ்ந்த சதுப்புநிலங்களிலும் உப்புவெளிகளிலும் வயல்வெளிகளிலும் நீரேரிகளிலும் தானே நாங்கள் செலவிட்டோம். எமது படையணியில் இருந்து உயிர்துறந்த தோழர்களில் சரி அரைவாசிப்பேர் ஆனையிறவுக்கான களங்களில்தான் விதையாக வீழ்ந்தனர். அவர்கள் அத்தனை பேரதும் கனவுகளை நாங்கள் சுமந்து நின்றோம். அதனால் தான் எங்கள் உணர்வுகளோடு அதிகம் தொடர்புடைய யுத்தகளமாய் அது இருந்தது.

இப்போது நாங்கள் வென்றுவிட்டோம். காலமும், களநிலையும் மாறியிருந்தன. ஆனையிறவில் நாங்களும், ஆனையிறவை வீழ்த்துவதற்காய் எதிரிகளும் எனக் களத்தில் வியூகம் இட்டோம்.

எங்களைப் பொறுத்தவரை ஆனையிறவிற்கு இனிமேலும் வீழ்ச்சி என்பது இல்லை. அனைவரும் வீழ்ந்தாவது வேலி அமைப்போம் என்று சபதமிட்டோம்.

ஓயாத அலைகள் மூன்றிற்குப் பிற்பட்ட அண்மைய காலத்திற் களத்தில் நிறைய விடயங்கள் நடந்தேறின. 'ரிவிகிரண', 'கினிகிர' என்ற குறியீட்டுப் பெயர்களிலான தொடர் நடவடிக்கைகள் மூலம் எதிரி குறிப்பிடத்தக்க வெற்றிகளை ஈட்டியிருந்தான். நோர்வே அரசின் மத்தியஸ்தத்திலான சமாதான முயற்சிகளுக்கு ஒத்துழைக்கும் நல்லெண்ண வெளிப்பாடாக எமது தலைவரால் பிரகடணப்படுத்தப்பட்டிருந்த ஒருதலைப்பட்சமான யுத்தநிறுத்தத்தை உதாசீனப்படுத்தி அதை வாய்ப்பாகக் கொண்டு எதிரி அந்தப் படையெடுப்புக்களை நிகழ்த்தினான். எதிரியின் குடா நாட்டு இருப்பிற்கு உடனடி அச்சுறுத்தலாக இருந்த கொழும்புத்துறை, சாவகச்சேரி, தனங்கிளப்பு ஆகிய பகுதிகளில் அமைந்திருந்த எமது நிலைகள் பெரும் போர்க்களங்களாக மாறின. எமது யுத்தநிறுத்தத்தை வாய்ப்பாகக் கொண்டு தனது பலத்தை ஒன்றுதிரட்டிய எதிரி அவற்றின்மீது மாறிமாறிப் போர் தொடுத்தான். ஈற்றிற் பாதுகாப்புச் சமருக்குச் சாதகமற்றிருந்த அக்களத்திலி ருந்து எமது படையணிகள் திருப்பியழைக்கப்பட்டன. அதனால் இப்போது எதிரியின் முழுமையான கவனமும் ஆனையிறவு மீதான தமது மீள் ஆக்கிரமிப்புப் பற்றியதாகவே இருந்தது.

சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியைப் பொறுத்தவரை அது புதிய களச்சூழலுக்கு ஏற்ப முழுமையாகத் தயார்ப்படுத்தப்பட்டிருந்தது. புதிய புதிய அணிகள் படைப்பிரிவுகளில் இணைக்கப்பட்டிருந்தன. நவீன ஆயுதங்களை உள்ளடக்கிய பிரிவுகள் புதிதாக உருவாக்கப் பட்டிருந்தன. குறிப்பாகக் கொழும்புத்துறையில் 2000 யூலை 10ஆம் நாள் 'கினிகிர' நடவடிக்கைக்கு எதிரான முறியடிப்பின் பின்னர் பின்னகர்த்தப்பட்ட எமது படையணியின் அணிகளை ஒழுங்குபடுத்தி அதன் செயற்றிறனை மேலும் அதிகரிக்கச் செய்வதற்கான திட்டங்களைத் தலைவர் அவர்கள் செயற்படுத்தியிருந்தார். எமதியக்கத்தால் மேற்கொள்ளப்பட்ட 'ஓயாத அலைகள் - 04' நடவடிக்கைக்குப் பின்னர் ஆனையிறவை அண்மித்த பகுதியில் அமைந்த தளம் ஒன்றிற் படையணி தொடர்ச்சியாகப் பயிற்சியில் ஈடுபட்டது. எமது சிறப்புத் தளபதி லெப்.கேணல் சேகரின் வீரச்சாவை அடுத்துப் படையணியின் கட்டளைப்பீடத்தில் மாற்றங்கள் செய்யப்பட்டுப் புதிய தளபதிகள் நியமிக்கப்பட்டனர். சிறப்புத் தளபதியாக லெப்.கேணல் வீரமணி அவர்களும் தளபதியாக லெப்.கேணல் நகுலன் அவர்களும் துணைத் தளபதியாக மேஜர் கோபித் அவர்களும் தலைவர் அவர்களால் நியமனம் பெற்றிருந்தனர்.

எமது ஒருதலைப்பட்ச யுத்தநிறுத்தக் காலம் நீடித்துக்கொண்டே போனது. அதனாற் களத்தில் தனக்கு ஏற்பட்டிருக்கும் சாதகநிலையைப் பயன்படுத்துவதில் எதிரி முனைப்பாக இருந்தானேயன்றிச் சமாதான முயற்சியில் எவ்வித கரிசனையும் கொண்டிருக்கவில்லை. குறிப்பாகக் களத்தில் நாம் மௌனம் சாதித்தமை எதிரிக்குச் சிக்கல்களற்ற, சுதந்திரமான படை ஒருமுகப் படுத்தலுக்கு வாய்ப்பாக அமைந்தது. இதனாற் களத்தில் நாம் பல இழப்புகளையும் பின்னடைவுகளையும் சமாதானத்தின் விலையாகச் செலுத்தினோம். இந்நிலையிலும் தலைவர் அவர்கள் நான்காவது தடவையாகவும் யுத்தநிறுத்த காலத்தை நீடிப்புச் செய்தார். களத்தில் ஏற்பட்ட இழப்புகளும் பின்னடைவுகளும் எமது போராளிகள் மத்தியில் எதிரி மீதான எதிர்ப்புணர்வையும் ஓர்மத்தையும் பாரியளவில் வளர்த்தன. குறிப்பாக அனையிறவை நோக்கி எதிரி கடைசியாக மேற்கொண்டிருந்த 'கினிகிர-09' நடவடிக்கைமூலம் எமது குறிப்பிட்ட முன்னரண்களைக் கைப்பற்றியதுடன் உயிரிழப்புகளையும் ஏற்படுத்தியமை எமது போராளிகளின் பழிவாங்கும் உணர்வை மேலும் அதிகரித்தது. இங்கு முக்கியமான விடயம் என்னவெனில் தொடர்ச்சியான வெற்றிகள் மூலம் ஒரு ஆக்கிரமிப்பு இராணுவம் பெறக்கூடிய செயலூக்கமும், பின்னடைவுகள் மூலம் ஒரு விடுதலை இராணுவம் பெறக்கூடிய ஓர்மமும் அடுத்த சமர்க்களத்தில் எவ்வாறான சூழலை ஏற்படுத்தும் என்பதே.

'கினிகிர-09' நடவடிக்கையில் எழுதுமட்டுவாட் பகுதியில் 20 கிலோமீற்றர் நீளமான எமது முன்னரங்க நிலைகள் எதிரியாற் கைப்பற்றப்பட்டன. யுத்தநிறுத்தக் காலம் என்பதால் அதன் சில விதிமுறைகளை நாம் மீறமுடியாதிருந்தோம். எமது முன்னரண்களைப் பல துண்டுகளாகப் பிளந்து, எமது அணிகளைச் சிதறடித்து, முற்றுகைக்குட்படுத்தி வெற்றிகொள்ளும் தந்திரோ பாயத்தை இத்தொடர் நடவடிக்கையிற் பயன்படுத்தி வந்த எதிரியால் இந்தக் களத்திலும் வெற்றி கொள்ளமுடிந்தது. இந்நடவடிக்கையில் முறியடிப்பு அணியாகச் செயற்பட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி பேராபத்து மிக்க முற்றுகைகளில் அகப்பட்டிருந்த போராளிகளை இழப்புகளின்றி மீட்டெடுக்கும் பணியில் ஈடுபட்டுக் கணிசமான வெற்றிகளைக் கண்டது. இச்சமர்க்களத் தில் எமது படையணியின் போராளிகள் இருபதுபேர் தம்மை அர்ப்பணித்தனர். ஒருதலைப்பட்ச யுத்தநிறுத்தம் முடிவுறும் காலம் நெருங்கிக்கொண்டிருந்தது. அடுத்த தடவையும் தலைவர் அவர் கள் அதை நீடிப்பதற்கான அறிகுறிகள் தென்படவில்லை. எதிரியின் பாரிய தயார்ப்படுத்தல்களும் கணிசமாக முடிவடைந்தன.

ஏப்ரல் மாதத்தின் பிற்பகுதி தளபதி கேணல் தீபன் அவர்களின் கட்டளையின்கீழ் முறி யடிப்பிற்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றுக்கொண்டிருந்தன. களத்திற் போராளிகளுக்கு ஓய்வு உறக்கம் என்பதே இருக்கவில்லை. புதிய வியூகத்திற் கண்ணிவெடிகள், பொறிவெடிகள் களமெங்கும் விதைக்கப்பட்டன. துல்லியமான எறிகணைச் சூடுகளை வழங்கக்கூடியவாறு பீரங்கிப் படையணிகள் களத்தைத் தயார்ப்படுத்தியபடியிருந்தன. கிளாலி முதல் கண்டல் வரையான 7100 மீற்றர் நீளமான காவலரண் வரிசைகள் மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அவற்றிற்குப் பொறுப்பான தளபதிகள் நியமிக்கப்பட்டனர். அவற்றிற்குரிய படையணிகளும் நியமிக்கப்பட்டன.

கிளாலிப்பகுதிக்குரிய 1800 மீற்றர் முன்னணி அரண்களின் பொறுப்பாளராகக் கட்டளைப் பணியகத்தைச் சேர்ந்த லெப்.கேணல் கோகுலன் நியமிக்கப்பட்டார். கண்டிவீதிக்கு வலப்புறமாக முகமாலை முதற் கண்டல் வரையான 3200 மீற்றர் முன்னரண்களுக்குக் கட்டளைப்பணிய த்தைச் சேர்ந்த லெப்.கேணல் லோறன்ஸ் நியமிக்கப்பட்டார். இவை இரண்டிற்கும் நடுவில் இத்தாவிற் பகுதிக் காவலரண் பகுதியில் 2000 மீற்றர்களுக்குரிய பொறுப்பாளராக எமது படையணியின் சிறப்புத் தளபதி லெப்.கேணல் வீரமணி நியமிக்கப்பட்டார். இப்பகுதியில் துணைத்தளபதி மேஜர் கோபித்தின் தலைமையில் எமது படையணியின் அணிகள் நிலைகொண்டிருந்தன.

ஏப்ரல் 25ஆம் நாள் அதிகாலை 5.35 மணி. எல்லோருமே வெடிக்கப்போகும் அந்தப் பிரள யத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். எல்லாமே ஏற்கனவே உசார்நிலையில் வைக்கப்பட்டிருந் தன. அமைதியான நகர்வுகளின் மூலம் பலமுனைகளுக்கும் பரவிய எதிரியின், முதலாவது வெடிப்போசை சிறிதானாலும் களத்தை வானளாவ அதிரவைத்தது. அது எமது படையணியின் உதயன், கலைச்சுடர் ஆகிய போராளிகள் நிலைகொண்டிருந்த பகுதி. மறைப்பு வேலிகளைப் பிரித்தெறிந்தபடி எதிரிகள் பாய்ந்தனர். அதேகணத்தில் அந்த 7100 மீற்றர் முன்னரண்களின் எல்லாமுனைகளும் முழங்கத் தொடங்கிவிட்டன.

வீரச்சமர் வெடித்துவிட்டது. எதிரிகள் தரப்பில் அவர்களது முன்னணிப்படைகளான 53ஆவது, 55ஆவது 'டிவிசன்'கள் களமிறக்கப்பட்டன. எங்களது தரப்பிலும் எல்லாப் படையணிகளும் போரிட்டன (இவ்யுத்தத்தில் மற்றைய முனைகளில் ஏனைய படையணிகள் புரிந்த முக்கியத்துவம் வாய்ந்த சண்டைகள் பற்றிக் குறிப்பிடப்படவில்லை எனினும் சமரின் முழுமையையும் விளக்குவதற்காகச் சில விடயங்கள் மட்டுமே எடுத்தாளப்பட்டுள்ளன.) அந்தக் காவலரண் வரிசை யில் ஆறு பிரதான உடைப்புகளை ஏற்படுத்தி எதிரி ஊடுருவியிருந்தான். துணைத்தளபதி கோபித்தின் தலைமையில் எமது படையணி நிலைகொண்டிருந்த பகுதியில் மட்டும் இரண்டு பிரதான உடைப்புகள் எதிரியால் மேற்கொள்ளப்பட்டிருந்தன.

சண்டை தொடங்கிய மிகச்சிறிய நேரத்திலேயே அந்தப் பகுதியில் நிலைகொண்டிருந்த எமது அணித்தலைவன் கப்டன் வான்மீகியின் தொடர்பு இல்லாமற் போய்விட்டது. அவனை முதலிலேயே எதிரி வீழ்த்திவிட்டான். ‘T’ எனக் குறியீடு செய்யப்பட்ட எமது காவலரண் தொகுதியில் 300 மீற்றரை எதிரி விரைவாகவே கைப்பற்றியதுடன் இரண்டாவது முனை ஒன்றிலும் சமரைத் தொடங்கினான்.

மேஜர் பல்லவன், கப்டன் மகேஸ் ஆகியோரின் தலைமையில் தயார்நிலையில் வைக்கப் பட்டிருந்த எமது படையணியின் முறியடிப்புத் தாக்குதலணிகள் அப்போது தமது சமரைத் தொடங்கின. எதிரியை முறியடிப்பதென்பது அவ்வளவு இலகுவானதாக இருக்கவில்லை. எதிரி மனிதவலுவிலும் சூட்டுவலுவிலும் முன்னரைவிட இக்களத்தில் மேலோங்கியிருந்தான். ஒவ்வொரு மீற்றருக்குமாகப் பல தடவைகள் மாறிமாறி இருதரப்பினரும் சமரிட்டுக்கொண்டிருந்தோம்.

காவலரண் பகுதியெங்கும் குருதியாறு ஓடிக்கொண்டிருந்தது. மிகச் சொற்ப நேரத்தி லேயே எத்தனையோ விடயங்கள் நடந்தேறிவிட்டன. இழப்புகளை இயன்றவரை தவிர்ப்பதற்கான வியூகங்களை எந்தக் கட்டத்திலும் நிதானமிழக்காது எமது அணித்தலைவர்கள் வகுத்தபடியிருந்தனர். ஆனால் எதிரியின் நிலையோ படுமோசமாக இருந்தது.

எதிரியின் நகர்வுக்குச் சாத்தியமானதென எதிர்பார்க்கப்பட்ட பகுதியில் எம்மால் அமைக்கப்பட்ட சூட்டு வலையங்களுக்குள் எதிரி முறையாகச் சிக்குண்டிருந்தான். எமது பொறிவெடிகள், மிதிவெடிகள் எல்லாமே வீண்போகாது கொத்துக் கொத்தாய் எதிரிகளைச் சாய்த்து வீழ்த்தின. பல சமயங்களில் அவர்களது ஒருமித்த அவலக்குரல் எமது போராளிகளின் காதுகளிற் கேட்டது. குறிப்பாகப் பொறியியல் துறையினரால் புதிதாக அறிமுகம் செய்யப்பட்டுத் தலைவர் அவர்களால் எமது படையணியின் முன்னாட் சிறப்புத் தளபதியின் நினைவாகப் பெயர் சூட்டப் பட்ட ‘ராகவன்’ என்ற செயற்றிறன் மிக்க பொறிவெடிக்குக் களத்தின் எல்லாப் பகுதிகளிலும் பலநூறு எதிரிகள் மாண்டார்கள். ஆயினும் எதிரிகள் எம்முடன் தொடர்ந்து சமரிட்டனர்.

முறியடிப்புச் சமரிற் குதித்த போராளிகள் முன்னேறுவதும் பின்வாங்குவதுமாக நிலைமை இழுபட்டுச் சென்றது. எனினும் பாரிய அளவிலான இழப்புகள் என்று சொல்லுமளவிற்கு எமது அணிகளுக்கு எதுவும் நடந்துவிடவில்லை. காயமடைந்த போராளிகள்கூடத் தத்தமது நிலைகளில் இருந்தவாறு தொடர்ந்து போரிட்டனர். ஏதோ ஒரு கட்டத்தில் எதிரியின் வியூகத்தை உடைப்போம் என்ற நம்பிக்கையில் எமது வீரர்கள் போரிட்டுக்கொண்டே இருந்தனர்.

‘T’ பகுதியில் சமர் தொடர்ந்துகொண்டிருந்தது. அப்போது அரைமணித்தியாலம் கூடக் கடந்திருக்காது. எதிரி மற்றுமொரு முனையால் எமது காவலரண்களைப் பிளந்து சண்டையைத் தொடக்கினான். அங்கும் ஒரு வலுவான சமர் வெடித்தது. அதில் நிலைகொண்டிருந்த வீரமைந்தனின் அணி சிறிது தூரம் பின்வாங்கி அங்கிருந்த பெண்போராளிகளையும் இணைத்துக்கொண்டு ஆட்லறி, மோட்டார் பீரங்கிகளின் சூட்டாதரவுடன் முறியடிப்பில் இறங்கியது. எதிரி முதலில் முறியடிக்கப்பட்டான். எனினும் சிறிது நேரத்திலேயே அதற்கு அருகாகப் பிறிதொரு இடத்தில் வலு வான உடைப்பு ஒன்றை நிகழ்த்தினான். உறுதி தளராது மீண்டும் மீண்டும் பொருதிய வீரர்கள் அடுத்த தடவையும் எதிரியை முறியடித்தனர். கப்டன் இளஞ்சுடரின் முறியடிப்பு அணி எதிரிகளின் பிடியில் இருந்து மீட்டெடுத்த அரண்களில் உறுதியாக நிலையெடுத்தது.

காலை 7.00 மணியிருக்கும். இன்னமும் முறியடிக்கப்படாத பகுதியூடாக எமது பின்னணி நிலைகளும், கட்டளை நிலையங்களும் அமைந்திருந்த பகுதிகள் எங்கணும் எதிரி பரவத் தொடங்கிவிட்டான். துணைத்தளபதி கோபித்தின் கட்டளைப்பணியகம் மற்றும் லெப்.கேணல் விக்கிஸின் களநிர்வாகப்பணியகம்

என்பவற்றுடன் கட்டளைத் தளபதி கேணல் தீபன் அவர்களின் கட்டளை நிலையத்தைச் சூழவும் எதிரி முன்னேறிவிட்டான். உண்மையிற் சமரில் இது ஓர் ஆபத்தான கட்டம். கட்டளை நிலையங்கள் எதிரியின் நேரடியான நெருக்கடிக்குட்சிக்கும் போது முன்னணியில் எமது நடவடிக்கைகள் தீவிரமற்றுப்போகும் அல்லது நிலைகுலைந்து போகும். ஆயினும் கூட எதிரியால் எம்மை நிலைகுலையச் செய்துவிட முடியவில்லை. எல்லா இடங்களிலும் புதிய புதிய வியூகங்களை அமைத்துச் சமரிட்டுக் கொண்டே இருந்தோம். பின் வாங்குதல் என்ற எண்ணத்திற்கே எமது மனங்களில் இடமில்லாது போனதுதான் எல்லாவற்றையும் தீர்மானித்தது.

துணைத்தளபதி கோபித் தனது கட்டளை மையத்தை நோக்கி முன்னேறிய எதிரிகளை எதிர்கொள்ளும் பொறுப்பை மேஜர் மதுரனிடம் ஒப்படைத்துவிட்டு முன்னணி அரண்களை மீளக்கைப்பற்றும் அணிகளைத் தொடர்ந்து வழிநடத்திக் கொண்டிருந்தார். எதிரிகள் எங்கும் வியாபித்தபோதும் எமது வீரர்கள் எவரிடமும் பயமோ பதட்டமோ நிலவவில்லை. கட்டளை மையத்தின் ஒரு காவலரணில் தனியாக நின்ற அகமன்னன் என்ற போராளி மட்டும் தனது ஆயுதத்தால் படையினர் பதினைந்துக்கு மேற்பட்டோரைச் சுட்டுவீழ்த்தினான்.

இவ்வாறு களத்திற் பல வீரசாதனைகள் நடந்துகொண்டிருந்தன. எமது படையணிக்கெனத் தனியாக ஒதுக்கப்பட்ட பகுதிக்கப்பால் ஏனைய பகுதிகளிலும் எதிரியை முறியடிப்பதற்காக எமது அணிகள் நகர்த்தப்பட்டன. குறிப்பாகக் கண்டிவீதிக்கு வலப்புறமாக எதிரியின் உடைப்பிற்குள்ளான பகுதிகளில் மேஜர் பிரதாபனின் முறியடிப்பு அணி, தளபதி வீரமணியின் நேரடி வழிநடத்தலிற் கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருந்தது. இவ்வாறு எல்லா முனைகளிலுமே சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகள் போரிட்டனர்.

எமது 'T' பகுதியில் நடந்த தொடர்ச்சியான சமர் எதிரியைப் பலவீனப்படுத்தத் தொடங்கியது. சிதைவடைந்த தனது அணிகளை மாற்றிமாற்றிக் களமிறக்கிய எதிரி களைப்படைந்தான். அத்தனை விரைவாய் அவை சிதைக்கப்பட்டுக்கொண்டிருந்தன. எமது காப்பரண்கள் கூட எதிரியின் எறிகணை மழையால் உருக்குலைந்திருந்தன. எறிகணைச் சத்தங்கள் எந்தக் கணத்திலும் ஓய்ந்ததாகத் தெரியவில்லை. மிகையொலி விமானங்களும் மாறிமாறி எம்மைத் தாக்கியபடி இருந்தன. எல்லாவற்றையுந் தாங்கிக்கொண்டு விடாது போரிட்ட நாம் விரைவிலேயே முன்னேற்றத்தைக் கண்டோம். ஒவ்வொன்றாக எதிரி நிலைகள் எம்மிடம் விழத் தொடங்கின. உள்நுழைந்த எதிரிகள் தொடர்புகள் அறுக்கப்பட்ட நிலையில் எமது பகுதிக்குள் அகப்பட்டுக் கொண்டனர்.

எமது வியூகத்தில் சிக்குண்டு மாண்டுகொண்டிருக்கும் பெருந்தொகையான படைகளை மீட்டெடுக்க எதிரி மீண்டும் மீண்டும் முயற்சிகளை மேற்கொண்டான். அவற்றிலெல்லாம் தோல்விகளைக் கண்டபோதும் அவன் தன் முயற்சியைக் கைவிடவில்லை. சண்டைத்திறன் வாய்ந்த தனது நூற்றுக்கணக்கான வீரர்களை மீட்டெடுக்க வேண்டிய தேவை எதிரித் தலைமையைத் தொடர்ச்சியாக நிர்ப்பந்தித்தது. பிற்பகல் மூன்று மணியிருக்கும், ஐந்தாவது தடவையாக முயன்ற எதிரி எமது காவலரண்களை மீண்டுமொருதடவை உடைத்து உள்நுழைந்தான்.

இம்முறை சமர் முன்பைவிட உக்கிரமாக இருந்தது. எறிகணைகள் பெருமளவில் வீழ்ந்து வெடித்தன. 'ராங்கி'கள் பரவலாகத் தாக்குதல்களை நடத்தியபடி முன்னேற முயன்றன. மொத் தத்தில் - ஒரு கடுஞ்சமர் மூண்டது. கப்டன் இளஞ்சுடரின் தலைமையிலான அணியினர் இறுதி வரை எதிரிக்கு மிக நெருக்கமாக நின்று போரிட்டனர். எனினும் அந்த அணியில் இளஞ்சுடர் உட்படக் கணிசமானோர் காயமடைய, இருவர் வீரச்சாவடைய அவர்கள் பின்வாங்கியபோதும் பிறிதொரு நிலையில் நின்று எதிரியை முன்னேறவிடாது தொடர்ந்து போரிட்டுக்கொண்டிருந்தனர். சிறிது நேரத்தில் நித்தியின் தலைமையில் வந்த இன்னொரு முறியடிப்பு அணியினர் இளஞ்சுடரின் அணியை விடுவித்து எமது

பீரங்கிப்படைகளின் செறிவான சூட்டாதரவோடு எதிரியை அடித்து வீழ்த்தி முன்னேறத் தொடங்கினர். சுமார் 150 மீற்றர் வரையான காவலரண் பகுதியை மீட்டெடுத்த அவர்களால் தொடர்ந்து முன்னேறமுடியவில்லை. அதில் நிலைகொண்டபடி மேலதிக உதவி அணிகளுக்காகக் காத்திருந்தனர். இப்போது காலையிலிருந்து எமது முற்றுகைக் குட்சிக்குண்டிருந்த எதிரி அணிகளும் புதிதாக எமது அரண்களைக் கைப்பற்றியிருந்த எதிரியணிகளும் இணைப்பை ஏற்படுத்திக் கொண்டன.

மாலை 7.00 மணியாகியிருந்தது. களத்தில் வலுவான நிலையை மீண்டும் பெற்றுவிட்டதாக எதிரி எண்ணினான். தொடர்ச்சியாக எம்மால் விடாப்பிடியான சமரை நிகழ்த்த முடியாதென அவர்கள் களைத்திருக்கக்கூடும். ஆனாலும் இங்கு நாம் மீண்டும் தயாராகிக் கொண்டிருந்தோம். நித்தியின் அணியினர் காவலரண்களில் நின்றவாறு எதிரியைத் தொடர்ந்து முன்னேறவிடாது தடுத்தபடியிருக்க முறியடிப்பு அணிகள் தயாராகிக் கொண்டிருந்தன.

லெப்.கேணல் வீரமணியின் கட்டளைமையத்திலிருந்து தயார்ப்படுத்தப்பட்ட முறியடிப்பு அணியொன்று கனரக ஆயுதங்கள் சகிதம் களமிறங்கியது. சில மணிநேரம் தொடர்ச்சியாக நடந்த உக்கிரச் சமர் மாறி மாறி இழுபறி நிலையிலேயே இருந்தது. எதிரி கூடுதலான சூட்டு வலுவுடன் இருந்தான். எமது சூட்டுவலுவுக்கு இரையாகும் தனது வீரர்களுக்கு மாற்றீடு செய்ய அவனுக்குப் போதிய படைப்பலம் இருந்தது. உண்மையில் இந்தக் களத்தில் எதிரி விழ விழ இன்னும் அதிகமாய் எழுந்தான். நாமோ விழ விழ வீழ்ந்தவரின் வீரத்தை எமதாக்கிப் போரிட்டோம். இறுதியில் இந்த முயற்சியும் எதிரியால் முறியடிக்கப்பட்டது.

அப்போது நள்ளிரவு பன்னிரண்டு மணி. மீண்டுமொரு முறியடிப்பிற்காக நாம் தயாராகிக் கொண்டிருந்தோம். துணைத்தளபதி கோபித்தின் கட்டளைப் பணியகத்திலிருந்து மேலும் ஒரு முறியடிப்பு அணி தயார்ப்படுத்தப்பட்டு 50 கலிபர் உட்பட நவீன ஆயுதங்கள் சகிதம் களத்தின் மையத்திற்கு வந்து சேர்ந்தது. ஏற்கனவே காயமடைந்த நிலையிலுங்கூட களத்திலேயே நின்ற இளஞ்சுடரின் தலைமையில் மீண்டும் ஒரு முயற்சி. இறுதியில் இளஞ்சுடர் மீண்டும் காயமடைந்து களத்தில்வீழ இழப்பிற்குள்ளான அந்த அணியின் நள்ளிரவு முயற்சியும் பயனற்றுப் போனது.

பின்னிரவு இரண்டு மணி. எங்கள் வீரர்களுக்கு உறக்கமே இருக்கவில்லை. எவ்வளவு இழப்புகளைச் சந்தித்தபோதும் எதிரி மூர்க்கமாகவே நின்றான். எம்மால் ஒரு கட்டத்திற்கு அப்பாற் செயற்படமுடியாதென இன்னமும் நம்பியிருக்கிறான் போலும். நாங்களோ வெல்வது என்ற முடிவில் விடாப்பிடியாகவே நின்றோம். மேஜர் பல்லவனுடன் இனியவன் தலைமையிலான அணி மீண்டும் களமிறங்கியது.

இம்முறை எதிரியின் அருகுவரை அமைதியாக நகர்ந்தார்கள் எமது வீரர்கள். எதிரிக்குப் பத்து மீற்றர் அருகுவரை நகர்ந்த சக்திவேல் என்ற எமது வீரன் எதிரிமீது கைக்குண்டை வெடிக்கச் செய்யச் சம நேரத்தில் எல்லோருமாகத் தாக்கத் தொடங்கினர். செறிவான தாக்குதல்களை நடத்தியபடி முன்னேற முனைந்தனர்.

எதிரியுடன் மூர்க்கமாகப் போரிட்டுக் கொண்டிருந்தான் கலையரசன் என்ற எமது தோழன். சண்டையின் ஒரு கட்டத்தில் தனது குண்டுகள் இரண்டின் பாதுகாப்பு ஊசிகளை அகற்றித் தன்னுடன் அணைத்தபடி எதிரி வீரர்களை நோக்கி ஓடிக்கொண்டிருந்தான். எதிரிகளும் அவனை நோக்கிச் சரமாரியாகச் சுடத் தொடங்கினர். காயப்பட்டு வீழ்ந்தவனின் கைகள் குண்டுகளைத் தவறவிட்டன. அந்த வீரனின் உடற்சிதறல்கள் களத்தில் நின்ற போராளிகளினது உடல்களில் ஒட்டிக்கொண்டன. இவ்வாறு மூர்க்கமாக நடந்த இம்முறியடிப்பு முயற்சிகூட அணித்தலைவர் இனியவனும் காயமடைந்த நிலையில் இடைநிறுத்தப்பட்டது.

மீண்டும் மறுநாட் காலை இறுதியானதொரு சமருக்காக அணிகள் தயார்ப்படுத்தப்பட்டன. எல்லோருமே தொடர்ச்சியாகக் களத்திற் சண்டையிட்ட வீரர்கள். காலை 6.30 மணிக்குப் பீரங்கிப் படையணிகளின் சூட்டாதரவோடு அங்குலமங்குலமாக எமதணிகள் முன்னேறத் தொடங்கின. மீண்டும் எதிரியணிகள் எமது முற்றுகை வியூகத்துள் அகப்படக்கூடிய நிலை களத்தில் உருவானது. எதிரித் தலைமை அந்த அபாய நிலையை நன்கு உணர்ந்திருக்க வேண்டும் அல்லது களத்தில் நின்ற சிப்பாய்கள் தமது தலைமையின் விடாப்பிடியான போக்கை இனியும் பொறுப்பதில்லையென முடிவு செய்திருக்கவுங்கூடும். எது எப்படியோ அவர்கள் தமது இறந்த சகாக்களின் பெருமளவிலான உடல்களையும், ஆயுதங்களையும் விட்டு விட்டு ஓட்டமெடுக்கத் தொடங்கினர். அந்த நீண்ட சமர் முடிவிற்கு வந்தது. 26.4.2001 அன்று சண்டை தொடங்கிய மறுநாட் காலைப்பொழுதிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தனது பொறுப்பிலிருந்த பகுதிகளில் எதிரியை விரட்டியடித்துப் பாதுகாப்பை உறுதிப்படுத்தியது.

களத்திற் போராளிகளுக்கு ஓய்வே இருக்கவில்லை. தம்மிலும் பத்து இருபது மடங்கு தொகையிற் களமிறங்கிய எதிரிகளுடன் அவர்கள் போரிட்டுக்கொண்டிருந்தார்கள். எம்மெல்லோரது உணர்வுகளும் பாரமாயிருந்தன. அவற்றை இறக்குவதற்கு இந்தச் சமரை முற்றாக முறியடித்து நாம் வெற்றி கொண்டாடவேண்டும். இத்தனை நெருக்கடியான களத்திலும் உணவுப் பொதிகள் வந்திருந்தன. என்றாலும் யார்தான் சாப்பிட்டனர்? தம் கூட நின்ற தோழர்களை இழந்த துயரம் ஒரு புறம். மாறிமாறி நடந்த சண்டை பற்றிய நினைவுகள் மறுபுறம். உணவும், உறக்கமுமற்ற உடலுடன் ஒரு சமர் முனையை வென்று முடித்த எமது படையணிப் போராளிகள் காவலரண்களில் இருந்து மாற்றப்பட்டு மீளொழுங்கு செய்யப்பட்டு மற்றைய நிலையொன்றை நோக்கி நகரத் தொடங்கினர். வீதிக்கு வலப்புறமாகக் கண்டற் பற்றைகளை அண்டிய பகுதியில் எதிரிக்கும் எமது போராளிகளுக்குமான விடாப்பிடியான சண்டை நடந்துகொண்டேயிருந்தது. இப் பகுதிச் சண்டைகளைப் பொறுத்தவரை இங்கு எமது அணிகள் எனக் குறிக்கப்படுவது எல்லாப் படையணிகளையும் உள்ளடக்கிய அணிகளையாகும். ஏனெனில் முக்கியத்துவம் வாய்ந்த இம் முனையில் எல்லா அணிகளும் ஒன்றாக இணைந்து போரிட்டன. குறிப்பாகப் பெண்போராளி அணிகள் இங்கு அதிகமாக ஈடுபடுத்தப்பட்டிருந்தன.

சண்டை தொடங்கிய முதல் நாட் காலை 10.00 மணிளவிலேயே கட்டளைத் தளபதி தீபன் அவர்களது கட்டளையின்படி சிறப்புத் தளபதி லெப்.கேணல் வீரமணியின் கீழ் மேஜர் பிரதாபன் தலைமையிலான முறியடிப்பு அணி 'Z' எனக் குறியீடு செய்யப்பட்ட பகுதிச் சண்டைகளுக்காக அனுப்பப்பட்டிருந்தது. இப்பகுதியில் எதிரி ஆழமாக ஊடுருவி வலுவாக நிலைபெற்றிருந்தான். அந்தக் களத்திலும் எதிரிக்கும் எங்களுக்கும் வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வந்துகொண்டிருந்தன. இப்பகுதியினூடாக முன்னேறிய எதிரியால் தளபதி கேணல் பால்ராஜ் தலைமையிலான அணிகள் நிலைகொண்டிருந்த ஆனையிறவிற்கான இரண்டாவது காவலரண் வரிசைவரைகூட முன்னேற முடிந்தது.

அக்கினிக்கேலா நடவடிக்கை முறியடிப்பில், பூதாகரமாக வியாபித்து விட்ட இப்பகுதிச் சண்டைகள் மட்டுமே நீடித்துக் கொண்டிருந்தன. எமது படையணி உட்பட எல்லாப் படையணிகளைச் சேர்ந்த போராளிகளும் ஒன்றிணைந்து முறியடிப்பு முயற்சியில் இறங்கியிருந்தோம். ஏழு, எட்டுத் தடவைகள் நாமும் எதிரியும் அப்பகுதிகளை மாறி மாறிக் கைப்பற்றி வைத்திருந்தோம். பல நூற்றுக்கணக்கில் ஊடுருவியிருந்த எதிரியின் விநியோக வழிகள் சில சமயங்களில் எமது அணிகளால் முற்றாகத் துண்டிக்கப்பட்டிருந்தன. அந்தச் சமயங்களிலெல்லாம் எதிரி வாழ்வா சாவா என்ற நிலையிற் போரிட்டு முற்றுகையை உடைத்திருந்தான். மதியமளவிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் மேஜர் பல்லவனுடன் அமுதாப், வாணிகரன் ஆகியோரின் முறியடிப்பு அணிகள் துணைத்தளபதி கோபித்தின் கட்டளையுடன் சண்டைப் பகுதிக்கு வந்து சேர்ந்தன.

அன்று முழுவதும் ஓய்வொழிச்சலில்லாத சமரிற் போராளிகள் ஈடுபட்டனர். பல சமயங்களில் எதிரியணிகளும் எமதணிகளும் இனங்காணமுடியாதபடி இரண்டறக் கலந்துவிடுமளவிற்குக்கூட நிலைமையிருந்தது. உதாரணத்திற்கு 26ஆம் திகதி இரவு நடந்த சமரிற் கண்ணிவெடி வயல்களிலும், எமது பீரங்கிச் சூட்டு வலயத்திற்குள்ளும் அகப்பட்ட எதிரிகள் தமது உயிர்களைக் காப்பதற்கு அல்லற்பட்டு அலைந்து திரிந்தார்கள். அந்தக் காரிருளிற் செய்வதறியாது திகைத்த எதிரிகள் சிதறுண்டு இறுதியில் எமது நகர்வகழிக்குள் இறங்கிவிட்டார்கள். அதனால் இராணுவத்தினரும் எமது போராளிகளும் இனம் காணமுடியாதபடி கலக்கப்பட்டிருந்தனர். எல்லா இடமும் பரபரப்பு ஏற்பட்டது. ஓரிடத்தில் எமது அணியைச் சேர்ந்த சேரன் என்ற போராளி தனது ஆயுதத்தைக் கழுத்திற் கொளுவிக்கொண்டு கைக்குண்டுடன் நகர்வகழியால் வந்து கொண்டிருந்தான். முன்னால் நடந்துகொண்டிருந்தவனைத் தனது அணித்தலைவனென்று நினைத்துக்கொண்டே அவனைப் பின்தொடர்ந்தான். முன்னாற் போனவனும் தனது சகா ஒருவனே பின்னால் வருகிறான் என எண்ணியபடி நடந்தான். இருவரும் வெறுமையாகக் கிடந்த எமது காவலரண் ஒன்றுக்குள் சென்றனர். மற்றவனைத் தனது அணித்தலைவன் என நினைத்துத் தோழிற் கையை வைத்த சேரனுக்கு இராணுவத்தின் ரவை எதிர்ப்புக்கவசம் கையில் தட்டியதும் சந் தேகம் வந்துவிட்டது. மெதுவாக 'விதுஷன்' என அவனது பெயரைக் கூப்பிட்டவாறு தலையில் கையை வைத்துப் பார்த்தபோது இராணுவத்தின் தலைக்கவசம்! உடனே தயாராக வைத்திருந்த கைக்குண்டைக் கழற்றி இராணுவத்தின் காலுக்குள் வைத்துவிட்டு சேரன் வெளியே பாய்ந்து வந்து விட்டான்! இப்படி மோசமாகக் கலந்துபோன எமது அணிகளை மீட்டெடுப்பதே பெரும்பாடாயிற்று அன்று.

எமது அணிகளை வசதியானவரை பின்னெடுத்து நிலைப்படுத்திய பின் உறுதியானதொரு முறியடிப்புத் தாக்குதலுக்கான முனைப்பில் எமது கட்டளைப்பீடம் ஈடுபட்டது. நீண்டு செல்லும்இச்சமருக்கு அடுத்தநாட் பகற்பொழுதிற்கிடையில் முடிவுகட்டுவதென உறுதியாகத் தீர்மானிக்கப்பட்டது. இரவு முழுவதும் தாக்குதலுக்கான ஏற்பாடுகளிலேயே எல்லோரும் ஈடுபட்டனர்.

28ஆம் திகதி அதிகாலை. தயார்நிலையில் வைக்கப்பட்டிருந்த எமது அணிகள் முன்னேறத் தொடங்கின. ஆட்லறி, மோட்டார் மற்றும் பலகுழல் பீரங்கிகளின் செறிவான சூட்டுப்பலத்துடன் நான்கு முனைகளூடாக எமது முறியடிப்பு அணிகள் முன்னேறின. ஏற்கனவே முதல்நாள் இரவு முழுவதும் எம்மவர்களாற் செறிவாக மேற்கொள்ளப்பட்ட பீரங்கித் தாக்குதல்களால் மோசமாகப் பலவீனப்படுத்தப்பட்டிருந்த எதிரி நாம் சூழ்ந்து தாக்கத் தொடங்கியதும் பின்வாங்கலானான். விரைவிலேயே களம் அமைதியடைந்தது. எதிரியின் பலநூறு உடல்களும் ஆயுதங்களும் களம் எங்கணும் பரவியிருந்தன. சுமார் 72 மணித்தியாலங்கள் தொடர்ந்து போரிட்ட நாம் எதிரியை வெற்றி கொண்டோம்.

இந்த முறியடிப்புச் சமரில் எல்லாமாகப் போராளிகள் நூற்று நாற்பத்தொருபேர் தம்மைத் தியாகம் செய்தனர். இவர்களுள் எமது படையணியில் இருந்தும் போராளிகள் இருபது பேரை நாம் இழந்தோம். இன்னும் பலர் காயமடைந்தனர். களத்தில் வீரச்சாதனைகள் புரிந்தமைக்காகப் போராளிகளைத் தலைவர் அவர்கள் பரிசளித்துக் கௌரவித்தபோது எமது படையணியைச் சேர்ந்த போராளிகள் பத்துப்பேரும் கௌரவிக்கப்பட்டதுடன் சமரில் அணிகளைத் திறம்பட வழி நடத்தியமைக்காக எமது துணைத்தளபதி கோபித் அவர்களும் 'லெப்.கேணல்' நிலை உயர்வு பெற்றார். மொத்தத்தில் எமது படையணியின் பத்தாண்டு வரலாறு முடிந்தபின் நடந்த இச்சமர் எமது வீரத்தை எடுத்தியம்பியது.



அக்கினிக்கேலாவுக்கு எதிரான சமரைச் செய்வதற்கு முன்னர் உரையாற்றும் தளபதி கோபித்



அக்கினிக்கேலாவுக்கு எதிராக குமுறுகின்ற எரிமலைகள்



அக்கினிக்கேலாவுக்கு எதிராக குமுறுகின்ற எரிமலைகள்



அக்கினிக்கேலாவை வென்று திரும்பும் எம் வீரர்கள்

❖ "சமர்களுக்கெல்லாம் தாய்ச்சமர்" எனத் தலைவர் அவர்களால் விதந் துரைக்கப்பட்ட 'ஜயசிக்குறு' நடவடிக் கைக்கு எதிரான சமரில், முன்னேறிய இராணுவத்தைத் தடுத்துநிறுத்தப் புளி யங்குளம் பகுதியிற் புலிகளின் படையணிகள் ஏற்படுத்திய முகாமின் பிரதான தளபதியாகச் செயற்பட்டு அந்தச் சண் டையை எதிர்கொண்ட பெருமை உங்களிற்குரியது. 'புளியங்குளம் எங் கள் புரட்சிக்குளம்' என்ற கோசத்துடன் புலிகள் செய்த தீர்மானகரமான முறிய டிப்புச் சமரில் ஜயசிக்குறு படைகளின் கற்பனைத் திட்டங்கள் பொடியாகிப்போ னது வரலாறு. சிங்களத்தை வன்னிக் காடுகள் எங்கும் சிதறச்செய்த புளி யங்குளச் சமரிற் சாள்ஸ் அன்ரனி படை யணியை அதன் சிறப்புத் தளபதி என்ற வகையில் வழிநடத்தியவர் என்ற முறையிற்படைப்பிரிவு அங்கே எவ்வாறான சமரைச் செய்தது எனச் சொல்லுவீர்களா?

➢ ஜயசிக்குறுப் படைகள் முன்னேறி வந்தன. புளியங்குளம் பகுதியில் இராணுவத்தைத் தடுத்து நிறுத்துவதற்காக முகாம் ஒன்றைச் சாள்ஸ் அன்ரனி படையணியை வைத்து அமைக்குமாறு தலைவர் எனக்குக் கட்ட ளையிட்டார். முன்னேறும் படைகளுக்கான ஒரு கொலைப்பொறியை அதன்மூலம் அமைக்கவேண்டும் என்பது தான் தலைவரு டைய திட்டமாக இருந்தது. உலகத்தின் கவனத்தைப் பிடித்துலுப்பிய ஒரு வரலாற் றுச்

# முன்னாட் சிறப்புத் தளபதி கேணல் தீபன் அவர்களுடனான பேட்டி



தளபதி கேணல் தீபன், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக 1997 முதல் 1998 வரை செயற்பட்டவர். சாள்ஸ் அன்ரனி படையணியின் சிறப்புத் தளபதியாக இருந்து இன்று தமிழீழ விடுதலைப் புலிகளினுடைய நடவடிக்கைக் கட்டளைத் தளபதிகளுள் ஒருவராக உயர்ந்து நிற்பவர். 1995 இன் பின் பல களங்களில் தளபதி கேணல் தீபனின் கட்டளையின் கீழ்ச் செயற்பட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தமிழீழத்தின் புகழ்பூத்த சமர்களான ஓயாத அலைகள்-01, சத்ஜய எதிர்ச்சமர், ஜயசிக்குறு எதிர்ச்சமர், ஓயாத அலைகள்-02, ஓயாத அலைகள்-03, ஓயாத அலைகள்-04 என்பவற்றிற் பல சாதனை களைப்படைத்துள்ளமை குறிப் பிடத்தக்கது. 1995 இன் பின் சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவின் அனைத்துச் சாதனைச் சமர்களின் பின்னாலும் படையணிக்கான உந்துசக்தியாகச் செயற்பட்டவர். தீச்சுவாலை முறியடிப்புச் சமரின் பிரதான கட்டளையிடும் தளபதியாகச் செயற்பட்டு அந்த முறியடிப்புச் சமரின் வெற்றிப் பூரிப்பிலிருந்த அவரை அவருடைய கட்டளைப் பணியகத்திற் சந்தித்தோம்.

சமர் அது. சிங்களம் அங்கே திணறிப்போனது. தொடர்ந்தும் என்ன செய்வது எனப் புரியாது இராணுவத் தலைமை திண்டாடியது.

புளியங்குளத்தைக் காப்பதற்கான எமது சண்டைகள் புளியங்குளத்திற்கு முன்னால், பனிக்கநீராவிப் பகுதியில் எம்மால் ஏற்படுத்தப்பட்டிருந்த நிலை களில் இருந்தே ஆரம்பமாகின. புளியங்குளம் முகாமை நெருங்குவதற்கு முன்பே எதிரி தன்னிற் பலரை இழந்திருந்தான். கவச டாங்கிகள், துருப்புக் காவிகள் பலவும் எம்மால் நாசமாக்கப் பட்டன.

எனக்கு நினைவில் உள்ளது. பனிக்கநீராவிப் பகுதியில் எதிரியின் கவச அணி மேற்கொண்ட முன்னேற் றத்தை அங்கே நின்ற சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவின் ஓர் அணி முறியடித்தது. அன்றைய சமரில் தற்றுணிவு நிரம்பிய அந்தப் படையணிப் போராளிகளின் தீர்க்கமான முறியடிப்புச் சமரில் மொத் தமாக எதிரியின் மூன்று டாங்கிகள் அழிக்கப்பட்டும், இரண்டு டாங்கிகள் சேதமாக்கப்பட்டும் இருந்தன. அதிற் சாள்ஸ் அன்ரனி படையணிப் போர்வீரன் ஒருவனது டாங்கி எதிர்ப்பு ஆயுதத்தால் மட்டுமே இரண்டு டாங்கிகள் அழிக்கப் பட்டு ஒரு டாங்கி சேதமாக்கப்பட் டதை நான் குறிப்பிடவேண்டும். அன்றைய அந்தச் சமர், சிதைந்த அந்த டாங்கிகளின் பின்னாலேயே முடிந்து போனது.

இப்படி ஐந்து மாதங்களாக புளியங் குளத்தைக் கைப்பற்ற எதிரியும் தக்க வைப்பதற்கு நாமும் செய்த சமர்கள் கடுமையானவை. இறுதிவரை எம்மை வெற்றி கொண்டு கைப்பற்ற முடியாமற் போன புளியங்குளம் நகரை ஐந்து முறை கைப்பற்றி விட்டதாக எதிரி அறி வித்தான். அந்தளவுக்கு புளியங்குளம் சமர்க்களத்தில் அவன் அடைந்த தோல் விகள் இராணுவத்தை மட்டுமல்ல சிங்கள தேசத்தின் அரசியலையே ஆட்டங்காண வைத்தன. புலிகளின் ஏனைய படையணி களுடன் இணைந்து அந்தச் சமர்க்களத்திற் சாள்ஸ் அன்ரனி போராளிகள் காட்டிய தற்றுணிவும் உழைப்பும் வியப்புக்குரியது. வரலா றாய் உயர்ந்து விட்ட புளியங்குளம் சமரிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி ஆற்றிய பங்கு காத்திரமானது. சாதனைகள் நிரம்பியது.

❖ **நீங்கள் படையணியைப் பொறுப்-பெடுக்கும் போது தலைவர் உங்களுடன் படையணி தொடர்பாக என்ன விடயங்களைத் தனிப்பட்ட முறையிற் கதைத்தார் எனச் சொல்ல முடியுமா?**

➢ தலைவர் இந்தப் படையணிப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து படையணிபற்றித் தனிப்படக் கதைக்கும்போது சீலண்ணை யைப் (சாள்ஸ் அன்ரனி) பற்றித்தான் அதிகம் கதைத்தார். குறிப்பாக ஆரம்ப காலத்தில் நெருக்கடியான போராட்டக் கட்டத்திற் சீலண்ணை எப்படித் தலைவருக்குப் பக்கபலமாய் இருந்து நெருக்கடிகளைத் தகர்த்து வெற்றியை நோக்கி இயக்கத்தைச் செயற்பட வைத்தார் என்பதுபற்றிச் சொன் னார். அவருடைய பெயரில் ஆரம்பிக்கப்பட்ட படையணி நெருக்கடியான கட்டங்களில் முகம்கொடுத்து போராட்டத்தை வெற்றி நோக்கி இட்டுச் செல்லவேண்டும் என்பது தான் தலைவருடைய எதிர்பார்ப்பாய் இருந் ததை நான் உணர்ந்துகொண்டேன்.

இவற்றைவிட "இந்தப் படையணி நிறைய விடயங்களைச் செய்திருக்கிறது. போராளிகள் நிறையச் சாதித்திருக் கின்றார்கள். அந்த வரலாறுகள் எழுதப்– படாமல், ஆவணப்படுத்தப்படாமல் போய்விட்டன. உன்னுடைய காலத்தில் நீ கண்டிப்பாய் அதில் கவனம் எடுத்து வரலாற்றை ஆவணப்படுத்தவேண்டும்" என்று வலியுறுத்தினார்.

❖ **படையணியை நீங்கள் பொறுப்பெடுக்கும் போது இந்தப் படையணியை எப்படி வளர்க்க வேண்டும் என நீங்கள் எண்ணினீர்கள்?**

➢ இந்தப் படையணியுடைய சிறப்பு எனக்குத் தெரியும். எனக்கு படைய ணியை வைத்து நேரடியாய் வெற்றிகர மான சண்டைகள் பல செய்யவேண்டும் என்ற ஆர்வம் இருந்தது.

தலைவர் இந்தப் பொறுப்பை என்னிடம் தந்தபோது தலைவர் எதிர்பார்க்கின்றமாதிரி படைய ணியை வளர்த்துப் பெரிதாகச் சாதிக்க வேண்டும் என்று விரும்பினேன். ஆனால், ஒருவருட காலம் பூர்த்தியாகும் முன்னரே தலைவருடைய பணிப்பின்படி வேறொரு கடமைக்கு – கட்டளைத் தளபதியாக நியமிக்கப்பட்டுவிட்டேன்.

❖ **உங்களுடைய காலப்பகுதியிற் படைய ணியை வளர்ப்பதில் உங்களோடு இணைந்து உழைத்த படையணி முன்ன ணித் தலைவர்கள் சிலரைச் சொல்லுங்கள்?**

➢ ராகவன், சேகர், தில்லை, முகுந்தன், நியூட்டன், லெனின், மணிமாறன், விமல், கோபி மற்றது நேசன். இவர்கள் என்னு டன் இணைந்து படையணியின் வளர்ச்சிக்காக உழைத்த முன்னணித் தலைவர்கள். பின்னாளில் இவர்கள் குறிப்பிட்டுச் சொல் லக்கூடிய தளபதிகளாகவும் உருவாகினார்கள்.

❖ **சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி யின் விசேட தளபதியாக இருந்து நீங்கள் படையணியை வழிநடத்திய களங்களில், உங்களுக்கு ஏற்பட்ட மறக்கமுடியாத சந்தர்ப் பம் ஒன்றைக் கூறுங்கள்?**

➢ ஓ.... (யோசனையின் பின்னர்)

நீங்கள் என்னிடம் கேட்பது வேறு விதமானது என நினைக்கின்றேன். என்னால் மறக்கமுடியாதளவு எனது மனத்தில் உறுதி கொண்டிருப்பது வேறு விதமான ஒரு பதிவு. (தீவிரத் தன்மை யுடன் அவர் சொல்லிய சொற்களின் வீச்சை என்னாற் புரிந்து கொள்ளக்கூடியவாறு இருந்தது)

அது, 'ஜயசிக்குறு' படைகளை நாம் புளியங்குளம் பகுதியில் எதிர்கொண்ட நேரம். நான் படையணியை வழிநடத்திக் கொண் டிருந்தேன். 01.08.1997 அன்று வவுனியாவில் இருந்து முன்னேறி புளியங்குளம் பகுதி வரை நிலைகொண்டிருந்த படையினரின் வயிற்றுப் பகுதியில், ஓமந்தைப்பகுதி இராணுவப் பிர தேசத்தினுள் ஊடுருவித்தாக்குதல் நடத்து வதற்கு நாம் திட்டமிட்டிருந்தோம். துர திஷ்டமான அன்றைய சமரில் எனது படைய ணியிற் போராளிகள் பலரை நான் இழந்தேன். அத்துடன் எமது தாக்குதல் திட்டமும் பூர ணத்துவப்படுத்த முடியாமல் எதிரியால் அன்று முறியடிக்கப்பட்டது. அன்றைய நாளில் எமது இழப்புக்களை ஒரு படையணியின் சிறப்புத் தளபதி என்ற வகையில் என்னாற் செரிக்கமுடியாமலிருந்தது. அன்றைய நாள் எனக்குள் மிகவும் பாதிப்பான உணர்வுகளை ஏற்படுத்தியது. எனது கட்டளையின் கீழ்ச் சமருக்குப் புறப்பட்ட அணிகளின் இழப்பால் எதிரி மீதான அதீதமானதொரு பழிவாங்கும் உணர்வு எனக்குள் தோன்றியது. நான் இந்தச் சமரின் தோல் விக்காய்ப் பழிவாங்கத் துடித்தேன். சிங்களச் சிப்பாய்களைத் தோற்கடிப்பதில் நான் உறுதியான முடிவுடன் இருந்தேன். ஆனால், அதைப் படையணியின் சிறப்புத் தளபதியாகப் புளியங்குளம் களத்தில் இருந்தபோது முழுமையாகச் செய்யமுடியாமற் போய்விட்டது. எனினும், அதை நான் சாதித்தேன். படையணி எனது கட்டளையின் கீழ்ச் செயற்பட்ட ஏனைய பல களங்களில் நான் அதைப்பின்னர் செய்து முடித்தேன்.

❖ **அப்படியாக நீங்கள் எதிரியைப் பழிவாங்கத் துடித்தபோது, படையணியை ஈடுபடுத்தி நீங்கள் இராணுவத்திற்கு எதிராகச் செய்த வெற்றிகரமான தாக்குதல் ஒன் றைச் சொல்லுங்கள்?**

➢ கிளிநொச்சியில் 04.06.1998 அன்று எமது நிலைகளை உடைத்து முன் னேறிய எதிரி மீது படையணிப் போராளிகள் மறக்கமுடியாத முறியடிப்புச் சண்டையைச் செய்தார்கள். இராணுவம் பெருமளவிற் கொல்லப்பட்டு, தோல்வியில் ஓடியது. தனது சண்டையின் இழப்புக்களைச் சகிக்கமுடியாது மீண்டும், எமது பலம் மீதான பிழையான கணிப்புகளுடன் 08.06.1996 அன்றும் எமது பிரதேசத்தில் இராணுவம் முன்னேறியது. அப்போதும் சாள்ஸ்

அன்ரனி படையணி வீரர்கள் எனது கட்டளைப் படி இராணுவத்தை அடித்து விரட்டிப் பல உடல்களையும் கைப்பற்றினர். மீள முடியாத அந்தத் தொடர் இழப்புக்களின் பின் இராணுவம் கிளிநொச்சியில் இறுதிவரை எங்கேயும் முன்னேற வில்லை. பின்னர் ஓயாத அலைகள் – 02 சமரிலும் சிங்களத்தின் புகழ்பூத்த 'கெமுனுவோச்' படைப்பிரிவைத் தளத் தின் கேந்திரமான இடத்தில் நடந்த மூர்க்கத்தனமான யுத்தம் ஒன்றிற் சாள்ஸ் அன்ரனி படையணிப் போராளிகள் தோற்கடித்தனர்.

❖ **நீங்கள் ஒரு கட்டளைத் தளபதி என்ற வகையிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிற் கண்ட முன்னுதாரணம் என்ன?**

போராட்டத்தின் நெருக்கடியான களச் சூழல்களை வெற்றிகொள்வதற்காகத் தான் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி தொடங்கப்பட்டது. அதிலும் சாள்ஸ் அன்ரனி படை பங்குபற்றும் சண்டைகளில் மிகவும் இறுக்கமான இக்கட்டான களச்சூழல்கள் தோன்றுவது இயல்பு. அந்த இக்கட்டான சூழல்களிற் படையணி முன்னணித் தலைவர்கள், குறிப்பா கச் சமரை வழிநடத்தும் தளபதிகள் சண்டையின் முன்னணியில் உருவாகிய தடையையோ நெருக்கடியையோ தகர்ப் பதற்கு நேரடியாகச் சண்டை அணியின் முதல் நபராய் நின்று சண்டை பிடித்துப் போராளிகளை வழிநடத்திச் சென்று அங்கே உருவாகின்ற நெருக்கடிகளை வெற்றிகொள் வதும், தலைவரால் படையணிக்கு வழங்கப் பட்ட "பயிற்சி, தந்திரம், துணிவு என்ற இரா ணுவ நெறியைக் கடைப் பிடித்து எந்தக் கடி னமான, இக்கட்டான களங்களிலும் வேகமா கவும் சிறப்பாகவும் செயற்பட்டுத் தமது பணியை நிறைவேற்றுவதும் இந்தப் படை யணியுடைய சிறப்பம்சம். இதை இந்தப் படையணி, தொடங்கப்பட்ட நாளில் இருந்து இன்றுவரை தொடர்ச்சியாகத் தன் மரபாகவே பின்பற்றி வருகின்றது. உண்மையில் தலைவருடைய எதிர்பார்ப்பும் தலைவரு டைய போர்த்தத்துவமுங்கூட அதுதான்.

❖ **சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக இருந்து படைய ணியை வழிநடத்திய நீங்கள் இன்று இயக்கத்தினுடைய கட்டளைத் தளபதிகளில் ஒருவ ராக உயர்ந்திருக்கின்றீர்கள். சாள்ஸ் அன்ரனி படையணிப் போராளிகளுக்கும், படையணியிற் புதிதாக உருவாக இருக்கும் போராளிகளுக்கும் நீங்கள் என்னசொல்ல விரும்பு கின்றீர்கள்?**

➢ வீரத்தை மூலதனமாகக்கொண்டு இந்தப் படையணி தமிழீழப் போரரங்கில் மிக முக்கி யமான சண்டைகளிற் காத்திரமான பாத்தி ரத்தை வகித்துவருகின்றது. அடைந்த எல்லா வெற்றிகளுக்குப் பின்னாலும் இந்தப் படையணிப் போராளிகள், தளபதிகளினு டைய வீரமும் தியாகமும் நிறைந்திருக்கின் றன. இதுதான் இந்தப் படையணியின் செயல்வேகத்திற்கான காரணம். இதைச் சரியான முறையில் விளங்கிக்கொள்வதுடன் இந்தப் படையணியுடைய வரலாற்றையும் தலைவர் இந்தப் படையணியின் போராளிகள் ஒவ்வொருவரிடமிருந்தும் எவ்வாறான செயற் பாட்டை எதிர்பார்க்கின்றார் என்பதையும் புதியவர்கள் அறியவேண்டும். அதைப் படை யணியின் மரபு சிதையாமற் பின்பற்ற வேண் டும். படையணியும் எமது இயக்கமும் எமது இனமும் பெருமைகொள்ளத்தக்கவாறு ஒவ் வொருவரும் சாதனைகளை நிகழ்த்தி வெல்லவேண்டும்.



மாவீரர் துயிலும் இல்லத்தில் சாள்ஸ் அன்ரனி படையணியினரின் அணிவகுப்பு



போர்முனைகளில் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி போராளிகள்





# உறுதியின் உறைவிடம்

அன்றைய நாள் தமிழீழத்திற்குத் துயரந்தரும் நாளாய் விடிந்தது. அன்று காலைதான் ராஜன் எம்மைவிட்டுப் பிரிந்தான்.

முதல் நாள் மாலை, பண்டத்தரிப்பில் நின்ற போராளிகளைப் பார்க்க வந்த ராஜனிடம், எதிரியின் சிறிய படையணி ஒன்றின்மீதான சிறிய தாக்குதல் திட்டம் ஒன்றைக் கூறினார் கோபியும் தோழர்களும்.

எதிரியின் புதிய நில ஆக்கிரமிப்பைக் கண்டு குமுறிக்கொண் டிருந்த ராஜன் உடனடியாக ஒப்புதல் தந்துவிட, சிறிதாய்த் திட்டமி டப்பட்டிருந்த அந்தத் தாக்குதலுக்கான ஒழுங்குகள் இரவோடிரவாக நடந்து முடிந்தன.

திட்டம் மிகவும் சிறியதாகவும் சுலபமானதாகவும் எதிர்பார்க் கப்பட்டதால், திட்டம்பற்றி அதில் நின்றவர்களைத்தவிர வேறு எவருக் கும் எதுவுமே தெரியாதுபோய்விட்டது.

திட்டத்தின் வெற்றிபற்றிய 'வோக்கி'ச் செய்தியை எதிர்பார்த்த படி காத்திருந்தான் ராஜன்.

கிளைமோர்ச் சத்தம் கேட்டவுடன் கோபி... கோபி... என்று கூப் பிட்டும் தொடர்பில்லாமற்போனது.

தலையிற் காயத்துடன் கோபியைக் கண்டதும் அவன் வழமை யான போர்க்களத்து ராஜனாய் மாறிப்போனான்.

என்ன நடந்ததோ? இரவு கிளைமோர் வைத்தவர்கள் கவன மின்றி நிற்க எதிரி கண்டானோ? இல்லை எம்மவர் ஏதேனும் 'வோக்கி' யில் மாறிக் கதைத்துவிட்டனரோ? வேவு பார்த்தோர் தவறோ? வேறு பிழைகளோ?

கோபியின் அணியைச் சூழ்ந்து எதிரிகள். தனி ஆளாய் உள்ளே புகுந்த ராஜன், எல்லோரையும் பின்னுக்கு அனுப்பி நின்று அடிபட்டு.... அவன் வரவில்லை.

கணேஸ், கிங்ஸ்லி என்று எட்டுப் பேருடன் ஒன்பதாவது ஆளாய் ராஜனும் வரவில்லை.

ராஜன் இல்லையென்ற செய்தி மெல்லப்பரவ அதிர்ந்து துடித்தது தமிழீழம்.

அவன்மீது கொள்ளை அன்பை வைத்திருந்த தலைவர், உயிராய்ப் பழகிய நண்பர்கள், அவனால் உருவான போராளிகள், அவனைக் காத்த மக்கள் என்று தமிழீழம் அழுது துடித்தது.

ராஜன்-றோமியோ நவம்பர்.

எங்கள் போராளிகளின் மனத்தில் நிறைந்துவிட்ட இனிய புயல், இறுகிய பாறை.

அடிக்கடி ரவைகளால் தைக்கப்பட்டு, பிய்பட்டு, இரத்தம் கொட்டி, தழும்புகளால் நிறைந்த தேகம்.

அவனது மனம் மட்டும் தளரவில்லை அது இறுகிப் பாறையாய் உருவாகியிருந்தது.

1987 இன் தொடக்கப் பகுதியில் ஓர் இருண்டபொழுது. யாழ் பொலிஸ் விடுதியும் தொலைத்தொடர்புக் கட்டடமும் கோட்டைக்குத் துணையாய் நிமிர்ந்துநின்றன.



லெப். கேணல் ராஜன்
சிறப்புத் தளபதி

சோமசுந்தரம் சற்குணம்
மாதகல்

அதைநோக்கி இருளோடு இருளாய் நகரும் புலிவீரர்கள்.
அதில் ஒருவனாய் ராஜன்.
தன் கை ஆயுதத்தைத் தான் பார்க்கமுடியாத காரிருள்.
பின்னால் நிற்பவரின் மூச்சுச் சுடும்.
வியர்வையாற் குளிக்கும் தேகம்.

தாகம் தண்ணீருக்காய் மட்டுமல்ல, அதற்கும் மேலாய், உயர்வாய்.
தாகம் தணிக்க உயிர்கொடுக்கத் தயங்காத வேகம், உறுதி.
இது எம் தாயகம், எங்கள் பூமி.
இங்கு அந்நியனுக்கு என்னவேலை?
இன்று வெல்வோம்.
அந்நியன் பாடம் படிப்பான்.

அக்காலத்தில் அவன் காரைநகர் கடற்படைக் காவலரண் பொறுப்பாளன். அதற்கு முந்திய சண்டையிலெல்லாம் தன் முத்திரையை ஆழமாய்ப் பதித்திருந்தான். கிட்டண்ணை அவனைக் கவனித்து வைத்திருந்தார். இந்தச் சண்டைக்கென ராஜன் கிட்டண்ணையால் விசேடமாக அழைக்கப்பட்டிருந்தான். ராதா அண்ணை தலைமையில் உள்நுழைந்த குழுவில் ராஜனும் ஒருவன்.

உள்நுழைவோருக்குக் குறுகியதாயும் வெளியில் நிற்போருக்கு நீண்டதாயும் அமைந்த இரவு விடிந்தபோது...

தனது படைவீரர்களை 'யாழ்ப்பாணக் காடுகளில்' தேடிக்கொண்டிருந்தது சிறீலங்கா அரசு.

யாழ்ப்பாணத்திற் காடுகளைத் தேடிக்கொண்டிருந்தது உலகு.

தன் நண்பர்கள் சிலரையும் தன் கைவிரல்கள் இரண்டையும் இழந்தபின் மருத்துவமனையில் இருந்து அந்தச் சண்டையில் தனது அனுபவத்தை மீட்டுக்கொண்டிருந்தான் ராஜன்.

இந்திய இராணுவக் காலம், அந்த இரும்பை உருக்காக உருவாக்கிய நாட்கள்.

இந்தியக் காலத்தில் ராஜனின் நாட்கள் வீரம் செறிந்த நாட்கள். அவன் நின்றுபிடித்தது வெறும் அதிஷ்டத்தினால் மட்டுமல்ல. வீரம், விவேகம், அவதானம், அன்புக்கினிய எம்மக்களின் பாசம்- இவைதான் அவனைக் காப்பாற்றிய கவசங்கள். தொடர்ச்சியான முற்றுகைகள்-தொடர்ந்து தூக்கமற்ற இரவுகள்.

முற்றுகை ஒன்றிலிருந்து பாய்ந்தோடித் தப்பித்துவந்த நாளின் மறுநாட்காலை ஒரு வாரக் கசகசப்புத்தீரக் குளித்துவிட்டு நொண்டிக்கொண்டு வந்தான். அன்புத் தோழனின் மடியில் ஈரம் ஊறியகாலை முள்ளெடுக்கக் கொடுத்துவிட்டு இருந்தவன் அப்படியே தூங்கிப் போனான் பாவம்.

எத்தகு நெருக்கடிகள் மத்தியிலும் உறுதிதளராத இரும்பு மனம். அதிகம் பேசாதவன். போர்க்களத்திற் பேசுவான். உறுதியாய்த் தன்னம்பிக்கையுடன், சக போராளிகளை இலகு நிலையில் வைத்திருக்கும் நகைச்சுவையுடன்.

இந்தியச் சண்டையின் ஆரம்ப நாட்கள். எமது பொன்னாலைப் பனைவெளிகள் ஊடாக அந்நியப் பாதங்கள். அனுபவம் குறைந்த எமது வீரன் ஒருவனிடம் இயந்திரத் துப்பாக்கி. அவனது சூடுகள் உயர்ந்து மேலாய், மிக மேலாய் வீணாகிப்போயின. இதைக் கண்ட ராஜன் 'டேய் தம்பி ஆமி இன்னமும் பனையிலை ஏறேல்லை. கொண்டா ஜி.பி.எம்.ஜி யை.' ஆயுதம்கைமாற ஒரு சூட்டுத் தழும்பினைப் பதித்துவைக்கிறது.

பொன்னாலையிற் கால் கிழிந்து, இந்தியாவில் காயம் ஒழுங்காக மாறமுதல், நாட்டுக்கு என்று துடிதுடித்துப் புறப்பட்டு, மீன்பிடிப்படகில் தீவுக்கு வந்து, இங்கு வந்தால், எங்கும் இந்தியத் தலைகள், தடங்கள்.

'எங்கட ஆட்கள் எங்கே' என்று எல்லாச் சனத்தையும் கேட்டுத்திரிந்து சந்தித்தான்.

யாழ்ப்பாணத்தில் எங்கும் இராணுவ முகாம்கள் நிறைந்திருந்த காலத்தில் ராஜன் வந்து சேர்ந்ததும் இந்தியர்கள் பிரச்சினையை வேறுவிதமாகச் சந்தித்தார்கள். அவனது உறுதி இந்தியர்களைத் திணறவைத்தது.

அரைத்தூக்கம் கலையாத அதிகாலைப்பொழுது, ஊரில் உள்ள நாய்கள் எல்லாம் குரைக்கத் தொடங்க, உடலில் உள்ள இரத்தம் எல்லாம் ஒன்றாகிச் சூடாகிப்பாயும்.

'டேய் தும்பன், வெற்றி, எழும்புங்கோடா!'
'ரங்கன்'
'அண்ணை நான் முழிப்புத்தான்.'
'வெளிக்கிடுங்கோ...'

சிரிப்புத்தான் வரும். என்னத்தை வெளிக்கிடுவது? ஜீன்ஸ் போட்டபடி, கோல்சர் கட்டியபடி வெறுநிலத்திற் படுக்கை, தலைமாட்டில் ஆயுதம் வைக்கவென விரித்திருக்கும் சாரத்தை எடுத்துச் சுருட்டி இடுப்பிற் கட்டினால் சரி.

"சரி வெளிக்கிட்டாச்சு."

நாய்கள் குரைக்கும் சத்தம் நகர-நகர, அது இராணுவத்தின் நகர்வை நிழலாய்க் காட்டும்.

முன் படலை பிசகென்று பின் வேலியால் பாய, காலில் நெருஞ்சி குத்தும். முந்தநாள் வாங்கிய செருப்பு நேற்றைய ரவுண்டப்பில் தவறிப் போனது நினைவுக்குவரும்.

விரைவாய்ச் சத்தமின்றி, சத்தமின்றி விரைவாய அல்லது உள்ளே, ரவுண்டப்புக்குள்ளே.

ராஜன் அருகில் இருந்தால் அனைவருக்கும் நம்பிக்கை-எப்படியும் ரவுண்டப்பை உடைக்கலாம்.



வரைபடம் ஒன்றை விளக்கும் தளபதி ராஜன்

'கட்டாயம் உடைக்கலாம். ஒருத்தரும் பயப்படாதேங்கோ'

'டேய் தும்பன் நீ முன்னுக்குப் போய் எத்தனை வாகனம் நிக்குதெண்டு பார். கண்டிட்டான் எண்டால் அடியாமல் வராத'

'ரங்கனும் வெற்றியும் அங்காலபோய் அடுத்த சந்தியைப் பாருங்கோ. டேய் ரங்கன் ஜி-3 ரவுண்ஸ் தட்டுப்பாடு சும்மா அடிக்கதை'

'தம்பி நீங்கள் என்ன கிறனைட்டோ வைத்திருக்கிறியள். பயப்படாதேங்கோ. என் னோடை நில்லுங்கோ. நான் சொல்லேக்கை கிறனைட் அடிக்கவேணும்.'

'அம்மா எல்லோரும் இதில குவிஞ்சு நிண்டால்தான் கட்டாயம் காணுவான். நீங்கள் பிள்ளையளைக் கூட்டிக்கொண்டு உள்ளுக்குப் போங்கோ, இந்தாங்கோ கோப்பையையும் கொண்டு போங்கோ.'

கொஞ்ச நேரத்தின் பின் கேட்கும் வெடிச்சத்தங்கள் ஓயும்போது, தேத்தண்ணீர் கொடுத்த அம்மா 'ஆர் பெத்த பிள்ளையளோ முருகா காப்பாத்து' என வேண்டிக்கொண்டிருக்கும்போது,

இரண்டு றோட்டுக் கடந்து நின்று, வரும் ஆட்களிடம் சைக்கிள் கேட்டுக்கொண்டிருப்பார் கள் ராஜனும் அவனின் ஆட்களும்.

கிறனைட்டுடன் வந்த சின்னப்பொடியன் 'ராஜண்ணை நான் உண்மையாய்ப் பயந்திட்டன் இனிப் பயப்படமாட்டன். நான் அடிச்ச கிறனைட்டில ஆமி செத்திருப்பானே? ' என்று கேட்டுக் கொண்டிருப்பான்.

அவர்களின் அநேகமான நாட்கள் இப்படித்தான் விடியும்.

இன்னொரு காலைவேளை, படுத்திருந்த வீட்டு ஒழுங்கையால் தெருவுக்கு வர, முன்னால் இராணுவ அணி. மற்றவர்கள் காணமுதல் ராஜன் கண்டுவிட்டான். 'இண்டைக்குப் பொழுது சூடாத்தான் விடிஞ்சிருக்கு. நான் இதில வைச்சுத்தொடங்கிறன். நீங்கள் இரண்டு பேரும் மற்றப் பக்கத்தாலை வாருங்கோ.' இராணுவம் நிற்கும் செய்தியை அலாதியாய்ச் சொல்வதுடன், அந்தக் கணத்திலேயே திட்டமும் தாக்குதலும். எத்தகைய சூழ்நிலையிலும் ஆபத்தை எதிர்கொள்ளக் கொஞ்சமுந் தயங்காத நெஞ்சுறுதி. பல கட்டங்களில் ராஜன் சாவின் விளிம்பில் ஏறி நடந்து வந்துள்ளான்.

எமது மண்ணில் அந்நியன் சுதந்திரமாய்த் திரிவதா? நிம்மதியாய் வாழ்வதா? என்று குமுறுவான். அவன் அடிக்கடி கூறும் வார்த்தைகள் 'மச்சான் உவங்களை இப்படியே விடக் கூடாது. இண்டைக்கு ரெண்டு ஆமியெண்டாலும் கொல்லவேணும்.'

ஒருநாள் பண்டத்தரிப்பு முகாம். 'என்ன வெடிச்சத்தம்?' என இந்தியர்கள் சனத்தை விசாரித்துக்கொண்டிருக்கையில் ராஜனும் தும்பனும் தங்கள் பிஸ்டலை இடுப்பில் வைத்தபின்னர், இறந்த இராணுவத்தின் துப்பாக்கிகளை ஆளுக்கொன்றாய் எடுத்தபடி சைக்கிளில்....
சுழிபுரம் சந்தி முகாம் அருகே, இந்திய இராணுவம் ஜீப்புடன் செத்தபடி கிடக்க.....

எம் போராளி காசிமை இழந்த பின்னர், நடு நெஞ்சில் துப்பாக்கி துளைத்த ராஜனைத் தூக்கிக்கொண்டு வந்தனர் தும்பனுடன் நகுலனும் நித்தியும்.

இந்திய அடிவருடிகள் முகாமிட்டிருந்த சுன்னாகம். இருபுறமும் இராணுவக் காவல். அதனுள்ளே கும்மாளமிட்டனர் எம்மினத்தின் அவமானச் சின்னங்கள். திட்டமிட்ட பெரிய தாக்குதல். அதிக ஆட்கள். முதல்நாள் றோட்டுக் கடக்க முடியாமல் ஒத்திவைத்த தாக்குதல். அடுத்தநாள் முயற்சி செய்தபோது,

இரவு ரோந்து இராணுவத்தை எதிர்கொள்ள, எல்லாமே பாழ்.

ராஜனை இருட்டுக்குள்ளால் இழுத்துவந்து குப்பி யைக் கழட்ட, வந்தது நூல்மட்டுமே.

'மச்சான் சுபாஸ் பிறண் அடி கொளுவியிட்டுது.' எனக்குப் பெரிய காயம்... இந்த முறை சரிவராது.... எல் லோரும் சாகாமல் இவர்கள் இரண்டு பேரையும் கொண்டுபோங்கோ.

சொன்னவன் பின்னர் கரைச்சல் தராமல் மயங்கிப் போனான்.

'ஐயோ ராஜண்ணை...' என்று, சூட்டும் ரங்கனுமாய் வாய்க்குள் விரலைவிட்டுத் தோண்டி,

தேங்காய் எண்ணை பருக்கி, தேங்காய் உடைத்து பால் பிழிந்து பருக்கி காரில் வைத்து ஸ்ராட் இல்லை என்று கத்தி தேடி, வேலிவெட்டி பாதை செய்து,

தள்ளு தள்ளு என்று, தள்ளிக்கொண்டு போய்,

உள் ஒழுங்கை வீட்டில் வைத்து, நீர்வேலிச் சனத்தைக் காவலுக்குவிட்டு,



அந்தநாள்விட்டு அடுத்தநாள் வாதரவத்தைக்குப் போய்ச்சேர, ராஜனும் முரளியும் மயக்கம் தெளிய, லோலோ மயங்கிப்போய், பின்னர் போய்விட்டான். எம்மைவிட்டுப் போயேவிட்டான்.....

அவனது தோழர்களது இழப்புக்கள் ஒவ்வொன்றின்போதும் அவன் அமைதியாய்க் குமுறு வான். கண்கள் வெறிக்க அவன் பாறையாய் இறுகுவான்.

ராஜனது இளமைக்கால நண்பன் தெய்வா, பாடசாலைக் காலத்திலிருந்து ஒன்றாய்க் கடலுக்குத் தொழிலுக்குப் போய்வந்து...., படித்துப் பந்து விளையாடி...., இயக்கத்திற்கு வந்து...., ஒரே படகில் இந்தியா போய்...., கூமாப்பிட்டிப் பயிற்சி முகாமில் ஒன்றாய் இருந்து...., மலைக்கு மூட்டை சுமந்து...., கழுதை கலைத்து...., பணிஸ்மன்ற் வாங்கி...., பயிற்சி முடித்து...., கரைக்கு வந்து...., எல்லாம்வரை ஒன்றாய் இருந்த தெய்வா பிரிந்துவிட்டான். கடலில் ஓட்டியாய்ப் போனவன் வரவில்லை. அவன் வரவில்லை என்று மாதகல் அழுதது ராஜன் அழவில்லை. அந்தப் பாறை இறுகியது.

ராஜனும் தும்பனும் பிரிந்தது கிடையாது. ராஜன் என்றால் தும்பன். தும்பன் என்றால் ராஜன். துப்பாக்கிகள் பங்கிடும்போது 'தும்பனுக்கு கையேலாது எம் 16 தான் வேணுமம்மான்' - ராஜன் சொல்ல சூடுபட்டு உடைந்து வளைந்த கையைத் தும்பன் மேலும் வளைத்து வந்து வாங்கிவிட்டு மறைவாய்ப்போய் பெரிதாய்ச் சிரித்தார்கள்.

ஒன்றாய்ச் சாப்பிட்டு, அடிபட்டு, கலைபட்டு ராஜனின் உயிருடன் இணைந்த நட்பு. சுன்னாகத்தில் காலில் இரண்டு வெடிபட்டு - காயம் மாறி இந்தியாவில் இருந்து வந்தபோது, தும்பன் இல்லை என்ற செய்தி அவனுக்குத் தெரிந்துதானிருந்தது.

இராணுவத்தின் சூடுதானா? விபத்தா என எல்லோரையும் ஓடிஓடிக் கேட்டு ஓய்ந்திருந்த வேளையில், தும்பன் இல்லாத ஏழாலைக் கிணற்றுக்கட்டு, வாழைத் தோட்டங்கள், பனங்கூடல்கள், கலைபட்டுப் பாய்ந்த வேலிகள், துரையண்ணை வீட்டு ஊஞ்சல்கள் என்று எல்லாமே வெறுமையாகத் தெரிய ரங்கன் அழுவான் ராஜன் அழமாட்டான். அந்தப் பாறை இறுகியது.

ரங்கன் சைக்கிள் உழக்க 'பாரில்' ராஜன். சுட்டுவிரல் விசைவில்லையொட்டியபடி, கொஞ்சம் அழுத்தினால் ரவைபாயும். எங்கும் போகும் சைக்கிள் சடசட என்று வெடிகேட்கும், சைக்கிள் ஒன்றுடன் கொஞ்சம் ரவையும் செலவாகும்.

'தப்பியது ரங்கனால்' என்பான் ராஜன். 'ராஜண்ணை இல்லையென்றால் நானில்லை' என்பான் ரங்கன்.

மாவிட்டபுரத்தில் வைத்து வரிசையாய் வந்த மொட்டை ஜீப்புக்கு அடிக்க நல்லாய் நடந்த சண்டை நெடுமாறன் இறந்து, ரங்கன் காயப்படத் திசைமாறியது.

திருச்சியில், 'ராஜண்ணை..... ராஜண்ணை' என்று ரங்கன் உரத்துக்கூவி மெல்ல முனகி அழுது துடித்து மௌனித்தபோதும் யாழ்ப்பாணத்தில் நின்ற ராஜன் அழவில்லை. பாறை இறுகியது.

மாதகலில் தன்னுடன் நின்ற ஏழுபேரை வைத்துப் பெரும் கூட்டமாய் வந்த இந்தியக் கைக்கூலிகளை அடித்துக்கொன்று, கலைத்து, பெருந்தொகையாய் ஆயுதம் அள்ளிவந்தபோது, எல்லா நாளும் ராஜனுடன் திரிந்த வெற்றி திரும்பிவரவில்லை.

ஆயுதங்கள் எல்லாம் அப்படியே குவிந்து கிடக்க, காயப்பட்ட தம்பியையும் வெற்றியின் உடலையும் குப்பிளானில் நின்ற கிளியிடம் அனுப்பிவிட்டு, ஆயுதங்களுக்குக் காவலாய் நின்ற போதும் ராஜன் அழவில்லை. அந்தப் பாறைதான் இறுகியது.

இந்தியா போனது. தமிழீழ வீடெங்கும் மகிழ்ச்சிக் குரல்கள், தெருவெங்கும் புலிவீரர்-மிச்சமாயிருந்தன இந்திய எச்சங்கள். புலனாய்வுப் பணியில் ராஜன்.

அவனது மனம் விடுதலைப் போரையும் அதனுடன் இணைந்தவற்றையும் தவிர வேறொன் றைப்பற்றியும் எண்ணியதே கிடையாது. இப்படித்தான் ஒரு நாள் பாடசாலையில் அவனுடன் படித்தவள் இயக்கத் தொடர்பிலும் மீண்டும் அறிமுகமாகி பழகிக் கடிதமொன்றில் என்னவோ எழுதி அவனிடம் அனுப்பிவிட்டுக் காத்திருந்தாள் பாவம்.

கடிதத்தைப் படித்தவன் பக்கத்தில் நின்றவனுடன் நேரேபோய்க் கடிதத்தைக் கிழித்துக் கொடுத்துவிட்டு 'போராட்டம் தவிர வேறொன்றும் நான் நினையேன்' என்றான்.

தன் ஆசைமகன் போகும் வாகனத்தையென்றாலும் பார்ப்போமென்று தாய்க் கிழவி றோட்டில் கால்கடுக்க காத்துநிற்க, இவன் மாதகலில் தான் போன வேலையை முடித்துத் திரும்பி வருவான்.

சிறீலங்காவுடன் சண்டை தொடங்கியது. ராஜன் ஓய்வின்றிச் சுழன்றான். அடிக்கடி அண்ணையைச் சந்தித்தான். எல்லா இடமும் திரிந்தான். ஒவ்வொரு பங்கருக்கும் ஒவ்வொரு மண்மூட்டைக்கும் இடம் சொன்னான்.

மயிலிட்டியில் பெருஞ்சமர். ராஜன் ஊண் உறக்கமின்றி நின்று வழிநடத்தினான். மழையாய்ப் பொழியும் செல்கள்-ரவைகள். மயிலிட்டிச் சண்டையில் மட்டும் இரண்டு தடவைகள் குண்டுச் சிதறல்கள் அவனைத் துளைத்துச் சென்றன. ஓய்வில்லை-அங்கு நடந்துகொண்டிருந்த யுத்தத்தில் இருந்து அவனால் ஒதுங்கியிருக்க முடியவில்லை.

கோட்டை முற்றுகை இறுக இறுக எங்கள் தளபதிகளின் தூக்கமற்ற இரவுகள் பெருகிக் கொண்டிருந்தன. மணியந்தோட்டத்திலிருந்து பொன்னாலைவரை நின்ற இளம் போராளிகள் ராஜனைக் கண்டு சிரிப்பர். இரவில்லை, பகலில்லை, ஓய்வில்லை, உணவில்லை தன்னைப் பிழிந்து முற்றுகைக்கு உரம் கொடுத்தான். பாணுவின் உற்ற துணையாய் முற்றுகைக்குத் துணைநின்றான்.

எம்மால் உள்ளிறங்க முடியாதுபோய்விட்ட, இரண்டாவது கோட்டை உட்புகல் நடவடிக்கை முடிந்து விடிந்தபோது, 'றோமியே நவம்பர், றோமியோ நவம்பர்' என்று பாணுவின் 'வோக்கி' கூப்பிட்டபோதும் பதிலில்லை.

மானிப்பாய் மருத்துவமனையில் பேச்சுமூச்சின்றி கிளி, ஜவான் ஆகியோருக்கு இடையில் கந்தல் துணிபோற் சுருண்டுபோய்க் கிடந்தான்.

காயம் மாறி கொஞ்சம் தேறி எழும்பிவந்தவன், இப்போது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படை யணியில்.

இந்தக் காலம் ராஜனை ஒரு சிறந்த நிர்வாகியாக உருவாக்கியது. பால்ராஜின் துணை வனாய் நின்று, படைப்பிரிவை உருவாக்குவதிற் பெரும்பங்காற்றினான் சகல போராளிகளுடனும் அன்புடன்-கண்டிப்புடன். அது கடுமையான பயிற்சிக்காலம்.

தமிழீழத்தின் எல்லா இடங்களில் இருந்தும் வந்திருந்த போராளிகள்.

குடும்பத்தைப் பிரிந்து வந்தவர்க்குத் தாயாக, தந்தையாக, நண்பனாக, ஆசானாக.

தமிழேந்தி அண்ணனிடம் காசுவாங்கி, இல்லையென்றால் ஊரில் கடன் வாங்கி, அதுவும் முடியாவிட்டால் வீட்டுக் குப் போய் அதை-இதைத் தூக்கி, தமையன் வியாபாரத்திற்கு வைத்திருக்கும் சாமான் களை அள்ளி வாகனத்தில் ஏற்றி...



*அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரியிற் போராளிகளுடன் தளபதி ராஜன்*

எப்படியோ போராளிகளைத் தனது பிள்ளைகளாய்-உயிராய்ப் பார்த்தான், பராமரித்தான்.

வன்னி யுத்தகளம். எங்கள் வன்னிக் காடுகளை-எதிரியின் பல்லாயிரம் படைகள் ஊட றுத்துவர முற்பட்ட 'வன்னிவிக்கிரம,' பெரும் படைகொண்டு ராஜன் மோத எதிரிப்படை திணறி யது. சுட்டு வீழ்த்திய ஹெலிகொப்டர்த் துண்டுகளை அள்ளி எடுத்து அனுப்பிய பின்னரும் தொடர்ந்தது சண்டை.

எல்லாப் பக்கங்களாலும் பூவரசங்குளம் சந்திக்கு வந்து ஏறிய எதிரிகளை எதிர்கொண்டனர் எம்வீரர்கள். கடும் சண்டை. ஆகாயத்தை நோக்கி நின்றவைகளும் நிலம் நோக்க, சகல ஆயுதங்களையும் ஏந்திய கரங்கள் உறுதியாய் நிற்க, ஓடினான் எதிரி.

கொஞ்சநாள் இடைவெளியில் எதிரியின் இன்னொரு முயற்சி. வவுனியாவால் நகர்ந்து தோற்ற எதிரி, இம்முறை மன்னார்ப் பக்கமாய்....

இம்முறை சண்டை கொஞ்சம் கடுமையாய்.... எமது வீரர்களை இருபுறமும் சூழ்ந்தபடி எதிரி. ராஜனை உணர்ச்சிவசப்பட வைக்கும் கடும் சண்டை.

எதைப்பற்றியும் யோசிக்காது எதிரியின் முகம் தெரியும் தூரத்தில் நின்று-மோதிய, ராஜனின் விரல் இல்லாத உள்ளங்கையை உடைத்தபடி ஒரு ரவை இன்னொரு ரவை அதே கையில் நடுவில்.

மிக அருகில் எதிரியின் துப்பாக்கி சடசடக்க உறுதியாய் எதிர்த்து நின்றனர் தோழர்கள்.

உள்ள ஆயுதங்கள் எல்லாம் கொண்டுபோய், அடிஅடி என்று அடித்து ஆமியைக் கலைத்துவிட்டு மயங்கியபடி கிடந்தவனை, இழுத்துவந்து சேர்த்தான் ரூபராஜ்.

அன்று ராஜன் திரும்பிவந்தது நம்பமுடியாத அதிசயம். அவன் மயங்கிவீழ்ந்து கிடந்த போது, எதிரி அருகில், மிக அருகிலேயே நின்றிருந்தான்.

ஆனையிறவுப் பெரும் போர்க்களம். ஓய்வின்றிப் பம்பரமாய் ராஜன்.

சென்றி நிற்கும் பங்கருக்குள், பசீலன் பொயின்ரில், சமையற் கொட்டிலில், சந்தியில் இருந்த மெடிக்ஸ் வீட்டில், எங்கும் நின்றான்-எல்லா நேரமும் நின்றான்.

கட்டைக்காட்டில் ஆமியின் கவசவாகனம் நகர்ந்தாலும் ஆர்.பி.ஜி.க்கு றோமியோ நவம்பர்.

புல்லாவெளியில் ஆட்லறி செல் விழுந்து இரண்டுபேர் செத்து ஐந்து பேர் காயம் என்றால், மெடிக்ஸ் வானுக்கு றோமியோ நவம்பர்.

மெடிக்ஸ் வானை போகவிடாமல் மேலே கெலி நின்றால் கலிபர் அனுப்பவும் றோமியோ நவம்பர்.

குணாவின் குறூப்புக்கு அனுப்பிய சாக்குகளுக்குச் சாக்கு ஊசி வேண்டும் என்றால், றோமியோ நவம்பர்.

வீரர் வீழ்ந்து வியூகம் உடைந்து-எதிரிப்படை முன்னேறும் வேளையில், தனித்த வீரரை ஒன்றாய்ச் சேர்த்து எதிரியைத் தடுக்கும் வேலைக்கும் றோமியோ நவம்பர்.

எல்லாவற்றிற்கும் நின்றான். எல்லாப் பாரத்தையும் தானாய்ச் சுமந்தான்.

எப்படிப்பட்டவனை நாம் இழந்துவிட்டோம்.

அனுபவம் மிக்க போர்த்தளபதியாய் ராஜன் நின்றபோதும்-அவன் யுத்த களத்தில் இருந்து தள்ளியே வைக்கப்பட்டிருந்தான். எங்கள் தலைவனின் பெருங்கனவுகளின் உறைவிடமாக ராஜன் இருந்தான். யாழ்ப்பாணச் சண்டையில் ஈடுபட்டிருந்த குழுக்களுக்கு உணவு விநியோகம் செய்யும் வேலையை அவனிடம் வலிந்து கொடுத்திருந்ததன் காரணம்-அவனை யுத்த களத்தின் முன் முனையிலிருந்து எட்ட நிற்கவைப்பதற்கன்றி, வேறில்லை.

அனுபவம் மிக்க வீரன்.

அவனது அனுபவங்கள் மெய்சிலிர்க்கும் கதைகள்.

ஓய்வில்லாக் கடும் உழைப்பாளி.

அவன் மறையும்போது தலைவரின் பெரும் கனவில் உருவான அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரிப் பொறுப்பாளன். சிறந்த போர் அனுபவங்களை முன்னரே பெற்றிருந்த அவன், இங்கு எல்லா இடமும் இருந்து பொறுக்கி எடுத்த வீரர்களைப் பயிற்றுவித்தான். தன் அனுபவங்களைப் பிழிந்தெடுத்துக் கொடுத்தான். போர்க்கலை நுட்பங்களைக் கற்றான் கற்பித்தான். நேர்த்தியான வேலைத்திட்ட ஒழுங்கமைப்பை, கண்டிப்பை, அன்பை, கடும் பயிற்சியை -

வியூகங்கள், விநியோகங்கள், வரைபடம்.... என்று எல்லாவற்றையும் கற்றான் கற்பித்தான்.

ராஜன் அமைதியானவன். தன் செயல்களினால் மட்டும் தன்னை அடையாளம் காட்டியவன்-ஆம். செயல்களினால் மட்டும்.

எந்த வேலையாக இருந்தாலும் ராஜன் அதிகம் பேசுபவனல்ல. ஏதாவது இராணுவத் திட்டம் தீட்டப்படும் சந்தர்ப்பத்தில், பேசாது பார்த்தபடி-கேட்டபடி இருக்கும் ராஜன், திட்டம் தீட்டப்படுவது பூர்த்தியாவதற்கு முன்னுள்ள இடைவெளியில் பேசுவான். குறிப்பிட்ட திட்டம் செயல் வடிவம் பெறும்போது, அவனது யுக்தியின் பெறுமதி தெரியும்.

தனது கடமையைப் பூரணமாகச் செய்வதில் தன்னை வெளிப்படுத்துவான். எந்தச் சந்தர்ப்பத்திலும் மற்றைய ஒருவரைக் குறைசொல்வதைக் காண்பதரிது. 'கடமையைச் செய், பயனை எதிர்பாராதே' என்பதற்கு உதாரணமாகக் கர்மவீரனாய் விளங்கினான்.

அவனது வரலாறு முழுமையாக எழுதப்பட்டால், அது பெரும் காவியமாகும். இராணுவ வல்லுநர்களால் மட்டுமல்ல, மருத்துவ வல்லுநர்களாலும் நம்பமுடியாத அதிசயமாய் அவன் வரலாறு திகழும்.

எண்ணற்ற தாக்குதல்கள் எண்ணற்ற தோழர்கள் அவன் செய்தவைகள் அவன் பெற்ற அனுபவங்கள் எண்ணி முடியாதவை எழுத்தில் அடங்காதவை. அவற்றின் கதை சொல்ல, சில தோழர்களும்-பல ஆயுதங்களும் இன்னும் விடுதலைப் போரில்.....

அது மட்டுமல்ல, எங்கள் மக்களும், தமிழீழ மண்ணும் மரம்செடி கொடிகளும் அவனைச் சொல்லும். அந்த உறுதியின் உறைவிடம் உலாவிய பூமி எங்களது என்பதைத் தமிழீழம் தலைநிமிர்ந்து சொல்லும்.

*ச. பொட்டு*

# எங்குச் சண்டை நடக்கிறதோ அங்கெல்லாம்...

இன்னும் விடியவில்லை.

இருள் மெல்ல விலக எத்தனித்துக்கொண்டிருந்தது. தூரத்திலே ஆங்காங்கே சில சேவல்கள் தமது குரலை எழுப்பி விடியலுக்கு வரவேற்புக் கூறிக்கொண்டிருந்தன.

அதிகாலை 4 மணி இருக்கும்.

ஏதோ சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன். சற்றுத் தள்ளி படுக்கையில் இருந்த கிண்ணியைக் காணவில்லை. முதல்நாள்தான் வயிற்று நோவென்று மருந்தெடுத்து வந்தவன்.

தூரத்திலே இடிமுழக்கம்போல் எறிகணைகள் விழுந்து வெடிக்கும் சத்தமும் மற்றச் சூட்டுச் சத்தங்களும் கேட்டன.

“கோட்டையில் ஏதோ பிரச்சனைபோல இருக்கு, மண்டைதீவு ஆமி வந்திட்டானோ” என்று கிண்ணி சொன்னபடியே முகாமுக்கு முன்னாற் சென்று சத்தங்களை அவதானித்தவண்ணம் இருந்தான். இரு தினங்களுக்கு முன்புதான் மண்டைதீவு இராணுவத்தினரை எதிர்கொள்ளப் பண்ணைப் பால ரோட்டில் ஆர்.பி.ஜி. உடன் நின்றுவிட்டுத் திரும்பியிருந்தான் கிண்ணி.

“எனக்கெண்டால் வழக்கமாகக் கேட்கிற மாதிரித்தான் இருக்கு, பேசாமற் படுங்கோ” என்று கூறிவிட்டு, நான் ஒரு குட்டி நித்திரைக்கு ஆயத்தமானேன். ஆனால், கிண்ணி உறங்கவில்லை. வெடிச்சத்தங்களால் ஈர்க்கப்பட்டு அதனைப்பற்றிச் சிந்தித்தவண்ணமே குட்டிபோட்ட பூனைமாதிரி இருப்புக்கொள்ளாமல் உலாவித்திரிந்தான். விடிந்தவுடன் பூங்கன்றுகளுக்குத் தண்ணீர் விட்டுக்கொண்டிருந்த கிண்ணி “சத்தங்கள் வரவரக் கிட்டவாகக் கேட்குது. அதோட அகோரமாக அடிக்கிறாங்கள். ஏதோ பிரச்சினை போலக்கிடக்கு.



## மேஜர் கிண்ணி / அசோகன்

## கந்தசாமித்துரை ரவீந்திரன்
யாழ்.

எதுக்கும் பக்கத்து வீமன் முகாமில் போய் என்ன நடக்குது என்று கேட்டுக்கொண்டு வாறேன்" என்று சொன்னபடியே புறப்பட்டுப் போனான். எமது முகாம் கோட்டையில் இருந்து சற்றுத் தூரத்தில் ஒதுக்குப்புறமாக இருந்ததாலும் தொடர்புச் சாதனங்கள் இல்லாததாலும் என்ன நடைபெறுகின்றதென அறியமுடியாமல் இருந்தது.

பின்னேரமாகியும் கிண்ணி முகாம் திரும்பவில்லை. கோட்டையில் அதிகரித்தவண்ணம் உள்ள சத்தங்கள் எனக்குக் கிண்ணியின் இடத்தை உணர்த்தின. குளிக்கும் இடத்தைப் போய்ப் பார்த்தேன். கிண்ணி குப்பியை விட்டுவிட்டுப் போயிருந்தது தெரியவந்தது. குப்பியை எடுத்துக்கொண்டு கோட்டையை நோக்கிப் போனேன். போகும் வழியெல்லாம் மக்கள் தத்தமது மூட்டை முடிச்சுக்களுடன் குடும்பம் குடும்பமாக யாழ். நகரத்தைவிட்டு அகன்றுகொண்டிருந்தனர். 'அவ்ரோ'வும் உலங்குவானூர்தியும் மேலே சுற்றிக்கொண்டிருந்தன.

"கோட்டைக்கு ஆமி வந்துவிட்டான். ரவுணுக்கும் வரப்போகின்றான்" என்றெல்லாம் சனங்கள் பரபரப்பாகக் கதைத்தபடியே, அகன்று சென்றுகொண்டிருந்தார்கள். கோட்டை இராணுவ நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் முகாமான நீகன் முகாமுக்குப் போய் "கிண்ணி வந்ததோ" என்று கேட்டேன். அவர்களுக்கு எதுவும் தெரியவில்லை.

"முன்னுக்கு ஆள் நிற்குதோ இல்லையோ என்று கேட்டுச் சொல்லுங்கள்" என்று திரும்பவும் கேட்டேன். தொடர்பு எடுத்துக் கேட்டுவிட்டு "கிண்ணியண்ணை பொலிஸ் ஸ்ரேசனடியில நிற்கிறார்" என்று 'வோக்கி' வைத்திருந்த போராளி கூறினான். குப்பியை எப்படிக் கொண்டு போவது என்று யோசித்துக்கொண்டிருந்தபோது, "இந்த நேட்டோ ரவுண்சுகளையும் இன்ரமீடியம் ரவுண்சுகளையும் பொலிஸ் ஸ்ரேசனடியில் கொண்டுபோய்க் கொடுத்துவிடு" என்று, பொறுப்பாளர் போராளி ஒருவருக்குக் கூறுவது தெரிந்தது. இரண்டு பெரிய பொதிகள்.

"ஒன்றை மட்டுந்தான் தூக்கலாம்; மற்றதைத் தூக்குவதற்கு இன்னொரு ஆள் தேவை" என்று அந்தப் போராளி பதிலளித்தான்.

"நான் கொண்டுவாறன்" என்று கூறியபடியே பையொன்றைத் தோள்மீது அடித்துக் கொண்டு, இருவரும் புறப்பட்டோம். அசோகா ஹொட்டேலுக்குப் போய், அதன்கீழுள்ள சாக்கடைவழியே பொலிஸ்

ஸ்ரேசனடிக்குப் போனபோது, அங்கு முன் காவல்நிலையில் படு 'பிசி'யாகக் கிண்ணி நிற்பதைக் கண்டேன்.

“என்ன சொல்லாமற் கொள்ளாமல் வந்துவிட்டீர்கள்” என்று கேட்டேன்.

“ஆமி இறங்கிட்டான் என்னென்று இனி நிற்கிறது, அதுதான் வந்திட்டன்” என்றான் கிண்ணி.

இதேபோலத்தான் இன்னுமொரு முறை. அப்போது ஒரு தவறிற்கான தண்டனை காரணமாக முகாம் ஒன்றினுள் கிண்ணி முடங்கி இருந்தான். பலாலியில், ஆனையிறவில், தீவுப்பகுதியிற் சண்டை என்ற செய்தி அடிபட்டது. போகமுடியவில்லையே எனத் துடிதுடித்துப் போனான். தச்சன்காட்டுச் சந்திக் காவலரண்களை அன்று இரவு எமது போராளிகள் தாக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். சண்டையின் போக்கைப்பற்றி வோக்கியிலே கேட்டுக்கொண்டிருந்த கிண்ணி, எமது தரப்பில் இழப்புக்கள் அதிகமாக இருந்ததை அறிந்ததால் உடனே எம்-16 இனைக் கட்டிக் கொண்டு, போர்க்களத்திற்குப் புறப்பட்டுவிட்டான். இவன் அங்குப் போனபோது வீரச்சாவடைந்த போராளிகளை முன்னுக்கு இருந்து பின்னுக்கு எடுத்துக்கொண்டிருந்தார்கள். ஓரிடத்திற் காயப்பட்ட நிறையப்பேர் கிடந்தனர். அவர்களை வைத்தியசாலைக்கு அனுப்ப வழியில்லாமல் இருந்தது.

“அம்புலன்ஸ் எங்கே? அம்புலன்ஸ் எங்கே? என்று எல்லோரும் தேடிக்கொண்டிருந்தார்கள். அம்புலன்ஸ் சாரதி அம்புலன்சைச் செலுத்திக்கொண்டு வந்தார். அவர் வெளிச்சத்தைப் போட்டுக் கொண்டுவந்ததால் அதைநோக்கி இராணுவத்தினர் துப்பாக்கிப் பிரயோகம்செய்து, எறிகணைகளையும் போட்டனர். இதனால் அச்சாரதி அம்புலன்சை இடைநடுவில் விட்டுவிட்டு ஓடிவிட்டார். அவர் ஒரு குடிமகன். வாகனமோட்டுவதற்காக அழைக்கப்பட்டிருந்தார். காயமடைந்தவர்கள் அவதிப்பட்டுக்கொண்டிருந்தார்கள். கிண்ணி பார்த்தான் அந்த நேரத்தில் அதுதான் முக்கியம் என்று பட்டது. துப்பாக்கிச் சூடுகளுக்கு மத்தியிலேயே மெதுமெதுவாக அம்புலன்சைக் கொண்டுவந்து 4, 5 பேராகப் பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டுபோய் இறக்கினான். இவ்வாறாகக் காயமடைந்த முழுப்போராளிகளையும் பின்னாலுள்ள முதலுதவி இடத்திற்கும் பின்பு மருத்துவமனைக்குமாக இரவு முழுவதும் ஓடித்திரிந்தான். மறுநாட் பின்னேரம் நான் கிண்ணியின் இடத்திற்குப் போனேன்.

“நேற்று நான் சண்டைக்குப் போனனான் தெரியுமா” என்று கிண்ணி சொன்னான். நான் திடுக்கிட்டேன். ஏனெனில், அந்த முகாமைவிட்டு கிண்ணியை அனுமதி இல்லாமல் வெளியேற வேண்டாம் என்ற உத்தரவு இருந்தது. நான் பேசாமல் இருப்பதைக் கண்டகிண்ணி,

“சண்டைக்குப் போனதற்காக யாரும் தண்டனை தந்தால், நான் சந்தோசமாக ஏற்றுக் கொள்வேன்” என்று கூறியவன் சிரித்தான். பின்பு,

“அங்கே நான் போகேக்கை சண்டை முடிஞ்சுபோயிட்டுது. பார்த்தாற் காயப்பட்ட பொடியள் நிறையப்பேர் இருந்தார்கள். பிறகென்ன, அம்புலன்ஸ் எடுத்து ட்ரைவர் வேலை பார்த்தேன்” என்றான் மனநிறைவுடன்.

இதுதான் கிண்ணி, எங்குச் சண்டை நடக்கிறதோ அங்குப் போகத் துடிப்பவன். “அடிக்கவேண்டும்; ஆயுதங்கள் எடுக்கவேண்டும்” இதுதான் அவனது வெறி. அவன் எத்தனை தரம் போரிற் காயப்பட்டான் என்று எண்ணிச்சொல்வது கடினம். இடது பக்கம் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால்வரைக்கும் இவன் காயப்படாத இடமில்லை. கிண்ணி 'சேட்'டைக் கழற்றினால், அவனது வீரத்தழும்புகளை எண்ணிமுடிக்க அரைநாள் தேவை.

* * *

முதன்முதல் கிண்ணியை நான் சந்தித்தது இன்னும் எனக்குப் பசுமையாக நினைவில் நிற்கின்றது. இந்திய இராணுவச் சிறையில் 17 மாதங்களைக் கழித்துவிட்டு அப்போதுதான் விடுதலை யாகியிருந்தேன். ஒருவருடனும் கதைக்காது, முகாமின் ஒதுக்குப்புறத் தோட்ட மூலையொன்றில் அமர்ந்து யோசித்துக்கொண்டிருந்தேன்.

''அண்ணை சுகமாயிருக்கிறியளோ'' என்று கேட்டவண்ணம் வந்தவரைப் பார்த்தேன். மெல்லிய, கறுத்து நெடுத்த உருவம். வலது கையிற் சிறிய பையொன்று இருந்தது. கண்கள் துறுதுறுவென்று என்னை ஆழம் பார்த்தன. உதட்டில் நட்புணர்வுடன் ஒரு சிரிப்பு. மேல் இழுத்த தலை. சாரமும்சேட்டும் அணிந்திருந்தவர் தோழமையுடன் எனக்குப் பக்கத்தில் வந்தமர்ந்தார்.

''என்னைத் தெரியல்லையோ?'' என்று கேட்க, நான் திரும்பவும் பார்த்துவிட்டு, ''எங்கோ பார்த்தமுகம் மாதிரி இருக்கிறது, சரியாகத் தெரியவில்லை.'' என்று இழுத்தேன்.

நான் ஈசுவின் தம்பி கிண்ணி'' என்றான்.

''ஈசுவின் தம்பியோ''?

நானும் ஈசு என்கின்ற கிண்ணியின் மூன்றாவது தமையனும் ஒன்றாகப் படித்தவர்கள். கிண்ணியின் வீட்டுக்கு இயக்கத்திற்கு வருவதற்கு முன்பு எத்தனையோ தடவைகள் நான் போயிருக்கிறேன். அப்போது கிண்ணி சிறிய பையனாக இருந்தவன். நான் சரியாகக் கவனிக்க வில்லை. ஆறு வருடங்களின் பின்பு பார்க்கும்போது, நிறைய வித்தியாசங்கள்.

''என்ன செய்யிறியள்' என்று கேட்டேன்.

''சும்மாதான் இருக்கிறேன்'' என்றான் கிண்ணி. கிண்ணி இயக்கத்தில் இருப்பது எனக்குத் தெரியாது. முல்லைத்தீவு நகரில் நடந்த சண்டையில் இந்திய இராணுவத்தின் 60 எம்.எம் எறிகணையினாற் காயப்பட்டு, சாகும் தறுவாயில் வல்வெட்டித்துறைக்கு வந்ததோ, டொக்ரர் அன்ரி கிண்ணியைக் காப்பாற்றி இந்தியாவுக்கு அழைத்துச்சென்று அவனுக்கு மறு உயிர் கொடுத்ததோ எனக்குத் தெரியாது.

''ஏதாவது படிச்சுக்கொண்டிருக்கிறியளோ அல்லது தொழில் பார்க்கிறியளோ'' என்று நான் விடாது கேட்டேன்.

''இடைக்கிடை இந்தியா பிஸ்னஸ் செய்கிறனான்'' என, யாரும் நம்பும்படியாகவே கிண்ணி கூறினான். இந்தியாவிற் கிண்ணி அறுவைச் சிகிச்சை முடித்துக்கொண்டு அப்போதுதான் நாடு திரும்பியதும் எனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

சில நாட்களின்பின் தீவகப் பகுதிக்கு அரசியல் வேலை செய்வதற்காக நான் அனுப்பப் பட்டேன். அப்போது ஜேம்ஸ் தீவகப் பொறுப்பாளராகப் பொறுப்பெடுப்பதற்காகச் சென்றார். அவருடன் நானும் வானில் போனபோது, அந்த வானை ஓட்டிக்கொண்டுபோனது கிண்ணி. நான் கிண்ணியை ஆச்சரியமாகப் பார்த்தேன். கிண்ணி என்னைப் புரிந்துகொண்டவனாகச் சிரித்தான்.

''ஜேம்ஸ் அண்ணை! கஸ்ரோ அண்ணைக்கு நான் இயக்கம் என்று தெரியாது...'' என்றான். ஜேம்சும் சிரித்துவிட்டு.

''கிண்ணிதான் தீவில் எனக்கடுத்த பொறுப்பாளர், அதாவது பிரதித் தளபதி'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார். அதற்குப் பிறகுதான் கிண்ணியின் வரலாற்றை அறிந்துகொண்டேன்.

சாதாரண போராளியாக ஆரம்பித்து, சண்டைகளில் தனது திறமையைக் காட்டி படிப்படியாக வளர்ந்தவன் இவன். இயல்பாகவே கிண்ணி ஓர் ஆவேசமான போராளி. மேஜர் பசிலனின் வளர்ப்பிற் சண்டையில் இவன் ஒரு பாயும் புலியாக மாறியதில் ஆச்சரியமில்லை. காட்டுக்குள் இருந்தபோது தலைவரின் பாசறையில் இவன் நிறையக் கற்றுக்கொண்டான். காடு இவனை அனுபவம் வாய்ந்த ஒரு போராளியாக்கியது. இவனது ஆரம்பச் செயற்பாடுகள் அரசியல் வேலையாகவே இருந்தன. மேஜர் ஜேம்ஸ் 83, 84ஆம் ஆண்டுக் காலப்பகுதிகளில் வடமராட்சிப் பகுதியில் அரசியல் வேலைத் திட்டங்களைச் செய்துகொண்டிருக்கின்றபோது அவனுக்குத் துணையாக நின்றவன் கிண்ணி. கிண்ணியை இயக்க வேலைகளிற் படிப்படியாக ஈடுபடவைத்து, பின்பு முழுநேரப் போராளியாக்கிய பெருமை மேஜர் ஜேம்சுக்கே சேரும்.

வீரம் விளைந்த வல்வை மாநகர் பெற்றெடுத்த அருந்தவப் புதல்வன் கிண்ணி. கந்தசாமித்துரை தம்பதிகளின் நான்காவது மகனாகப் பிறந்த இவன், சிறுவயதிலேயே கல்வியிற் கெட்டிக்காரனாக விளங்கினான். காட்லிக் கல்லூரியில் உயர் வகுப்பிற் கணிதம் படித்துத் தனது திறமையினை வெளிப்படுத்தினான். இவனது சிறுபிராயத்திலேயே தகப்பனார் இறந்த தால் வீட்டில் குடும்பநிலை கஸ்ரமாகியது. குடும்பநிலையை உணர்ந்து கிண்ணி செயற்பட்டான். தனது படிப்புக்கு மத்தியிலும் சிறுசிறு வேலைகள் செய்துவந்தான். கோழிகளை வளர்த்து அதன்மூலம் வீட்டைக் கவனிக்கும் பணியினையும் செய்தான்.

இவனது இரண்டாவது அண்ணன் 1983ஆம் ஆண்டில் விடுதலைப் புலிகள் இயக்கத்தில் இணைந்து கொண்டதைத் தொடர்ந்து குடும்பப்பாரம் இவனை அழுத்தியதால், ஆரம்பத்தில் வீட்டி லிருந்தவண்ணமே இயக்கவேலைகளில் ஈடுபட்டான். மேஜர் ஜேம்ஸ் பயிற்சிக்காகப் போனதைத் தொடர்ந்து, கிண்ணி வடமராட்சியில் இயங்கி வந்த எமது இயக்கச் சவர்க்காரத் தொழிற்சாலை யிற் பணியாற்றினான். அங்குச் சிறப்பாக செயற்பட்டதால் வன்னிப்பகுதியில் சவர்க்காரத் தொழிற்சாலையினை ஆரம்பிப்பதற்காகச் சிறிது காலம் வன்னியில் நின்றான். அதன்பின்பு கொமாண்டோ பயிற்சியினை முடித்துக்கொண்டு, சிறிதுகாலம் வல்வை இராணுவ முகாமினைச் சுற்றியுள்ள காவலரண்களில் காவல் புரிந்தான். இயக்க வேலைகளில் ஈடுபடும் இயந்திரப் படகுகளைக் கவனிப்பதற்காக வடமராட்சி கிழக்குப் பகுதியில் 'ஒப்பரேசன் லிபரேசன்' வரையும் கடமையாற்றினான்.

தீவகத்திற்குக் கிண்ணி தளபதி

தீவகத்தின் தளபதியாகக் கிண்ணி பொறுப்பெடுத்தவேளை, நான் அளவெட்டியில் முகாமொன்றில் இருந்தேன். ஆனால், அடிக்கடி கிண்ணியைப் போய்ப்பார்த்துவிட்டு வருவேன். பொறுப்பெடுத்ததிலிருந்து, ஏதாவது தாக்குதல் செய்யவேண்டும் என்று கிண்ணி துடித்துக்கொண்டிருந்தான். கிண்ணி வேவுபார்க்க அனுப்பிய இரு போராளிகளை ஒருநாள் இராணுவம் சுட்டுக்கொன்றது. எப்படியும் இதற்குப் பதிலடி கொடுக்கவேண்டுமென்று கிண்ணி ஆவேசமாக அலைந்து திரிந்தான். நான் ஒருமுறை போனபோது,

"ஊர்காவற்றுறை வரைபடத்தை ஒழுங்கை ஒழுங்கையாகக் கீறித்தாருங்கள்" என்று கேட்டான்.

"உங்களுக்கில்லாததோ. நாளைக்குக் கொண்டுவாறன்" எனப் பதிலளித்தேன். மறுநாளே தாக்குதல் திட்டம் தயாராகிவிட்டது. பானு அண்ணை தனது குழுவினரை அனுப்பியிருந்ததோடு, தானும் நேரே வந்திருந்தார்.

"கிண்ணி நானும் வாறன்" என்று கூறினேன்.

"ஜேம்ஸ் அண்ணையும் வீரமரணமடைஞ்சிட்டார். நானும் நீங்களுந்தான் மிஞ்சியிருக்கிறம். நான் இறங்குகிறன். நீங்கள் வெளியில் நின்றுகொள்ளுங்கோ" என்றான்.

"இப்படித்தான் முதலும் சொன்னீர்கள்" என்று சொல்லி ஒருமாதிரி கிண்ணியிடமும் பானு அண்ணையிடமும் அனுமதிபெற்றுச் சென்றேன். இராணுவத்தின் ரோந்துப் பிரிவொன்று முகாமை விட்டு முன்னுக்கு ஒரு கிலோ மீற்றர்வரையும் வந்து கிளியர் பண்ணுவார்கள். இது தினமும் அதிகாலையில் நடப்பதால், இராணுவம் வரும் பாதைக்கு இரவே நாம் சென்று கிளைமோர்களை ஒழுங்குபடுத்தி வைத்து, இராணுவத்தை வரவேற்கத் தயாரானோம். ஒழுங்கையொன்று கடையொன்றிற்கு எதிராக இரண்டாகப் பிரிந்தது. அக்கடையினுட் கிண்ணியும் நானும் ஏனைய 6 போராளிகளும் இருந்தோம். கடைக்கு முன்பக்கத்தைத்தவிர வேறு வாசல்கள் எதுவுமில்லை. ஒழுங்கை கடைக்கு நேர் செங்குத்தாக வந்து, 3 அடி தூரத்தில் இரண்டாகப் பிரிந்து செல்கிறது. விடியப்போகின்றது. சகல தடயங்களையும் அழித்துவிட்டு, எட்டுப் பேரும் கடைக்குள் இருந்தோம். ஒழுங்கை பிரிந்த பின்னர் இருமருங்கிலும் வேறு குழுக்களும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தன. நாங்கள் இருந்த கடைக்குட் பெரும் இடநெருக்கடி. பழைய தட்டுமுட்டுச் சாமான்களை ஒருவாறு ஓரமாக ஒதுக்கிவிட்டு நெருங்கி இருந்தோம். மேலே நிமிர்ந்து பார்த்தால், பெரிய குளவிக்கூடு ஒன்று எப்போது விழும் என்று பயமுறுத்திக்கொண்டிருந்தது. நூற்றுக்கணக்கான பெரிய குளவிகள் கொட்டுவோம் என்று பயமுறுத்தின.

"அண்ணை இதுகள் விஷக் குளவிகள், நான்கு ஐந்து ஒன்றாகக் கடித்ததென்றால் ஆளை முடித்துப்போடும்" என்று போராளியொருவன் எம்மைப் பயப்படுத்தினான். எல்லோரும் குளவிகளைப் பார்ப்பதும் விடியுதா எனப் பார்ப்பதுமாக இருந்தோம்.

"இப்படித்தான் நெடுங்கேணித் தாக்குதலையும் திட்டமிட்டு அடிச்சனான். இதுகும் சரிவரும்" என்றான் கிண்ணி. எல்லோரும் ஆமியையும் குளவியையும் மாறிமாறிப் பார்த்து பதட்டத்துடன் இருந்ததைக்கண்ட கிண்ணி, நெடுங்கேணித் தாக்குதலைப்பற்றி விபரிக்கலானான். "ஒரு கட்டத்தில் எமது போராளிகளில் ஒருவனை நோக்கி எல்.எம்.ஜி. க்காரன் சுட்டுக்கொண்டிருந்தான். அவனை உயிருடன்விட்டால் எல்லோரையும் முடித்துவிடுவான் என்று விளங்கிவிட்டது. இதனால் நான் பாய்ந்தேன்" என்று நிறுத்தினான் கிண்ணி. எல்லோரும் கதைகேட்கும் ஆவலில்,

"பிறகு என்ன நடந்தது சொல்லுங்கோ" என்றார்கள்.

"துப்பாக்கியைத் தோளிற் கொளுவிக்கொண்டு, குண்டின் கிளிப்பைக் கழட்டியபடியே கத்திக்கொண்டு எதிரியின் நிலைக்குட் பாய்ந்தேன். அடித்துக்கொண்டிருந்த எல்.எம்.ஜி. இன் பரலில் இறுக்கிப் பிடித்து அதனை என்பக்கம் திரும்பவிடாமல் தடுத்தேன்".

"கை சுட்டிருக்குமே" ஒரு போராளி இடையில் அவசரப்பட்டுப் புகுந்தான்.

"கை கொதிச்சுப்போச்சு. அப்படிச் செய்யாமல்விட்டால் என்னைச் சுட்டுப்போடுவான். அதனால் விடவேயில்லை. சண்டை முடிந்த பின்பு பார்த்தால் கையெல்லாம் கொப்பளம் போட்டிருந்தது" என்றான் கிண்ணி.

"பிறகு...?" ஆவலை அடக்கமுடியாமல் நான் கேட்டேன்.

"எல்லோரும் சீக்கியர். பெரிய தடியன்கள். காலுக்குள் இருந்த இரு சீக்கியர்களும் எல்.எம்.ஜி. வைத்திருந்த சீக்கியனும் நினைத்திருந்தால் என்னைச் சுலபமாக அடித்துவிழுத்தி யிருக்கலாம். ஆனால், கிளிப்பைக் கழற்றிய குண்டைக் கண்டும் நான் பலத்த குரலிற் கத்தி வெருட்டியதைக் கண்டும் பயந்துவிட்டார்கள்" என்ற கிண்ணி,

"கொஞ்சம் பொறு" என்றுசொல்லிக் கதவிடுக்கால் மெல்லப் பார்த்தான்....

"வாறாங்கள்" எல்லோரும் அடங்கினோம். எனது நெஞ்சு துடிக்கிற சத்தம் பலமாகக் கேட்கின்றது. சில வினாடிகளின்பின் நான் மெதுவாக எட்டிப்பார்த்தபோது, நாங்கள் இருக்கின்ற இடத்தில் இருந்து

5 அடி தள்ளி, ஒழுங்கையால் ஒரு எல்.எம்.ஜி. க்காரன் திரும்பிச் சென்று கொண்டிருந்தான். 6ஆவது வீரன் எம்மைக் கடந்தவுடன் கிண்ணி கிளைமோரை வெடிக்கவைத்தான். வெடித்தவுடன் கிண்ணி பாய்ந்தான். குளவியின் பயத்தாலே நானும் கிண்ணியுடன் சேர்ந்து பாய்ந்தேன். நல்ல வேளை நாங்கள் இருவரும் முதலிற் பாய்ந்தது. வெடித்தவுடன் குளவிக் கூடு பிய்ந்து கொட்டுப்பட்டு எங்களுடன் இருந்த ஏனைய அறுவரையும் குளவிகள் கலைத்துக் கலைத்துக் கொட்டின என்று பிறகுதான் எனக்குத் தெரியவந்தது. 5 நிமிடங்களிற் சண்டை முடிவடைந்துவிட்டது. கிண்ணி பாய்ந்துசென்று கொல்லப்பட்ட இரு இராணுவத்தினரை இழுத்துவந்தான். ஆயுதங்கள் எம்மாற் கைப்பற்றப்பட்டன. இராணுவத்தினர் நால்வர் கொல்லப்பட்டு 6பேர் காயமடைந்தனர். இரு ஆயுதங்களும் தொலைத்தொடர்புச் சாதனம் ஒன்றும் கைப்பற்றப்பட்டன.

கிண்ணி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதி

சில நாட்களாகக் கிண்ணியை எனது முகாம் பக்கம் காணவில்லை. யாழ்ப்பாணத்திற் குள் நின்றால் சுற்றிச்சுற்றி எப்படியும் என்னிடம் வருவான். நிச்சயம் ஏதாவது ஓர் இராணுவ முகாமின் காவலரண்களை மோப்பமிட்டவாறு இருப்பான் என்பது எனக்குத் தெரியும். வன்னியில் இருந்து வந்த போராளிகள் சிலர் கிண்ணி அங்கு நிற்பதாகக் கூறினர். மிக விரைவில் தாக்குதல் ஒன்றைப் பத்திரிகையிற் பார்க்கலாம் என்று எதிர்பார்த்தேன். அதேபோல...

“தட்டுவன்கொட்டியில் 35 காவலரண்கள் அழிப்பு, 15 இராணுவம் பலி” என்று ‘புலிகளின் குரல்’ தெரிவித்தது. சில நாட்களின்பின் கிண்ணி எனது முகாமிற்கு வந்தபோது,

“நல்ல அடியொன்று அடிச்சிருக்கிறியள்” என்றேன்.

மெல்ல மறுத்து, “நான் அங்குப் போகேல்லை” என்றான் ஒரு சிரிப்புடன்.
பிறகு ஒரு மாதிரி,

“நாங்கள் எதிர்பார்த்துப் போனதுகூட, ஆனால், அவங்கள் ஓடிட்டாங்கள்” என்றான்.
“போன வருசம் தட்டுவன்கொட்டியில் அடிபட்டனீங்கள் தானே! அந்த இடமோ இம்முறையும்” என்றுகேட்டேன்.

“அதுக்குக் கிட்டத்தான்” என்று பதிலளித்தான்.

சென்ற வருடமும் ஆனையிறவுச் சண்டைக்கு முன்பு தட்டுவன்கொட்டியில் அமைந்துள்ள எமது காவலரண்களைக் கைப்பற்றி பரந்தனுக்கு வர இராணுவம் முற்பட்டது. அது முக்கியத்துவம்வாய்ந்ததொரு சண்டை. அந்த இடத்தில் தடுக்காதுவிட்டால் இராணுவம் பரந்தன் வரையும் வரும் ஆபத்து இருந்தது. அந்தச் சண்டையிற் கிண்ணி தனது முத்திரையைப் பதித்தான். அதிகாலையிலிருந்து இரவுவரை வெட்டவெளியில் இராணுவத்துடன் சமர்புரிந்து, அவர்களுக்குப் பலத்த இழப்புக்களை ஏற்படுத்தி, முகாமிற்கு அடித்துக் கலைத்தவன் இவன்.

“எண்டாலும் காரைநகர் அடி மாதிரி வராது” என்றான் கிண்ணி.

உண்மையில் அது ஓர் அற்புதமான அடி. காரைநகர்ப் பாலத்தில் தங்களுக்கு அடிவரும் என்று இராணுவம் கனவுகூடக் காணவில்லை. கிண்ணி ‘சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படைப்பிரிவின்’ விசேட தளபதியாகப் பொறுப்பெடுத்த சில வாரங்களிற்குள், அதனைச் செய்துகாட்டினான். எந்தத் தாக்குதல் என்றாலும் வேவு நடவடிக்கையில் இறுதிவரை ஈடுபட்டு, தனக்குத் திருப்தி ஏற்பட்ட பின்னரே தாக்குதல் நடவடிக்கைகளில் ஈடுபடுவான். காரைநகரில் நடந்த சுவையான சம்பவம் ஒன்றைக் கிண்ணி கூறினான். திடீர் அதிரடித் தாக்குதல்மூலம் இராணுவத்தை உடைத்தெறிந்துவிட்டு எதிரியின் காவலரண்களைக்

கைப்பற்றி ஆயுதங்களை எடுத்தபின், தனது போராளிகளைத் திருப்பி அனுப்பிக்கொண்டிருந்தான். ஒரு மூலையிற் சாக்கொன்று குவியலாகக் கிடந்தது. போகும் அவசரத்தில் அதனைக் காலால் உதைத்துத் தள்ளினான். உள்ளுக்குள்ளிருந்த ஏதோ பொருளொன்று காலிற்பட்டு காலை வலிக்கச்செய்தது. திறந்து பார்த்தால் அதற்குள் 60எம்.எம். மோட்டாரும் எறிகணைகளும் காணப்பட்டன (அந்தக் காலகட்டத்தில் 60எம்.எம். மோட்டார் எமக்கொரு வரப்பிரசாதமான ஆயுதமாக இருக்கக்கூடியளவு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது).

'பலவேகய II' புயல் ஓய்ந்த போர்க்களம்

ஜூலை மாதம் 10ஆம் திகதி... தோழன் ஒருவன் பதறியபடியே வந்தான். முகமெல்லாம் இருண்டு, கறுத்து, சோகம் அப்பிக் காணப்பட்டது. என்னிடம் வந்தவன் எதுவும் பேசாது தள்ளாடியபடியே கதிரையில் அமர்ந்துகொண்டான். ஏதாவது கேட்டால் அழுதுவிடுவான்போல இருந்தது.

"என்ன ஒரு மாதிரி இருக்கிறியள்" என, நிலவிய மௌனத்தை உடைத்தவாறே கேட்டேன்.

"கிண்ணியெல்லோ..." மேலே கூறமுடியாது முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டான். உடனே எனக்கு விளங்கிவிட்டது. சில நிமிட நேரங்களிற்கு என்ன நடந்ததென்று ஜீரணிக்க முடியவில்லை.

"மச்சான், மச்சான் என்று கூப்பிட்டு நெருக்கமாகவும் - அன்பாகவும் பழகிற தளபதி அவன்" என்று சொல்லி, அந்தத் தோழன் கண்கலங்கினான்.

"ஏன் டொக்டர் அன்ரியின் இடத்திற்குக் கொண்டுபோனால் அவனைக் காப்பாற்றியிருக்கலாமே?" ஏதோ ஆற்றாமையினாற் கேட்டேன்.

"இரண்டு நாளைக்கு முதல்தான் சிறுகாயப்பட்டு அன்ரியிடத்துக்குப் போனவன். அடுத்தமுறை உங்கட இடத்துக்கு வரமாட்டன் என்று அன்ரியிடம் சொன்னவனாம்... சொன்னதுபோல...!"

நான் காயப்பட்டு வீழ்ந்தபோது ஓடியோடி வந்து என்னைப் பார்த்தவன்; என்னைக் கவனிக்கத் தனது தாயையும் சகோதரனையும் அனுப்பியவன்; நான் யோசிக்கக்கூடாதென்று வீடியோ விளையாட்டுக் கருவியையும் ரேடியோவையும் தந்தவன்; களச்செய்திகளை உடனுக்குடன் வந்து கலகலப்பாகச் சொல்பவன்; இன்று இயக்கச்சிப் போர்முனையில்... அவன் மௌனமாகிப் போனான்!.

மேஜர் ஜேம்சினைப்பற்றி நான் சிறு குறிப்பு ஒன்றை 'ஈழநாதத்'தில் எழுதியிருந்தேன். இதனைப் படித்த கிண்ணி எப்படியும் என்னைத் தேடிவருவான் என்பது எனக்குத் தெரியும். எதிர்பார்த்தபடியே அன்று இரவு கிண்ணி வந்தான்.

"எனக்குத் தெரியும், நீங்கள்தான் இதை எழுதியிருப்பியள்" என்றான்.

"உங்களை நம்பித்தான் நான் முன்னுக்குப் போறன்" என்றான்.

"ஏன்" என்று விளங்காதவனாகக் கேட்டேன்.

"நான் செத்தால் நீங்கள்தான் என்னைப்பற்றி எழுதவேணும்" என்றான் குழந்தைத்தனமாக. போராட்ட வாழ்விற் சாவைப்பற்றி போராளிகள் சாதாரணமாகக் கதைப்பார்கள். சொனியும் கிண்ணியும் நானும் இறுதிக் காலகட்டத்தில் நெருங்கிய நண்பர்களாக இருந்தோம். அப்போது மூவரும் இருந்து கதைக்கும்போது, சொனிதான் ஓரளவு காலம் உயிருடன் இருப்பான் என நாம் நம்பினோம். இதனால் எங்கள் புகைப்படங்கள் போன்றவற்றைச் சொனியிடம் கொடுத்து வைத்திருந்தோம். முதலில் கிண்ணியும்

இரண்டாவதாக நானும் மாவீரர் பட்டியலில் சேருவோம் என்று நம்பியிருந்தோம். ஆனால், நடந்ததோ வேறு. சென்ற வருட சண்டையிற் சொனி; இந்தமுறை கிண்ணி; இடைநடுவில் நான்...

"உங்களுக்குத்தானே என்னைப்பற்றித் தெரியும்" என்றான் கிண்ணி. இவ்வளவு விரைவாகக் கிண்ணியைப்பற்றி நான் எழுதவேண்டிவரும் என்று நினைக்கவில்லை.

இப்படி நாங்கள் கதைத்த சில நாட்களின் பின்பு,

"நான் செத்தபிறகு இதை உடைத்துப் பாருங்கோ" என்று, என்னிடம் கடித உறையொன்றைக் கொண்டுவந்து தந்தான். அக்கடித உறை உடைக்காதவாறு 'செலோ ரேப்'பால் சுற்றப் பட்டிருந்தது; அதற்கு மேல் பொலித்தீனாற் சீல் பண்ணப்பட்டிருந்தது. தரும்போது அதைப்பற்றிப் பெரிதாக நான் எதுவும் நினைக்கவில்லை. கிண்ணி வீரமரணமடைந்தபின் அதனை உடைத்தபோது, அதில் ஒரு வரலாறு இருந்தது - இந்திய இராணுவம் இந்த மண்ணைவிட்டு அவசரமாக ஓடியதன் பின்னணிகளுள் ஒன்று இருந்தது - விடுதலைப் புலிகளின் ஓர்மமும் துணிச்சலும் திட்டமிடும் தந்திரோபாயமும் வெளிப்பட்டது. நெடுங்கேணிப் பாடசாலையில் இந்திய இராணுவத்திற்குக் கொடுத்த அடியைப்பற்றி, கிண்ணி அதில் எழுதியிருந்தான்; அவன் ஒரு சிறந்த சண்டைக்காரன் மாத்திரமல்ல, சிறந்த பேனாக்காரன் என்பதையும் நிரூபித்திருந்தான்.

கிண்ணியின் தமையன் முரளி வன்னியிலிருந்து வரும்போதெல்லாம், பல போராளிகளை அழைத்துத் தனது வீட்டிற்கு அறிமுகப்படுத்துவதை வழக்கமாகக் கொண்டிருந்தான்.

"நான் வராவிட்டாலும் எங்கட பெடியள் வீட்டுக்கு வருவாங்கள்; அவர்களையும் உன்ர பிள்ளைகளாய்ப் பார்" என்று முரளி தனது தாயாருக்கு அடிக்கடி கூறியிருந்தான். முரளி எப்படிக் கூறியிருந்தானோ அப்படியே கிண்ணியும் தப்பாது கூறியிருந்தான். அந்தத் தாயும் போராளிகளில் தனது பிள்ளை, மாற்றான் பிள்ளை என்று வேறுபாடு பார்ப்பதில்லை. இந்திய இராணுவக் காலகட்டத்தின் போது, ஏராளமான போராளிகளுக்கு அடைக்கலம் கொடுத்துக் காப்பாற்றிய வீடு அது. உணவும் ஆதரவும் வழங்கிப் பராமரித்த வாசல் அது. இன்று அந்தத் தாயின் பிள்ளைகளிற் கிண்ணியும் முரளியும் திரும்பிவராத இடத்திற்குப் போய்விட்டார்கள்.

மற்றப் பிள்ளைகள் வருமென்று அந்தத் தாய் காத்திருக்கிறாள்...

– கஸ்ரோ –

(மேஜர் கிண்ணி நூலிலிருந்து சில பகுதிகள் இவை)

# இது வீரியமுள்ள வித்து

தாக்குதல்கள் செய்வதற்காக அவர்களைப் பாதுகாக்க-வேண்டிய தாகவும் அவர்கள் பாதுகாப்பாக இருப்பதற்குத் தாக்குதல் செய்ய வேண்டியதாகவும் இருந்த களச்சூழலை அப்போது அவர்கள் எதிர் கொண்டனர்.

ஒவ்வொரு கணமும் அவர்கள் எதிர்கொள்ளவேண்டியிருந்த சிரமங்கள் ஏராளம். அவர்கள் சந்தித்த எந்தத் துயர்மலையாலும் துளிகூட அவர்களை நிலைகுலையச் செய்யமுடியவில்லை.

ஒவ்வொரு வீரனின் உள்ளமும் உறுதியால் இழைக்கப்பட்டு தேசப்பற்றினால் உரம் பெற்றிருந்தது. எவ்வளவு கடினத்திற்குள்ளும் விடுதலைக்காக உழைக்கும் அவர்களின் உழைப்பு வீச்சுள்ளதாய் இருந்தது. அத்தனை வீரத்தையும் விடுதலைப்பற்றையும் தலைமுறைப் பற்றையும் ஊட்டியிருந்தான் அவன்.

காட்டு மரங்களும் மேட்டுநிலங்களும் ஆறுகளும் சதுப்புவெளிகளும் முகம் மறக்காமல் அறிந்துவைத்திருப்பது அவனைத்தானே. எதிரியுங்கூட அவன் பெயரை நன்கு அறிந்து வைத்திருப்பான். எதிரிக்குப் பலதடவை இழப்புகளை ஏற்படுத்தியவனை, முகாமுக்குள் முடக்கிவைத் திருந்தவனை எதிரி தன் எதிர்பார்ப்பை நிறைவேற்றமுடியாமல் தடுத்து ஏமாற்றத்தைக் கொடுத்தவனை எப்படி எதிரி அறியாதிருக்கமுடியும்.

ஒவ்வொரு உள்ளமும் உதடும் சேர்ந்து உச்சரிக்கும் பெயர்தான் கில்மன்...

கில்மன்... எப்படியிருப்பான்? !

கில்மன் என்ற பெயர்கொண்ட விடுதலை நெருப்பின் தோற்றம் இப்படித்தானிருக்கும். சரித்து வாரப்பட்ட தலைமுடி. செந்தளிப்போடு அனைவரையும் வசீகரிக்கும் பரந்த முகம். கருணையையும் கண்டிப்பையும் பிரதிபலிக்கும் பார்வை. சராசரியான உயரம். கம்பீரத்தோடு கூடிய நிமிர்வான தோற்றம். எப்போதும் அமைதியான சிந்தனை.

இதுதான் அவனின் வெளித்தோற்றம். அவனுக்குட் கிளர்ந்தெழும் உணர்வுகளை எழுத்தில் வடிக்கமுடியாது.

அந்த உயர்ந்த காட்டிற்குட் போராளிகள் ஒவ்வொருவருக்கும் அருகிலிருந்தபடி அவர்களை வீரராகவும் சகிப்புணர்வுள்ள விடுதலைப் போராளிகளாகவும் வளர்த்துக்கொண்டிருந்தான் கில்மன்.

போராளி ஒருவரே ஓய்வுறக்கம் இல்லாது செயற்படவேண்டிய அந்த நாட்களில் அந்த அணியின் ஒட்டு மொத்தத் தேவைகளையும் எதிர்கொள்ளவேண்டிய பிரச்சினைகளையும் நிறை வேற்றவேண்டிய பணிகளையும் சிந்தித்துச் செயற்படவேண்டிய தளபதியின் உழைப்பு எத்தனை கனதியானதாக இருக்கும்! கடினம் நிறைந்ததாக இருக்கும்!

திருமலைக் காட்டிற்குள் வரலாற்றைக் காப்பாற்ற வரலாறு படைத்துக்கொண்டிருக்கும் வீரர்களை வழிநடத்தும் தளபதியாக இருந்தான்.

அந்த அணி அங்கு நகர நினைத்ததே தன்மேலுள்ள பெரிய வரலாற்றுப் பணியொன்றை நிறைவேற்றத்தான்.

எங்கள் வரலாற்றுப் புகழ்மிக்க தலைநகர் திருமலை சிங்களக் குடியேற்றக் கறையான்களால் அரிக்கப்பட்டுக்கொண்டிருந்தது. நகரங்களிற் படிப்படியாகச் செல்வாக்குச் செலுத்திக்கொண்டிருக்கும் அரச படைகளிடம் திருமலைக் காட்டுப் பிரதேசமும் ஏறத்தாழப் பறி போன நிலையிலிருந்தது. காடுகளை இழக்க நேர்ந்தால் அந்த மாவட்டத்தில் பின்பு சிறு தாக்குதல் செய்யவே சிரமமாயிருக்கும். கால்வைக்கவே அதிகமான உயிர்விலை கொடுக்கவேண்டியிருக்கும். தலைநகருக்கான தாக்குதல் தளத்தை இழந்து போய்விடுவோம். தொடர்ச்சியான எமது பாரம்பரிய நிலம் துண்டாடப்படுகின்றது. எனவே, காட்டையும் காட்டின் கரையோரங்களையும் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும் என்ற தேவை ஏற்பட்டது.

அந்தப் பணியினை நிறைவேற்றவெனத் தெரிவுசெய்யப்பட்ட படையணி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. சீலன் பிறந்த மண்ணில் அவனது பெயர் தாங்கிய படையணி தாக்குதல் நடவடிக்கைக்காகப் புறப்பட்டது. அங்கே எதிர்கொள்ளப்போகும் நெருக்கடிகள் ஏற்கனவே கணிக்கப்பட்டன.

நிலையான பாதுகாப்புள்ள முகாமோ நிலமோ கட்டுப்பாட்டில் இல்லை. உணவு முதற் கொண்டு மருத்துவம் ஈறாக எந்த விநியோகங்களிலும் நம்பிக்கையில்லை. தங்கிடங்கள் இல்லாமையினால் மழையும் வெயிலும் அச்சுறுத்தும். அதிகமானவர்களுக்குப் பழக்கப்படாத புதிய சூழல். இப்படி, தொடராக இருக்கும் சிக்கல்களுக்குத் தீர்வு தேடினால் அது கில்மனிடம்தான் கிடைக்கும் என்றே தலைவர் உணர்ந்திருக்கவேண்டும்.

கில்மன்தான் அந்த அணிகளை வழிநடத்துவதற்கு ஏற்றவனாய் இருந்தான். இவர்கள் செல்லப்போகும் களச்சூழலில் அணிகளைத் தொடர்ச்சியாகப் பயிற்சியில் ஈடுபடுத்தவும் பொருத்தமான புதிய திட்டங்களைக் கையாளவும் தொடர் வேவிலும் ரோந்திலும் ஈடுபட்டுத் தகவல்களைப் பெறக்கூடிய அணியைச் சிறப்பான முறையில் வழிநடத்தவும் எதிர்கொள்ளப்போகும் சிக்கல்கள் அனைத்தினையும் சுமந்தபடி போராளிகளின் உணர்வுகளைக் கட்டிக்காத்து நிர்வகிக்கவும் சிறந்த ஆளுமை உள்ள ஒருவர் தேவைப்பட்டார். கில்மன் தான் பொருத்தமானவன் எனத் தலைவர் முடிவுசெய்தார். அத்தனை வினாக்களுக்கும் விடைகாணக்கூடிய ஆளுமை பொருந்திய தளபதியாக அவனே அவரது எண்ணத்தில் இடம்பிடித்தான்.

சாள்ஸ் அன்ரனிப் படையணி தோற்றம் பெற்றபோது இவன் பயிற்சி ஆசிரியனாகக் கடமையாற்றினான். சகல ஆயுதங்களின் தன்மைகளையும் பயிற்சி நுட்பங்களையும் நேரடியான அனுபவத்தில் நன்கு அறிந்திருந்தான். வேவு அணிக்குப் பொறுப்பாக இருந்து பல இடங்களி லும் வேவுத் தகவல்கள் திரட்டிய பட்டறிவும் இருந்தது. அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரியில் அவன் படித்த நாட்களிற் கற்றுக்கொண்ட நிர்வாகம் தொடர்பான அறிவும் தந்திரம் தொடர்பான அறிவும் இருந்தன. தாக்குதல்களுக்குத் தலைமையேற்றிருந்த அனுபவமும் சமர்களில் விநியோகத்தை வழிநடத்திய தேர்ச்சியும் அவற்றிற்கு மேலாகப் போராளி ஒவ்வொருவரின் மனத்தையும் கனிவுடன் அரவணைக்கும் தன்மையும் இருந்தன. இவையெல்லாம் அவனே அப்பணிக்கு ஏற்றவன் என்பதைக் காட்டின.

கில்மன் சகலதுறை வல்லமையும் அனைவரையும் வழிநடத்தும் ஆளுமையும் கொண்ட வனாக இருந்தான். நெருக்கடி நிறைந்த களச்சூழலுக்குள் தாக்குதல் இலக்கு ஒன்றைத் தெரிவுசெய்வது, வேவு பார்த்துத் திட்டம் தீட்டுவது, அணிகளை ஒன்றாக்கிப் பயிற்சி கொடுப்பது, தாக்குதலுக்கு நகர்வது, காயக்காரர்களையும் கைப்பற்றிய ஆயுதங்களையும் பாதுகாப்பாகக் கொண்டுவந்து சேர்ப்பது, மருத்துவ ஏற்பாடு செய்வது, களஞ்சியப்படுத்துவது இப்படிப் பலவற்றையும் ஒவ்வொரு தாக்குதலுக்கு முன்பும் பின்பும் கருத்திற்கொள்ளவேண்டும். எப்போதும் எதிரியின் தாக்குதலை எதிர்கொள்ளவேண்டிய அச்சுறுத்தல்களுக்குள்ளே அதை முறியடித்துவிடும் விழிப்புணர்வுடனேயே அவர்களின் பணிகள் ஒவ்வொன்றும் நிறைவேறின. ஒரு களத்தில் நேரடியாக நின்று வழிநடத்துவதை விடவும் எப்போதும் ஆபத்து நிறைந்த எதிரியின் ஆக்கிரமிப்புப் பிரதேசப் போர்க்களச் சூழலிற்குள்ளேயே வாழ்ந்தபடி, ஒவ்வொரு இலக்காகத் தெரிவுசெய்து, அதை வேவுபார்த்து அதற்கான ஆயுத ஏற்பாடுகளை ஒழுங்குசெய்வதும் தாக்குவதும் சுலபமானதல்ல. அதைச் சவாலாக எடுத்தான் கில்மன். ஒவ்வொரு தாக்குதல் முயற்சியையும் நிறைவேற்றத் தொலைத்தொடர்புக் கருவியிற் கதைத்தால் எதிரி எமது தங்குமிடத்தைக் கண்டுவிடுவான் என்பதால் நேரடியாகவே ஒவ்வோரிடமுஞ் சென்று கவனிக்கவேண்டிய வேலைகளைக் கவனிப்பான்.

ஒவ்வோர் அணிகளுக்குமிடையே கிலோமீற்றர்க் கணக்கில் நீண்டு விரிந்திருக்கும் காட்டை ஊடறுத்து நுழைவதற்கு அவனது கால்களைத்தவிர வேறு எந்த வாகனத்தையும் பயன்படுத்த வசதியில்லை. அவன் பயன்படுத்துவதும் இல்லை.

அனைத்து இடங்களிற்கும் ஓயாது நடந்து செல்வான். வியர்வை சிந்தச் சிந்த, மூச்சு வாங்க வாங்க அவனது நடை தொடரும். அந்தக் காட்டுப் பகுதியில் அவன் சுவடு படாத இடம் இல்லையென்றே சொல்லலாம்.

படையணி திருமலைக்குச் சென்றபின் சண்டை தொடங்கும்வரை வேவுக்காகவும் இடங்களை அறியவும் நடந்து திரிவான் கில்மன். அவனது ஓயாத உழைப்பு ஒவ்வொரு போராளியிலும் பிரதிபலித்தது. சிறுசிறு தாக்குதல்களைச் செய்து எமது கால்களைத் திருமலைக் காட்டில் வலுவாகப் பதிக்கவே அணிகள் எதிர்கொள்ளவேண்டிய நெருக்கடிகளும் பெருகின.

அந்த இறுக்கமான சூழலில் ஒவ்வொரு வேளை உணவுக்கும் காத்திருக்கவேண்டியதாகவும் உணவை எடுத்துச் சென்றே சண்டையிடவேண்டியதாகவும் இருந்தது. எனினும் கில்மனின் அன்பும் அரவணைப்பும் போராளிகள் ஒவ்வொருவரையும் உறுதியான உளவுரனோடிருக்கச் செய்தன.

எப்போதும் எளிமையாய் உடையணிந்துகொண்டு எல்லோருடனும் அன்பாய்ப் பழகும் கில்மன் குறுகிய காலத்தில் அந்தப் பிரதேசத்திற் பாரிய மாற்றத்தை ஏற்படுத்தினான்.



ஆங்காங்கே எதிரிகள் மீது தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டு ஆயுதங்களும் கைப்பற்றப்பட்டன. திறமையோடு சண்டைசெய்த வீரர்களை இதய நிறைவோடு பாராட்டி அடுத்த சண்டைக்கு அனைவரையும் தயார்ப்படுத்துவான்.

பெருஞ்சிரமத்தின் பின் கிடைக்கின்ற அளவுச் சாப்பாட்டிற்காகக் கில்மனும் மற்றவர்களோடு சமையற்கூடம் வந்து காத்திருப்பான். கையில் ஒரு கோப்பையோடு, ஒரு மரக்குற்றியில் அமர்ந்தபடி எதையாவது சிந்திந்துக்கொண்டிருப்பான்.

மரக்குற்றியில் அமர்ந்திருக்கும் அவனது நெஞ்சின் ஒரு மூலையிற் பழைய நினைவுகளும் உட்கார்ந்திருக்கும். சிலவேளைகளில் தள்ளாடும் முதியவரின் நடையைப்போல தளர்ந்த நடையில் அவை உலாவத்தொடங்கும்.

அவன் இந்தப் போராட்டத்திற் பங்களிப்புச் செய்த ஆரம்ப நாட்களும் ஊருக்குள் அந்தக் கதை கசிந்தபோது அவன் எதிர்கொள்ள வேண்டியிருந்த அச்சறுத்தலும் எங்கோ தூரத்தில் ஒரு நாடகம் நடப்பதைப்போல அவனை உணரவைக்கும். உறவுகள் ஒவ்வொன்றின் குரலும் தொலைவில் இருந்து கேட்பதுபோலிருக்கும்.

சின்னவயதிலேயே அவன் இயக்கத்தின் ஆதரவாளனாகத் தீவிரமாய் உழைத்தபோது இந்திய இராணுவம் அவனைப்பின்தொடர ஆரம்பித்தது. அவனும் அவனது குடும்பமும் எதிர்கொண்ட துன்பங்கள்... எண்ணிலடங்கா. அனைத்துத் துயரங்களுக்கும் தீர்வுகாணவேண்டுமென்ற இலட்சியத்தோடு 13.07.90 இற் போராட்டத்தில் இணைந்தான். பயிற்சிப் பாசறையில் ஒவ்வொரு பயிற்சியிலும் அவன் காட்டிய ஆர்வமும் திறமையும் அவனது விடுதலைப்பற்றை வெளிக்காட்டின.



எதிர்காலத்தில் தளபதியாக வரப்போகும் அந்த விதை ஆரம்பத்திலேயே வீரியமுள்ளதாகவே இருந்தது. அவனுக்குக் கிடைத்த சந்தர்ப்பங்களில் அவன்காட்டிய திறமையும், தொடர்ந்து வந்த களவாழ்வில் வெளிப்பட்ட அவனது தனித்தகைமையும், பயிற்சியாசிரியனாய், பின் விநியோகப் பொறுப்பாளனாய், வேவணிகளின் வழிநடத்துநனாய் அவன் வளர்ச்சியடைய வழிவகுத்தன. அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரிப் படிப்பு முடிந்து வந்ததும் அவன் ஏற்றுக் கொண்ட 'பலவேகய-2' இற்கான விநியோக நடவடிக்கை அவனை ஒரு தளபதி என்று கூறக் கூடியளவுக்கு அவனது ஆளுமையை வெளிப்படுத்தியது.

1992ஆம் ஆண்டு மாவீரர் நாளுக்கு முந்திய சமராக அமைந்த வளலாய்த் தொடர் காவல ரண் மீதான தாக்குதல் நடவடிக்கையில் ஒருபகுதிக்கு அணிப் பொறுப்பாளராகக் கில்மன் நியமிக் கப்பட்டபோது, அந்தச் சமரின் முடிவில் அவனது போர்த்திறமையும், கட்டளை வழங்கும் ஆற்ற லும் சந்தேகத்திற்கு இடமற்றவாறு நிரூபிக்கப்பட்டன. மூத்த தளபதிகளாற் பேசப்படுபவனாகக் கில்மன் மாறினான். படிநிலை வளர்ச்சியின் உயர்வாய், தலைவரின் நம்பிக்கையின் வெளிப்பாடாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாகக் கில்மன் நியமிக்கப் பட்டான். தலைநகர்க்காடுகளில் அவன் கால்கள் நடந்தன.

ஓய்வறியாத அவன், வரைபடத்தை விரித்துப் பார்த்தபடியோ எழுதுவதற்கும் வாசிக்கவும் தெரியாத போராளிகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்தபடியோ இருப்பான். அங்கே எதிர்கொண்ட தாக்குதல்கள் ஒவ்வொன்றிற்கும் பின்னாற் கில்மனின் முகமே சிரிப்போடு தெரியும்.

எதிரியின் வசமிருந்த காடு சிறிதுசிறிதாக எமது கட்டுப்பாட்டுக்குள் வந்தபோது அதனால் எதிர்காலத்தில் உருவாகக்கூடிய சிக்கல்களை எதிரி உணர்ந்தான். திருமலை வந்திருக்கும் எமது தாக்குதல் அணிமீது தாக்குதல் தொடுப்பதற்காகக் காடுகளை நோக்கிப் பெருமெடுப்பிலான இராணுவ நடவடிக்கை ஒன்றிற்குத் திட்டமிட்டான். 31.05.1995 'ராமசக்தி-03' என்ற இராணுவ நடவடிக்கை எமது வசமிருந்த காடுகளை நோக்கி அலைபுரண்டு வந்தது. கில்மன் இதனை முன்னுணர்ந்து இருந்தானோ என்னவோ உடனே செயலில் இறங்கினான். தனது அணிகளை எதிர்ச்சமரிற்குத் தயாராக்கினான். செயன்முறைத் தாக்குதல் திட்டத்தை வகுத்து அதனை விளங்கவைத்தான். முன்னேறி வந்த எதிரிக்கு மூக்குடைத்து அனுப்பும் மூர்க்கத்தோடு அணிகளை வழிநடத்தினான் கில்மன்.

அலைபுரண்டதுபோல் காடுகளில் முன்னேறிய எதிரிப்படை துவண்டுபோய்ப் பின்வாங்கி யது. தனது கேணல் தர, அதிகாரி உட்படப் படையினர் பலரை இழந்ததுடன் உடல்களையும் ஆயுதங்களையும்

கைவிட்டு அவமானத்தைக் கையிலேந்தியவாறு ஓடித்தப்பியது சிங்களப்படை. அரசதரப்புத் தம்மிற் 17 பேர் கொல்லப்பட்டு 35 பேர் காயமடைந்ததாகவும் பலர் காணாமற் போயுள்ளதாகவும் கூறி விடயத்தைச் 'சடைய' முனைந்தது. சிறிய அணி. பெரியசமர். வெற்றி சாதாரணமானதன்று.

சீலனின் பெயர்தாங்கிய படையணியைத் தலைவனின் எதிர்பார்ப்புக்கு அமையத் தலைநகரில் வெற்றிநடை போடவைத்து எம்மையெல்லாம் வியப்பில் ஆழ்த்திக்கொண்டிருந்த கில்மன் எதிரிமீது தாக்குதல் நடத்த முயன்றபோது வெடிவிபத்து ஏற்பட்டு 28.06.95 இல் வீரச்சாவடைந்தான் என்ற கொடிய செய்தி இடியென வந்தது. அவனை அறிந்தவர்களுக்கு இடிவிழுந்தது போலிருந்தது. இனிக் கில்மன் என்றொருவன் இல்லை... அந்த வெடிமருந்து பொய்த்துப்போயிருந்தால்... எவ்வளவு நன்றாக இருக்கும்!... மனம் நப்பாசையில் துடித்தது.

-துளசிச்செல்வன்-

# விடுதலைப் பாதையில் அழியாத தடம்

1999 நவம்பர் இரண்டாம் நாள். உலகின் செய்திக் கதவுக ளெல்லாம் பொங்கிப் பிரவாகித்த "ஓயாத அலை" களின் வீச்சுக்கு வழிவிட்டன. உலக இராணுவச் சரித்திரத்தில் நிலைபெற்ற ஓயாத அலைகள் மூன்றின் முதலாம் நாள் தமிழீழத்தின் சிறந்த போர்த் தளபதிகளுள் ஒருவரான லெப். கேணல் ராகவனையும் தன்னுடன் அணைத்துக் கொண்டது. வெற்றிமுரசு கொட்டிச் சிங்களம் செய்த பெரும் போர் நடவடிக்கைகளின் போதெல்லாம் எதிர்த்து நின்று போரிட்ட புலிகளின் போர்த் தளபதி அவன். உலக வரலாற்று ஏடு களிற் பெரும் சரித்திரப் பதிவுகளாகிய, தலைவர் பிரபாகரனின் படை நடத்தல்களிளெல்லாம் முன் நின்று உழைத்த வீரப்புலி அவன். அவனும் "ஓயாத அலைகள் 03" இன் சரித்திரத்திற்காகத் தலைசாய்க்க அச்சமர் பெருமைமிகு வெற்றியோடு நிறைவுபெற்றது.

ராகவன் இரவும் பகலும் ஓயாது உழைத்து வளர்த்துவிட்ட சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் போராளிகள் எதிரியரண்களை உடைத்து உட்புகுந்து புளியங்குளம் வரையும் கைப்பற்றிச் சற்று ஓய்வெடுத்தபோது "எங்கட சண்டையையும் வெற்றிகளையும் பார்த்துச் சந்தோசப்பட ராகவன் அண்ணை இல்லாமற் போட்டாரே என்று அங்கலாய்த்தனர். "எதிரி அவரைத் தடையிலேயே வீழ்த்திப் போட்டான். பாவம் எதிரி; அவனுக்கு எப்படித் தெரியும், ராகவன் அண்ணைதான் இப்பவும் எங்கட மனங்களுக்குள்ள இருந்து எங்களை வழிநடத்திறார் எண்டு" அதுதான் உண்மையில் நடந்தது. ஆம்... தானில்லாத வேளைகளிலும் வீரர்களை வெற்றியின் பாதையில் வழிநடத்தக்கூடிய வழிகாட்டலின் உயரிய தலைமைப் பண்பு, எங்கள் தலைவன் வளர்த்தெடுத்த அந்த தளபதியிடம் இருந்தது.

ராகவன்! அற்புதமான போராளி; ஆற்றல்மிக்க போர்த்தளபதி; எல்லோரையும் நேசித்ததால் எல்லோராலும் நேசிக்கப்பட்ட ஓர் உயரிய மனிதன்; நீண்ட-ஈடிணையற்ற விடுதலைப் போர் வரலாற்றில் அவன் ஓர் அத்தியாயத்தின் பதிவு. அவனின் வரலாற்றை எழுதுவதானால் ஈழப்போரில் தொண்ணூறுகளின் போரியலில் முக்கியமான வரலாற்றுக் கட்ட மொன்றை எழுதியேயாகவேண்டும். அக்கால கட்டத்தின் முக்கியத்துவமான போர்க்களங்களில் எல்லாம் சரித்திரம் படைத்த வீரனவன்.

90–91 காலப்பகுதியில் மாவட்டரீதியில் நடந்த சிறுசிறு தாக்குதல்கள் பலவற்றிற் பங்கு கொண்டவன் ராகவன். அந்தப் புலிக்குள்ளிருந்த இராணுவ ஆற்றல்களையும், போராட்டப்பற்றையும் உறுதியையும் மணலாற்றிற் சிங்களப் படைகளின் 'ஒப்பரேசன் மின்னல்' வெளிக்கொணர்ந்தது. வன்னி மாவட்டத்தின் 1.9 படையணியில் தளபதி தீபனின் வீரர்கள் நூற்றைம்பதுபேர் கொண்ட அணியிற் சாதாரண போராளியாக ராகவனும் களம் இறங்கினான்.

போராட்ட வரலாற்றில் மிகவும் கடுமையான போர்க்களங்களில் 'மின்னல்' களமும் முக்கியமானது. ஆனையிறவிற் பாய்ந்த புலிகள் இயக்கத்தைப் பலவீனப்படுத்திவிட்டதாகக் கற்பனை செய்த

## லெப்.கேணல் ராகவன்
## சிறப்புத் தளபதி

## சின்னையா சுவேந்திரராஜா
## வவுனியா



சிங்களம் தமிழீழத்தின் இதயபூமியை ஆக்கிரமித்து விடுதலைப் போருக்கு முடிவுகட்ட எண்ணியது. பல்லாயிரம் எனத் திரண்டு, நவீனரக ஆயுதங்களை ஒன்றிணைத்து, சிங்களப்படைகள் போரிற் குதித்திருந்தன. எறிகணைகளும் போர்விமானங்களும் இதயபூமியை அதிரவைக்க, குண்டு மழையுட் குளித்தபடி மண்காத்த மறவர்களுள் ராகவனும் ஒருவனாகப் போரிட்டான்.

எந்தவொரு போர்வீரனுக்கும் கடினமான போர்க்களம் அது. அந்தப் போர்க்களத்தின் ஒவ்வொரு நாளும் ராகவனை நன்கு இனங்காட்டியது. உணவும் நீருமின்றி நாட்கணக்காய்ப் போரிட்ட பொழுதெல்லாம் சுறுசுறுப்பாக இயங்கி முன்மாதிரியாகச் செயற்பட்ட அந்த வீரனின் செயல்கள் எமது அணித்தலைவர்களுக்குக்கூட உற்சாகத்தைக் கொடுத்தனவென்றால் அது மிகையல்ல. 'மின்னல்' களத்திலேயே சமரின் குறுகிய நாட்களில் தளபதி தீபன் அவர்களால் ஏழுபேர் கொண்ட அணியொன்றின் தலைவனாக்கப்பட்டான். ஒவ்வொரு புலிவீரனும் வரலாற்றிற் பெருமைகொள்ளத்தக்க அந்தச் சமரிற் பங்குகொண்ட 1.9 படையணியில் இறுதியாகத் திரும்பிய ஐவருள் ராகவனும் ஒருவன்.

'மின்னல்' முடிந்து சில நாட்களிலேயே சிங்களப் படைக்குப் பேரிடி கொடுத்த முல்லைத்தீவு இராணுவ முகாமின் 3ஆம் கட்டை மினிமுகாமின்மீது பாய்ந்த புலியணியில் ராகவன் 15 பேர் கொண்ட அணியின் பொறுப்பாளனாக இருந்தான். சிங்களப்படையினர் பத்துப்பேரின் உடல்களும் பெருமளவு ஆயுதங்களும் கைப்பற்றப்பட்ட அந்தத் தாக்குதலில் ராகவனின் அணி தனது பணியை செவ்வனே செய்தது.

1992ஆம் ஆண்டில் ராகவன் நன்கு இனங்காணப்பட்ட அணித்தலைவனாகிவிட்டான். அவனது ஒவ்வொரு செயற்பாட்டிலும் அவனது ஆளுமை வெளிப்பட்டது. இந்தக் காலப்பகுதியில் அந்த வீரன் செய்த பல வெற்றிகரமான அதிரடித் தாக்குதல்கள் சிங்களப்படைகளைக் கதிகலங்கச் செய்தன. வண்ணாங்குளம், கொம்பாவெவ, செட்டிகுளம் ... என இக்காலப்பகுதியில் மட்டுமே பதின்மூன்றுக்கும் மேற்பட்ட வெற்றிகரமான தாக்குதல்களில் அவன் பங்குகொண்டான். குறுகிய காலத்திலேயே வளர்ச்சிகண்ட அந்தப் போர்வீரன் அப்போது 45 பேர்கொண்ட அணியொன்றின் பொறுப்பாளனாக்கப்பட்டிருந்தான். வன்னியில் எதிரியிருந்த மூலைமுடுக்குகளிலெல்லாம் அந்தப் புலிவீரனின் துப்பாக்கி சடசடத்தது. வழிநடத்தும் அவனின் குரல் ஒலித்துக் கொண்டிருந்தது.

2ஆம் கட்ட ஈழப்போரிற் புலிகள் இயக்கத்தின் போரியல் ஆற்றலை வெளிக்கொணர்ந்து, சிங்களத்தின் போர், அரசியல் அரங்குகளை அதிரவைத்து, உலகின் புருவங்களை உயரவைத்த 'இதயபூமி 01', 'யாழ்தேவி' ஆகியவற்கு எதிரான முறியடிப்புச் சமர்கள், 'ஒப்பரேசன் தவளை' ஆகிய களங்களில் தனது அணியுடன் முக்கிய சண்டைகளில் இறங்கி காத்திரமான வெற்றியை ஈட்டினான்.

ஒவ்வொரு சண்டையிலும் அந்தப் புலியின் ஆளுமை புடமிடப்பட்டது. அந்த வீரனுக்கு அதிஷ்டவசமாக எண்ணிலடங்காச் சண்டைக் களங்கள் கிடைத்தன என்பதைவிட அந்தஇடங் களிளெல்லாம் அவனின் தேவை அவசியப்பட்டதென்றே சொல்லவேண்டும். அதனாலேயே ராகவனின் சண்டைப் பட்டியல் நீண்டுகொண்டே போனது. வன்னியில் நிலைகொண்டிருந்த சிங்களத் துப்படைகளுக்கு ஒவ்வொரு முனைகளிலும் ராகவன் பாடம் புகட்டினான். 1995 இல் 3ஆம் கட்ட ஈழயுத்தம் மூண்டபோது ராகவனின் பணி யாழ்ப்பாணம் வரை விரிந்தது. குடாநாட்டைப் பிடிக்கத் தன் பலத்தின் முழுமையையும் திரட்டி இறங்கிய சிங்களத்தின் 'சூரியக்கதிர்' நடவடிக்கையை அங்குலக் கணக்கில் நகரவைத்த போர்க்களத்திலும் ராகவன் போரிட்டான்.

'சூரியக்கதிர்' முடிந்து புலிகள் இயக்கம் முழுதாக வன்னிக்கு வந்துசேர்ந்தபோது ராகவன் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியில் இணைக்கப்பட்டான்.

ராகவன் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கு வந்ததும் அவனிடம் ஒப்படைக்கப்பட்ட பணிகள் அனைத்தும் மிகுந்த முக்கியத்துவமானவை. தலைவர் நம்பிக்கையுடன் அவற்றை அவனிடம் ஒப்படைத்தபோது முழு அக்கறையெடுத்து, தனது கடின உழைப்பால் அவற்றையெல்லாம் நேர்த்தியாகச் செய்து முடித்தான்.

யாழ்க் குடாநாட்டை ஆக்கிரமித்துத் திமிர்கொண்டிருந்த சிங்களத்தின் இராணுவக் கற்பனைகளை அர்த்தமற்றதாக்கிய, "புலிகள் ஓய்ந்துவிட்டார்கள்" எனப் பகற்கனவு கண்டவர்களுக்கு நெத்தியடிகொடுத்த 'ஓயாத அலைகள் 01' இல் மிகவும் முக்கியமான பணியொன்று ராகவனிடம் ஒப்படைக்கப்பட்டது. உறுதிப்படுத்தப்பட்ட வெற்றிக்காக இரவு பகலாய் உழைத்த தலைவர் அந்தப் பணியை அவனிடம் நம்பிக்கையுடன் ஒப்படைத்தபோது அதைத் திறம்படச் செய்துமுடித்தான். அத்தளத்தின் பிரதான முகாமின் உயர்பாதுகாப்பு அரண்களைப் பிரித்தெறிந்து, உள் நுழைந்து அவற்றைக் கைப்பற்றுவதில்தான் வெற்றியின் நிச்சயத்தன்மை தங்கியிருந்தது. தலைவரின் நம்பிக்கைக்கேற்ப அவன் அதை வெற்றிகரமாகச் செய்து முடித்தான். அதனால் தளம் எமது கைகளில் வீழ்ந்தது.

மோதல்கள், சண்டைகள், சமர்கள் எனத் தமிழீழப் போரரங்குகளிளெல்லாம் சுற்றிச் சுழன்றான் ராகவன். சண்டைகளால் ராகவன் புடமிடப்பட்டான் என்பதிலும், சண்டைகளை ராகவன் புடமிட்டான் என்பதே பொருத்தமாக இருக்கும். ஆம், அப்படித்தான் இருந்தது நிலைமை. அறிவாலும் அனுபவத்தாலும் போரியலில் அவன் உயர்ந்து நின்றான். தனது களச்செயற்பாடுகளில் அவற்றை வெளிக்காட்டித் தலைவரின் தனிப்பட்ட விருப்பைப் பெற்றிருந்தான். தளபதி ஒருவருக்கான கடமைகள் அவனிடம் ஒப்படைக்கப்பட்டன.

போர்முனையில் இறுக்கமான கட்டங்களிலெல்லாம் ராகவன் தேவைப்படுவான். எமது படைநடவடிக்கைகள் இறுக்கமான கட்டங்களைச் சந்தித்த பல சந்தர்ப்பங்களில் அவற்றை உடைத்தெறிந்து எமக்குச் சாதகமான நிலைமைகளைப் பெற்றுத்தந்திருக்கிறான். நெருக்கடியான வேளைகளில் எங்கள் மூத்த தளபதிகளின் கண்களுக்குத் தெரிபவர்களுள் ராகவன் முக்கியமானவன். "இக்கட்டான வேளைகளில் நேரிலேயே களமிறங்கி நிற்கும் தலைமைப் பண்பு அவனிடம் இருந்தது" என்றார் தளபதி கேணல் தீபன். "முன்னரங்கப் போர் நிலைகளில் தனது போராளிகளுக்குச் சண்டையில் வைத்தே சண்டை பழக்கும் தளபதி அவன்" என்று ராகவனின் தலைமைத்துவத்தை நினைவுகூர்ந்தார் களத்தில் நின்ற தளபதியொருவர்.

1997 ஜனவரியில் ஆனையிறவு – பரந்தன் படைத் தளங்களிற் புலிகள் இயக்கத்தின் படையணிகள் பாய்ந்த போது முக்கிய முனையொன்றில் ராகவனின் படைநடத்தல் அவனின் அதீதப் போராற்றலை வெளிக்-காட்டியது. ஆனையிறவுப் படைத்தளத்திற் புளியடிப் பிரதான முகாம் ராகவனின் அணிக்குரிய இலக்காக இருந்தது. வேவு நடவடிக்கையின்படி திட்டமிடப்பட்டு, உரிய முறையிற் பயிற்சிகளெல்லாம் வழங்கப்பட்டிருந்தன. ஆனாற்களநிலைமைகளோ தலைகீழாக இருந்தன. எதிர்பார்த்ததற்கு முற்றிலும் மாறான கள நிலைமையது. எதிரி உசாரடைந்திருந்தான். எமது நகர்வுகளை அவன் அவதானித்து விட்டதையே எதிரியின் செயற்பாடுகள் வெளிப்படுத்தின. ஒட்டுமொத்தமாகச் சண்டையே குழம்பிவிடுமோ என்று அச்சங்கொண்டவேளை களத்தில் நேரில் நின்று, தனது இராணுவ அறிவால் துணிச்சலுடன் முடிவெடுத்து, தனது இலக்கை வெற்றி கொண்டு, 120மி.மீ. பீரங்கிகள் சிலவற்றையும் மீட்டுத்தந்து, வெற்றிவாகை சூடினான் ராகவன்.



திட்டத்தை ஆராயும் தளபதிகள் கேணல் பால்ராஜ், கேணல் ஜெயம் ஆகியோருடன் இடப்புறம் சிறப்புத் தளபதி ராகவன்.

போரியலில உயர்ந்து நின்ற எங்கள் போர்த்தளபதி லெப். கேணல் ராகவன் சிங்களத்தின் நம்பிக்கை நட்சத்திரமான 'ஜெயசிக்குறுய்' நடவடிக்கையைச் சுக்குநூறாக்குவதற்காகக் கடுமையாக உழைத்தான். ஜெயசிக்குறுவின் தென்முனையிற் பனிக்கநீராவியிலிருந்து மாங்குளம் வரையிலும் வடமுனையிற் கிளிநொச்சியிலும் ஒவ்வொரு அங்குல நிலத்திலும் அந்தத் தளபதி தன் உயிர்கொண்டு வீரம் விதைத்தான். அவனது உழைப்பின் அறுவடைதான் வரலாற்றிற் பொறிக்கப்பட்டுவிட்ட புளியங்குளத்திற் புலிகள் இயக்கம் புரிந்த சாதனைகள். எதிரியின் பாரிய மரபுவழிப் படையெடுப்பை மறித்துப் புளியங்குளத்திலே முகாம் அமைத்து நிலைகொள்வதெனத் தலைவர் அவர்கள் முடிவுசெய்தபோது தளபதி தீபனுக்குத் துணையாக நின்று தள அமைப்புக்காக ராகவன் கடுமையாகத் தன்னை வருத்தினான். புளியங்குளம் முகாமில் தாக்குதல் அணிகளின் பொறுப்பை ஏற்றிருந்த அவன், எதிரியை எதிர்கொள்வதற்கெனச் சகல ஏற்பாடுகளையும் நேரில் நின்று செய்தான்; செய்வித்தான். புளியங்குளத்தை "புலிகளின் புரட்சிக் குளம்" ஆக மாற்றியதில் ராகவனின் உழைப்புக்கும் அவன் சிந்திய வியர்வைக்கும் முக்கிய பங்கு இருந்தது.

புளியங்குளத்தில் உடலைப் பிழிந்து உழைத்த ராகவனுக்கு ஓய்வு கிடைக்கவில்லை. ஓமந்தையில் 'ஜெயசிக்குறுய்' படைகளுக்கெதிரான ஊடுருவித் தாக்குதலிற் பிரதான தாக்குதல் அணியின் தலைவனாக அவன் களமிறங்கினான். அந்தச் சண்டையிற் கடின உழைப்பைத் தந்த ராகவனையும் அவனது அணியையும் ஓய்வுக்காகப் பின்னணிக்கு அனுப்பிவைத்தார் தளபதி தீபன். ஆனால் விரைவிலேயே களத்தைத் திறந்து முக்கிய நகர்வொன்றை எதிரி ஆரம்பித்தான். அப்போது அங்கே ராகவன் தேவைப்பட்டான்.

புளியங்குளத்தில் முகாம் அமைத்து நிலைகொள்ள எடுத்த எமது இயக்கத்தின் முடிவிற்குச் சவாலாக அமைந்திருந்தது எதிரியின் அன்றைய நகர்வு. எமது பாதுகாப்பு அரண்கள் இல்லாத பகுதியை நோக்கிச் சன்னாசிப்பரந்தன் ஊடாகப் புளியங்குளத்தை நெருங்கிக் கொண்டிருந்தான் எதிரி. இக்கட்டான சூழல், எதிரியின் முன்னேற்றத்தை உடனடியாகவே முறியடித்தாக வேண்டும். அந்தப் பலப்பரீட்சையில் நிச்சயம் நாம் வென்றேயாகவேண்டும். தளபதி தீபனின் கண்களுக்குள் ராகவன் நின்றான். "நான் செய்து முடிப்பன்" ராகவனின் உருவம் சொல்லாமற் சொன்னது. ராகவன் உடனடியாகவே களமிறக்கப்பட்டான்.

போராளிகள் முப்பதுபேரை மட்டுமேகொண்ட அணியுடன் ராகவன் களமிறங்கினான். எதிரியை வழிமறித்து, ஊடறுத்து எமது பாதுகாப்பு நிலைகளை அமைக்கக்கூடிய பகுதியொன்றினூடாக ராகவன் தனது அணியுடன் உட்புகுந்தான். எதிரியோ மிகக்கடுமையாகச் சண்டை செய்தான். எந்தக் கட்டத்திலும் விட்டுக்கொடுக்க எதிரி தயாரில்லை. களத்தில் ராகவன் நின்றதால் எல்லோர் மனத்திலும் நம்பிக்கை இருந்தது. தங்களுடன் ராகவனும் நின்றதாற் களத்திலிருந்த போராளிகளிடம் உற்சாகம் பிறந்தது. இறுதியில் எதிரியைச் சின்னாபின்னமாக்கி அந்தக் கடினமான சண்டையை எல்லோரும் நம்பிக்கை வைத்தபடியே செய்துமுடித்தான் அந்தப் புலிப்போர்த் தளபதி. புளியங்குளத்தைப் புலிக்குகையாக்க உழைத்த அந்த வீரன் இறுதியிற் சவாலாக வந்த எதிரியின் நகர்வை எதிர்கொண்டு அந்தப் புலிக்குகையைக் காத்தான். எதிரிக்குப் புலிகள் பற்றிப்பாடம் புகட்டினான்.

தென்முனையில் தமது இயலாமையை உணர்ந்துகொண்டு, வடமுனையிற் கிளிநொச்சி யூடாகப் புதிய களமுனையொன்றைத் திறப்பதற்கு எதிரி தயாராகி வந்தபோது 'ஜெயசிக்குறுய்' எதிர்ச் சமரின் துணைக் கட்டளைத் தளபதி கேணல் தீபனுடன் கிளிநொச்சிக் களமுனைக்குப் புறப்பட்டான் ராகவன். அங்கே அந்தப் போர்த்தளபதி தமிழீழத்தின் புகழ்பூத்த சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் தளபதியானான். அப்போது கிளிநொச்சித் தளத்தின் பாதுகாப்பு ஏற்பாடு களுக்காக அந்த வீரன் நிறைய உழைக்கவேண்டியிருந்தது. 1998 பெப்ரவரியிற் கிளிநொச்சித் தளத்தின்மீது புலிகள் பாய்ந்து தளத்தின் தென்பகுதியை வீழ்த்தியபோது அப்பகுதியிற் சண்டைக்காக நியமிக்கப்பட்ட எமது 'ராங்கி' அணியின் நகர்வு வழிநடத்துநனாக ராகவன் இருந்தான். அதன்பின் எமது முன்னணி அரண்களை எதிரிக்குக் கிட்ட நகர்த்தி, எதிரியை அச்சுறுத்திப் பாதுகாப்புப் பணியில் அவன் நின்றான். அவனது உழைப்புக்குச் சவாலாக எதிரி எழுந்த ஒவ்வொரு தடவையும் ராகவன் பாடம் புகட்டினான். அவன் புகட்டிய பாடங்கள் இலங்கை இராணுவத்தின் வரலாற்றில் அவர்களால் என்றைக்குமே மறக்கமுடியாத அளவு முக்கியத்துவம் பெற்றவை.

1998 ஜூன் நான்காம் நாளன்று கண்டி வீதிக்கு மேற்குப் புறமாகப் பல முனைகளில் எமது பாதுகாப்பு நிலைகளை உடைத்து எதிரியின் முன்னணிப் படையணிகள் உட்புகுந்து விட்டன. முன்னணி அரண்களிற் குறிப்பிடக்கூடிய பகுதியை எதிரி கைப்பற்றிவிட்டான். அப்பகு தியில் நிலைகொண்டிருந்த எமது அணிகளும் சேதமடைந்தன. மிகவும் நெருக்கடியானதொரு களநிலைமை. உடனடியாகவே எதிரியை முறியடிக்கவேண்டும். தளபதி கேணல் தீபன் அனுப்பிவைத்த உதவியணிகளை வைத்து அவரின் கட்டளையின் கீழ் களத்தில் நின்று படை நடத்தினான் ராகவன். நீண்ட நேர 'மரணச் சண்டையின்' பின் எதிரியை ஊடறுத்து, முற்றுகைக்குள்ளாக்கி உள்நுழைந்தவர்களை அழித்து முடித்துத்தான் மூச்சுவிட்டான். சிங்களத்தின் முன்னணித் தாக்குதற் படையில் 200 பேருக்கும் மேலான வீரர்கள் சிதறிச் சின்னாபின்னமாகி வீழத் தமிழர் சேனை வெற்றிவாகை சூடியது. எதிரிகளின் 50

உடல்களும் ஏராளம் ஆயுதங்களும் மீட்கப்பட்ட அந்த வெற்றித் தாக்குதலை நேர்நின்று செய்வித்தவன் தளபதி ராகவன்.

மீண்டும் நான்கு நாட்களில், அடிபட்ட பாம்புபோற் சீறிச் சிங்களப் படைகள் முன்னேறி வந்தன. இம்முறையும் சிங்களத்தின் குறி ராகவனின் அதே பகுதிதான். எமது காவலரண் வரிசையைப் பலமுனைகளால் உடைத்து உட்புகுந்துவிட்டான் எதிரி. இம்முறையும் அதே இறுகியசூழல். சென்ற தடவைபோலவே இப்போதும் சிங்களப்படைகளுக்குப் பாடம் புகட்டினான் ராகவன். சீறிய பாம்புகள் உயிரைவிட, எஞ்சியவை பெட்டிப்பாம்பாக அடங்கிப்போயின. அந்த நாட்களில் எங்கள் தளபதியின் படைநடத்தலாற் கிளிநொச்சி மண் தமிழர் வரலாற்றில் முக்கிய பதிவுகளைப் பெற்றுக்கொண்டது.

போரியலில் முதிர்ச்சி பெற்றிருந்த அந்த வேங்கை இப்போது எதிரியாலும் நன்கு அறியப் பட்டிருந்தான். ராகவன் என்றால் யார் என்பதைத் தனது படை நடத்தல்மூலம் எதிரிக்குச் சொல்லி வைத்திருந்தான் அவன். ராகவன் நிற்கும் பகுதியென்றாலே எதிரி அதீத கவனம் எடுப்பான். ஏனெனில், ராகவனிடம் ‘பாடம் படிப்பதற்கு’ சிங்களத் தளபதிகளால் இனியும் உயிர் விலை செலுத்தமுடியாது.

1998 ஒக்டோபர் மாதத்தில் ராகவனின் சுமை இரட்டிப்பானது. ‘ஓயாத அலைகள் 02’ இற் காக இயக்கம் தயாராகிக்கொண்டிருந்த காலப்பகுதி அது. ஓய்வுறக்கமின்றித் திரிந்தான் ராகவன். முன்னணி நிலைகளில் எமது பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கண்காணித்து அவற்றின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவது, பயிற்சியில் ஈடுபட்ட போராளிகளை உற்சாகப்படுத்தி அதைத் திறம்படச் செய்விப்பது என எல்லாவற்றிலும் அவன் உழைத்தான்.

‘ஓயாத அலைகள் 02’ புலிகள் பாய்வதற்கான நாள் வந்தது. தலைவனைச் சந்தித்துத் திட்டங்களை அறிந்து புலிச்சேனை தயாராகியது. பிரதான பகுதியொன்றின் துணைத் தளபதியாக ராகவன் நியமிக்கப்பட்டான். எனினும், அந்தக் களப்பகுதியில் அவனையொத்த அனுபவம் வாய்ந்தவர்கள் களமிறக்கப்பட்டிருந்ததால் தளபதி கேணல் தீபனின் கட்டளை மையத்தில் ராகவன் நிற்கப் பணிக்கப்பட்டான். அந்நடவடிக்கையில் முன்னணிக் காவலரண்களைக் கைப்பற்றுவதற்குப் பொறுப்பாக இருந்த தளபதி தீபனுக்கு உதவியாக அவன் செயற்பட்டுக்கொண்டிருந்தான்.



முதல் நாட் சண்டை உக்கிரமான கட்டத்தை எட்டியது. எமது கைகளிற் காவலரண்கள் வெற்றிகரமாக வீழ்ந்தன. ஆயினும், அன்றைய தொடர் சண்டையில் அவற்றில் அநேகம் எதிரியின் கைக்கு மீண்டும் மாறின. சண்டை நிலைமைகள் எதிரிக்குச் சாதகமாக மாறிவிட்ட சூழல். எப்படியாவது அந்த நிலைமையை மாற்றியமைத்தேயாகவேண்டும். தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் சிக்கல்களை அதிகரித்துக் கொண்டே இருக்கும். அப்போது ராகவன் களத்திற்குப் போகவேண்டியிருந்தது. நிலைமையை

உணர்ந்துகொண்டு தளபதி தீபனிடம் அனுமதி பெற்று அணியொன்றுடன் எமக்குச் சாதகமற்ற பட்டப்பகலிற் களமிறங்கினான் ராகவன்.

எதிரி மிகுந்த உளவியற் பலத்துடன் உற்சாகமாகச் சண்டையிட்டுக்கொண்டிருக்க, எமது அணிகள் பின்னடைவைச் சந்தித்து நின்ற முனையொன்றினூடாக ராகவன் களமிறங்கினான். எதிரியின் அத்தனை துப்பாக்கிகளும் உதவியணிகளைத் தடுக்கும்பொருட்டு ராகவனின் அணியைக் குறிவைத்துத் தாக்கின. எதிரியின் குண்டு மழைக்குள்ளால் தனது அணியுடன் உள்ளே போய்ச்சேர்ந்தான் எங்கள் தளபதி. எதிரியை அடித்துப் பின்னகர்த்திக் காயப்பட்ட, வீரச்சாவடைந்த போராளிகளை பின்னே அனுப்பி வைத்துவிட்டு, அணிகளை ஒழுங்கமைத்துச் சண்டையைத் தொடர்ந்தான் அவன். எதிரியின் முறியடிப்புப் பற்றிய கற்பனைகளையெல்லாம் தகர்த்துச் சண்டையணிகளை முன்னகர்த்திக் களநிலையை மாற்றியமைத்தான் ராகவன். "ராகவன் ஓயாத அலைகள் 02 வெற்றியின் திறவுகோல்" என்றார் தளபதி கேணல் தீபன்.

'ஓயாத அலைகள் 02' இன் சில மாதங்களின் பின் ராகவனை சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக தலைவர் நியமித்தார். தலைவராற் பற்பல எதிர்பார்புகளுடன் உருவாக்கப்பட்ட புகழ்பூத்த படையணியொன்றிற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்ட ராகவன், தலைவரின் எதிர்பார்ப்பைத் திறம்படச் செய்து முடிக்கவேண்டும் என்ற பேரவாவுடன் மேலும் மேலும் கடுமையாக உழைத்தான். படையணிக்குப் புதிதாக வந்த போராளிகளை வைத்து அந்தச் சண்டைப் படையணியின் போர்த்திறனை மேலும் மேலும் வளர்க்க ராகவன் அயராது பாடுபட்டான். அவனது உழைப்பின் அறுவடைக்கான நாளும் வந்தது.

'ஓயாத அலைகள் 03' தாக்குதல் திட்டம் விளக்கப்பட்டது. பிரதானமான சண்டை முனையொன்றின் நேரடித் தளபதியாக ராகவனைத் தலைவர் நியமித்தார். நம்பிக்கையுடன் தலைவர் தன்னிடம் ஒப்படைத்த பணியைத் தனது படையணியை வைத்து வெற்றிகரமாகச் செய்துமுடிப்பதற்காக அவனது மூளை இடையறாது சிந்தித்தது. விடுதலைக் களத்தில் ஓயாது சுழன்ற அந்தப் புயல் 'ஓயாத அலைகள் 03' இன் அத்தியாயத்தைத் திறந்து வைத்தது. பிரதான முனையொன்றினூடாகக் களத்தைத் திறந்தது ராகவனின் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி. சண்டை இறுக்கமான சூழலிற் சிக்கியிருந்தது. போராளிகள் தடுக்கத் தடுக்க ராகவன் எப்போதும் போலவே தனக்கான எல்லையைக் கடந்து முன்னேறினான். குண்டு மழைக்குட் குளித்தபடி சண்டையணியின் முன்வரிசையில் எங்கள் தளபதி நின்றான். குண்டொன்று நேராய் அவன் நெற்றியைத் துளைக்க ராகவன் வீழ்ந்தான். பறிபோகவிருந்த எத்த னையோ வெற்றிகளை மீட்டுத்தந்த அந்தத் தளபதி அமைதியாக அடங்கிப்போனான்.

*-அ.பார்த்தீபன்-*

# நீரிற் கரைந்த நெருப்பு

கண்டி வீதியை ஊடறுத்திருந்த எமது பாதுகாப்பு வியூகத்தை உடைத்து, எதிரி உட்புகுந்துவிட்டான். எமது போர்ப்பலத்தைச் சிதற டித்தவாறு எல்லா முனைகளாலும் எதிரி தாக்கினான். எமக்கு எவ்வ கையிலும் சாதகமற்ற 'மரணக்களமாய்' மாறியிருந்தது அன்றைய களம்.

அன்று ஏப்ரல் 10,2000. விடுதலைப் போர்க்களத்திற் புலிகள் இயக்கம் தீக்குளித்த நாட்களுள் அன்றைய நாளும் ஒன்று. ஆனை யிறவை முற்றுகையிட்டிருந்த புலிகளின் இத்தாவிற் போர்க்களம் அது. அமைதியாகவே விடிந்திருந்த அந்தப் போர்க்களத்தைச் சிறிது நேரத்தி லேயே பெரும் எரிமலைபோல் வெடிக்கச் செய்தான் எதிரி. புலிகளை மட்டுமல்ல, தமிழனின் வீரம்பேசி எழுந்துநின்ற அந்தச் சின்னஞ்சிறு பிரதேசத்தையே பூமியிலிருந்து உடைத்தெறிந்துவிடப்போவதுபோல் எறி கணைகளை ஆயிரமாயிரமென இடைவிடாது துப்பின எதிரியின் பீரங்கி வாய்கள். எம் தாய்மண்ணை ஏறி மிதித்த ராங்கிகள் உள்ளிட்ட கவச வாகனங்கள் முன்னெப்போதும் இல்லாதவாறு எம் வீரர்களை மூன்று திசைகளாலும் சூழ்ந்துகொண்டு களமிறங்கின. 30,000 எதிரிகள் நடுவே நிற்கும் நூற்றுக்கணக்கிலான புலிவீரர்களை மட்டுமே அவை எதிர்கொண்டன. ஆயினும், எதிரியை முறியடித்தேயாக வேண்டிய நிலை. ஆனையிறவை வீழ்த்துவதற்கான அடுத்தகட்டப் படைநகர்த்தல் அன்றைய சண்டையின் முடிவிலேயே தங்கிநின்றது. தன் போராளிகளின் மனவுறுதியை அதிகம் நம்பினார் தலைவர். போராளிகளோடு போராளியாகக் களத்தில் நின்று சமரை வழிநடத்தினார் தளபதி கேணல் பால்ராஜ். அவருக்குத் துணையாய் களத்தின் மையத்தில் நின்றான் ராஜன்.

1990 இன் முற்பகுதியில் மன்னார் மாவட்டப் போர்க்களங்களிற் சிறிய அணிகளுடன் களமிறங்கி, முப்பத்தைந்திற்கு மேற்பட்ட போர்க் களங்களில் அணிகளை வழிநடத்தி, பெரும் போர்வீரனாய் உருவெ டுத்து நின்ற எங்கள் தளபதி ராஜனின் களவாழ்வின் அத்தியாயத்தைப் புகழ்பூத்த இத்தாவிற் (கண்டி வீதி) போர்க்களத்திலிருந்து தொடங்கு வதுதான் பொருத்தமானது.

நண்பகலைக் கடந்துவிட்ட நேரம். களத்தின் மேற்கு முனையில் யாழ்ப்பாணப் பக்கமாகக் கண்டிவீதியை மூடியிருந்த காவலரண்களிற் கணிசமானவை எதிரியிடம் வீழ்ந்துவிட்டன. "றோமியோ, றோமியோ" என



# லெப்.கேணல் ராஜசிங்கம் / ராஜன்
## சிறப்புத் தளபதி

## வலேரியான் காணிக்கை நேசன்
## மன்னார்

ராஜனின் 'சங்கேத'ப் பெயரை அழைத்த அலைவரிசைகளே எங்கும் நிறைந்திருந்தன. ஒவ்வொன்றிற்கும் பதில்சொல்லி, தளபதி பால்ராஜின் கட்டளைகளை நிறைவேற்றி, முறியடிப்பு அணிகளை வழிநடத்திக்கொண்டிருந்தான் ராஜன். அந்தச் சிறிய களப்பகுதியில் ஏற்கனவே சூழ்ந்துவிட்ட எதிரிகள் நடுவே, கணக்கின்றி எதிரி ஏவிய எறிகணைகள், ரவைகளுக்கிடையே ஏனையவர்களுடன் இணைந்து விபரீதம் ஏதுமின்றி அவன் செய்து முடித்த அந்தப் பணி அவ்வளவு இலகுவானதன்று; எந்தவொரு போரியலாளனையும் அது வியக்கவைக்கும்.

அணிகள் களமிறக்கப்பட்டன. பறிகொடுத்த காவலரண்களை ஒவ்வொன்றாக எம் வீரர்கள் மீட்க, எரிமலை நடுவே நின்று அணிகளை நகர்த்தினான் ராஜன். எதிரியின் நடவடிக்கை முழுமையாக முறியடிக்கப்படவிருந்த கட்டம்; எதிரி அவமானம் அடையத் தொடங்கிய நேரம்; மீண்டும் ஆனையிறவுத் திசையிலிருந்து மூன்று முனைகளால் எம் அரண்களை உடைத்தான் எதிரி. நிலைமை சிக்கலாகியது. களநிலை மீண்டும் எதிரிக்குச் சாதகமாய் மாறிவிட்டது. நிலைமைகளைக் கணிப்பிட்ட தளபதி கேணல் பால்ராஜ், மேற்கு முனைச் சண்டைகளை அப்படியே நிறுத்திவிட்டுக் கிழக்கு முனையில்–ஆனையிறவுப் பக்கமிருந்து முன்னேறிய எதிரியை முறியடிப்பதற்கு முடிவுசெய்தார். அதைச் செய்துமுடிக்கக் கூடியவர்களுள் ராஜனும் இருந்தான். அவனுக்கு அதற்கான கட்டளை வந்தது.

சுழன்றடித்த புயலைப்போல் பல மணித்தியாலங்கள் ஓய்வற்று நீண்டு சென்றது அந்தச்சமர். நள்ளிரவை எட்டிய நீண்ட சமரின் முடிவில் எதிரியின் கிழக்குமுனை நகர்வை முழுமையாய் முறியடித்துத் தன் போராளிகளின் வீரத்தையும் போராற்றலையும் நிரூபித்தான் ராஜன். மேற்குமுனையில் எதிரி கைப்பற்றிய சில அரண்களிலிருந்து சிறிது தூரம் பின்வாங்கிப் புதிய நிலைகளை அமைப்பதற்கு முடிவுசெய்யப்பட்டது. விடிவதற்கிடையில் அது செய்துமுடிக்கப்பட்டேயாகவேண்டும். அப்பணி ராஜனிடமே விடப்பட்டது. அன்று முழுவதும் போராளிகளும் ராஜனும் ஓயவேயில்லை. ஆனையிறவின் தலைவிதி அவர்கள் கையிலேயே இருந்தது. மறுநாள் விடிந்ததும் 'புலிகளால் இனிமேலும் நின்று பிடிக்க முடியாது' என்ற அசையாத நம்பிக்கையோடு கைப்பற்றிய பகுதியிலிருந்து மீண்டும் புதிய அணிகளைக் களமிறக்கினான் எதிரி. அன்றைய சண்டையின் முடிவு, ராஜனின் ஓய்வற்ற உழைப்பிற்கும் அவனது போராற்றலுக்கும் சாட்சியமாய் முடிந்தது. பேரிழப்புடன் எதிரி முடங்கினான். பெரும் படைப்பலம் ஒன்றாற் சின்னா பின்னமாக்கப்பட்ட பாதுகாப்பு ஏற்பாடுகளை அபாயகரமான அதேகளத்தில் வைத்தே அத்தனை வேகமாய்ச் சீர்செய்து முடிக்கப் புலிகளால் எப்படி முடிந்தது? களத்தில் நிற்கும் ராஜனை முழுமையாக அறிந்தாலேயே இதற்கு விடைகிடைக்கும்.

"அண்ணை ஒண்டும் யோசிக்காதேங்கோ, நான் எல்லாம் செற்றப்பண்ணிப் பிடிச்சுத் தருவன்" இறுக்கமான கட்டங்களில் ராஜனிடம் இருந்துவரும் அந்த வார்த்தைகளை மூத்த தளபதிகள் எல்லோரும் ஒருங்குசேர நினைவுகூருகின்றனர். நெருக்கடியான எத்தனையோ கட்டங்களிற் புத்துணர்ச்சியளித்த அவனது இந்த வார்த்தைகள் நம் எல்லோருக்குள்ளும் இன்னமும் பசுமையாய் ஒலிக்கின்றன.

வன்னிக்களத்தின் உச்சமாய் அமைந்த 'ஜயசிக்குறுய்' எதிர் நடவடிக்கைக் காலம். புலிகளை நெருக்கடிக்குள் தள்ளவந்தவர்களைப் புலிகள் நெருக்கடிக்குள் தள்ளிவிடும் விந்தையை உலகம் வியப்புடன் பார்த்திருந்தது. களத்தில் எதிரி நினைப்பதை அடையமுடியாத படி தடுத்து நாம் நினைத்தபடி எதிரியை ஆட்டுவித்த நுட்பமான போரரங்கைத் தலைவர் நெறிப்படுத்திக் கொண்டிருந்தார். களத்தில் நின்ற போராளி ஒவ்வொருவரது கைகளிலும் அன்று எம் தேசத்தின் வாழ்விருந்தது. எதிரிதான் நினைத்ததை அடைந்துவிடும் எந்தவொரு கட்டமும் போரரங்கிற் பாரிய மாற்றங்களைக் கொண்டுவந்துவிடும். அத்தகைய களத்தில் ராஜன் சந்தித்த சண்டைகள் பல. அதுவும் வன்னியின் கிழக்கையும் மேற்கையும் இணைக்கும் ஒரேயொரு போக்குவரத்துப் பாதையாக இரணைமடுவினூடான பாதைமட்டுமே இருந்தது. அதை இராணுவம் கைப்பற்றுவது சண்டையிற் பாரிய திருப்பங்களை ஏற்படுத்தும். ஒருநாள் எதிரிக்குச் சாதகமாய் மாறியிருந்தது களநிலை. அதைத் தலைகீழாய் மாற்றிவிட்ட சண்டையில் ராஜன் என்ற புயல் சுழன்றடித்த விதம் இப்போதும் அவனை வழிநடத்தியவர்களின் கண்களில் நிற்கிறது.

"அன்று 1998 யூன் 04ஆம் திகதி. கிளிநொச்சி முனையில் எதிரி பெரும் படையெடுப்பைச் செய்தான். எமது பாதுகாப்பு நிலைகளை உடைத்து எதிரி வீரர்கள் நூற்றுக்கணக்கானோர் எமது பகுதிக்குள் நுழைந்துவிட்டனர். பல மணித்தியாலங்களாகச் சண்டை தொடர்ந்தது. எதிரிதன் இலக்கை (இரணை மடுவை நோக்கியது) ஏறத்தாழ அடைந்துவிடக்கூடியதாகவே களநிலை இருந்தது. எப்படியாயினும், அன்றைய நடவடிக்கையை முறியடிப்பதே எமது இறுதி முடிவு. முன்னணியில் நின்ற அணிகள் கணிசமான இழப்பைச் சந்தித்திருந்தன. இந்நிலையில் அந்த முறியடிப்பை எப்படிச் செய்து முடிப்பது? பல மைல்களுக்கப்பால் நிலைகொண்டிருந்த 'றோமியோ'வின் அணியைத்தான் நான் அழைத்தேன். எதிரி உறுதியாய் நிலையெடுக்கமுன் 'றோமியோ'வின் அணியைச் சண்டைமுனைக்கு வேகமாய் நகர்த்துவது கடினமானது. அவனுக்கு நான் கட்டளையிட்டபோது அவனிடமிருந்துவந்த




*யாழ்ப்பாணத்திற்குட் படையணியை வழிநடத்தி முன்னேறும் ராஜனின் களமுனைக் காட்சி இது*

நம்பிக்கையும் துடிப்பும் நிறைந்த பதில் எனக்குத் தெம்பூட்டியது. எவரும் நினைத்துப்பார்க்காத வேகத்தில், பல மைல்கள் ஓட்டத்தில் எதிரியின் எறிகணைகளைக் கடந்து சண்டைமுனையில் தன் அணியுடன் வந்தவுடனேயே அவன் முறியடிப்புச் சமரைத் தொடங்கவேண்டியிருந்தது. கடைசிவரை இறுக்கமாகவே தொடர்ந்தது சண்டை. அப்போது ‘அண்ணை நான் விடமாட்டன் பிடிச்சுத்தருவன்’ என்ற அவனது நம்பிக்கை தரும் குரலையே நான் கேட்டேன். சோர்ந்து போகாது தன் அணியை வழிநடத்திய றோமியோவின் விடாமுயற்சி இறுதியில் எதிரியை ஆட்டிவைத்தது. அன்றுதான் றோமியோவிற்குள் இருந்த அத்தனை பெரிய ஆற்றல்களை நான் முழுமையாக இனங்கண்டுகொண்டேன். அன்றைய சண்டையில் றோமியோவும் அவனது வீரர்களும் வெளிப்படுத்திய அபாரமான வீரமும் தீரமிக்க தாக்கு தலும் என்றைக்குமே எம் வரலாற்றில் நிலைத்திருக்க வேண்டியவை'' என அன்றைய நினைவுகளை ராஜனின் சாவின்பின் நினைவு கூர்ந்தார் தளபதி கேணல் தீபன்.

அன்றைய வெற்றியைத் தமிழினம் பெருமையுடன் கொண்டாடியது. எதிரிக்கோ தன் வெற்றிச் செய்திக்குப் பதிலாகப் பேரிழப்பின் கணக்குகளை மட்டுந்தான் தன் எஜமானர்களுக்கு அனுப்பமுடிந்தது. இந்த வெற்றியின் பின்னால் எவருக்கும் வெளித்தெரியாது ராஜன் இருந்தான். இவையெல்லாம், ‘ஓயாத அலைகள்–02’ இன் பின்னாற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் துணைத்தளபதியாய் அவனை உயர்த்தின.

வன்னிக்களத்திற் பெரும்புயலின் நடுவே நின்று எம் தமிழீழத் தாயின் வாழ்வை அவள் புதல்வர்களால் எப்படிக் காக்க முடிந்தது? நிச்சயமாக உயிர் அர்ப்பணிப்புக்களால் மட்டுமே அது நிகழவில்லை. உயிரையே வெறுக்கவைக்கும் அந்தக் கடினமான களங்களில் உயர் வாழ்ந்து அந்த உயிரை வைத்தே தம் வாழ்நாளின் இறுதி மணித்துளிகளிலும் உழைத்தார்கள் எம் மாவீரர்கள். அவர்களின் உன்னதமான வாழ்வின் அந்த மணித்துளிகளில்தான் அந்த இரகசியத்தைத் தேடமுடியும். இந்தக் களத்தில் ஒரு ‘செக்சன்’ அணித்தலைவனாய் இருந்து ஒரு படைய ணியின் துணைத்தளபதியாக உயர்ந்த ராஜன் ஒரு பொறுப்பாளன் என்ற வகையில் எவ்வளவு சுமைகளைச் சுமந்திருப்பான்! தன் உயிரைவைத்து இரும்பையே உருக்க அவன் உழைத்த உழைப்பின் மணித்துளிகளின் நீட்சி எத்தனை பெரியது! அவனது வாழ்வின் நீண்ட பக்கங்களை உணர்வுகுலையாது பக்குவமாய்ச் சொல்லிவிடத்தான் முடியுமா?

அவை ‘ஓயாத அலைகள்–03’ இற்கு முற்பட்ட நாட்கள். வன்னிக்களத்தில் ஒரு வருட மாகப் புலிகளின் மௌனத்தின் இரகசியம் புரியாது எல்லோரும் திணறிக்கொண்டிருந்தனர். “முதலிற் பாதுகாப்புப் போர்முறையில் நிறைய அனுபவங்களைக் கற்றுக்கொள்ளுங்கள். உங்கள் போர்த்திறனை எதிரிக்குப் புரியவையுங்கள். அடுத்த கட்டத்தை நான் பிறகு சொல்கிறேன்'' என்று தலைவர் அவர்கள் கூறியபோது ஓர் இளநிலைத் தளபதியாய் நின்ற ராசன் தன் ஆளுமையையும் வீரத்தையும் மெருகேற்றவேண்டியிருந்தது. ஏனைய தளபதிகளுடன் சேர்ந்து தன் வீரர்களின் சண்டைத்திறனை வளர்ப்பதற்காக அவன் உழைக்கவேண்டியிருந்தது.

‘ஓயாத அலைகள்–03’ இன் முழுமைப்படுத்தப்பட்ட அத்தியாயத்தில் ராஜன் தனது அழியாத தடங்களைப் பதித்தான். அதுதான் அவனைப் போரியலில் மேலும் வளர்த்து விட்டது. அதுதான் ராஜனை எமது இயக்கத்திற்கு அப்பால் வெளியே அறிமுகமாக்கியது. அதிலும் சில இறுக்கமான கட்டங்களில் ராஜன் ஆற்றிய பணிகள் அவனை எம் வரலாற்றில் என்றைக்குமே வாழவைக்கும் வலிமை வாய்ந்தவை.

ஒட்டுசுட்டான். ‘ஓயாத அலைகள்–03’ இன் வாசற்படி அதுதான். எப்போது எம் வாழ்வை சிங்களத்திடம் தொலைத்துவிடப் போகிறோமோ என வன்னி மக்கள் ஐயுறும் அளவிற்கு எதிரி களச்சூழலை

மாற்றியிருந்த காலம் அது. எங்கே, எம் போராட்டம் மீளமுடியாத நெருக்கடிக்குட் போய்விடப்போகின்றதோவென எம் அனுதாபிகள் எல்லாம் ஏங்கிக்கொண்டிருந்தனர். "இயக்கம் சும்மா விட்டிட்டு இருக்காது" என்ற உறுதியான நம்பிக்கையும் எம்மக்களிடம் வேரூன்றியிருந்தது. எல்லாமே அந்த வாசற்படிக்கான முதலுடைப்பின் வெற்றியில்தான் தங்கியிருந்தன. அதற்காக ஆராய்ந்து, நிதானித்துத் திட்டமிட்ட தலைவர் பொருத்தமான காலத்தைத் தெரிவுசெய்து அதன் பணிகளைப் போராளிகளிடம் ஒப்படைத்திருந்தார். அப்போது சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாக இருந்தவன் லெப்.கேணல் ராகவன். "உன்னை நம்பித்தான் ஒட்டு சுட்டானுக்குள்ள இறங்கிறன்" என்று கூறித் தலைவர் அவர்கள் அவனிடம் பொறுப்புக்களை ஒப்படைத்தபோது, தலைவர் சொன்னதையே நினைத்துத் திரிந்த அந்தத் தளபதியின் அருகிருந்து "பிரச்சனை இல்லை அண்ணை அதெல்லாம் சுகமா செய்து முடிச்சுப்போடலாம்" என்று நம்பிக்கை வார்த்தை கூறுவான் எங்கள் ராஜன்.

சண்டைக்கு முந்தைய நிமிடங்கள்; மிகப்பெரிய திட்டம் என்பதால் எல்லோருள்ளும் படபடப்பு. இறுதி நிமிடங்கள் நெருங்க நெருங்க தவறுகள் எதுவும் நேர்ந்துவிடக்கூடாதே என்ற தவிப்பு. எல்லாம் நிதானத்துடன் நகர்ந்தன. மற்றைய முனையில் திட்டமிட்டபடியே சண்டை தொடங்கப்பட இந்த முனையில் இன்னும் சண்டை தொடங்காததால் பரபரப்பானது களம். நிலை மையைச் சீர்செய்ய முன்சென்ற தளபதி ராகவன் குண்டுபட்டு வீழ்ந்துவிட்டான். அணிகளை ஓரளவு சீர்படுத்தியபடி எதிரி அரண்களுக்குள் மூர்க்கமாய் நுழைந்த லெப்.கேணல் நியூட்டன் ஓரிரு காவலரண்களை வீழ்த்தி நிலைமையை மாற்ற முயலவே அடுத்த இடி! நியூட்டனும் குண்டுபட்டு வீழ்ந்தான். குறுகிய நேரத்தில் அனுபவம் வாய்ந்த களமுதல்வர்கள் இருவர் வீழ்ந்துவிட்டதால் அடுத்த கட்ட நகர்வுகளுக்கு முன் கேள்விக்குறிகள் எழுந்தன. ஒட்டுசுட்டான் ... கரிப்பட்ட முறிப்பு ... மாங்குளம்... கனகராயன்குளம் ... புளியங்குளம் ... எனச் செய்துமுடிக்கவேண்டிய பாரிய படைநகர்த்தல்கள் மனக்கண்முன் நின்றன. பதிலாய் எழுந்து அணிகளை ஒழுங்கமைத்து வழிநடத்தத் தொடங்கினான் ராஜன். "ஒன்றும் யோசிக்காதேங்கோ நான் பிடிச்சுத்தருவன்" எப்போதும் ஒலிக்கும் அந்த வார்த்தைகள் தான் இப்போதும் வேண்டும். ஆனால், இப்படியான பெரிய பொறுப்புக்களை இதுவரை சுமந்திராத ராஜனால் அதைச் செய்துமுடிக்கமுடியுமா என்ற ஐயம் எல்லோருள்ளும் இருக்கவே செய்தது. அவ்விடத்தில் ராஜனைத்தவிர வேறு எவரும் இல்லை. இறுதியில் எல்லோர் புருவங்களும் உயரும்படி படைநகர்த்தினான் ராஜன். வெற்றிச் செய்திகள் ஒவ்வொன்றாய் எம்மக்களைக் குதூகலிக்க வைக்க, எதிரிகள் தலையில் அவை பேரிடியாய் இறங்க, ராஜன் தலைவரின் திட்டங்களைச் செயற்படுத்தினான். அந்தக் களந்தான் ராஜனின் ஆற்றல்களைத் தலைவருக்கு இனங்காட்டியது. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாய் அவனை உயர்த்தியது.

* * *

ஓயாத அலைகள் மூன்றின் கட்டம் மூன்று. பரந்தன் ஆக்கிரமிப்புத்தளம் புலிகளின் வரவை நீண்டகாலமாக எதிர்பார்த்திருந்தது. ஒன்றன்பின் ஒன்றாய் இறுக்கமாக ஏற்படுத்தப்பட்ட பாதுகாப்பு வலயத்துள் அது இருந்தது. ஆக்கிரமிப்பாளர்களின் போர்மூலோபாயத்தின் முது கெலும்பாய் ஆனையிறவு இருந்ததென்றால் ஆனையிறவின் பாதுகாப்பின் முதுகெலும்பாய் பரந்தனும் இருந்ததெனலாம். அத்தகையதொரு களத்தில் எதிரிக்குச் சவால் விடுவதாய்ப் பகற்பொழுதில் ஒரு சமருக்கு ஏற்பாடாகியிருந்தது. மூன்று முனைகளில் திட்டமிடப்பட்ட தாக்குதல் திட்டத்திற்கு ஒரு முனையின் தளபதியாய் ராஜன் நியமிக்கப்பட்டான். பரந்தனின் கிழக்குப்புறக் காவலரண் வரிசையைக் கைப்பற்றி எதிரியின் பாதுகாப்பு வியூகங்களைச் செயலிழக்கவைக்கும் பணி அவனுடையது. திட்டத்தின்படி எல்லாவற்றையும் அவன் திறம்படச் செய்துமுடித்தான். எதிர்பார்க்கப்பட்டதைவிட ராஜன் அதிகமாகவே அங்குச் சாதித்தான். அங்கு ராஜனின் இடைவிடாத உழைப்பும் தந்திரமான சில செயற்பாடுகளுந்தான் எதிரியை நிலைகுலைய வைத்தன.

போராளிகளை அரவணைப்பதிலும் அவர்களின் தேவைகளைக் கவனிப்பதிலும் ராஜன் அதீத அக்கறை செலுத்துபவன். அவர்களின் அன்னையாய், தந்தையாய் ... என எல்லாமாயும் அவன் இருப்பான். சண்டைக்களம் பரபரப்புடன் இருக்க, அடுத்த கட்ட ஏற்பாடுகளில் எல்லோரும் தீவிரமாய் ஈடுபட்டிருக்க, ஓய்வற்ற வேலைகளின் நடுவேயும் களைத்திருக்கும் தன் போரா ளிகளுக்காகச் சோடாவும் உலருணவும் கேட்டுத் தளபதிகளுடன் சண்டை பிடித்துக்கொண்டிருப்பான். தொடர்சண்டைகள் நடந்துகொண்டிருக்க ராஜனின் கட்டளை அரணிற் போராளிகளுக்கு அனுப்புவதற்காக ஏதாவது கறியும் தயாராகிக்கொண்டிருக்கும். இப்படித்தான் எல்லா விடயங்களிலும் ராஜன் தன் போராளிகளைக் கவனித்தான். ராஜனின் இத்தகைய இயல்பு இருமுறை தலைவரின் முன்னால் அவனைக் கூச்சத்தோடு தடுமாற வைத்த காட்சி இப்போதும் கண்டவர் கண்களின் முன் அழியாது தெரிகிறது.

கண்டிவீதி – இத்தாவிற் போர்க்களத்திற் சண்டைகளுக்கு ஓய்வே இருக்காது. தொடர் சண்டைகளாற் சோர்ந்துபோகும் உடலைவைத்துப் போரிடுவதற்குப் போராளிகளுக்கு அதிக மன உறுதி தேவைப்படும். அக்களத்திலும் போராளிகளை உற்சாகமாய் வைத்திருந்தான் ராஜன். அங்கு நடக்கும் கடுமையான சண்டைகள் சற்றுத் தணிந்துவிட்டால் ராஜன் ஆட்டுக் கறிக்குத் தயார்பண்ணத் தொடங்கிவிடுவான். போர்க்களமும் கறிக்களமும் ஒன்றாகவே அங்கு நடக்கும். அந்தக் களமுனையின் ஒரு பகுதியிற் கட்டாக்காலி ஆடுகள் திரிவது வழக்கம். அந்தக் களப் பகுதியில் உள்ள போராளிகளுக்கு ராஜன் வோக்கியில் அறிவிப்பான். "இஞ்ச கொஞ்சம் தணிஞ்சுபோய் இருக்கு, வகுப்பு எடுக்கலாம் போலகிடக்கு, நிண்டால் ஒரு மாஸ்ரரை அனுப்புங்கோ." "மாஸ்ரர்" என்பது ஆட்டுக்கிடாய் என்று அவர்களுக்கு மட்டும் புரியும். அது அவர்களுக்கிடையிலான மொழி. மாஸ்ரர் - அதுதான் கிடாய் ஆடு. ராயனிடம் போவார் அவனது கட்டளை போலவே ஒவ்வொரு காவலரணுக்கும் கறியும் போகும். ஒருமுறை சண்டை தணிந்திருப்பதாகவும் மாஸ்ரரை வகுப்பெடுக்க அனுப்புமாறும் ராஜன் அறிவித்தபோது பதில் வந்தது, "இஞ்ச மாஸ்ரர் ஒருத்தரும் இல்ல, வகுப்ப இண்டைக்குக் கைவிடுங்கோ".

"ஒரு மாஸ்ரரும் இல்லையோ?"

"மாஸ்ரர் இல்ல ரீச்சர் நிக்கிறா அனுப்பவோ" ராஜனுக்குப் புரிந்துவிட்டது. ரீச்சரெண்டு அவங்க மறியாட்டைச் செல்லுறாங்களெண்டு. "ஓ ஓ ஓ ரீச்சரெண்டாலும் பறவாயில்லை வகுப் பெடுத்தாச் சரி" இந்த ரீச்சர்ப் பகடி இயக்கத்திற் பரவலாக எல்லா இடமும் பரவத் தொடங்கியது. சண்டை முடிந்து அடுத்த சண்டைக்குப் புறப்பட இருந்த நேரம். போராளிகளைச் சந்திப்பதற்காகத் தலைவர் வந்திருந்தார். அவர் புறப்படும்போது "தம்பியாக்கள் இனிச்சனங்களின்ர இடங்களுக்குள்ள போகப்போறியள். அங்க சாமானுகள் எதிலயும் கைவச்சுப்போடக்கூடாது. ஆடு, மாடு, கோழிகளையுந்தான் சொல்லுறன்" என்று கூறிவிட்டு அருகிலிருந்த ராஜனைப் பார்த்துப் பெரிதாகச் சிரித்தபோது கூச்சப்பட்டு அந்தரப்பட்டுச் சிரித்தான் அவன். எல்லோருக்கும் அவனைப் பார்க்கச் சிரிப்பு வந்தது. எல்லாம் முடிந்து வந்தபின்னர் அவன் சொன்னான் "நாங்கள் எங்கட பிரச்சனையை மட்டும் பாக்கிறம், பாவம் அண்ணை எவ்வளவு பிரச்சனைகளைப் பார்க்க வேணும்".

கட்டளை இடுவதிலும் ராஜனுக்கென்றொரு தனித்துவமான பாணி இருந்தது. எந்தவொரு கட்டத்திலும் பதற்றமடையாத அவனது கட்டளைகளிலும் அரவணைப்பு இருக்கும். அதிற் கண்டிப்பு, ஆலோசனை, நம்பிக்கை, உற்சாகம் என எல்லாமே கலந்திருக்கும். அவனது அன்பான வார்த்தைகளுக்கு இருந்த அத்தனை பெரிய ஆளுமை அவனுக்கேயுரியது. இப்படியே நீண்டு செல்லும் ராஜனின் ஆளுமையை அவனது போர் வாழ்வின் கதையை இங்கு முழுமையாய் எழுதி முடிப்பது அவ்வளவு இலகுவானதன்று.

ஆனையிறவை வீழ்த்துவதற்கான இறுதிக்கட்டம். உலகப் போரியல் வரலாற்றில் முக்கிய பதிவாய்த் தலைவர் பிரபாகரன் அவர்கள் நிகழ்த்திய விந்தைமிகு படைநகர்த்தல். அந்த இத்தாவிற் போர்க்களத்தில்தான் ராஜனின் குரல் அதிகமாய் ஒலித்தது. அங்குதான் அவனது பெயர் அதிகமாகப்

பேசப்பட்டது. அங்கிருந்த ஒவ்வொரு தொலைத்தொடர்புச் சாதனமும் 'றோமியோ' என்ற அவனது 'சங்கேத'ப் பெயரையே அதிகமாய் உச்சரித்தும் கேட்டும் இருக்கும். புலிகள் இயக்கம் நிகழ்த்திய அந்த வரலாற்றுச் சாதனைக் களத்தில் ராஜன் பங்கெடுத்த ஒவ்வொரு சண்டையுமே அவனை எம் வரலாற்றில் உயர்த்தியது. ஆனையிறவை வீழ்த்தும் எம் தலைவரின் போர்த்திட்டத்தின் அத்திவாரத்தை அசையாது காத்த அந்த வெற்றிகளின் பின்னால் ராஜனின் உழைப்பு மதிப்பிட முடியாதது.

கண்டி வீதி யூடாகப் பயணித்துப் பளையைக் கடந்து இத்தாவிலிற்குட் போகும்போது நிலமெல்லாம் கிளறியெ றியப்பட்டு, மரங்க ளெல்லாம் குதறப்பட் டுச் சுடுகாடாய்க் கிடக் கும் ஒரு சிறிய நிலப் பரப்பு. அந்த வீதியி லிருந்து வலப்புற மாய்ச் சில நூறு மீற் றர் தொலைவிலிருக் கும் அந்த உருக் குலைந்த சிறிய வளவுதான் ராஜனின் கட்டளை மையம். அதை எதிரி எறிகணைகளால் உழுப்பி யெடுத்த ஒவ்வொரு தடவையும் அதற்குளிருந்துதான் ராஜன் சிரித்தபடி படைநடத்தினான். உறுதியாக, நிதானமாக முடி வெடுக்கமுடியாதவாறு மனித மூளையைக் கலங்கவைக்கும்படி எதிரியால் மாற்றப்பட்டிருந்த அந்த நரகலோகத்திலிருந்தே தளபதி ராஜன் செயற்பட்டான். தன் கறுத்தமேனி கருகி மேலும் கறுப்பாய் மாற, மெலிந்த அவன் உருவம் வாடிவற்றிப்போக அந்தக் களத்தில் அவன் செய்தவை அளப்பரியவை.

ஓயாத அலை-03 இல் தரையிறங்கி இத்தாவில் கண்டி வீதியைக்கட்டுப்பாட்டுக் குட் கொண்டுவரப்போகும் அணிகள் புறப்படுமுன் சிறப்புத் தளபதி ராஜசிங்கம் உரை யாற்றுகிறான்.



மார்ச் 27, இத்தாவிலுக்குட் புலிகள் புகுந்த சில மணித்தியாலங்களில் விடிந்துவிட்டது அன்றைய காலைப்பொழுது. புலிகளால் உறுதியாக நிலைகொண்டிருக்க முடியாது என எண்ணிய பகைவன், அவசர அவசரமாகச் சண்டையைத் தொடக்கினான். பலப்படுத்தப்படாத அரண் களிலிருந்தே எமது போராளிகள் சண்டையிட வேண்டியிருந்தது. எதிரியின் கையே களத்தில் மேலோங்கியிருந்தது. களத்தின் மையத்தில் நின்று எல்லாவற்றையும் செய்விக்க வேண்டியவர்களுள் ராஜன் முக்கியமானவன். எறிகணை மழை நடுவே அவனது பாதுகாப்பிற்கென இருந்தது சிறியதொரு தண்ணீர்த்தொட்டிதான். ராஜனின் கட்டளை அலை வரிசைகள்மூலம் அவன் இருக்கக்கூடிய இடத்தைக் கணிப்பிட்டு எறிகணைகளை எதிரி பொழிந்து கொண்டிருந்தான். அவனைக் குறிவைத்த எறிகணைகளும் ரவைகளும் தோற்றுப்போக ராஜன் வெற்றிகரமாய் எல்லாவற்றையும் செய்துமுடித்தான்.

மூன்று தினங்களில் மற்றுமொரு படையெடுப்பு. அன்றும் எதிரிக்கே சாதகமாக மாறியிருந்தது களநிலை. உச்சக்கட்டச் சண்டையை நடத்திக்கொண்டிருந்தான் ராஜன். முன்னணியில் நின்ற அணித்தலைவர்களின் தொடர்புகள் அறுந்துபோக எதிரி மூன்று திசைகளாலும் சூழத் தொடங்கினான். ராஜனின் சுமை களத்தில் அதிகரித்துக் கொண்டேபோனது. திடீரென்று ஒரு தடவை அவனது கட்டளை அரண் அதிர்ந்து குலுங்க அதன் வாசலில் வீழ்ந்து வெடித்தது எறிகணை. அதன் அதிர்வு எல்லோரையும் உலுப்பிவிடக் கந்தக நொடியும் புகையும் அரணை மூடியது. அப்போதும் ராஜனின் கட்டளையிடும் குரல் ஒலித்துக்கொண்டுதான் இருந்தது. அங்கிருந்த தோழன் தன் உடையால் விசுக்கி விசுக்கிப் புகையை விலக்க முனைந்து கொண்டிருக்க நிலைகுலையாது தொடர்ந்தும் சண்டையை நடத்திக்கொண்டிருந்தான் ராஜன். அன்றைய வெற்றியால் ஆனந்தமடைந்த மண்மாதா தன் புதல்வன் ராஜனின் போராற்றலை எண்ணிப் பெருமிதமடைந்திருப்பாள்.



ஏப்ரல் 02ஆம் நாள். இருநாள் இடைவெளிக்குள்ளேயே அடுத்த பாரிய படையெடுப்பு. 'வெலிகதர' எனப் பெயரிட்டிருந்தான் எதிரி. இம்முறை ராஜனின் பகுதியை விடுத்து வேறொரு பகுதியிற் சண்டை மூண்டது. உள்ளிருந்த எமது அணிகளை முழுமையாக முற்றுகையிட்டு "புலிகளின் தளபதி பால்ராஜும் அவர் தோழர்களும் உயிருடன் பிடிபடப்போகிறார்களா? அல்லது அழியப்போகிறார்களா" எனச் சிங்களத் தலைமை ஆவலுடன் பார்த்திருக்குமளவிற்குக் கடுமையான சண்டையது. முறியடிப்பில் உறுதிகொண்டு தளபதி பால்ராஜ் நடத்திய புலிகளின் வீரம்செறிந்த சண்டையது. மறுமுனையில் நின்ற ராஜன் தளபதி பால்ராஜ்சால் சண்டை முனைக்கு அழைக்கப்பட்டான். அந்தக் களமெங்கும் எதிரி அமைத்த எறிகணை வேலிகளைக் கடந்து, மேஜர் ரோயின் அணியுடன் ஓடோடிச்சென்று, ஏனையவர்களுடன் இணைந்து அன்றைய புகழ்பூத்த முறியடிப்பு செய்துமுடித்தான் எங்கள் ராஜன். அன்றும் தமிழர் சேனை வெற்றிக்கொடி நாட்டியது.

'ஓயாத அலைகள்-03' இல் ஆனையிறவிற்கான சண்டைகள் முடிந்து இத்தாவிலில் நின்ற ராஜனுடன் கைகுலுக்கச் சென்ற அவன் தோழர்கள் கண்டது பழைய ராஜனையல்ல. ஆனையிறவின் வெற்றிக்காக எம் போராளிகள் வாழ்ந்த கடினவாழ்வைப் பிரதிபலித்த புதிய ராஜனைத்தான். வாடி வதங்கிய அந்த முகத்திற்கூட எவரையும் வசீகரிக்கும் அவனுக்கே உரிய கவர்ச்சிமட்டும் அப்படியே இருந்தது. நாங்கள் எப்போதும் அவனுடன் கூடவேகாணும் அந்த அழகான சிரிப்புங்கூட அப்படியேதான் இருந்தது. காய்ந்து வறண்ட அவனின் தொண்டையிலிருந்து வந்த கரகரத்த குரலிலும் எப்போதும் இருக்கும் குழைவுமட்டும் மாறாமலிருந்தது. பெரும் சாதனையைச் செய்துமுடித்துத் தளம் வந்தவன் தலைவரைச் சந்தித்தான். தன் வீரர்கள் சாதித்தவற்றை அவருக்குத் தெரியப்படுத்தினான். தலைவருடன் தன் போராளிகளைச் சந்திக்கவைத்தான்.

ராஜனை மீண்டும் களம் அழைத்தது. அது 'ஓயாத அலைகள்-03' இன் இறுதிக்கட்டம். தளபதி கேணல் சொர்ணத்திற்குத் துணையாய் நின்ற தளபதிகளில் ஒருவனாகத் தன்பணிகளைத் தனக்கேயுரிய இயல்பான திறமைகள்மூலம் செய்துமுடித்தான். அங்குச் சண்டைகள் முடிந்ததும் அடுத்தகட்டச் சண்டைகளுக்கான பயிற்சிக்காக ராஜனும் அவனது போராளிகளும் தலைவரால் அழைக்கப்பட்டனர்.

ராஜனின் சண்டைப் பட்டியல் நீண்டுகொண்டே போனது. உயிர்ப்பசிகொண்ட யுத்தக் களங்களிற்குள்ளேதான் எங்கள் ராஜன் நிதமும் வாழ்ந்தான். ஆயினுங்கூட அந்தக் களங்களில் ராஜனுக்கென்றொரு சாவு இருக்குமென நாங்கள் நம்பவில்லை. அந்தளவிற்கு அவனது துணிவிலும் தந்திரத்திலும் துடிதுடிப்பிலும் நாங்கள் அத்தனை பெரிய நம்பிக்கை கொண்டிருந்தோம். ராஜனால் உயிருடன் திரும்பமுடியுமா? என நாங்கள் ஐயுற்ற எத்தனையோ களங்களிலிருந்து அவன் மீண்டுவந்துள்ளான். 1993 இல் புலோப்பளைச் சமரிலும் பின்னர் 'ஜெயசிக்குறூய்' எதிர் நடவடிக்கைகளிலுங்கூட அவனுக்கு நேராய் வந்த ரவைகளால் அவனது கால்களிலும் இடுப்பிலுமாக வெறும் தசைகளையும் எலும்புகளையும் மட்டுமே துளைத்துச்செல்ல முடிந்தது. 1997 ஆனையிறவு, பரந்தன் சமரின்போதுகூட ராஜனுக்கு நேராய் வந்த ரவையால் அவனது மண்டையை வெறுமனே துளைத்துச்செல்லத்தான் முடிந்தது. நிச்சயமாய் இவற்றிலெல்லாம் ராஜன் உயிர்தப்பியது அவனிடமிருந்த துணிவாலும் நம்பிக்கையாலுந்தான்.

எங்கள் தளபதி இன்னும் களங்கள் காணுவான். வளர்ந்து, முதிர்ந்து அனுபவமிக்க தளபதியாக அவன் எம் தலைவரின் சுமைகளை இன்னும் இன்னும் பகிர்ந்து கொள்வான் என நாங்கள் எண்ணியிருந்தோம். யூன் மாதம் 26ஆம் திகதி, மறுநாள் தன் வீரர்களுடன் களமுனை ஒன்றிற்குப் புறப்பட இருப்பதாய் ராஜன் சொல்லியிருந்தான். அதற்கு முன் தன் தோழர்களோடு குளிப்பதற்காக இரணைமடு சென்றான். திடீரென அன்று மாலை எல்லோரையும் விறைக்க வைத்த அந்தச் செய்தி பரவியது. "ராஜனுக்குச் சாவு..." அந்தப் பெரு வீரனின் சாவு மட்டும் வெறுமையாய் நின்றது. சாவுக்குள் வாழ்ந்தவனிடம் தோற்றுப்போன சாவு தண்ணீருக்குள் ஒழிந்துகொண்டது. தமிழீழப் போர்க்களங்களில் அதிகம் பேசப்பட்ட எங்கள் வீரனுக்குச் சாவில் மட்டும் அங்கு இடமில்லாமற் போனது. "றோமியோ சண்டையிற் செத்திருந்தாலும் மனம் ஆறுதலாக இருந்திருக்கும்" அவனை அறிந்த போராளிகள் எல்லோரும் அதையேதான் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள். ஏனெனில், அதைச் செரித்துக்கொள்ள முடியாமலிருக்கிறது.

-அ.பார்த்தீபன்-

# சாவுக்குள் உழைத்த வீரம்

1998 சுதந்திர நாளுக்குக் கிளிநொச்சியிலிருந்து கண்டி வீதியால் தலதா மாளிகைக்குப் பேருந்து வருமெனச் சிங்களத்து ஜெனரல் விடுத்த சவாலுக்குச் சாட்டையடியாகக் கிளிநொச்சித் தளம்மீதான பாய்ச்சலுக்குத் தலைவர் கட்டளையிட்டார். அவரின் கட்டளைக்க மையத்தளத்தினுள் முன்னேறிய எமது போராளிகளை வீழ்த்தி எமது முன்னேற்றத்தைத் தடுத்துக்கொண்டிருந்தான் எதிரி.

எதிரிக்காக எடுத்த சாட்டையின் அடி எங்கள் முதுகுகளிலேயே விழுந்துவிடுமா? எதிரி கொடியேற்றும் நாளில் எங்கள் தேசியக் கொடி அரைக்கம்பத்திற் பறக்குமா? அர்த்தமற்ற உயிரிழப்புக்களுடன் நாம் தளம் திரும்பநேருமா? தலைவன் இட்ட ஆணையை வீணேபோக விட்டு வெறுங்கையுடன் திரும்பப்போகிறோமா? இவை எதையுமே ஏற்றுக்கொள்ள எங்கள் மனங்கள் மறுத்தன. ஆனாலும், யதார்த்தம் எங்கள் பிடரிமயிரைப் பிடித்துலுப்பியது. வழிதெரியாது, மனம் வெப்பியாரத்தில் உழன்றது. எல்லா அலைவரிசைகளையும் வேகமாய் நோட்டமிட்டபடி அங்குமிங்கும் ஏதோ ஒரு நம்பிக்கைச் செய்திக்காய் தவித்தபடியிருந்தோம்.

மூத்த தளபதிகள் நிலைமையை அவதானித்தவாறு தொலைத் தொடர்புக் கருவியின் ஒலிகளைத் தமது காதுகளுள் வாங்கிக்கொண் டிருந்தனர். எங்கும் அமைதி நிலவியது. ஓர் அலைவரிசையிற் கம்பீ ரமான கட்டளைக்குரல் நிதானமாய், நேர்த்தியாய், உற்சாகமாய் களத்தைத்தன் கையிற்குள் வைத்திருப்பதை உணர்த்துமாறு ஒலித்துக் கொண்டிருந்தது. எதிரியின் பலம் வாய்ந்த முன்னரண்களையெல்லாம் வீழ்த்தியபடி, முறியடிக்கவந்த எதிரிகளைச் சாவுக்குள் அனுப்பியபடி தனக்குத் தரப்பட்ட பகுதிகளைக் கடந்தும் ஓர் அணி முன்னேறிக் கொண்டிருப்பதை அந்தக் கட்டளைகள் தெளிவாக உணர்த்தின. அந்தக் கட்டளைக் குரல் தந்த உற்சாகத்திலிருந்து விடுபட மனம் மறுத்தது.

"ஆர்... அந்த இடத்தில நிக்கிறதெண்டு பாருங்கோ" என்று தளபதி ஒருவர் கூற, மூத்த தளபதியொருவர்,

"அந்த 'மப்'பை எடு, அந்த இடம் எதெண்டு பார்"

"அது சேகரின்ர இடம், சேகர் பிடிச்சுக்கொண்டு போறான். பயப்படத் தேவையில்லை. சேகர் விடமாட்டான்."

அந்தச் சமரோடு சம்பந்தப்படாவிட்டாலும் அந்தச் சமரை அவதானித்துக் கொண்டிருந்த தளபதிகள் நம்பிக்கையுடன் உற்சாகமடைந்தனர். சேகர் பிடித்த காவலரண் பகுதிகளை மீளக் கைப்பற்ற எதிரி கடுமையாக முயன்றான். ஏனைய பகுதிகளை நாம் இழந்துவிட்டபோதும் சேகர் தனக்குத் தரப்பட்ட பகுதிக்கு அப்பாலும் எதிரிப் பகுதியைக் கைப்பற்றியிருந்தான். கிளிநொச்சி நகரின் மத்திய பகுதிவரை கைப்பற்றப்பட்ட எதிரித்தளத்தைத் தக்கவைக்கவென அணிகளை நிலைப்படுத்தியபோது எதிரிக்கும் எமக்குமிடையிலான சண்டை வலுப்பெற்றது. எதிரியின் விடாப்பிடியான, தீர்மானமான சண்டையைப் போர்க்களம் கண்டது. ஒன்பது தடவை சேகரிடம் தோற்றுப்போன எதிரி, பத்தாம் முறையும் முன்னேறி மூக்குடைபட்டான். கிளிநொச்சியிலிருந்து பேருந்து விடச் சவால்விட்ட எதிரிக்கு, எங்கள் நிலத்தில் அவலத்தை விதைத்த எதிரிக்கு, தலைவரின் ஆணையை நிறைவேற்றி, நிலம் மீட்டு மரணப்படுக்கை விரித்தான் தளபதி சேகர். சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாகத் தன்னை நியமித்த தலைவரவர்கள் மெச்சும்படியாகத் தன் ஆளுமையை அவன் வெளிப்படுத்திய முதற்சமர் அதுதான் ...



**லெப்.கேணல் சேகர்**
**சிறப்புத் தளபதி**

**மாயாண்டி ஜெயக்குமார்**
**கிளி/கோணாவில்**

'ஓயாத அலைகள்-02' நடவடிக்கையில், கடுமையானதெனக் கருதப்பட்ட பகுதிக்கான கட்டளைத் தளபதியாகத் தலைவரால் அவன் நியமிக்கப்படுவதற்கு இதுவே காரணமாகியது. அச்சமரில் எதிரியின் வலுமிக்க போரணியை, தளத்தின் மையப்பகுதியின் திறவுகோலாக அமைந்த பகுதியிலேயே எதிர் கொண்டு எதிரியின் தீர்மானமான முறியடிப்பை மோதி யுடைத்து வெற்றியை எமதாக்கியவன் சேகர். இப்பகுதியிற் போரிட்டுத் தோற்ற எதிரிப்படைக் கொமாண்டருக்கு எதிரியின் கட்டளைப்பீடம் வீரவிருது கொடுத்துக் கௌரவித்தமை சேகர் எதிர் கொண்ட சண்டையின் காத்திரத்தை அனைவருக்கும் புரியவைக்கும்.

என்றும் மரணத்துள் வாழ்ந்தவன். மரணத்திற்கு அஞ்சாதவன். ஆனால், மரணத்தை விரும்பாத அவனது மனம் எதையோ சாதிக்கத் துடித்ததை அவனை அறிந்தவரே அறிவர். அதை அறிந்தவர்களால் இலகுவில் அந்தச் சாவைச் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவனுக்கான சந்தர்ப்பங்கள் நீண்டிருந்தால், மாளும் பகையின் பின்னாலும் மீளும் எம் நிலங்களின் பின்னாலும் அவன் இருந்திருப்பான். தலைவன் சுட்டும் திசையெங்கும் அவன் புலிக்கொடி நாட்டிப் பெருமை சேர்த்திருப்பான்.

பத்து வருடத்தின்முன் மாங்குளம் முகாம் தகர்பின்போது, அப்போதுதான் பயிற்சி முடித்து வந்திருந்த மெல்லிய உருவங்கொண்ட, தலை சாய்த்து இழுத்திருந்த, கறுப்பை அண்டிய பொது நிறமான அந்தப் பதினைந்து வயதுப் பெடியன் அந்தப் போர்க்களத்தின் மத்தியில் நின்று காயப்பட்ட வீரர்களைச் சுமந்து சென்றுகொண்டிருந்தான். இதுதான் போராளி என்ற பெருமைமிக்க வாழ்வில் இந்தச் சின்னப்பெடியன் கண்ட முதற்களம்.

ஒன்பது வருடங்களின்பின், தென்முனையில் எதிரி மீண்டும் மாங்குளம்வரை ஆக்கிரமித்திருந்தபோது மாரிப் பிரவாகமென எழுந் தது 'ஓயாத அலைகள்-03'. அம்பகாமத்தில் உடைப்பெடுத்து ஒலுமடுத் தளத்தை வீழ்த்தி, கரிப்பட்டமுறிப்பை வெற்றி கொண்டு, கனகராயன்குளம் கட்டளைத் தலைமையகத்தைத் தோற்கடித்து மாங்குளத்தை எமது கைகளுக்கு மீட்டது. இந்தச்சமரில் இதைச்

சாதிக்கக் களத்தில் தலைமை தாங்கிக்கொண்டிருந்த தளபதி அன்று மாங்குளம் முகாம் தகர்ப்பிற் காயப்பட்ட போராளிகளைச் சுமந்துசென்றுகொண்டிருந்த அதே சின்னப் பெடியன் சேகர்தான். இந்த உயர்பணியை ஆற்ற இந்த ஒன்பது வருடத்தில் அவன் எத்தனை களங்களைக் கண்டிருப்பான். ஓயாது உடல் வருத்தி அவன் எப்படி உழைத்திருப்பான்.

போர்க்களத்தில் ஆரம்ப காலங்களில் இவன் 50கலிபர் அணியின் தலைவனாக இருந்தான். பதுங்கித்தாக்குதல்களும் அதிரடித்தாக்குதல்களுமே நடந்த அன்றைய சண்டைக் காலத்தில் அச்சண்டைகளுக்கு 50கலிபர் அணி தேவையானதாக இருக்கவில்லை. எல்லோரும் சண்டைக்காகப் புறப்படும்போது அவன் வாய்ப்பின்றி இருந்தான். ஆயினும், எவரும் சிந்திக்காத கோணத்திற் சிந்தித்துத் தளபதியிடம் தனது அபிப்பிராயத்தைச் சொல்லி அனுமதி கேட்டு, தானே வேவுபார்த்து, வாய்ப்பான இலக்குகளைத் தெரிவுசெய்து தன்னுடன் 50கலிபர் அணியை மட்டுமே வைத்து அன்று எதிரிகளுக்குத் தலைவலியாய் எழுந்தான். சொல்லக்கூடிய பல சண்டைகளை அவன் வெற்றிகரமாகச் செய்தான். இதுவே, தலைவர் அவர்களால் உருவாக்கப்பட்ட 'பசீலன்' அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரிக்கு அவன் அனுப்பப்படுவதற்கான தகுதியை அவனுக்குக் கொடுத்தது.



பயிற்சி முடித்து வெளியேறியபின் சேகரின் தோள்கள் அதிக பாரத்தைச் சுமக்கத்தொடங்கின. இனத்தின் விடுதலைக்காக எதிரிக்குள் வாழ்ந்து உழைக்கத் தொடங்கினான். அவன் நேசித்த மக்களுக்காக அந்த வீரனின் இனிய இளமைக் காலங்களெல்லாம் எதிரியோடு போராடுவதிலேயே கரைந்தன.

மண்டைதீவு, மூன்றாம் கட்ட ஈழப்போர் மூண்டபோது, அந்த உப்புக்கடல் சூழ்ந்த பகை முகாமினுள் தலைவனின் திட்டப்படி எவருக்கும் தெரியாது ஏதோ செய்துகொண்டிருந்தார்கள் சேகரும் அவன் தோழர்களும். அந்த முகாமின் இறங்குதுறையிலிருந்து பிரதான முகாம்வரை கடினமான பகைப்பிரதேசத்தினுள் கடல்நீரிலும் நிலத்திலுமாக, சீரான உணவும் நித்திரையு மின்றி எத்தனை நாட்கள் உழன்றது சேகரின் வாழ்வு. அந்த வாழ்வின்மூலம் ஒரு தாக்குதல் திட்டத்திற்கான பெறுமதியான தகவல்களை அவன் பெற்றுத்தந்தான்.

சிறிய தவறுகள்கூட போராளிகள் பலரின் உயிர்களை அந்தக் கடல் நீரினுள்ளேயே கரைத்துவிடும். அப்படி எதுவும் நடந்துவிடுவதை விரும்பாத தலைவர், தளபதிகள் வகுத்த திட்டத்திற்கு மேலாக சில மாற்றுத்திட்டங்களைப் பரிந்துரைக்க, அதற்காக ஓர் உடனடி வேவைச் செய்துமுடிப்பதற்கு எல்லோரின் கண்களுள்ளும் நிழலாடியவன் நம்பிக்கைக்குரிய சேகர் தான்.

அவசர அவசரமாக அந்த வேவுப் பணிகளைச் செய்துமுடித்து, நம்பிக்கையான தகவல் களைத் திரட்டினான். தலைவரின் திட்டப்படி 15 பேர்கொண்ட அணிக்குத் தலைமையேற்று எதிரியுள் இரகசியமாக ஊடுருவி, அந்த இறங்குதுறையைத் திடீர்த்தாக்குதல்மூலம் கைப்பற்றிப் பிரதான முகாமிற்கான தாக்குதல்

அணிகளை உள்ளெடுக்கவேண்டிய முக்கியமான பணி சேகரிடந் தான் ஒப்படைக்கப்பட்டது. அப்போது அந்த இருபது வயதேயான சேகரை நம்பிப் பெரிய பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டன. எம் எத்தனை போராளிகளின் உயிர் இருப்பு அவன் கைகளில் இருந்தது. எல்லாவற்றையும் சிந்தித்துப் பொறுப்புணர்வுடன் செயற்படக்கூடியவனென எல்லோரும் அவனில் வைத்த நம்பிக்கையை அந்தச் சண்டையில் தனது செயலின்மூலம் மெய்ப்பித்தான்.

திட்டத்தின்படியே தனது அணியுடன் உள்நுழைந்து, தாக்குதலுக்காகச் காத்திருந்த அந்த சொற்ப நேரத்திற் பிறிதொரு பகுதிக்குரிய அணியொன்று பாதைமாறி வந்துவிட, எதிரியின் கண்களுக்குள் மண்ணைத்தூவி அவர்களை அத்தனை விரைவாய் உரிய இடத்திற் சேர்த்து விட்டு, எதிரி உசாரடைந்துவிடக்கூடாது என அந்தத் தடயங்களை அழித்தபடி தன் பணிக்கு வந்துசேர்ந்து, எத்தனை சாதுரியமாய் அந்தக் களத்தில் அவன் சுழன்று பணி முடித்தான். எதிரிக்கு அதிர்ச்சிகரமான அழிவைக்கொடுத்து, ஒரு நாளுக்குள்ளேயே வெற்றிகரமாகப் பூர்த்திசெய் யப்பட்ட அந்தத் தாக்குதலில் நாம் பெரும் இழப்புக்களின்றியே சாதித்த வெற்றிக்குப் பின்னால் சேகரின் பலமாதக் கடும் உழைப்பு இருந்தது.

'சூரியக்கதிர்' எதிர்ச்சமர் நடவடிக்கை. அந்தக் காலத்தில் எம்மிடம் பீரங்கிகளோ, ஆட்லறிகளோ இருக்கவில்லை. வேவு அணிகளே எமது வலுமிக்க பீரங்கிகள் என்று சொல்ல வேண்டும். அந்தக் களத்திற் சின்னஞ்சிறு வேவு அணிகளுடன் எதிரிப் பிரதேசத்தின் உள்ளே அடிக்கடி போய்வரும் சேகர், எதிரியின் செயற்பாடுகளை அவதானித்து அவனது போர் ஏற்பாடுகளை அறிந்து, எமது எதிர் நடவடிக்கைக்கான தகவல்களை அனுப்பிக்கொண்டிருப்பான். அந்தக் களத்தில் 'உறங்காத கண்மணியாய்' உலாவந்துகொண்டிருந்தான் சேகர்.

அந்த நாட்களில் ஒருநாள் பெண் போராளிகளின் பகுதியினூடாகத் தன் வேலைக்காகப் போய்க்கொண்டிருந்தவனிடம் "என்ன சேகர் நெடுகலும் குண்டோடையே திரியிறீர்" என்று அவர்களின் தளபதி கேட்டதற்கு "நான் ஒரு வேவுக்காரன். எனக்குக் குண்டுதான் எல்லாமே. இதை வச்சே எல்லாத்தையும் சமாளிப்பன்" என்று சொல்லிக்கொண்டிருந்தவன், திடீரெனப் பாய்ந்தோடி மதில் ஒன்றைக் கடக்கக் குண்டு ஒன்று வெடித்தது. எல்லோரும் திகைத்துப் போனார்கள். சில வினாடிகளில் நடந்ததைப் பார்த்து வியப்படைந்தனர். அந்த மதிலுக்குப் பின்னால் எதிரிகள் சிலர் சேகர் அடித்த குண்டில் மாண்டுபோய்க் கிடந்தார்கள்.

எமது பிரதேசத்தின் உள்ளேயே சாதாரணமாக ஒரு போராளியுடன் உரையாடும்போதுகூட அவனது கண்கள் மட்டுமல்ல மனதும் எதிரியைச் சுற்றியே உலாவிக்கொண்டிருக்கும். அந்த அசாதாரண ஆற்றல் அவனுக்கே உரியது என்று சொல்வதைவிட வேறு எப்படிச் சொல்வது. அன்று அவ்விடத்தில் அவன் இல்லையென்றால் ஒருவேளை எதிரியின் திகைப்புத் தாக்குதலில் எங்கள் பெண் தளபதியையும் போராளிகளையும் நாம் இழந்திருக்கக்கூடும்.

புலிகள் யாழ்ப்பாணத்திலிருந்து பின்வாங்கியதனாற் பெரும் இராணுவ வெற்றி ஒன்றைக் கட்டாயமாக ஈட்டவேண்டிய நிலையிலிருந்தனர். அந்நிலையிலேதான் ஓயாத அலைகள் ஒன்று திட்டமிடப்பட்டது. அத்திட்டத்தின் வெற்றி எடுக்கப்படும் வேவுத்தரவுகளிலேயே பெரிதும் தங்கி நின்றது. மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட வேவு நடவடிக்கையில் முக்கியமான ஒரு பகுதியின் வேவுப்பணிகள் சேகரிடம் கொடுக்கப்பட்டன. மீண்டும் சேகர் எதிரிக்குள் வாழத்தொடங்கினான். இறுதியில் எல்லா ஏற்பாடுகளும் பூர்த்தி செய்யப்பட்டு, சமருக்கான தாக்குதற் பணிகள் தலைவராற் பிரித்துக்கொடுக்கப்பட்டபோது, சேகரின் தோள்களில் விழுந்தது சாதாரண சுமையன்று. அது வெற்றிக்கான 'சாவியை'க் காவிச் செல்லும் சுமை.

இரவு பகலாக நீந்தித் திரிந்து பெருங்கடலினூடாகத் தெரிந்தெடுத்த நகர்வுப் பாதையின் மூலம் தாக்குதல் அணிகளை உள்நகர்த்தி தளத்தின் கடற்கரைக் காவலரண்களைத் தகர்த் தெறியவேண்டும். இத்திட்டம் நிறைவுசெய்யப்படும்போது, கடற்கரையை அண்டியிருக்கும் எதிரியின் கட்டளைப்பீடம் எமது அச்சுறுத்தலால் நிலைதடுமாற அச்சமருக்கான எமது ஏனைய நடவடிக்கைகள் சுலபமாக்கப்பட்டுவிடும்; வெற்றி நிச்சயப்படுத்தப்பட்டுவிடும். அதற்காக லெப். கேணல் தர்சனின் கடற்புலிகள் அணியை அழைத்துச் சென்றவன் அவன்தான்.

சிறிய தவறொன்று நடந்தாலும் பெருங்கடலாற் செல்லும் அணிகளுக்கு மீட்சியே கிடையாது. அத்தனை உயிர்களும் கடலோடு கரைந்துபோக வேண்டியது தான். சேகர் திரட்டிய தகவல் மீதும் சேகரது ஆற்றல்மீதும் கொண்ட நம்பிக்கையால் மட்டுமே தீட்டப்பட்ட இத்திட்டம் இறுதியில் வெற்றிகண்டது. தளம் எங்கள் கைகளில் வீழ்ந்தது.

அந்த வெற்றிக்காக உழைத்த எங்கள் சேகர், தோல்வியை மூடிமறைத்துவிட ஆனையிறவுத் தளத்திலிருந்து எதிரி எடுத்த 'சத்ஜெய' நடவடிக்கைக்கு எதிராக முன்னணி வேவு அணிகளுடன் செயற்பட்டுக்கொண்டிருந்தான். 'சத்ஜெய'வின் இரண்டாம் கட்டத்தில் எம்மிடம் செம்மையாக வாங்கிக்கட்டிப் பல நூறு எதிரிகள் மாண்டுபோன அந்த வெற்றிகர முறியடிப்புச்சமரின் பின்னால் அதன் மூலவேர்களில் ஒன்றாகச் சேகரும் இருந்தான். தனது அணியை வைத்து எதிரிக்குள்ளேயே எதிரியின் 'ராங்கி'யை அழித்த சாதனை அந்தச் சமரில் அவனது பங்கைச் சொல்லும்.

அவனது கால்படாத களங்களே இல்லையெனும்படி போர்க்களக் கதாநாயகனாக அந்த எளிமையான போராளி உலாவந்தான். 'ஜயசிக்குறுய்' களம்தான் எங்கள் வீரனது உச்சளவு உழைப்பை உறிஞ்சியது. அவனை ஒரு தளபதியாகவும் உயர்த்தியது. அந்தக் களத்தில் எத்தனை சவால்களை எதிர்கொண்டபோதும் வெற்றிகொண்ட அவனது மன ஆற்றலின், தாங்கு சக்தியின் எல்லை எதுவென யாராலும் அறிந்துகொள்ள முடியவில்லை.

கொடுக்கப்பட்ட சுமைகள் அனைத்தையும் சுமந்தான். இந்தத் தேசத்திற்காக இன்னும் இன்னும் பாரம் சுமந்தான். "சிறு அணிகளை வைத்துக்கொண்டு போர்க்களத்திற் பெரும் பணிகளை ஆற்றக்கூடிய வல்லமையை நான் அவனிடத்திற் கண்டேன். சில சமர்களில் அவனது இந்த ஆற்றல்தான் எமக்குப் பெருவெற்றிகளைத் தந்தது" என்று பெருமையுடன் மனம் நெகிழ்ந்து பாராட்டினார் அவனை வளர்த்த தளபதி கேணல் தீபன்.

'வெற்றி உறுதி'யென்று எதிரி முன்னேறிக்கொண்டிருந்தான். ஆனால், அவனது பிடரியில் அடிகொடுக்கும் தலைவரின் போர்வியூகத்திற்காகத் தாண்டிக்குளம் ஊடறுப்பிற்குப் புலியணிகள் தயாராகிக்கொண்டிருந்தன. தளபதிகளும் போராளிகளும் அதற்காகச் சென்றபோது புளியங்குளம் பகுதியின் முன்னணிக் காவல்நிலைகளுக்குத் தற்காலிகப் பொறுப்பாளனாகச் சேகர் நியமிக்கப்பட்டான். தளபதி ஒரு வருக்குரிய பணி தலைவராற் சேகருக்கு வழங்கப்பட்டிருந்தது. அவனது ஆளுமைக்கு அத் தனை விரைவாகப் பரீட்சை வைத்தான் எதிரி. மட்டுப்படுத்தப்பட்ட அணிகளுடன் நின்ற சேகரின் மேல் எதிரியின் படைவெள்ளம் அணையுடைத்துப் பாய்ந்தது.

சமரை எதிர் கொண்டான் சேகர். தானே முன்னின்று தனது சிறிய அணிகளைத் களமிறக்கிச் சண்டையிட்டான். சமர் உக்கிரம் கண்டது. எவருமே எதிர்பார்த்திராத ஒரு சமரை அன்று அவன் நிகழ்த்தினான். மூன்று ராங்கிகள் அழிக்கப்பட்டுக் கொத்துக் கொத்தாய் எதிரி சாய்ந்து விழப் பகைவன் பனிக்க நிராவியுடனேயே முடங்கிப்போனான்.



இவர் தமிழீழப் போரியல் வரலாற்றில் எழுததிற்கும் மேற்பட்ட போர்களில் பங்கு பற்றிய ஒரு சண்டை அனுபவமிக்க போராளி என்பதனையும் இங்கு நாம் குறிப்பிட விரும்புகின்றோம்.

புலிகளின் முன்னணிப் படைகளோ கட்டளைத் தளபதிகளோ இல்லாதிருந்துங்கூட அப்படியொரு மரண அடியைத் தாங்கள் பெற்றதை எதிரி நம்பவேமாட்டான். இதைச் சாதித்த சேகர் ஒரு தளபதி என்ற உயர்நிலையில் பெரும் பணிகளைச் சுமக்கத் தொடங்கினான். இக்காலத் தில் இயக்கம் இழந்த அனுபவமிக்க வீரத்தளபதியான லெப். கேணல் தனத்தினுடைய பொறுப்புக்கள், தனம் சுமந்த சுமைகள் எல்லாவற்றையும் சேகரின் தோள்கள் சுமக்கத்தொடங்கின.

அப்போது புளியங்குளம் புலிக்குகையாக மாறியிருந்தது. அதற்குள் நுழைய நினைத்தால் அதற்குள்ளேயே மாளவேண்டியதுதான். எதிரி எவ்வளவோ முயன்றும் அந்தக் குகையை அசைக்க முடியவில்லை. அது தலைவர் போர்க்களத்தில் அறிமுகப்படுத்திய புதிய தந்திரமாகும். அதனை நிறைவேற்றத் தளபதி கேணல் தீபனுக்குத் துணையாக நின்றவன் தளபதி சேகர். எதிரி புளியங்குளத்தை நினைக்குந்தோறும் தனது சாவையும் நினைக்கவேண்டிய களச் சூழலை உருவாக்கினான். அதற்காக அவன் சிந்திய வியர்வையையும் கொண்டிருந்த ஓர்மத்தையும் போராளிகள் ஒவ்வொருவரையும் இராணுவத்தினர் பலருக்குச் சமனாக வளர்த்தெடுத்த திறனையும் எழுத்தில் வடிக்கமுடியாது. ஒவ்வொரு அரணிலும் சேகர் ஒருமுறை கதைத்து விட்டுச் சென்றால் அதுவே ஓர் இரும்புக்கோட்டையாக மாறிவிடும். இப்படித்தான் புளியங்குளம் புரட்சிக் குளமாக மாறி எதிரிக்குச் சாவை நோக்கிய பயணத்தைக் கொடுத்தது.

1998 பெப்ரவரி மாதம். அந்தக் கிளிநொச்சி ஊடறுப்புச் சமர் சேகரின் போரியல் ஆற்றலுக்குச் சிகரம் வைத்த சமர்.

"நான் சாதித்துவிட்டேன். எனக்குத் தந்த பணிகளையெல்லாம் என் போராளிகள் செய்து விட்டார்கள். எதிரிகளை ஓட ஓட இன்றைய களத்தில் நானும் எனது போராளிகளும் விரட்டினோம். ஆனால், நான் என் போராளிகள் பதின்மூன்று பேரை இழந்திருக்கின்றேன். அந்த உயிரிழப்பு என் மனத்தக் குடைகிறது என்று அந்தச் சமர்பற்றிச் சேகர் தனது நாட்குறிப்பில் எழுதியிருந்தான்.

சேகர் தன் போராளிகளை நேசித்தான். அவர்களின் இழப்புகள் அவனை வாட்டின. போராளிகளின் துன்பத்தில் அவனும் பங்கெடுத்தான். ஒருநாட் கிளிநொச்சியில் நாம் இராணு வத்திடமிருந்து கைப்பற்றிய பகுதியிற் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டிருந்த போராளியொருவன் கண்ணிவெடியாற் காலிழந்தான். "நான் படையணியைப் பொறுப்பெடுத்த இவ்வளவு காலத்துள் எனது பிழையாற் போராளி ஒருவனின் காலைப் பறிகொடுத்துவிட்டேன். 56 நாட்களாக நாங்கள் பயன்படுத்திய பாதையில் இதுவரை

வெடிக்காத கண்ணிவெடி இன்று வெடித்தது ஏன்? எப்படியோ நான்தான் அதற்குக் காரணம்.என்னுடைய கவனமின்மையால் எனது படையணியில் ஏற்பட்ட முதல் இழப்பு இதுதான். நான் இப்படி மேலும் வேறு பிழைகள் விட்டு என்னருமைப் போராளிகளின் அனாவசிய இழப்புக்குக் காரணமாக இருந்திருக்கிறேனாவென யோசித்துப்பார்க்கிறேன். நான் அறியக் கூடியதாக இல்லை. இனி இப்படி ஒரு பிழையை விடமாட்டேன் என இந் நாளினில் உறுதியெடுத்துள்ளேன் (27.03.1998), என்று சேகர் தன் நாட்குறிப்பிற் குறிப்பிட்டிருந் தமை அவன் தன் போராளிகள் மீது வைத்திருந்த பற்றுக்குச் சான்றாகும்.

கிளிநொச்சியிற் தான் பிறந்த மண்ணில் தன் இனத்தைக் கொன்று குவித்துத் தாண்டவமாடிய எதிரியை, பெப்ரவரிச் சண்டையில் வீரச்சாவடைந்த பெண் போராளிகளின் உடல்களைச் சீரழித்து இழிவுபடுத்தி வெறியாடிய எதிரியை 1998 யூன் 4ஆம் நாள் சண்டையில் தன் படையணி மூலம் கொத்துக் கொத்தாகக் கொன்றுகுவித்தபோதுதான் அவன் மனம் அமைதியடைந்தது.

மன்னாரில் 'ரணகோச' என்ற பெயரிற் புறப்பட்டுவந்த எதிரி, எமது போராளிகள் பலரைக் கொன்றபோது துடித்துப்போனவன், 'ரணகோச-05' என அதே எதிரிகள் புறப்பட்டு வந்தபோது நேரில்நின்று படைநடத்தி நூற்றுக்கணக்கில் எதிரிகளைக் கொன்று பதில் கொடுத்தபின்தான் நிம்மதியடைந்தான். எல்லாவற்றையும்விட அவன் பகுதிப்பொறுப்பாளராக இருந்தபோது இரண்டு முறை அடுத்தடுத்து 'வோட்ட ஷெற்' என்று புறப்பட்டுவந்த எதிரிகள் எமது பெண் போராளிகள் பலரின் உயிர்களைப் பறித்துவிட்டபோது அவனது நெஞ்சில் நெருப்பேயெரியத் தொடங்கிற்று.

சில நாள்களுக்குள்ளேயே ஓயாத அலைகள் 03 படை நடவடிக்கையில் கேணல் தீபனின் கட்டளையின்கீழ்ப் பெண் போராளிகள் கொல்லப்பட்ட அதே பகுதியூடாகப் பெண் போராளிகளையும் வழிநடத்தி அம்பகாமம், ஒலுமடு கரிப்பட்டமுறிப்பு எனப் படைத்தளங்களை வீழ்த்திக் கனகராயன்குளத்தையும் வெற்றிகொண்டபோதுதான் ஆறுதலடைந்தான்.

ஆனையிறவிற்கான இறுதிச் சமர்களின்போது முகாவில் ஊடறுப்பு முயற்சியில் ஓர் அணிக்குத் தலைமையேற்றுப் போனவன், எதிரியிடம் அடிவாங்கித் தன் தோழர்களை இழந்து வந்தபோது துயரமும் ஆவேசமும் மேலிட, மீண்டும் மிகக் கடுமையாக உழைத்து இறுதியில் ஆனையிறவை வீழ்த்துவதற்கான சண்டையில் ஒரு படைத்தொகுதிக்குத் தலைமைதாங்கி அல்லிப்பளை நீரேரிவரை படைநடத்திப் பெருமளவில் எதிரிகளை வீழ்த்தி வெற்றிகொண்டபோது தான் அவன் துயரத்திலிருந்து மீண்டான்.

தென்போர்முனையில் நின்றவனை இந்தக் களத்தின் கடுமை அவனது தேவையை உணர்ந்து அழைத்தது. குடாரப்புவில் தரையிறங்கிய அணிகள் இத்தாவில் கண்டி வீதியில் 30,000 எதிரிகள் நடுவே போரிட்டுக் கொண்டிருந்தன. தாளையடித் தளத்தை நாம் வெற்றிகொள்ளாமல் அந்தப் போராளிகளுக்கான எந்த விநியோகங்களும் சாத்தியம் இல்லை என்ற நிலை இருந்தது. காயப்பட்டவர்களை எடுப்பதிலிருந்து உணவு, வெடிபொருள்வரை அனைத்துமே நெருக்கடிக்குள் இருந்தன.

53ஆவது டிவிசனின் 'கொமாண்டோ பிரி கேட்' தளம். எதிரியின் நடவடிக்கை ஒன்றிற்காக ஆயத்தப்படுத்தப்பட்ட நிலையில் நிலை கொண்டிருந்த பலமான கோட்டை அது. முன்னர் எம்மால் வீழ்த்தப்பட்ட கிளிநொச்சித் தளத் தின் பலத்திற்குக் குறையாத வலுமிக்க தளம் அது. குடாரப்புவில் இரவில் தரையிறங்கிய அணிகள், விடிந்தபோது தமது கடல் தொடர்பை இழந்து போயின. தாளையடித் தளத்திற்கான சமர் தொடங்கியது. எதிரியைத் தோற்கடித்த வாறு மூர்க்கமாக, எல்லோருக்கும் நம்பிக்கை தரும்படி முன்னேறிக்கொண்டிருந்தன புலியணிகள். ஆனால், அன்று மாலைக்குள்ளேயே நாம் கைப்பற்றிய பகுதிகளிற் கணிசமானவற்றை எதிரி மீண்டும் கைப்பற்றிவிட்டான். இத்தாவிலில் தரையிறங்கி நிலைகொண்டிருந்த அணிகள் கேள்விகளோடு காத்திருந்தன.

மறுநாள் விடிவதற்குள் மாற்று ஏற்பாடுகள் செய்தேயாகவேண்டும். சேகரைக் களமிறக்க ஏற்பாடாகியது. அணித்தலைவர்களையெல்லாம் ஒன்றுகூட்டித் தளபதி தீபன் கதைத்தார். "இது எங்கட ஆயிரம் போராளிகளின் உயிர்ப் பிரச்சனை. நாங்கள் எல்லோரும் உயிரோட இருந்துகொண்டு ஆனையிறவை வீழ்த்தாமல் அவர்களின் அழிவிற்குக் காரணம் சொல்லேலாது. நாங்கள் வென்றுதான் ஆகவேண்டும். இல்லையென்றால் நாங்கள் இதில் முயன்று அழிந்தால் எங்கட பக்கம் நியாயம் இருக்கும்."



சேகர் போராளிகளையும் தனது பணியையும் எண்ணியவன், எழுச்சிகொண்டவனாக இரவிரவாய்த் தவண்டு புரண்டு தானே வேவுபார்த்தான். மறுநாள் போரின் ஒரு முனையை வழி நடத்திக் களம் குதித்தான். அந்தத் தளத்தை அடுத்துவந்த நாற்பது மணித்தியாலத்திற்குள் வெற்றிகொள்ளப்பண்ணினான் எங்கள் தளபதி சேகர். அப்போது தலைவரின் ஆனையிறவிற்கான வியூகம் முழுமை பெற்றது.

1998இல் 'ஓயாத அலைகள்-02' இன் வெற்றிச் சாதனையிற் சேகரின் பங்கை அறிந்த அனைவரிடமும் பாராட்டுப்பெற்று மகிழ்ச்சியில் திளைத்திருந்தவன், அடுத்துவந்த சில மாதங்களிற் படையணிச் சிறப்புத் தளபதி என்ற பொறுப்பிலிருந்து தலைவரால் எடுக்கப்பட்டான். எதிரித் தளத்தில் எடுக்கப்பட்ட பொருட்களைத் தனது படையணித் தேவைக்காக அனுமதி பெறாமல் வைத்திருந்தமைக்காகத் தண்டனை பெற்ற சேகர், ஓர் அணியின் தலைவனாக நியமனம் பெற்றுச் சிராட்டிக்குளம் காவலரண் பகுதிக்குச் செல்ல நேர்ந்தது. மெல்லிதயம் படைத்த சேகர் தான்விட்ட தவறுக்காக வருந்தினான். தலைவராற் தண்டிக்கப்படும்படியான தவறிழைத்தேனே எனக் கலங்கினான். சிறந்த போராளியான அவன் மீண்டும் படிநிலை வளர்ச்சியடைந்து தலைவர் அவர்களின் நம்பிக்கைபெற்று, கேணல் தீபனுக்குத் துணையான தளபதியாக உருவெடுத்து, 2000ஆம் ஆண்டு 6ஆம் மாதம் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் சிறப்புத் தளபதியாகத் தலைவரால் மீண்டும் நியமிக்கப்பட்டான். அந்தப் புகழ்பூத்த படையணிக்கு மீண்டும் தலைமை யேற்றவன் தலைவரின் எதிர்பார்ப்புகளிற்கேற்பத் தன் படையணியைப் பெரும் தேவை ஒன்றிற்காகத் தயார்ப்படுத்தியபடியிருந்தான்.

'ஓயாத அலைகள்–04'. - மட்டுப்படுத்தப்பட்ட முதல்நாட் சண்டை ஓரளவு வெற்றிகரமாக முடிந்தது. ஆனால், ஒரு பணிக்காகச் சென்ற எமது அணியொன்று எதிரியின் சுற்றிவளைப்பிற் குள் அகப்பட்டிருந்தது. மீட்க எடுத்த முயற்சிகள் தோற்றுப்போயின. சேகர் உழலத் தொடங்கினான். சாப்பாடின்றி, நித்திரையின்றி மீண்டும் மீண்டும் முயன்று தோற்றும், விடாது முயன்று தன் வீரர்களை அதிகாலை மீட்டெடுத்தபோது அவன் அடைந்த மகிழ்ச்சியை எழுதி உணர்த்திவிட முடியாது. தன் போராளிகள் மீது அவன் கொண்ட அன்பு சாதாரணமானதன்று. அதனால்தான் அவனது பிரிவை மரணகளத்துள் வாழும் போராளிகளாற்கூடத் தாங்கமுடியவில்லை. மக்கள் தம் பிள்ளைகளை, உறவுகளையெல்லாம் போராட விட்டுவிட்டு, இந்த ஊர் உலகத்தில் உள்ள கோவில் குளமெல்லாம் ஏறித்திரிந்து, நேத்தி வைத்து, பசிகிடந்து, தவமிருந்து எங்காவது சண்டை மூண்டால் நித்திரை

விழித்து எப்படியெல்லாம் பதைபதைப்பார்களோ அத்தனை அக்கறை தன் போராளிகளின்மீது தளபதி சேகருக்கு இருந்தது.

"சேகரப்பா" என்று போராளிகள் தமக்குள் கதைக்கும் 25 வயதேயான 'குழந்தை'த் தளபதி தன் நாட்குறிப்பில் எழுதிவைத்திருந்தவை.

"தமிழீழம் கிடைத்தாப் பிறகு என்னோட நிண்டு சண்டை பிடிச்ச எல்லா பெடியள் வீட்டையும் போகவேணும். அவங்களின்ர அம்மா, அப்பா, சகோதரங்கள் எல்லாரோடையும் அவையின்ர கவலைதீரக் கதைக்கவேணும் என்பதே என் ஆசை. இனித் தெய்வத்தின் சிந்தனைப் படியே எல்லாம் நடக்கும். அது நடக்கும் என்றே நம்புகின்றேன்" (10.06.1998).

'ஓயாத அலைகள்-04', மீண்டுமொரு பாய்ச்சலுக்கான ஆயத்தம். எதை இழந்தும் இதைப் பிடித்தே தீருவேன் எனத் தலைவரிடம் சொல்லிவிட்டு வந்ததை தனது அருகிலிருந்த போராளிகளிடம் சொல்லியிருந்தான் சேகர். ஒழுங்குபடுத்தல் எல்லாம் முடிந்தது. காலை விடிந்து விட்டாற் சமர் வெடிக்கப் போகிறது. தளபதி தீபனிடம் வந்தவன், "அண்ணை எல்லாம் சரி. எதுக்கும் ஒருக்கால் இண்டைக்கு இரவுக்குப்போய் பாதையெல்லாத்தையும் வடிவாய்ப் பார்த்து விட்டு வந்தால்தானண்ணை நிம்மதியாய் இருக்கும்" எனக்கேட்டு அனுமதிபெற்று வந்தான்.

வேவுக்காக வெளிக்கிட்டுப் போனவன் சற்று நேரத்திலேயே வெடிவிழுந்து உடல் சல்லடையாகக் காயத்தோடு தூக்கிவரப்பட்டான். எப்படியாவது காத்துவிடவேண்டுமென்ற துடிப்போடு மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டான். நான்கு நாட்களாக உயிருக்குப் போராடிய அவன் இறுதியில் தன் தாய்நாட்டுக்காகத் தன்னை இழந்தான்.

-அ.பார்த்தீபன்-

# இந்த வேர்களின் வரிசையில்.....



தளபதி லெப்.கேணல் ஜஸ்ரின்

பொன்னுச்சாமி பாஸ்கரன்

தையிட்டி, யாழ்.

17-09-1991. மணலாற்றில் 'மின்னல்' இராணுவ நடவடிக்கைக்கெதிரான சமர்.



தளபதி கப்டன் சுபாஸ்கர்

சோமசுந்தரம் சக்திவேல்

செம்மலை.

12-08-1992.
ஆனையிறவு நித்தியவெட்டைப்பகுதியில் இராணுவத்துடனான திடீர் மோதல்.



தளபதி லெப்.கேணல் நவநீதன்

தில்லையம்பலம் திருலோகநாதன்

வவுனியா.

11-11-1993. பூநகரி இராணுவத்தளம் மீதான 'தவளை' நடவடிக்கை.



தளபதி லெப்.கேணல் பாக்கியராஜ்/வாசன்

பாலச்சந்திரன் அழகேந்திரன்

வவுனியா.

12-06-1997. பழையவாடிப் பகுதியில் இராணுவத்தின் பதுங்கித் தாக்குதல்.



தளபதி லெப்.கேணல் சுனித்/மாதவன்

கில்பேட் டானியல்

முல்லைத்தீவு.

23-08-1997. வன்னி மாவட்ட கிளிநொச்சிப் பகுதியில் இராணுவத்துடனான நேரடி மோதல்.



தளபதி லெப்.கேணல் நியூட்டன்/இளையவன்

தம்பிராசா சதானந்தன்

கிளிநொச்சி.

02-11-1999.

ஓயாத அலைகள்-3 ஒட்டுசுட்டான் பகுதியில்.

தளபதி லெப்.கேணல் மதன்/அரசன்

துரைசாமி சுந்தரலிங்கம்

வவுனியா.

11-04-2000.

ஓயாத அலைகள்-3 நடவடிக்கை.





தளபதி லெப்.கேணல் சிவாஜி

கிருஷ்ணன் சிறீக்குமார்

17-08-1996.

வெற்றிலைக்கேணி கடற்பரப்பில் திடீர் மோதல்.

# கப்டன் காவலன்



இரண்டாம் கட்ட ஈழப்போரின் ஆரம்ப ஆண்டுகள் அவை. 26.11.1992, பலாலித் தளத்தின் வளலாய்ப் பகுதி முன்னணிக் காவலரண் வரிசையைத் தாக்கி அழித்து அதன் பின்னாலுள்ள சில மினி முகாம்களையும் அழிப் பதற்கான பணிகள் நடந்துகொண்டிருந்தன.

முன்னரங்கக் காவல்நிலைகள் தாக்கப்படும் அதே நேரத்தில் ஏற்கனவே ஊடுருவி நிலைகொண்டிருக்கும் அணிகள் தளத்தின் உட்புற இராணுவ மினி முகாம்க ளைத் தாக்கவேண்டுமென்பதே அன்றைய எமது திட்டம்.

பின்னணியில் அமைந்திருந்த மினிமுகாம்களைத் தாக்கும் அணியாகச் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணயின் ஒரு பிரிவு நியமிக்கப்பட்டது. அதற்காக இராணுவ நிலைகளை ஊடறுத்து ஏழு கிலோமீற்றர் தூரம் வரை அவர்கள் இரகசியமாக நகரவேண்டியிருந்தது.

கண்ணிவெடிகள், மிதிவெடிகள் நிறைந்த இராணுவ முன்னரங்க வேலி, நெருக்கமாக அமைக்கப்பட்டுள்ள தொடர் காவலரண்கள், மின் ஒளி பாய்ச்சப்பட்ட இரவு நேர அவதானிப்பு வலயம், சிறு ஒலியையும் தெளிவாகக் கேட்கக்கூடிய பேரமைதி. இவை எல்லாவற்றுக்கும் முகம் கொடுத்து தொடர் கண்காணிப்பிலிருக்கும் வீதியொன்றைக் கடந்தே அந்த அணி தன் இலக்கை அடையவேண்டும்.

அப்போதுதான் அது நிகழ்ந்தது. யாருமே தாக்கு தலுக்கான இறுதி இலக்கை நெருங்கவில்லை. அன்றைய இருட்பொழுதின் ஆழ்ந்த அமைதியைக் குலைத்தது ஒரு வெடியோசை. இராணுவ முன்னரங்கை ஊடுருவிப் பின்னணி நிலைகளை நோக்கி நகர்ந்துகொண்டிருந்த காவலன் என்ற போராளியின் கால்களில் ஒன்றை அங்கே வெடித்த மிதிவெடி சிதைத்துவிட்டது.

எல்லோருடைய விழிகளிலும் கலவரலத்தின் சாயல் தென்பட்டது. அடுத்து நடக்கப் போவது என்ன? நிச்சயமாக அந்தச் சத்தத்தை எதிரி கேட்டிருப்பான். திகைப்பின் கதறல், வேதனையின் புலம்பல், காயப்பட்டுவிட்ட ஒரு மனித உயிரின் இயல்பான அனுங்கல் எதிரிக்கு எம்வரவைச் சொல்லிவிடும். அன்றைய முயற்சி அத்துடனேயே, எம்மாற் சண்டை தொடங்கப்படாமலேயே முடிவடைந்துவிடும். அந்தப் பிரதேசத்தைச் சூழ்ந்திருந்த எமது முன்னணி வீரர்கள் பலரை நாம் இழக்க நேரிடும். இலக்குகள் எவையும் வெற்றி கொள்ளப்படாமலேயே எமது திட்டம் எதிரியால் தோற்கடிக்கப்பட்டுவிடும் என்றே எல்லோரும் எதிர்பார்த்தனர். அவநம்பிக்கையுடன் எல்லோரது கவனமும் காவலன் பக்கம் திரும்பியது.

வெடிப்பின் அதிர்வுகள் அடங்கியபோது கலைந்த புகையினூடாக அவன் அசைவது தெரிந்தது. துண்டிக்கப்பட்டுச் சிதைந்திருந்த அவனது காலில் இருந்து குருதி கொப்பளித்துப் பாய்ந்தது. சத்தமில்லை. மெல்லக் கையசைத்து அருகிலிருந்த தோழனை அழைத்தான்.

'மச்சான் நான் சத்தம் போட மாட்டன். நீங்கள் தொடர்ந்து முன்னேறுங்கோ'

பயம் படர்ந்திருந்த தோழர்களின் முகத்தில் வியப்பும் பரவியது. அந்த வார்த்தைகள் எவ்வளவு அற்புதமானவை. அவனது அந்த வார்த்தைகள்தான் அன்றைய எம் வெற்றியைச் சாத்தியமாக்கின என்று சொன்னால் யாரால்தான் அதை மறுத்துவிடமுடியும்?

# கப்டன் மலரவன்



(வைரமுத்து செல்வன்)

ஆனையிறவுக் கூட்டுப்படைத்தளம், அந்த ஜனவரி மாதத்து நிசப்தமான குளிரில் உறைந்துபோய்க் கிடந்தது. உடலைக் குத்தி ஊடுருவும் உப்புக் காற்றின் குளிரையும் மீறிச் சில உருவங்கள் எதிரியின் முன்னணித் தடைகளை நோக்கி வரிசையாக நகர்ந்து கொண்டிருந்தன.

அது ஒரு வலிந்த தாக்குதலுக்குரிய நகர்வு. இறுமாப்புடன் நிமிர்ந்து நிற்கும் ஆனையிறவுத் தளத்தின் இதயத்திற் பாய்வதற்காக அவர்கள் முன்னேறிக்கொண்டிருந்தனர். அந்த உவர்மண் வெளியில் ஆங்காங்கே காணப்படும் கன்னாப் பற்றைகளை மறைப்பாகக்கொண்டு அவர்களுடைய அணி நகர்ந்துகொண்டிருந்தது. எதிரியின் முகாமைப் பல முனைகளால் நெருங்கிக்கொண்டிருந்த அணிகளில், பிரதான முகாமைத் தாக்கியழிக்கும் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படைப்பிரிவின் குறிப்பிட்ட அணியை வழிகாட்டி நகர்த்திக்கொண்டிருந்தான் ஒரு வேவுப்போராளி.

நேரம் நள்ளிரவைத் தாண்டிவிட்டது. அவர்கள் எதிரியின் முன்னணித் தடை வேலியை நெருங்கிவிட்டனர். நீண்டதொரு இரகசிய நகர்வை வெற்றிகரமாகச் செய்து முடித்துவிட்ட திருப்தியில் அவர்கள் இருந்தனர். ஆனால், இன்னுங்கூட அபாயம் நீங்கவில்லை. அப்போது எதிரியால் அவதானிக்கப்பட்டால், அவர்கள் அந்த இடத்தி லேயே கொல்லப்படலாம். காவலரண்களின் முன்னாற் சில பத்து மீற்றரில் அவர்கள் நிலத்துடன் நிலமாகக் கிடக்க, அவர்களை வழிகாட்டி அழைத்துவந்த போராளி கைகளில் முட்கம்பி வேலித்தடையை அகற்றும் கருவியுடன் முன்னேறினான்.

சண்டை தொடங்குவதற்கு இன்னும் சில நிமிடங் களே இருந்தன. முதலாவதாக இருந்த கம்பி வேலியை வெட்டி அகற்றிவிட்டு இரண்டாவது தடைக்கு அவன் 'டோப்பிட்டோ' குண்டைப் பொருத்த, மறுமுனைகளிற் சண்டை தொடங்குகின்றது. அங்கே பொருத்திய 'டோப் பிட்டோ' வெடிக்குமென எல்லோரும் ஆவலுடன் காத்திருக்க, அந்தக் குண்டு வெடிக்காமலேயே போய்விட்டது.

துப்பாக்கிகள் சடசடக்க, எதிரி வானில் ஏவிய 'பரா' வெளிச்சக் குண்டுகள் இரவைப் பகலாக்கி வானில் ஒளிவீச, அங்கே எமது அணியினர் தமக்குரிய பாதைத் தடையைத் தகர்க்க முடியாமல் இருப்பதை எதிரி கண்டுகொண்டான். தனது சூட்டு வலுவை இப்போது அந்த அணியினர் மீது எதிரி மையங்கொள்ள வைத்தான்.

நிலைமை மோசமாகிக்கொண்டிருந்தது. உள்ளே நுழையவேண்டிய அந்த அணி வழியிலேயே எதிரியின் சூட்டிற்கு இலக்காகிப் போராளிகளை ஒவ்வொருவராய் இழந்துகொண்டிருந்தது. மீண்டும் அந்தத் தடையைத் தகர்க்க அவ்விடத்தில் கைவசம் மேலதிக 'டோப்பிட்டோ'வோ, பின்னாலிருந்து வரவழைக்க அவகாசமோ இருக்கவில்லை. இந்த இக்கட்டான நிலையில் எல்லோரும் தவிப்புடன் பார்த்திருக்க, கைவசம் இருந்த ஒரேயொரு கம்பிவெட்டும் 'கட்டரு'டன் எழுந்தான், அந்த அணிக்கு வழிகாட்டி முன்னே நகர்ந்து கொண்டிருந்த லெப்டினன்ட் மலரவன்.

துப்பாக்கிச் சன்னங்களால் துளைக்கப்பட்டு உடலிலிருந்து குருதி வழிய வழிய, தள்ளாடியபடி எதிரியின் தடைக்கம்பி வேலியை நெருங்கியவன், ஒவ்வொரு கம்பியாய் வெட்டத் தொடங்கினான். எதிரியின் துப்பாக்கிகள் அவன் ஒருவனையே குறிவைத்தன. அந்தச் சொற்ப நேரத்தினுள்ளேயே தடையை வெட்டி அகற்றிவிடவேண்டும் என்ற உறுதியுடன் தடைக்கம்பிகளை வெட்டி அகற்றியவாறு அந்தக் கம்பிகளின் மீதே சரிகின்றான் மலரவன். இறுதிக் கம்பி மட்டும் இன்னும் வெட்டப்படாமல் இருந்தது. ஆயினும் பாதை ஏற்பட்டுவிட்டது.

அவன் ஏற்படுத்திக் கொடுத்த பாதையின் ஊடாக அணிகள் உள்ளே பாய்கின்றன. அவனது தோழர்கள் அவனைக் கடந்து எதிரியின் அரண்களை நோக்கி ஓடும்போது எஞ்சிய உயிர்த் துளியில் அவனது நாவு உச்சரித்தவை இவைதான்.

''மச்சான்! ஒன்றையும் விடாமற் பிடியுங்கோ.''

அன்றைய அந்த அணியின் சண்டையின் முடிவை மாற்றியமைத்தவன் அந்தப் போராளி. எதிரியின் சூட்டிற்கு ஒவ்வொருத்தராய் வீழ்ந்துகொண்டிருந்த நிலையை மாற்றியது அவனது முடிவுதான்.

தன் உயிர்கொண்டு அவன் தடையகற்றத் துணிந்தமையால் தொடர்ந்து எதிரிகளை வீழ்த்திக்கொண்டு முன்னேறியது அவனது அணி. அன்றைய சண்டையில் அவர்கள் ஏராளம் இராணுவத்தினரை கொன்றொழித்தனர். பலம் வாய்ந்த எதிரியின் பிரதான முகாமை ஊடுருவி அவனது பல ஆயுதங்கள் உள்ளிட்ட ஆட்லறித் தளத்தை அவர்கள் அழித்தனர். அத்தனையையும் அன்று சாத்தியமாக்கியது, தடையகற்றித் தன் சாவைச் சரித்திரமாக்கிவிட்ட அந்தப் போராளியின் இறுதிநேர முடிவு.

எமது விடுதலை வரலாறுபற்றித் தலைவர் அவர்கள் கூறுவதுபோல் ''ஆயிரம் ஆயிரம் தனி மனித சரித்திரங்கள் சங்கமமாகிய பெரு நதியாக வீறுகொண்டோடும் எம் விடுதலை வரலாற்றில்'' தானும் ஒருவனாய்ச் சங்கமித்துப்போன இவனதும் இவன்போன்ற சரித்திர நாயகர்களினதும் தியாகங்களே இன்றும் எம் விடுதலை நதியை வெற்றிப் பாதையில் இட்டுச் செல்கின்றன.

# லெப்டினன்ட் சுயாந்தன்



(பழனியாண்டி சங்கர்)

09.01.1997 நடுநிசியைத் தாண்டிய அதிகாலைவேளை. ஆனையிறவு, பரந்தன் கூட்டுப்படைத் தளத்தினூடாகப் புலிகளின் அணிகள் நகர்ந்துகொண்டிருந்தன. அந்தத் தளத்தின் அமைவிடம் வலிந்த ஒரு தாக்குதலுக்குச் சாதகமற்ற பௌதீகச் சூழலைக்கொண்டிருந்தது. தரவைகள், உப்பு வெளிகள், சிறிய-சிறிய உவர்நீர் நிலைகள் ஆகியவற்றைக் கொண்டிருந்தது அந்தச் சூழல். எனினும், முகாமின் முக்கியத்துவத்தை உணர்ந்த போராளிகள் அனைவரும் கண்களில் ஒரு வெறியுடனும், எங்கள் மண்ணை ஆக்கிரமித்தவனை அழிக்கவேண்டுமென்ற மனவுறுதியுடனும் நீரற்ற அந்த உப்பு வெளிகளினூடாக ஊர்ந்து கொண்டிருந்தனர். அது ஒரு நீண்ட நகர்வு. விடு தலைப் புலிகளின் போரியல் வரலாற்றிலேயே ஒரு வலிந்த தாக்குதலுக்காகச் சண்டையை எதிர்பார்த்து எமது படைய ணிகள் நகர்ந்த நீண்ட நகர்வுகளில் அது குறிப்பிடத்தக் கது. எங்காவது எதிரியால் அவதானிக்கப்பட்டால் அங்கே நகர்ந்துகொண்டிருக்கும் அத்தனை போராளிகளின் உயிர்களும் கேள்விக் குறியாகிவிடும்.

அங்கே நகர்ந்துகொண்டிருந்த அணிகளிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் ஓர் அணியும் அடங்கியிருந்தது. முகாமின் ஒரு முக்கிய பகுதியைக் கைப்பற்றும் பணி அவர்களுக்குரியது. அவர்களின் அன்றைய சிக்கலான பணியில் எமக்குக் கிடைக்கப்போகும் வெற்றியின் ஒரு கணிசமான பகுதி தங்கிநிற்கிறது.

சண்டை தொடங்கிவிட்டது. சாள்ஸ் அன்ரனி படையணியும் அவர்களுக்குரிய பாதைவழியாகச் சண்டை யைத் தொடங்கியது. முட்கம்பி வேலிகளை 'டோப்பிட்டோ' குண்டுகள் தகர்க்க, அணி ஒவ்வொரு தடையாகத் தாண்டி நகர்ந்துகொண்டிருந்தது. எதிரியின் இயந்திரத்துப்பாக்கிகள் அவர்களை நோக்கிச் சடசடக்க அப்போதுதான் அந்தப் பாதையில் உள்ள பிரச்சினை அவர்களுக்குத் தெரிந்தது.

ஆம். எமது வேவுத் தரவின்படி அங்கேயிருந்த முட்கம்பிச் சுருள் தடைகளைவிட புதிதாக இன்னுமொரு முட்கம்பிச் சுருள் தடையை எதிரி அமைத்திருந்தான். ஒவ்வொரு நொடியும் சண்டையின் முடிவைத் தீர்மானிக்கும் ஓர் இக்கட்டான நேரம். நாம் அந்தத் தடையைத் தகர்த்து உள்நுழையாவிட்டால் எதிரி தன்னைத் தயார்படுத்தக்கூடும். பின்னர் அந்தப் பகுதியைக் கைப்பற்றுவது இயலாமற்கூடப் போய்விடும். புதிதாகத் தடையை உடைக்க 'டோப்பிட்டோ'வும் கைவசம் இல்லை. மாற்று வழிகளைப் பரிசீலிக்கக்கூட நேரம் இல்லாத ஓர் இக்கட்டான சூழல். முட்கம்பியை வெட்டச்சென்ற எங்கள் தோழனும் அரைவாசிக் கம்பிகளை வெட்டிய நிலையில் எதிரியின் ரவைபட்டு வீழ்ந்துவிட்டான். எதிரி, அந்த இடத்தில் முட்கம்பிகள் வெட்டப்படாமல் இருப்பதையும் நாம் அவற்றை வெட்ட முயல்வதையும் கண்டு விட்டான். அவன் தன் முழுச் சூட்டுவலுவையும் இப்போது அங்கே மையங்கொள்ளவைத்தான். அது வார்த்தைகளின் வர்ணணைக்கு அப்பாற்பட்ட இறுக்கமானசூழல். அன்றைய சண்டையின் முடிவைத் தீர்மானிக்கும் ஓர் அணி தடையை உடைக்கமுடியாமல் நிற்க, தனியொருவனாகச் சுயாந்தன் நிலைமையை மாற்றி அமைத்தான்.

அந்தத் தடையை அகற்றவேண்டிய தேவையை அவன் உணர்ந்தான். அன்றைய சண்டையின் முடிவு கண்களிற்பட அவன் உறுதியான முடிவெடுத்தான். ஓடிச்சென்று முட்கம்பிச் சுருளின்மீது பாய்ந்தான், நசுங்கிய கம்பியின் மேல் அவன் கிடக்க, அவன் அமைத்துத் தந்த அந்த உயிர்த்துடிப்பான பாதையின் வழியாக இலக்கை நோக்கி நகர்ந்தனர் தோழர்கள்.

அவனது அணி தனக்குக் கொடுக்கப்பட்ட எதிரிப் பகுதியைப் பிடித்துக்கொண்டு முன்னேறியது. எதிரியின் சூட்டில் விழவேண்டியவர்களாய் இருந்த அவனது தோழர்கள் எதிரியை வீழ்த் திக்கொண்டு முன்னேறினர். தாக்குதலின் முடிவில் நூற்றுக்கணக்கான எதிரிகளை வீழ்த்தினர். எதிரியின் பீரங்கிகளை அழித்தனர். அந்த வெற்றிக்கு வழிசமைப்பதற்காகத் தன் உடலால் வழி சமைத்தவன் சுயாந்தன். உடலின் உயிரணுக்கள் ஒவ்வொன்றும் வேதனையால் துடிக்க அத்தனை வேதனையையும் தாங்கிக்கொண்டு தான் நேசித்த மக்களின் வாழ்விற்காக முட்கம்பித் தடையின் மீது பாய்ந்து தன் தோழர்களுக்கு வழிசமைத்துக்கொடுத்தது அவனது வீரம்.

தலைவரவர்களின் 'எமது போராட்டத்தின் வலிமை எமது போராளிகளின் நெஞ்சுரத்திலிருந்தே பிறக்கின்றது' என்ற கூற்றுப்படி தனது நெஞ்சுரத்தால் அன்றைய சண்டையை மாற்றியமைத்தவன் பின் 'ஜயசிக்குறுய்' சமரில் வித்தாகிப்போனான். இவன்போன்ற போராளிகளின் தியாகங்களே இன்றும் வழித்தடங்களாக எமக்கு வழிகாட்டி நிற்கின்றன.

# கப்டன் அறிவு



(இரத்தினசிங்கம் மோகனசிங்கம்)

தூரத்தே கேட்ட சத்தம் வரவர அதிகரித்துக் கொண்டிருந்தது. அமைதியான அன்றைய சூழலை இடை விடாத அந்த இரைச்சல் ஓசை பயங்கரமானதாக மாற்றியது. அவர்களுக்கு அது வழமையானதுதான். எனினும், அன்று ஏதோ ஓர் அசாதாரணமான சூழல் இருப்பதாக அவர்களுக்குப்பட்டது.

எதிரி விளக்குவைத்தகுளம்வரை முன்னேறிவிட்டான். அது வன்னியின் ஒரு காட்டுக்கிராமம். வவுனியா விலிருந்து வடக்காகக் கண்டிப் பிரதான வீதியிலிருந்தது. முன்னேறும் இராணுவத்தைப் புளியங்குளம் வரை கட்டம் கட்டமாகத் தடுத்துத் தாமதப்படுத்துவதே திட்டம். முன்னேறும் இராணுவத்தைத் தாக்கித் தடுத்துத் தேவையானபோது நகரவிட்டு, மீண்டும் தாக்கி, புளியங்குளத்தில் அமைக்கப்பட்ட 'கொலைப் பொறி' வரை கவர்வதற்காகத் தாக்குதல்கள் தொடர்ந்தன.

06.06.1997, விளக்குவைத்தகுளம் முன்னரங்க நிலைகளிற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிப் போராளிகள் நின்றார்கள். அதிகாலை முதல் கேட்டுக்கொண்டிருந்த அந்தச் சத்தம் மெல்ல மெல்ல அவர்களை நோக்கி நகர் வதாகத்தெரிந்தது.

'மச்சான், டாங்கிச் சத்தம்போல கிடக்குது.'

அவர்களில் ஒருவன் காவலரணொன்றின்மேல் ஏறி நின்று அவதானித்துவிட்டுச் சொன்னான்.

'இண்டைக்குத் திருவிழாப்போல இருக்குது.'

அவர்கள் தங்களுக்குட் கதைத்துக்கொண்டார்கள்.

'டேய்! வந்தா வரட்டும். எங்கட பொசிசனைக் கடந்து போறதை ஒருக்காப் பாப்பம்.'

இப்படித்தான் எப்பவுமே அவர்கள் கதைத்துக் கொள்வார்கள். இன்றும் அதேபோலவே கதைத்தவாறு காலைக்காவலுக்கான ஒழுங்குகளில் ஈடுபடத்தொடங்கினர்.

அவர்கள் எதிர்பார்த்த 'திருவிழா' விரைவிலேயே தொடங்கிவிட்டது. எதிரி ஏவிய பீரங்கிக் குண்டுகள் அவர்களின் முன்னரங்க நிலைகளைச் சுற்றி வீழ்ந்து வெடிக்கத்தொடங்கின. இதுவரை தூரத்தே கேட்ட இயந்திரங்களின் உறுமல் ஓசை அவர்களிருந்த திசையில் நெருங்கத்தொடங்கியது. முறிந்து விழுந்த காட்டு மரங்களினூடாக வெடித்துச் சிதறிய எறிகணைகளின் கந்தகப்புகை பரவிக்கொண்டிருந்தது.

அறிவு. அவன்தான் காவலரண் துவாரத்தினூடாகத் தூரத்தே தெரிந்த கரிய உருவத்தை முதலில் அவதானித்தான். டாங்கி! அவனுடைய நிலையை நோக்கி வந்துகொண்டிருந்தது.

சண்டையின் தீவிரம் சற்றுக் கடுமையாவது தெரிந்தது. தோழர்கள் தமது துப்பாக்கிகளால் எதிரிமீது சுடத்தொடங்கினர். சண்டை உக்கிரமானது. கனரக ஆயுதங்கள் எதுவும் அவர்களிடம் இருக்கவில்லை டாங்கி எதிர்ப்பு ஆயுதங்களும் இல்லை. இலகு இயந்திரத் துப்பாக்கிகளாற் சுடப்பட்ட ரவைகள் வெறுமனே டாங்கியிற் பட்டுத்தெறித்து விழுந்தன.

முன்னரங்கில் இருந்த எமது நிலைகள் ஒவ்வொன்றாய் எதிரியாற் சிதைக்கப்பட்டன. வீரர்கள் வீழ்ந்துகொண்டிருந்தனர். டாங்கி ஏவிய ஓர் எறிகணை அறிவினுடைய தோழர்களை வீழ்த்தியது. சிதைந்த நிலைகளிலிருந்து சென்றுகொண்டிருந்த இறுதி எதிர்ப்புகளும் குறைந்து கொண்டிருந்தன. எதிரி உற்சாகமடைந்தான். வேகமாக டாங்கியை நகர்த்தினான்.

அறிவினுடைய சிதைந்த காவலரணில் வீரச்சாவடைந்துவிட்ட தோழர்களின் வித்துடல்களும் ரவை முடிந்துவிட்ட துப்பாக்கிகளும் மட்டுமே இப்போது இருந்தன.

அந்தக் காவலரண் வரிசையில் அவன் மட்டுமே தனித்திருந்தான். எதிரியின் நகர்வைத் தடுத்தேயாகவேண்டிய கட்டாயம் அவனுக்கிருந்தது. முறியடிப்பு அணிகள் அங்கே வரும்வரை இராணுவத்தின் நகர்வைக் குறைந்தபட்சம் தாமதப்படுத்தவேண்டிய நிலையை அவன் உணர்ந்தான்.

கைவசம் இருந்த குண்டுகள் இரண்டுடன் சிதைந்த நிலையைவிட்டு வெளியே வந்தான். அவனது நிலையை நோக்கி வந்த டாங்கி இப்போது மிகவும் நெருங்கிவிட்டது. அறிவு எறிந்த முதலாவது குண்டு டாங்கியின் முன்னால் வெடித்துச் சிதறியது. டாங்கி அதிர்ந்து நின்றது. ஆனால், விரைவிலேயே அதன் சக்கரங்கள் மீண்டும் உருளத்தொடங்கின.

இறுதியாக அவனிடமிருந்ததோ ஒரேயொரு கைக்குண்டு.

அவனுக்கிருந்த கடைசித் தெரிவு டாங்கியை மிக நெருங்கிக் குண்டை எறிவது அல்லது சொற்ப கணத்தில் இடித்துச் சிதைக்கப்பட இருந்த நிலையின் அருகிலிருந்து பின்வாங்கிச் செல்வது.

இறுதி முயற்சி எமது மரபுக்கேயுரிய தெரிவு. டாங்கி அவனது காவலரணை முட்டிமோத இருந்த கடைசிக் கணத்தில் தன்னிடமிருந்த கையெறிகுண்டை வெடிக்கவைத்தான்.

தனது சாவிற்கான முடிவு அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. எனினும், அவன் கோழையாகிப்போக விரும்பவில்லை.

டாங்கியின் சக்கரங்களாற் சிதைக்கப்பட்ட அவனது வித்துடல் அவன் நேசித்த மண்மீது கிடந்தது. இறுதிவரை அவனிடம் உயர்ந்திருந்த துணிவு வரலாற்றில் அவனை உயர்த்தி நிற்கின்றது.

# லெப்டினன்ட் இசைவீரன்



(பெருமாள் சிவகுமாரேந்திரன்)

அது ஓர் இக்கட்டான காலப்பகுதி. எங்காவது ஓரிடத்தால் முன்னேறுவதற்கு எதிரி தொடர்ச்சியாக முயன்று கொண்டேயிருந்தான். முக்கியமாக இரண்டு களமுனைகளைத் திறந்திருந்தான்.

'ஜயசிக்குறுய்' களமுனைகளில் மாங்குளம் சந்தியை நோக்கி ஒரு களமுனை திறக்கப்பட்டது. மாங்குளம் சந்தியைக் கைப்பற்றுவதே அந்தக் களமுனையின் உடனடி இலக்கு. மாங்குளத்தின் வடக்கே கிளிநொச்சிப் பகுதியிலிருந்து எதிரி தனது இரண்டாவது களமுனையைத் திறந்திருந்தான். 1998ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் எம்மாற் கைப்பற்றப்பட்ட கிளிநொச்சி நகர்ப்பகுதியின் சில பிரதேசங்களை ஆக்கிரமிப்பது, குறிப்பாக டிப்போச் சந்தியைப் பிடிப்பது, அதன் இலக்காகும்.

உண்மையில் இந்தக் காலப்பகுதியில் நாம் மிகுந்த நெருக்கடிகளைச் சந்தித்தோம். எதிரியின் நகர்வை ஒரு நீண்ட பிரதேசத்தினூடாக எதிர்பார்த்தோம். அன்றைய எமது வலுவிற்கு அப்பாற்பட்டதாகவே அந்தக் கடமை இருந்தது. எனினும், போராளிகள் ஒவ்வொருவரினதும் மன உறுதியாலும் தியாகத்தாலுமே நாம் இவ்வாறான நீண்ட பிரதேசத்தைக் காத்தோம். எமது போராளிகளின் அசைக்கமுடியாத உறுதியே எம்மைவிடப் பல மடங்கு அதிகமான எண்ணிக்கையில் எம்முடன் மோதவந்த இராணுவத்தை எதிர்த்து வெற்றிகரமாகப் போர் செய்ய வைத்தது.

08-06-1998 காலைப்பொழுது. நான்கு நாட்களின் முன்னர் 04.06.1998ஆம் நாள் கிளிநொச்சி டிப்போச் சந்தியை நோக்கி ஒரு நகர்வைச் செய்யமுயன்று, எம்மிடம் அடிவேண்டித் திரும்பியிருந்தான். மீண்டும், அதே இலக்கு நோக்கிய ஒரு நகர்வைத் தொடங்கினான்.

அவர்கள் எதிர்பார்த்த 'திருவிழா' விரைவிலேயே தொடங்கிவிட்டது. எதிரி ஏவிய பீரங்கிக் குண்டுகள் அவர்களின் முன்னரங்க நிலைகளைச் சுற்றி வீழ்ந்து வெடிக்கத்தொடங்கின. இதுவரை தூரத்தே கேட்ட இயந்திரங்களின் உறுமல் ஓசை அவர்களிருந்த திசையில் நெருங்கத்தொடங்கியது. முறிந்து விழுந்த காட்டு மரங்களினூடாக வெடித்துச் சிதறிய எறிகணைகளின் கந்தகப்புகை பரவிக்கொண்டிருந்தது.

அறிவு. அவன்தான் காவலரண் துவாரத்தினூடாகத் தூரத்தே தெரிந்த கரிய உருவத்தை முதலில் அவதானித்தான். டாங்கி! அவனுடைய நிலையை நோக்கி வந்துகொண்டிருந்தது.

சண்டையின் தீவிரம் சற்றுக் கடுமையாவது தெரிந்தது. தோழர்கள் தமது துப்பாக்கிகளால் எதிரிமீது சுடத்தொடங்கினர். சண்டை உக்கிரமானது. கனரக ஆயுதங்கள் எதுவும் அவர்களிடம் இருக்கவில்லை டாங்கி எதிர்ப்பு ஆயுதங்களும் இல்லை. இலகு இயந்திரத் துப்பாக்கிகளாற் சுடப்பட்ட ரவைகள் வெறுமனே டாங்கியிற் பட்டுத்தெறித்து விழுந்தன.

முன்னரங்கில் இருந்த எமது நிலைகள் ஒவ்வொன்றாய் எதிரியாற் சிதைக்கப்பட்டன. வீரர்கள் வீழ்ந்துகொண்டிருந்தனர். டாங்கி ஏவிய ஓர் எறிகணை அறிவினுடைய தோழர்களை வீழ்த்தியது. சிதைந்த நிலைகளிலிருந்து சென்றுகொண்டிருந்த இறுதி எதிர்ப்புகளும் குறைந்து கொண்டிருந்தன. எதிரி உற்சாகமடைந்தான். வேகமாக டாங்கியை நகர்த்தினான்.

அறிவினுடைய சிதைந்த காவலரணில் வீரச்சாவடைந்துவிட்ட தோழர்களின் வித்துடல்களும் ரவை முடிந்துவிட்ட துப்பாக்கிகளும் மட்டுமே இப்போது இருந்தன.

அந்தக் காவலரண் வரிசையில் அவன் மட்டுமே தனித்திருந்தான். எதிரியின் நகர்வைத் தடுத்தேயாகவேண்டிய கட்டாயம் அவனுக்கிருந்தது. முறியடிப்பு அணிகள் அங்கே வரும்வரை இராணுவத்தின் நகர்வைக் குறைந்தபட்சம் தாமதப்படுத்தவேண்டிய நிலையை அவன் உணர்ந்தான்.

கைவசம் இருந்த குண்டுகள் இரண்டுடன் சிதைந்த நிலையைவிட்டு வெளியே வந்தான். அவனது நிலையை நோக்கி வந்த டாங்கி இப்போது மிகவும் நெருங்கிவிட்டது. அறிவு எறிந்த முதலாவது குண்டு டாங்கியின் முன்னால் வெடித்துச் சிதறியது. டாங்கி அதிர்ந்து நின்றது. ஆனால், விரைவிலேயே அதன் சக்கரங்கள் மீண்டும் உருளத்தொடங்கின.

இறுதியாக அவனிடமிருந்ததோ ஒரேயொரு கைக்குண்டு.

அவனுக்கிருந்த கடைசித் தெரிவு டாங்கியை மிக நெருங்கிக் குண்டை எறிவது அல்லது சொற்ப கணத்தில் இடித்துச் சிதைக்கப்பட இருந்த நிலையின் அருகிலிருந்து பின்வாங்கிச் செல்வது.

இறுதி முயற்சி எமது மரபுக்கேயுரிய தெரிவு. டாங்கி அவனது காவலரணை முட்டிமோத இருந்த கடைசிக் கணத்தில் தன்னிடமிருந்த கையெறிகுண்டை வெடிக்கவைத்தான்.

தனது சாவிற்கான முடிவு அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. எனினும், அவன் கோழையாகிப்போக விரும்பவில்லை.

டாங்கியின் சக்கரங்களாற் சிதைக்கப்பட்ட அவனது வித்துடல் அவன் நேசித்த மண்மீது கிடந்தது. இறுதிவரை அவனிடம் உயர்ந்திருந்த துணிவு வரலாற்றில் அவனை உயர்த்தி நிற்கின்றது.

# லெப்டினனட் இசைவீரன்



(பெருமாள் சிவகுமாரேந்திரன்)

அது ஓர் இக்கட்டான காலப்பகுதி. எங்காவது ஓரிடத்தால் முன்னேறுவதற்கு எதிரி தொடர்ச்சியாக முயன்று கொண்டேயிருந்தான். முக்கியமாக இரண்டு களமுனைகளைத் திறந்திருந்தான்.

'ஜயசிக்குறுய்' களமுனைகளில் மாங்குளம் சந்தியை நோக்கி ஒரு களமுனை திறக்கப்பட்டது. மாங்குளம் சந்தியைக் கைப்பற்றுவதே அந்தக் களமுனையின் உடனடி இலக்கு. மாங்குளத்தின் வடக்கே கிளிநொச்சிப் பகுதியிலிருந்து எதிரி தனது இரண்டாவது களமுனையைத் திறந்திருந்தான். 1998ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் எம்மாற் கைப்பற்றப்பட்ட கிளிநொச்சி நகர்ப்பகுதியின் சில பிரதேசங்களை ஆக்கிரமிப்பது, குறிப்பாக டிப்போச் சந்தியைப் பிடிப்பது, அதன் இலக்காகும்.

உண்மையில் இந்தக் காலப்பகுதியில் நாம் மிகுந்த நெருக்கடிகளைச் சந்தித்தோம். எதிரியின் நகர்வை ஒரு நீண்ட பிரதேசத்தினூடாக எதிர்பார்த்தோம். அன்றைய எமது வலுவிற்கு அப்பாற்பட்டதாகவே அந்தக் கடமை இருந்தது. எனினும், போராளிகள் ஒவ்வொருவரினதும் மன உறுதியாலும் தியாகத்தாலுமே நாம் இவ்வாறான நீண்ட பிரதேசத்தைக் காத்தோம். எமது போராளிகளின் அசைக்கமுடியாத உறுதியே எம்மைவிடப் பல மடங்கு அதிகமான எண்ணிக்கையில் எம்முடன் மோதவந்த இராணுவத்தை எதிர்த்து வெற்றிகரமாகப் போர் செய்ய வைத்தது.

08-06-1998 காலைப்பொழுது. நான்கு நாட்களின் முன்னர் 04.06.1998ஆம் நாள் கிளிநொச்சி டிப்போச் சந்தியை நோக்கி ஒரு நகர்வைச் செய்யமுயன்று, எம்மிடம் அடிவேண்டித் திரும்பியிருந்தான். மீண்டும், அதே இலக்கு நோக்கிய ஒரு நகர்வைத் தொடங்கினான்.

எதிரி மீண்டும் டிப்போச் சந்தியைப் பிடிப்பானாயின், எமது போர்ச் செயற்பாடுகளுக்குச் சிக்கலேற்படும் அபாயம் இருந்தது. முன்னேறிய எதிரியை அடித்துக் கலைக்கவேண்டிய தேவை அவசியமானது.

பலத்த எறிகணை வீச்சுக்கு மத்தியில் ராங்கிகளின் பக்கபலத்துடன் எமது முன்னணி நிலைகளை உடைத்துக் கொண்டு எதிரி முன்னேறினான்.

அவசர அவசரமாக ஊடறுப்பு அணி தயார் செய்யப்பட்டது. முன்னேறிய சிங்களப் படைகள் முகாமிலிருந்து துண்டாடப்பட்டன. புலிகள் அப்படைகள்மீது ஆக்ரோசமான தாக்குதலைத் தொடுத்தனர்.

இசைவீரன் புதியவன்; எல்லோரிலும் சிறியவன். எனினும், ஊடறுத்த அணியுடன் அவனும் அன்று களத்தில் நின்றான்.

தாக்குதலின் உக்கிரம் அதிகரிக்க, நிலைகுலைந்த எதிரி செத்தவர், காயப்பட்டவரை அப் படியே விட்டுவிட்டு முகாம் நோக்கி ஓடத்தொடங்கினான். முன்னேறியவர்கள்மீது நடத்தப்பட்ட தாக்குதல் இப்போது பின்வாங்கி ஓடுபவர்களைத் தடுத்து நிறுத்தி நடாத்தப்படும் தாக்குதலானது.

ஆம், ஏற்கனவே ஊடறுத்திருந்த எமது அணியினர் அங்கே சிதறி ஓடிவரும் படையினரை எதிர்பார்த்திருந்தனர். படையினர் நெருங்க நெருங்க நிலைகளுள் இருந்த புலிகளின் துப்பாக்கிகள் தீ உமிழத் தொடங்கின.

எனினும், எதிரி எமது அணிகளைத் தாண்டித் தன் முகாமிற்குத் திரும்பி ஓடுவதிலேயே குறியாயிருந்தான். எம் வீரர்கள் சுடச்சுட, அவன் விழவிழ ஓடிக்கொண்டேயிருந்தான்.

இறுதியாக, எதிரி பின்வாங்கி ஓடிய அந்தப் பாதையிற் சென்று பார்த்தபோது அந்தச் சிறிய போராளியின் உடல் துப்பாக்கிச் சூடுகளாற் சல்லடையாக்கப்பட்டுக் கிடந்தது. அவனது கைகளால் இறுக அணைக்கப்பட்டவாறு ரவைகளேதுமற்ற நிலையிற் கிடந்த பதுங்கிச்சுடும் துப்பாக்கி, தன் முன்னாற் செத்துக்கிடந்த சிங்களச் சிப்பாய்களின் முடிவுக்கான காரணத்தைச் சொல்லிக்கொண்டிருந்தது.

இசைவீரன், தனியொருவனாக நின்று தன்னை நோக்கிவந்த எதிரிகளைச் சுட்டு, இறுதி யில் ரவையேதுமற்ற நிலையில் தன் நிலையிலிருந்து பின்வாங்காமல் வீரச்சாவடைந்தான். புதியவனான அந்தப் போராளியின் மனத்திடமும் வீரமும் சாள்ஸ் அன்ரனி படையணிக்கு என்றும் வழிகாட்டும்.

# கப்டன் அன்பழகன் / அன்பு



(ஐசாக் கிறிஸ்துராசா)

'ஜயசிக்குறுய்' படைகள் தம் நடவடிக்கையைத் தொடங்கி ஓராண்டு அண்மித்துவிட்டது. வெற்றி நிச்சயம் என வந்தவர்கள் கேள்விக்குறியோடு நின்றனர். இராணுவம் ஓர் உடனடி வெற்றியைத் தேடியது. இராணுவத்தைப் பகடையாக்கிவிட்ட அரசு ஒரு வெற்றிச் செய்திக் காக ஏங்கி நின்றது. அரசு, படைகளை எம் நிலைகள் நோக்கி ஏவிவிட, எம்மிடம் அடிவேண்டிய படைகள் முன்னேறவும் முடியாமற் பின்வாங்கவும் முடியாமல் திண்டாடின. அரசியல் தேவைக்காக எப்படியாவது ஒரு வெற்றியைப் பெற்றுவிட மீண்டும் மீண்டும் முயன்றனர்.

20, சித்திரை, 1998ஆம் நாட் காலைப்பொழுது எதிரி மிகவும் பலமாயிருந்தான் தன்னிடமிருந்த வளங்கள் அனைத்தையும் ஒன்றுசேர்த்திருந்தான் நாம் பழைய நிலையிலேயே இருந்தோம்.

எதிரி எப்படியும் மாங்குளத்தை அன்று பிடித்துவிட வேண்டும் என்ற முடிவோடிருந்தான். அதற்காக ஒலுமடுப் பகுதியூடாகவும் கனகராயன் ஆற்றுப்பகுதியாலும் மூன்று முறிப்பாலும் சண்டையைத் தொடக்கியிருந்தான். எம் போராளிகள் சிலரின் சாவே அவனது இலக்கை எட்டும் நிலையை ஏற்படுத்தப் போதுமானதாகவிருந்தது.

எமது போராளிகள் சிலரே காவலில் நின்ற அக் காவலரண் தொடரின் ஒரு பகுதியை நோக்கி, ஒன்றல்ல இரண்டல்ல பல ராங்கிகள் அணிவகுத்து முன்னேறின. முன்னேறுவது பின்னர் தரித்து நின்று எம் நிலைகள்மீது அடிப்பது. பின் முன்னேறுவது என எதிரி ராங்கிகள் முன் னேறிக்கொண்டிருந்தன.

எம்மிடம் இருந்ததோ சாதாரண துப்பாக்கிகள். நாம் சுடச்சுட எதிரி முன்னேறினான். எம்மவர் இயன்றவரை சுட்டனர். சுட்ட ரவைகள் எல்லாம் எதிரியின் உருக்கு இயந்திரங்களிற் பட்டுச் சிதறி விழுந்ததைத் தவிரப் பயன் ஏதும் ஏற்படவில்லை.

நவீன கவச எதிர்ப்பு ஆயுதங்கள் அன்று அவ்விடத்தில் எம்மிடம் இருக்கவில்லை. எம்மால் ராங்கிகள்மீதான எதிர்ப்பைக் காட்டமுடியாத அவலநிலை. எம்மிற் பலரின் உயிர்க ளைக் குடித்துவிட்டு ராங்கிகள் சில எமது காவலரண்கள் மீதும் ஏறிவிட்டன.

எல்லாம் முடிந்த நிலை. எஞ்சிய போராளிகள் சிலர் மட்டுமே காவலரணில் நின்ற னர். இப்போது அந்தச் சண்டையைத் தீர்மானிக்கும் பொறுப்பு அங்கே எஞ்சி நின்ற சிலர் மேலேயே. அவர்களின் முடிவே அன்றைய சண்டையின் முடிவு. நாளைய சமரின் முடிவு. காவலரணில் ஏறிவிட்ட ராங்கியை ஏதாவது செய்தாகவேண்டும்.

எண்ணிக்கையில் நாம் குறைந்திருந்தோம். எதிரி வருவது உருக்கு இயந்திரங்களில்.

எமது காப்பரண் வேலியை உடைத்து அதனூடாக எதில் நகர்வது, ஜயசிக்குறுய் போரில் எதிரியைத் தடுப்பதற்கான எமது ஒரு வருட உழைப்பை வீணாக்கிவிடும். எதிரியின் 'ஜயசிக்குறு' கனவு பலித்துவிடும். ஜயசிக்குறு நடவடிக் கையை முறியடிப்பதற் காக எமது போராளிக ளின் உயிரைக் கொடுத்து நாம் செய்த ஈகமும் துன் பங்களும் அர்த்தமற் றவையாகிவிடும். இத்தனையையும் சாதித்துவிட முயன்றது எதிரியின் ராங்கிப்படையின் நகர்வு. அன்று எம்மிடம் ராங்கி எதிர்ப்பு ஆயுதங்கள் இல்லாமையே எதிரிக்கு வாய்ப்பைக் கொடுத்தது.

எப்படி விடமுடியும். எமது காப்பரண்கள் இரத்தமும் சதையுமாகிவிட்டன. அவற்றை எப்படி எதிரியிடம் விடமுடியும். விடுவோமாயின் முடிவு வார்த்தைகளால் வர்ணிக்கமுடியாததாகி விடுமென்பதை எஞ்சிநின்றவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். வரப்போகும் சிக்கலைத் தன் போர்ப் பட்டறிவின்மூலம் நன்கு உணர்ந்தான் அன்பழகன். எல்லாவற்றுக்கும் மேலாக அப்போது தனக்கிருந்த கடமையை அறிந்தான். தன்னில் தங்கி ஒரு சண்டையை, சண்டையின் முடிவை, சண்டையின் முடிவால் தான் நேசித்த மக்களுக்கு ஏற்படப்போகும் தாக்கத்தை நன்கு விளங்கிக கொண்டான். இறுதித் தீர்மானமொன்றை எடுத்தான். தன் உயிராற் கூடியபட்சம் செய்யக் கூடியதைச் செய்யமுடிவெடுத்தான். தன் தேசத்திற்காகத் தன்னால் உயர்ந்தபட்சம் எதைச் சாதிக்க முடியுமோ அதைச் சாதித்தான்.



காப்பரணுக்கு மேலே ஏறிய ராங்கி ஒன்றினுட் குண்டுடன் பாய்ந்தான் அன்பழகன். எதிரியின் ராங்கி குண்டினால் வெடித்தபோது அவன் அங்கு நின்ற போராளிகளின் நெஞ்சில் நிறைந்தான். 'அவன் தன் தேசத்திற்காகச் செய்யவேண்டியதை உணர்ந்தேயிருந்தான். உறுதியான புலிவீரன் என்பதை எண்பித்தான்' என்று அவனது தளபதிகள் புகழாரம் சூட்டினர்.

அன்பழகன் எடுத்த புலிகளுக்கேயுரிய தனித்துவமான அந்த வீர முடிவு அன்றைய சண் டையின் முடிவை மாற்றியது. ராங்கிகள் நுழைந்த சொற்ப நேரத்தில் அந்தப் பகுதி எதிரிகளாற் கைப்பற்றப்பட இருந்த அபாயத்தை நீக்கியது அவனின் வீரச்செயல்! தலைவனின் 'சத்தியத் திற்காகச் சாகத் துணிந்துவிட்டால் ஒரு சாதாரண மனிதப்பிறவியும் சரித்திரத்தைப் படைக்க முடியும்' என்ற கூற்றை எண்பித்தான் அந்தப் போராளி.

எம்மால் வெற்றிகரமாக முறியடிக்கப்பட்ட எதிரியின் 'ஜயசிக்குறுய்' சமரும் அதனால் இன்று வெற்றிகரமாகத் தொடரும் புலிகளின் 'ஓயாத அலைகள்' சமர்களும் எம் போராட்டத்தின் புதிய அத்தியாயங்களெனின் அதில் அவன் ஒரு முக்கிய பக்கம்.

# வீரவேங்கை புலிக்குட்டி



(கந்தையா சூரியகுமார்)

வன்னியின் மையப்பகுதியை ஊடுருவிய எதிரி மணலாறு, ஒட்டுசுட்டான், மாங்குளம், நெட்டாங்கண்டல், மன்னார் என எங்கும் பரவியிருந்தான். வன்னியின் ஒரு பரந்த பிரதேசம் எதிரியால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. பல கிலோமீற்றர் தூரம் நீண்டு வளைந்திருந்த எமது காவ லரண் வரிசையை எந்த இடத்திலும் உடைத்து எதிரி முன்னேறலாம் என்ற நிலை அப்போது இருந்தது. சில மாதங்களின் முன்னர்தான் எதிரி பெருமெடுப்பில் மேற் கொண்ட 'ரணகோச-05' நடவடிக்கை முறியடிக்கப்பட்டது. இப்போது இராணுவம் கரிப்பட்டமுறிப்பிற்கு வடக்காக அம்பகாமம் பகுதியூடாக நகரலாம் என ஓர் எதிர்பார்ப்பு இருந்தது.

15.10.1999ஆம் நாள் அதிகாலையிற் புலிகளின் படை யணிகள் தற்காலிகமாக அமைத்திருந்த காவலரண் தொடரை உடைத்துக்கொண்டு சிங்களத்தின் 'வோட்டர் ஷெட்' இராணுவ நடவடிக்கை தொடங்கியது. பெரும் எதிர்பார்ப்போடு படையினர் உக்கிரமான அந்தச் சமரைத் தொடக்கினர்.

அன்றைய களச்சூழல் மிகவும் நெருக்கடியானதாக இருந்தது. மட்டுப்படுத்தப்பட்டிருந்த எமது போர் அணிகளிற் பெரும் பகுதி 'ஓயாத அலைகள் - 03' நடவடிக்கைக்கான பயிற்சிகளிலும் தயாரிப்பு வேலைகளிலும் ஈடு பட்டுக்கொண்டிருந்தன. எனினும், எதிரியின் நகர்வு ஆபத்தானது. முறியடிக்கப்படவேண்டியது. எனவே, வரைய றுக்கப்பட்ட எண்ணிக்கையில் அணிகள் களமிறக்கப்பட்டன. அம்பகாமம் காடு பீரங்கிக் குண்டுகளால் அதிர்ந்து கொண்டிருந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட அணிகள் முறியடிப்பில் இறங்கின. இடைவிடாத பீரங்கி மழையில் நனைந்தவாறு புலிகள் சமராடத்தொடங்கினர்.

புலிக்குட்டி என்ற போராளி, சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவிற்கு மாத்திரமல்ல போராட்டத்திற்கே புதியவன்.ஐந்து பேரடங்கிய முறியடிப்பு அணியில் அவனும் ஒருவன். அன்றைய சண்டையில் அவர்கள் அடையவேண்டிய இலக்குக் கடுமையானதாக இருந்தது. இராணுவம் ஊடுருவிய ஒரு கேந்திர மான நிலையை அவர்கள்

மீளக்கைப்பற்றவேண்டும். எதிரியின் கைவசம் உள்ள அந்த நிலையின் அருகிற் சென்ற அணிகள் எல்லாம் ஏற்கனவே எதிரியின் கடுமையான எதிர்ப்பாற் சிதைக் கப்பட்டுவிட்டன. எஞ்சியவர்கள் மட்டுமே இப்போது அந்த நிலையைப் பிடிக்கவேண்டியிருந்தது.

தமது இலக்கைச் சென்றடைய இன்னமும் இருபது மீற்றர் தூரம் மட்டுமே உள்ள நிலையில் அவர்களுடைய அணியில் ஆக மொத்தம் இரண்டு பேர் மட்டுமே இருந்தனர். எதிரியின் இயந்திரத் துப்பாக்கி ஒன்று தொடர்ச்சியாக அவர்களை நோக்கிச் சுட்டுக்கொண்டிருந்தது. அந்த நிலையைக் கைப்பற்றினால்தான் மிகுதி முன்னேற்றம் இவர்களுக்குச் சாத்தியமாகும்.

போரில் அனுபவம்மிக்க, கடுமையான போர்களுக்குப் பரிச்சயமான போர்வீரர்களே திகைப் படையும் கொடிய களச்சூழல், ஏறக்குறைய எல்லா அணிகளும் எதிரியால் முறியடிக்கப்பட்டு விட்டன. எஞ்சிய அணியிலும் அவர்கள் இருவர் மட்டுமே அப்போது இருந்தனர். அவர்களுக்குப் பின்வாங்குமாறு கட்டளை வந்தது.

ஆனாலும் இன்னமும் அவர்களது துப்பாக்கிகள் சடசடத்துக்கொண்டிருந்தன. தொடர்ந்தும் அந்த இரண்டு வீரர்களும் முன்னேறிக்கொண்டிருந்தனர். எதிரி தனது எதிர்ப்பில் தீவிரமாக இருந்தான்.

'மச்சான் நான் காயப்பட்டிட்டன்'

புலிக்குட்டியின் அருகிலிருந்த அவனது கடைசித் தோழனும் எதிரியின் குண்டடிபட்டு வீழ்ந்தான். வேதனையுடன் ஒலித்த அவனது குரலில் தன் தோழனுடன் தொடர்ந்து முன்னேற முடியவில்லையே என்ற ஆற்றாமை இருந்தது.

'பிரச்சனையில்லையடா, நான் தனியப்போறன்'

வெடித்துச் சிதறிய எறிகணைகளின் ஊடாக, புலிக்குட்டி - அந்த இளம் வீரன் - தொடர்ந்தும் முன்னேறினான்.

இடைவிடாது அவனுக்குக்கிடைத்த பின்வாங்கும் கட்டளையையும் கடந்து அவனது ஆவேசமான முன்னேற்றம் இருந்தது. தனது நிலத்தை ஆக்கிரமிப்பவனின் மீதான ஆத்திரம், எப்படியாவது எதிரியை முறியடித்துவிடவேண்டும் என்னும் உத்வேகம் அவனை அந்தக் களத்தில் வேகமாக இயக்கின. காட்டிற்கு வாயிருந்தால் அவனின் துணிச்சலை நேரில் வாழ்த்தியிருக்கும்.

சண்டையின் அந்தப் பொழுதுகள், சாதாரணமானவர்களாற் புரிந்துகொள்ள முடியாதவை. வர்ணனைக்கு அப்பாற்பட்டவை. தனியொருவனாக, எதிரியின் மூர்க்கமான எதிர்ப்புகளின் மத்தியில் இடைவிடாத எறிகணை வீச்சுக்களின் மத்தியில் முன்னேறுவது போர்க்களத்தில் எல்லோராலும் சாதித்துவிடக் கூடியதல்ல.

இறுதியில் எதிரியின் நிலைகளை வீழ்த்துவதற்கு இன்னமும் ஐந்து மீற்றர் தூரமே இருக் கும்போது அவன் வீழ்ந்துபோனான். பெருமைக்குரிய அந்த வீரன் திரும்பிவரவில்லை.

அவன் உயிருடன் இருந்திருந்தால் நிச்சயம் கட்டளையை மீறித் தனித்து முன்னேறிச் சென்றதற்குத் தண்டனைகூடப் பெற்றிருப்பான். ஆனால், இன்று விசாரணைக்கு உட்படுத்த முடியாத அவனது வீரத்தை மெச்சி, பெருமைகொண்டார் அவனது தளபதி. உறுதியுடன் அவனது நா இறுதியாகத் தன் தோழனுக்குச் சொல்லிவிட்டுச் சென்ற வார்த்தைகள் மீண்டும் எம் காதுகளில் மோதி ஒலிக்கின்றன.

"பிரச்சனையில்லையடா, நான் தனியப்போறன்"

# ஓயாத அலைகள் - 02...

26.09.1998 கிளிநொச்சிப் படைத்தளம்மீதான புலிகளின் 'ஓயாத அலைகள் - 02' வெற்றிச்சமர் ஆரம்பமா னது. சிங்களத்தின் 'ஜயசிக்குறுய்' இராணுவத் திமிரின் முதுகெலும்பை உடைத்து, கிளிநொச்சி நகரை மீட்டு, மீண்டுமொருமுறை புலிகளின் போரிடும் ஆற்றலை உலகிற்கு நிரூபித்த வரலாற்றுச் சமர் அது.

புலிகளின் பல படையணிகள் பங்கெடுத்த அந்த விடுவிப்புச் சமரில், முகாமின் பிரதான பாதுகாப்பு வலயம் உள்ளிட்ட பிரதேசத்தையும் அதற்கான தாக்குதற் பாதையையும் கைப்பற்றும் பொறுப்பு சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

யாழ்ப்பாணம் நோக்கிச்செல்லும் கண்டி வீதியின் அருகில், இடதுபுறத்தில் அவர்களுக்கான தாக்குதற் பாதை தெரிவாகியிருந்தது. இறுதிவரை உறுதியாகத் தீர்மானிக்கப்படாத தாக்குதற் பாதை. சமர் தொடங்குவதற்கு முதல் நாட்கூட எதிரியால் அவதானிக்கப்பட்டுத் தாக்குதல் மேற்கொள்ளப்பட்டதையடுத்து புதிதான ஓரிடத்திற்கு மாற்றப்பட்டிருந்தது.

இராணுவத் தளத்தினதும் பிரதான பாதுகாப்பு வலயத்தினதும் பாதுகாப்பிற்கான உயிர்நாடியாகக் கண்டி வீதியை அண்மித்திருந்த பகுதியே எதிரியால் நோக்கப்பட்டது. எனவே, எதிரி தனது முன்னணிப் பாதுகாப்பு நிலைகளை மிகவும் உறுதியாகவும் புதிய பாதுகாப்பு ஏற்பாடுகளுடனும் அமைத்திருந்தான். அத்துடன், அப்பகுதியின் முக்கியத்துவம் கருதிச் சிறீலங்கா இராணுவத்தின் முன்னணித் தாக்குதல் அணியான 6ஆவது 'கெமுனுவோச்' படையணியையும் அந்தப் பிரதேசத்தின் பாதுகாப்பிற்காக நிறுத்தியிருந்தான்.

நேரம் நள்ளிரவைத் தாண்டிவிட்டது. தாக்குதல் அணி தன் இலக்கை நெருங்கியது. சண்டை தொடங்குவதற்கு இன்னமும் சில நிமிடங்களேயிருந்தன. முன்னே சென்ற தடையகற்றும் போராளிகள் முதலாவதாக இருந்த முட்கம்பி வேலியை வெட்டியகற்றியபின், இரண்டாவதாக

இருந்த கம்பித்தடையை அகற்றுவதற்கு 'டோப்பிட்டோ' வைத்துவிட்டுக் காத்திருந்தனர். எங்கும் அமைதி. உறைந்துபோன அமைதி. ஒரு முன்னணி அவதானிப்பு இராணுவத்தினனது துப் பாக்கி திடீரெனச் சில தோட்டாக்களைச் சுட்டுத்தீர்க்கின்றது. மெல்லியதாகக் கேட்ட விசில் ஓசை தேய்ந்து அழிகின்றது. அச்சப்படவைக்கும் அந்த அசாதாரணச்சூழலில் எல்லோரது உணர்வுகளும் உறைந்துபோகின்றன.

கடிகார முட்கள் நகர்கின்றன. நேரம் பின்னிரவு 1.20. அவர்களின் வலது புறத்திற் கேட்ட பெரும் வெடியோசையுடன் அந்தச் சமர் ஆரம்பமாகின்றது.

காவலில் இருந்த இராணுவத்தினரின் துப்பாக்கிகள் அவர்களை நோக்கிச் சுட ஆரம்பித்தன. வேகமாகவே அந்தக் களத்தின் நிலைமைகள் மாறத்தொடங்கின. தடைகளை அகற்றுவ தற்குச் சென்ற அணி சிதைக்கப்படுகின்றது. அணித்தலைவன் உட்பட அந்த அணியின் பெரும் பாலான போராளிகள் எதிரியின் உக்கிர எதிர்ப்புக்களால் வீழ்ந்துபோகின்றனர்.

அந்த இழப்புக்களை ஏற்றுக்கொள்ளமுடியாதிருந்தது. சமரை வழிநடத்திக்கொண்டிருந்த வர்களுடைய தொலைத்தொடர்புச் சாதன அலைவரிசையில் தடையகற்றச் சென்ற போராளிகளின் தொடர்பு அற்றுப்போகின்றது. என்ன நடந்துவிட்டது என அறியமுடியாத நெருக்கடியான சூழல். கிளிநொச்சித் தளத்தின் உயிர்நாடியான பாதுகாப்பு வலயம் அது. அதை உடைத்து ஊடுருவ வேண்டியதன் தேவை பெரியது. அன்றைய சண்டைகளின் முடிவை நிச்சயம் அந்த ஊடுருவல் வெற்றிகரமாக மாற்றிவிடும். எனினும், அதைச் செய்யவேண்டியவர்களின் நிலை தெரியாத பரபரப்பு. கட்டளைப்பீட அலைவரிசைகளெல்லாம் அவர்களை அழைத்தபடியிருந்தன.

தொடர்ந்தும் அங்கே முன்னேறுவதற்கு எஞ்சியவர்கள் மூன்று பேர் மட்டுந்தான். அன்றைய நடவடிக்கையில் தமக்குத் தரப்பட்ட கடமையை வெற்றிகரமாகச் செய்துவிடவேண்டும் என்ற வெறி அவர்களை உந்தித்தள்ளியது. சிங்களம்மீதான ஆவேசம் அவர்களைத் தொடர்ந்தும் முன்னேறத் தூண்டியது.

பதின்மூன்று பேர்கொண்ட அணி செய்துமுடிக்கவேண்டிய பணி அப்போது அமுதன், அருணா, தீச்செல்வன் என மூவரிடம் மட்டுமே இருந்தது. அவர்களுங்கூட கடுமையாகக் காயப்பட்டிருந்தனர். எதிரி ஏவிய 60மி.மீ. எறிகணைகளும் 40மி.மீ. எறிகணைகளும் அவர்களைச் சுற்றி வீழ்ந்து வெடித்துக்கொண்டிருந்தன.

ஆனாலும் அவர்கள் விட்டுவிடவில்லை. தொடர்ந்தும் முன்னேறினர். எதிரியின் காவலரண் தொடரின் அருகில் இருந்த மறைப்பு வேலியைத் தாண்டிவிட்டால் முகாமினுள்ளே நுழைந்து விடலாம் என்ற நம்பிக்கை அவர்களிடமிருந்தது. மூவரும் மறைப்பு வேலியை நெருங்கினர். தீச்செல்வன் 'டோப்பிட்டோ' குண்டை வேலியினுள்ளே செலுத்திவிட முயன்றான். அருணாவும் அமுதனும் ஆவலுடன் காத்திருந்தனர். ஆனால் அது முடியாமற் போனது. ஏதோ ஒரு தடுப்பு டோப்பிட்டோவை உள்ளே செல்லவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தது.

தீச்செல்வன் தொடர்ந்தும் முயன்றான். எப்படியாவது மறைப்பு வேலியைத் தகர்த்துவிட வேண்டும். ஆனால், இறுதியில் அது நடைபெறவேயில்லை. எதிரி ஏவிய எறிகணை ஒன்று வீழ்ந்து வெடித்தபோது தீச்செல்வன் வீரமரணமடைந்தான்.

எஞ்சியது இருவர் மட்டுமே. அருணா தன் காயம்பட்ட காலுடன் எழுந்தோடினான். மறைப்பு வேலியைக் கைகளினால் அடித்துப் பிய்த்தான். அமுதன் தொடர்ந்தும் சுட்டுக் கொண்டிருந்தான்.

வேலி சிறிதாக அகற்றப்பட்டது. அப்போதுதான் அவர்கள் திகைத்துப் போனார்கள். மேலதிகமாகவும் ஒரு சுவர், அவர்களைத் தடுத்துநின்றது.

சுவரைத் தகர்க்க எதுவுமே செய்யமுடியாத நிலையில் அவர்கள் இருந்தனர். அவர்கள் தாமதிக்கவில்லை. வேகமாகச் செயற்பட்டனர். காயங்களின் வலி அவர்களை முடக்கிவிடத் துடித்தது. முதலில் அருணா பின்னர் அமுதன் என இருவரும் ஒருவர்பின் ஒருவராகச் சுவர் மீது ஏறிக்குதித்தனர்.

உக்கிரமான களம் ஒன்றில், கேந்திரமான இலக்கு ஒன்றைக் கைப்பற்றுவதற்காக அவர் கள் தொடர்ந்தும் சண்டையிடவேண்டியிருந்தது. ஏற்கனவே வயிற்றிற் காயம்பட்டுவிட்ட அவர்களில் ஒருவன் - அமுதன் - மேலும் நகரமுடியாத நிலையில் ஓரிடத்திற் படுக்கவைக்கப்பட்டான். இப்போது கைவசம் சில கையெறிகுண்டுகளை மாத்திரம் வைத்துக்கொண்டு தனித்து முன்னேறிய அருணா அடுத்திருந்த காவலரண்களைத் தனது கட்டுப்பாட்டினுட் கொண்டுவந்தான்.

அவர்கள் இருவரும் கைப்பற்றிய நிலைகளை இராணுவம் இருபுறத்தாலும் நெருங்கிக் கொண்டிருந்தது. ஏனைய அணிகளோ இன்னும் வந்துசேரவில்லை. நிலைமையைத் தெரிவிப் பதற்குக்கூடக் கைவசம் தொலைத்தொடர்புச் சாதனங்களும் இருக்கவில்லை. இறுக்கமானதொரு களச்சூழல். இத்தனைக்குள்ளும் தம்மாற் கைப்பற்றப்பட்டிருந்த நிலையிலிருந்து தொடர்ச்சியாக அவர்கள் போரிட்டனர்.



மேஜர் அமுதன்
(தர்மலிங்கம் தர்மசீலன்)



லெப். தீச்செல்வன்
(பூபாலசிங்கம் சூரியகுமார்)

மேலதிக அணிகள் வருவதாகத் தெரியவில்லை. தடைக்கு வெளியே நிற்கும் ஏனைய அணிகளுக்குத் திட்டத்தின்படியான நகர்வுப்பாதை ஓரளவேனும் எம்மவர்களாற் கைப்பற்றப்பட்டது தெரிந்திருக்கவில்லை.

இருவரும் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். தனியிருவராக முகாமினுள் நுழைந்துவிட்ட அந்தப் போராளிகள் இறுதியிற் காயங்களால் மயங்குந் தறுவாயில் உரத்த குரலெடுத்துத் தமது அணிகளை அழைத்தனர். துப்பாக்கிச் சூடுகளினதும் எறிகணை ஓசைகளினதும் மத்தியில்

ஒலித்தது உள்ளே இருந்தவர்களது அழைப்போசை. ஆனாலும், அதிரும் போர்க் களத்தில் இவர்களின் குரல் கேட்டுவிடுமா என்ன?

எமது தாக்குதல் அணிகள் உள்நுழையவேண்டிய பாதையில் இருந்த எதிரியின் காவலரண்கள் மூன்றிலிருந்து எதிர்ப்புவருவது நின்றுபோனது. கட்டளைப்பீடம் அதை அவதானித்தது. அடுத்து என்ன செய்வது? என மாற்றுத்திட்டத்திற்குத் தயாராகிக்கொண்டிருந்த கட்டளைப்பீடத்தில் புதியதொரு உற்சாகம் தோன்றியது. இன்னும் தனித்து உள்ளே நின்று போராடும் வீரர்களை நோக்கி மேலதிக அணிகள் வேகமாக நுழைந்தன.

விழுப்புண்களைத் தாங்கியவாறு வெற்றிக்காய் உழைத்த அந்த வீரர்கள் இருவரும் மருத்துவவிடுதியை அடைந்தபோது, புலிகளின் படையணிகள் தளத்தை வீழ்த்தியிருந்தன. ஆற்றல் நிரம்பிய போராளி அமுதன் ஓயாத அலைகள் - 03 நடவடிக்கையில் வடபோர்முனையிற் குடாநாட்டினுள் அரியாலைப் பகுதியில் நடந்த சமரில் வீரச்சாவடைந்தார்.

# இத்தாவிற் சமர்க்களத்தில்.......
# இயல்வாணன், வீரன்

உலகின் கவனத்தை ஈர்த்து, விடுதலைப் புலிகளின் உச்சக்கட்டப் போரிடும் ஆற்றலை வெளிப்படுத்தியது ஓயாத அலைகள் - 03 இன் இத்தாவிற் சமர்க்களம். கடல்வழியாகத் தரையிறங்கிய புலிகளின் படையணிகள் இராணுவ வலயத்தை ஊடுருவித் தமது நிலைகளை அமைத்திருந்தன. மொத்தம் முப்பத்து நான்கு நாட்கள் தொடர்ந்த கடுஞ்சமரின் தோல்வியின்பின் இத்தாவிலில் மட்டுமின்றி ஆனையிறவிலுங்கூடவே சிங்களத்தின் போர் வலிமை புலிகளிடம் தோற்றுப்போனது.

வரலாற்றுப் புகழ்மிக்க அந்த இத்தாவிற் சமர்க் களத்தின் மூன்றாவது நாள் 29.03.2000, காலைப்பொழுது. அங்கே நின்ற போராளிகளுக்கு சூடாகவே விடிந்தது.

கண்டி வீதியை மையமாகக்கொண்டு, மூன்று முனைகளில் எதிரி ஆனையிறவுப் பிரதேசத்திலிருந்து முன்னேறினான். கொடுமையான அந்தப் போர்க்களத்தில், துன் பங்கள் நிறைந்த அனுபவங்கள் பலவற்றை ஏற்கனவே எதிரி அவர்களுக்கு ஏற்படுத்தியிருந்தான். கடந்த இரண்டு நாட்களாக எதிரி இடையறாது அங்கே மேற்கொண்ட முன்னேற்றங்களையெல்லாம் அவர்கள் முறியடிக்கவேண்டியிருந்தது. இலகுவான பின்னணிப் பாதைகள் இல்லாத நிலை யில், போதுமானளவு ரவைகளையும் ஏனைய வெடிப் பொருட்களையும் பெறுவது கடினமாக இருந்தது. புலிகளின் அணிகள் தம்மிடமிருந்த மட்டுப்படுத்தப்பட்ட வளங்க ளைக்கொண்டே கடந்த இரண்டு நாட் சமரிலும் பல முனை களிலும் முன்னேறிய இராணுவத்தினரை முறியடித்து வெற்றிபெற்றிருந்தன.

அதிகாலையில் தொடங்கிய அன்றைய சமர் மிகவும் உக்கிரமானதாக இருந்தது. வழமைக்கு மாறாக எதிரி இன்று ஆனையிறவுப் பகுதியிலிருந்து ஐந்து டாங்கி கள் சகிதம் முன்னேறினான். தற்காலிகமாக அமைக்கப் பட்டிருந்த எமது நிலைகள் இராணுவத்தின் கோரமான எறிகணை வீச்சிற் சிதைந்துகொண்டிருந்தன. எதிரி மிக வேகமாக முன்னேறினான். டாங்கிகளும் கனரக வாகனங்களும் அணிவகுத்து முன்னேவர பெருந்தொகையிற் படையினர் சூழ்ந்த யுத்தக்காடாக மாறியது அந்தக்களம்.

சில மணித்தியாலங்களிலேயே கண்டி வீதியின் இருபுறமும் முன்னேறிய எதிரியால் எமது நிலைகள் ஊடறுக்கப்பட்டுவிட்டன. காவலரண்

வரிசையின் இரு பகுதிகளுடாக உள்ளே நுழைந்த எதிரி, இப்போது மூன்றாவது முனையான பிரதான வீதியின் வழியே உள்நுழைவதற்கு முயன்றுகொண்டிருந்தான்.



*ஓயாத அலைகள்-03 செம்மணிச் சந்திக்கு அருகில் நடந்த சண்டையில் **L.M.G.** உடன் இயல்வாணன்*

அவர்கள் விடவில்லை. செக்சன் லீடர் வீரன், இயல்வா ணன், வளநெஞ்சன், சேரக்குன்றன் என இன்னும் மிகச்சிலர் மட்டுமே அங்கே தனித்திருந்தனர். பின்வாங்கத் தயாரில்லாத அவர்களை எதிரி சூழத் தொடங்கினான்.

பிரதான வீதியின் அருகில் அவர்கள் இருந்தனர். தன்னிட மிருந்த ஒரேயொரு P.K. இயந்திரத் துப்பாக்கியால் தொடர்ந்து சுட்டுக் கொண்டிருந்தான் இயல்வாணன். இருபுறமும் பெரும் எண்ணிக்கையில் முன்னேறிய எதிரியின் ஆட்பலம், டாங்கிகள் சகிதம் மனிதக் கடலென அவர்களைச் சூழ்ந்துகொண்டது.

அவர்களுடனான தொலைத்தொடர்புகள் இறுதியாக அற்றுப்போனவுடன் கட்டளைப்பீடம் பரபரப்பானது அது கைவிடமுடியாத ஒரு நிலை. இத்தாவிற் சமர்க்களத்தோடு மாத்திரம் தொடர்புடையதன்று, ஆனையிறவை மீட்பதற்கான தலைவரது வியூகத்தின் தந்திரோபாய முடிச்சும் அது. அங்கே அமைக்கப்பட்டிருந்த வியூகத்தின் உயிர்நாடியும் அதுதான். இப்போது அங்கேயிருந்த வீரர்கள் கொல்லப்பட்டிருப்பர். மாற்றுத்திட்டங்கள் செயற்படுத்தப்பட்டன. மீண்டும் அந்தப் பிரதேசத்தைக் கைப்பற்ற மேற்கொள்ளப்பட்ட முயற்சி வெற்றியளிக்காமற்போனது. அடுத்து என்ன செய்வது என்ற தவிப்பு எல்லோரையும் பிடித்துலுக்கிக்கொண்டிருந்தது.

ஆனாலும், சுற்றிச் சூழ்ந்துவிட்ட எதிரிகளின் நடுவே அவர்கள் இன்னமும் உயிருடன் இருந்தனர். தொடர்ந்தும் இராணுவத்தினரை எதிர்த்துச் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர்.

பிரதான வீதியால் வந்த இராணுவத்தினரை ஒவ்வொருவராய் வீழ்த்தினர். தொடர்ந்து வந்த கனரக வாகனம் இயல்வாணனின் P.K. தாக்குதலினால் தடுத்து நிறுத்தப்பட்டதுடன் அதன் பின்னால் வந்த இராணுவத்தினரும் தடுத்துநிறுத்தப்பட்டனர்.

அப்போதுதான் முற்றுகைக்குள்ளாக்கப்பட்டிருந்த அவர்கள் சற்றும் எதிர்பார்க்காத அந்த அவலம் நிகழ்ந்தது. அவர்களிடமிருந்த ஒரேயொரு கனரகத் துப்பாக்கி –P.K.M.P.M.G-. இயங்குநிலை தடைப்பட்டு சுடமறுத்தது.

எல்லாத் திசைகளிலிருந்தும் இராணுவத்தினர் அவர்களை நோக்கி முன்னேறத் துடித்துக் கொண்டிருந்தனர். இராணுவத்தினரின் முன்னேற்றத்திற்கான தடையாக அவர்கள் மட்டுமே இருந்தனர். இப்போது அவர்களிடமிருந்த துப்பாக்கியும் சுட மறுத்துவிட்டது.

இராணுவம் நெருங்கிவந்துவிட இயல்வாணனுடைய தோழனொருவன் வீசிய கையெறி குண்டு வெடித்துச் சிதறியது. எதிரி அந்தத் திகைப்பில் இருந்து மீள்வதற்குட் கிடைத்த சிறிய தொரு அவகாசத்தினுள் தன் துப்பாக்கியை சீர்படுத்த முயன்றான் இயல்வாணன். ஆனாலும், முடியவில்லை. மீண்டும் இராணுவம் அவர்களின் நிலையை நெருங்கியது.

மிகவும் நெருக்கடியானதொரு நிலை. தடுப்பதற்கு வழியில்லை. இயல்வாணன் தனித்து இயங்கத் தொடங்கினான். ஒவ்வொன்றாய் ரவையேற்றினான். தனித்தனியே மீண்டும் ஆரம்பித்த சூடுகளில் இராணுவத்தினர் அவனது நிலையின்முன் விழத்தொடங்கினர்.

எனினும், பெருந்தொகையில் வேகமாக முன்னேறும் இராணுவத்தைத் தொடர்ந்தும் அவர்களால் தடுக்கமுடியவில்லை. எதிரிகள் அவர்களை நெருங்கியவாறே இருந்தனர்.

செக்சன் லீடர் வீரனுடைய தொலைத்தொடர்புச் சாதனம் ஒருவாறு தனது கட்டளைப்பீடத்துடன் தொடர்பை ஏற்படுத்தியது. கட்டளைப்பீடத்திற் புதியதொரு பரபரப்புத் தோன்றியது. இராணுவத்தினராற் சூழப்பட்டுவிட்ட பிரதான வீதியிலிருந்து ஒலித்த வீரனுடைய குரல் கட்டளைப்பீடத்திற்கு உற்சாகமானதொரு நம்பிக்கையை ஏற்படுத்தியது.

'றோமியோ, றோமியோ, இப்ப ஆமி எங்கள நெருங்கீட்டான்.'

'எங்களுக்கு ரவுன்ஸ் எல்லாம் முடிந்துவிட்டது.'

'பிரச்சினையில்லை, எங்களைப் பார்க்காதையுங்கோ. நாங்கள் நிக்கிற இடத்திற்கு செல் அடியுங்கோ. வேகமாய் எங்கட நிலையளை வைச்சு ஆமிக்குச் செல் அடியுங்கோ.'

யாருமே எதிர்பார்க்காத அவர்களுடைய உணர்வுகள் கட்டளைப்பீடத் தொலைத்தொடர்புக்கருவியில் ஒலித்துக்கொண்டிருந்தன.

அவர்கள் இன்னமும் தோற்றுவிடவில்லை. இன்னமும் அவர்கள் தமது நிலைகள் எதிரியிடம் செல்லவிடவில்லை. எதிரியாற் கைப்பற்றப்பட்டுவிட்டதாகக் கருதப்பட்ட பிரதேசத்திலிருந்து அவர்கள் தொடர்ந்தும் போரிடுகின்றனர். கட்டளைப்பீடம் மீண்டுமொரு முறியடிப்புச் சமரிற்குத் தயாராகியது.

இராணுவம் அவர்களுடைய நிலைகளினுட் புகுந்தால் வெடிக்கத் தயாரான கையெறி குண்டுகளுடன் அவர்கள் போரிட்டனர். அவை வார்த்தைகளின் விபரிப்பிற்கு அப்பாற்பட்ட போர்க் களத்தின் கொடிய கணங்கள். கண்களின் முன்னே, மிக அருகில், அவர்களைக் கொல்லும் வெறியுடன் வரும் எதிரிகளை எதிர்த்துத் தொடர்ந்தும் சண்டையிட்டனர். உச்சமான அவர்களின் மனத்திடம், போரிடும் ஆற்றல், இறுதிவரை வென்றுவிடத் துடிக்கும் விடுதலை உணர்வு அவர்களைத் தொடர்ந்தும் இயக்கின.

வீரனது தொலைத்தொடர்புச் சாதனம் சொல்லிய இலக்குகளை எறிகணைகள் தாக்கின. இயல்வாணனுடைய ரி.ஃப.மு. சுட்டுக்கொன்ற இராணுவத்தினரது சடலங்கள் அவர்களது நிலைகளைச் சுற்றிக் குவியத்தொடங்கின. கொஞ்சம் கொஞ்சமாக அவை எதிரியின் மூர்க்கத்தை உடைத்தன.

இத்தாவிற் களத்தை அன்று எதிரியிடமிருந்து மீட்டுத்தந்த வீரர்களை மீட்பதற்கான எமது முறியடிப்பு அணிகள் அவர்களை நெருங்கியபோது, வீரன், இயல்வாணனுடைய காவலரண்களைச் சுற்றி மட்டும் கொல்லப்பட்ட எண்பத்தைந்து இராணுவச் சடலங்கள் கிடந்தன.



லெப். சீலனின் 18ஆம் ஆண்டு நிறைவு நாளில்
தலைவரவர்கள் பொது ஈகச் சுடரேற்றல்



லெப். சீலனின் படத்திற்குத் தலைவர் மலர்மாலை அணிவிக்கிறார்



மாவீரர்களின் உருவப்படங்களைத் தலைவர் பார்வையிடுகின்றார்




சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உருவாக்கப்பட்டுப் பத்தாம் ஆண்டு நிறைவு நிகழ்வில், மேஜர் மதுரனுக்கு தலைவர் அவர்கள் சிறப்புச்சான்றிகழ் வழங்குகின்றார்



தமிழீழ தேசியப் பெருவிளையாட்டுப்போட்டி நிகழ்வின் தொடக்கத்திற் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் அணிவகுப்பு



